# சமூகப் பிரச்சனைகள்

சமூக–சட்டப் பிரச்சனைகள்

குற்றம்

இளங்குற்றம்

தவறான செயல்களில் ஈடுபடுத்தக் கடத்துதல்

வன்முறை

பெண்களுக்கு எதிரான வன்முறை

பெண் சிசுக்கொலை

குழந்தைகளைக் கொடுமைக்குள்ளாக்குதல்

முதியவர்களைக் கொடுமைக்குள்ளாக்குதல்

பாலின சிறுபான்மையினருக்கு எதிரான பாகுபாடு

தாழ்த்தப்பட்டோருக்கு எதிரான குடியுரிமை மீறல்கள்

மதவாதம்

பயங்கரவாதம்

சமூகப் பிரச்சனை : அறிமுகம்

சமூகப் பிரச்சனை : வரையறை

சமூகப் பிரச்சனைகள் : கருத்தியல்கள்

சமூக–பொருளாதாரப் பிரச்சனைகள்

வறுமை

வேலையின்மை

பிச்சை கேட்டல்

அதிகளவு மக்கள்தொகை

கருப்புப் பணம்

ஊழல்

நடத்தைசார் பிரச்சனைகள்

மதுவுக்கு அடிமை

போதைப் பொருள் உபயோகித்தல்

புகையிலை பயன்படுத்துதல்

பிறழ்வு பாலியல் நடத்தை

முனைவர். நா. கண்ணன்




தமிழ்நாடு மாநில உயர்கல்வி மன்றம்
காமராசர் சாலை, சென்னை - 600 005.

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | 2011 |
| பதிப்புரிமை | : | தமிழ்நாடு மாநில உயர்கல்வி மன்றம்<br>சென்னை – 600 005 |
| நூலின் பெயர் | : | சமூகப் பிரச்சனைகள் |
| நூலாசிரியர் | : | முனைவர் நா. கண்ணன்,<br>இணைப்பேராசிரியர்,<br>சமூகவியல் துறை,<br>மனோன்மணியம் சுந்தரனார் பல்கலைக்கழகம்,<br>திருநெல்வேலி – 627 012. |
| மறு ஆய்வு செய்தவர் | : | முனைவர் வி. கோமதி நாயகம்,<br>பேராசிரியர் (ஓய்வு),<br>சமூகவியல் துறை,<br>அண்ணாமலைப் பல்கலைக்கழகம்,<br>அண்ணாமலைநகர் 608 002. |
| தமிழ் திருத்தம் செய்தவர் | : | முனைவர் எஸ். கண்ணன்,<br>இணைப்பேராசிரியர்,<br>தமிழ்த்துறை,<br>தன்ராஜ் பெய்த் ஜெயின் கல்லூரி,<br>துரைப்பாக்கம்,<br>சென்னை – 600 097. |
| விலை | : | ரூ.69.00 |
| அச்சிட்டோர் | : | மீரா ஆப்செட் பிரிண்டர்ஸ்<br>104/184, வெங்கட்ரங்கம் தெரு, திருவல்லிக்கேணி,<br>சென்னை 600 005. போன் : 9444243031 |






# பொருளடக்கம்

# அலகு – 1 சமூகப் பிரச்சனை: அறிமுகம்

## சமூகப் பிரச்சனை: வரையறை

'சமூகப் பிரச்சனை' குறித்து பலரும் பல்வேறு விதமாக விளக்குகிறார்கள்.

"ஒரு குழு அல்லது சமூகத்தின் ஒரு பிரிவினரைத் தாக்குகின்ற, எதிரான சூழலால் ஏற்படுகின்ற கெடுதலான விளைவுகளை ஒன்று சேர்ந்து கையாளுதல் சமூகப் பிரச்சனை" என ரெயின்ஹார்ட் (Reinhardt, 1952:14) கூறுகிறார். பிரச்சனைக்குரிய இந்தச்சூழலுக்கு ஒருவரையோ அல்லது குறிப்பிட்ட சிலரையோ பொறுப்பாக்க முடியாது. இதைக் கட்டுபடுத்துவது சமூகத்தில் உள்ள பெரும்பாலோரின் பொறுப்பாகும்.

ஒருவன், தான் ஒரு வேலை பெறுவதற்காகப் பிறரோடு போட்டியிடுவது தனி மனித பிரச்சனை. அதேபோல ஒருவன் போதைக்கு அடிமைப்பட்டு மனநோய் சிகிக்சைக்காக மருத்துவமனையில் சேர்ந்து, அதிலிருந்து விடுபட முற்படுவது தனி மனித பிரச்சனை. ஆனால் ஒரு நாட்டில் லட்சக்கணக்கான மக்கள் வேலையின்மையாலும், வறுமையினாலும் பாதிக்கப்பட்டிருக்கிறார்கள் என்றால் அதைத் தீர்ப்பதற்கு தனி ஒருவனால் மட்டுமே இயலாது; மாறாக, ஒழுங்குபடுத்தப்பட்ட நிறுவன அமைப்புக்களால் அல்லது சமூக முயற்சியால் மட்டுமே அந்த பிரச்சனையைத் தீர்க்க முடியும்.

"சிலரின் செயல் அல்லது நடத்தை சமூகத்திற்குக் கேடு விளைவிப்பதாகவோ அல்லது விதிகளை மீறுவதாகவோ அமையும் போது அது சமூகப் பிரச்சனை என கருதப்படுகிறது" என ஹெர்பர்ட் ஃப்புளூமர் (Herbert Blumer, 1971:19) கருத்துரைக்கிறார்.

லாண்டிஸ் (Landis,1959) என்பாரின் கருத்துப்படி சமூகப் பிரச்சனை "மக்களின் நிறைவேறப்படாத விருப்பங்களின் விளைவு" என்பதாகும்.

"எந்த ஒரு சூழல் சமூகத்தில் அதிகளவு பார்வையாளர்களின் கவனத்தை ஈர்த்து, அவர்களிடம் முறையிடச் செய்து, சரி செய்யத் தக்க செயல்பாட்டின் மூலம் தீர்வு காண அழைக்கிறதோ அதுவே சமூகப் பிரச்சனை" என கேஸ் (Case, 1976:310) வரையறுக்கிறார்.

ஹார்டன் மற்றும் லெஸ்லி (Horton and Leslie, 1970:4) ஆகியோர் “எந்த ஒரு சூழ்நிலை பொதுமக்களை பாதித்து, விரும்பத்தகாத விளைவுகளை ஏற்படுத்துகிறது என்பதை உணர்ந்து, ஒன்று சேர்ந்து இணைந்த சமூக செயலின் மூலம் அதன் தீர்வுக்கு ஏதாவது செய்ய முடியும் என்ற உணர்வு ஏற்படுவதை சமூகப் பிரச்சனையின் வடிவமாக”க் காண்கின்றனர். மேலும் அவர்கள் “ஒரு சமூகப் பிரச்சனைக்கு தனி நபரோ அல்லது சில நபர்களோ தீர்வு காண முடியாது; அனைத்து பிரச்சனைகளுக்கும் அமைப்பு சார்ந்த கையாளும் முறையினால் மட்டுமே தீர்வு காணமுடியும். அதாவது பொதுமக்களின் அக்கறை, கலந்துரையாடல், கருத்துருவாக்கம் மற்றும் கட்டாயப்படுத்தப்படும் நிலை ஆகியவற்றால் மட்டுமே தீர்வு காண முடியும்” என்று கூறியிருப்பது இங்குக் கவனிக்கத்தக்கது.

சமூகப் பிரச்சனை கால இடைவெளியில் மாறக்கூடியது. ஒரு காலகட்டத்தில் எது சமூகப் பிரச்சனையாக கருதப்படவில்லையோ அது மற்றொரு கால கட்டத்தில் சமூகப் பிரச்சனையாகக் கருதப்படுகிறது. உதாரணமாக 40, 50 ஆண்டுகளுக்கு முன்னர் சுற்றுச் சூழல் பாதிப்பு நம் நாட்டில் சமூகப் பிரச்சனையாகக் கருதப்படவில்லை; ஆனால் இன்று அதுவே ஒரு முக்கிய சமூகப் பிரச்சனையாகப் புரிந்து கொள்ளப்பட்டுள்ளது.

ஃபுல்லர் மற்றும் மையர்ஸ் (Fuler and Myers, 1941:320). வரையறையின்படி சமூகப் பிரச்சனை என்பது "ஒரு நிபந்தனைக்குட்பட்ட சமூக விதிமுறைகளிலிருந்து வேறுபட்டது".

ராப் மற்றும் ஷெல்நிக் (Raab and Selznick, 1964:32) "சமூகப் பிரச்சனை மனித உறவுமுறைகளில் ஏற்படும் பிரச்சனையாகவும், அது சமூகத்தை அச்சுறுத்தக்கூடிய அல்லது பெரும்பாலான மக்களின் முக்கிய விருப்பங்களுக்கு முட்டுகட்டையாக அமைவதாகவும்" கருதுகின்றனர்.

கார் (Carr, 1935:306) "நமது முன்னுரிமை, உண்மை நிலை ஆகிய இரண்டிற்கும் இடையேயான இடைவெளியே சமூகப் பிரச்சனை" என விளக்குகிறார். எடுத்துக்காட்டாக, சதி என்ற உடன்கட்டை ஏறும்வழக்கம் மக்கள் விரும்பதக்கதாக நினைத்த வரையில் ஒரு சமூகப் பிரச்சனையாக கருதப்படவில்லை. ராஜாராம் மோகன்ராய் இந்த வழக்கத்தைக் கண்டிக்க முற்பட்ட போது அநேக மக்கள் அவருடன் இணைந்து இச்செயலை பழித்துரைத்தனர். அப்போது தான் சதி என்ற உடன்கட்டை ஏறும் வழக்கம் ஒரு சமூகப் பிரச்சனையாக மாறியது.

ஒரு சமூகப் பிரச்சனை மதிப்பீட்டுத் தீர்ப்பை உள்ளடக்கியதோடு மட்டுமல்லாமல் இழப்பை ஏற்படுத்தக் கூடிய இந்நிலை குறித்த மாற்றம் தேவை என்ற உணர்வும் கொண்டது. மாற்றமுடியாத மற்றும் தவிர்க்க இயலாத சூழ்நிலை சமூகப் பிரச்சனையாக ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை. எடுத்துக்காட்டாக, கடவுளின் கடுஞ்சினமே வறட்சி நிலைக்கு காரணம் என மக்கள் பரவலான நம்பியதால் அது ஒரு சமூகப் பிரச்சனையாகப் பார்க்கப்படவில்லை. ஆனால் குடிநீர் பற்றாக்குறை, நீர்ப்பாசன வசதிக் குறைவு போன்றவற்றைத் தீர்ப்பதற்கு ஏதாவது செய்ய முடியும் என்ற நம்பிக்கை ஏற்பட்டதால் அதை ஒரு சமூகப் பிரச்சனையாக எண்ணத் தலைப்பட்டனர்.

வெயின்பர்க் (Weinberg, 1960:4) "சமூக வளர்ச்சியிலிருந்து எழுகின்ற விலகிய நடத்தை அல்லது சூழ்நிலைகளை மக்கள் தங்களுக்கு விருப்பமில்லாததாக, மனதுக்கு ஒவ்வாததாகக் கருதுவதே சமூகப் பிரச்சனை. அதை அடையாளம் கண்டு ஈடுசெய்ய சீர்படுத்தும் முறையிலான கோட்பாடுகள், செயல் திட்டங்கள் மற்றும் பணிகள் தேவைப்படுகின்றன" எனக் கருதுகிறார். அவரது கூற்றுப்படி சமூகப்பிரச்சனைகள் கீழ்க்கண்ட பண்புகளை உள்ளடக்கியது:

1. சமூகப் பிரச்சனையை சமூகத்தில் உள்ள மக்களில் பலரும் ஒரு வெறுப்பூட்டுகின்ற செயலாகக் காண்கின்றனர்.

2. இயல்புநிலையிலிருந்து மாறுபட்ட நடத்தையாகப் பார்க்கும் கண்ணோட்டம்.

3. வாய்ப்புநிலை மற்றும் உடனடியாக கவனிக்கப்பட வேண்டியதானவற்றின் மீதான விழிப்புணர்வு.

4. சமூகப் பிரச்சனைகள் சமூகத்தின் மதிப்பீடுகள் மற்றும் நிறுவனங்களின் சூழ்நிலைக்கேற்ப நோக்கப்படுதல்.

5. சமூக உறவுமுறைகள் மற்றும் குழு செயல்முறைகளில் சமூகப் பிரச்சனைகள் ஏற்படுத்தும் தாக்கம்.

6. சமூகப் பிரச்சனைகள் வரலாறு தொடர்பில் வேறுபட்டவை; ஆயினும் காலத்துக்குரிய சமூகப் பிரச்சனைகள் சமூகத்தின் கவனத்துக்குரியதாகின்றன.

வால்ஸ் மற்றும் பர்வெ (Walsh and Furfey, 1961:1) "சமூகம் எந்த ஒன்றை இலட்சிய நிலையாக நினைத்துப் போற்றுகிறதோ, அந்த இலட்சிய நிலையிலிருந்து பிறழ்ந்து அமைகிற நிலையே சமூகப் பிரச்சனை" என்கிறார்கள். அதாவது, சமூகப் பிரச்சனை என்பது "சமூக இலட்சியத்தை நிறைவேற்றவல்ல குழு முயற்சியிலிருந்து விலகுவதாகும்". ஆயினும், வெறும் பிறழ்வு நிலை மட்டும் சமூகப்பிரச்சனை ஆகிவிடாது; ஒரு குழு முயற்சியின் மூலமே அந்தப் பிறழ்வைத் தீர்க்க முடியும் என்ற நிலைமை இருந்தால்தான் அது சமூகப் பிரச்சனையாக அமையும் என மேலும் கூறுகின்றனர்.

மெர்டன் மற்றும் நிஸ்பர்ட் (Merton and Nisbert, 1971:184) "சமூக ஒழுங்கின் முக்கியப் பகுதியாகக் கருதப்படும் நடத்தை, பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட அல்லது ஒப்புதல் அளிக்கப்பட்டவற்றின் விதி மீறலே சமூகப் பிரச்சனை" எனக் கூறுகின்றனர். அதாவது, எந்தவொரு நடத்தையை சமூகத்தின் ஒரு கணிசமான பகுதியினர் ஏற்றுக்கொண்ட அல்லது ஒத்துக் கொண்ட நெறியை அல்லது நெறிகளை மீறிய செயல் என கருதுகிறார்களோ, அந்த நடத்தையே சமூகப் பிரச்சனை என்று கூறுகிறார்கள். ஆனால் சமூகப் பிரச்சனைகள் நெறிகளுக்கு அப்பாற்பட்ட அல்லது நெறிகளை மீறிய செயல்களினால் மட்டுமே உண்டாவதில்லை; நெறிகளுக்கு உட்பட்ட வழக்கமான செயல்களினால் கூட அவை ஏற்படலாம். இதற்கு உதாரணமாக மணமுறிவு, வரதட்சணை போன்றவற்றை காட்டலாம். ஜோசஃப் ஜூலியன் (Joseph Julian) கண்ணோட்டத்தில் "மக்களுடைய வாழ்க்கைத்தரத்தையும், அவர்கள் போற்றிப் பேணுகிற விழுமியங்களையும் பாதிக்கக்கூடிய வகையில் ஒரு நிலைமை ஏற்பட்டால் அது சமூகப் பிரச்சனையாக" அமையும். ஒரு சமூக நிலைமை ஒரு சமூகப் பிரச்சனையாக அமைய அது "தீங்கான விளைவுகளைக்" கொண்டிருக்க வேண்டும். அதாவது மக்களுடைய வாழ்க்கைத் தரத்தையும், அவர்கள் போற்றிப் பேணுகிற விழுமியங்களையும் பாதிப்பதாகவும் அதைப் போக்க வேண்டும் அல்லது சீர்திருத்த வேண்டும் என்று பெரும்பான்மையான மக்கள் தீர்மானிப்பதாகவும் அமைய வேண்டும். சமூகப் பிரச்சனையில் புறவயல் பரிமாணம், அகவயல் பரிமாணம் என இரு பரிமாணங்கள் உள்ளன என்கிறார் ஜூலியன். புறவயல் பரிமாணம் என்பது சமூகப் பிரச்சனையாக வெள்ளிடையாக நிலவுகிற சமூக நிலைமையையும், அகவயல் பரிமாணம் என்பது அந்த நிலைமையை மாற்ற வேண்டும் என்று சமூகத்தில் நிலவுகிற கருத்தையும் குறிப்பிடுகின்றன.

## சமூகப் பிரச்சனை: பொது இயல்புகள்

எந்த ஒரு நிலைமை மக்களுடைய வாழ்க்கையில் பண்பு நலத்தை அல்லது மக்கள் பெரிதும் பேணிப் போற்றுகிற விழுமியங்களைப் பாதிக்கிறதோ அந்த விளைவுகளே "தீங்கான விளைவுகள்" என கருதப்படுகிறது. சமூகத்தில் நிலவும் ஒரு நிலைமை தீங்கான விளைவுகளை உண்டாக்கும் போது அது சமூகப் பிரச்சனையாக அமைகிறது. எனினும் தீங்கான விளைவுகள் மட்டுமே அந்த நிலைமையை சமூகப் பிரச்சனையாக் கருதப் போதுமானதாகாது. எந்த விளைவுகள் தனி மனித முயற்சியின் மூலமாக அல்லாது கூட்டு முயற்சியின் மூலமாக மட்டுமே சமாளிக்க முடியும் என்ற அளவில் அமைகிறதோ, அவையே சமூகப் பிரச்சனைகளாக அமையும்.

ஒரு சமூகப் பிரச்சனை சமூகத்தின் ஒரு பிரிவினருக்கு அல்லது ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையிலான மக்களுக்கு மட்டுமே தீங்கான விளைவுகளை உண்டாக்கக் கூடியதாக இருப்பினும், அது ஒட்டு மொத்த சமூகத்திற்கும் உரிய பிரச்சனையாகக் கருதப்படுகிறது. அது மற்றைய பிரிவினருக்கும் பரவி அவர்களை ஏதாவதொரு வகையில் பாதிக்கக் கூடுமாதலால், சமூகம் அப்பிரச்சனையை தீர்த்து வைப்பதில் தன்னை ஈடுபடுத்திக் கொள்ளுகிறது. ஆக, சமூகம் ஒரு பிரச்சனை மீது கரிசனம் காட்டுவதற்கு அந்தப் பிரச்சனையால் எழக் கூடிய தீங்கான விளைவுகள்தாம் அடிப்படை என்பதால் சமூகப் பிரச்சனைகள் பற்றிய ஆய்வு அவற்றால் ஏற்படுகிற தீங்கான விளைவுகளையும் உள்ளடக்கியதாக இருக்கிறது. ஒரு நிலைமையினால் தீங்கான விளைவுகள் ஏற்படாத வரையில் அது ஒரு பிரச்னையாக உருமாறுவதில்லை. எனவே சமூகமும் அதைப் பற்றி கவலைப்படுவதில்லை.

சமூகப் பிரச்சனைகள் பற்றிய பல்வேறு அறிஞர்களின் வரையறைகளிலிருந்து அவற்றின் இயல்புகளாகக் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடலாம்:

1. அனைத்து சமூகப் பிரச்சனைகளும் இயல்பான தன்மையிலிருந்து விலகியதாக உள்ளன.

2. அனைத்து சமூகப் பிரச்சனைகளும் சில பொதுவான தன்மைகளை அதன் தோற்றத்தில் கொண்டதாக உள்ளன.

3. அனைத்து சமூகப் பிரச்சனைகளுக்கும் அடிப்படைக் காரணமாக சமூக அமைப்பும், செயல்பாடுகளும் உள்ளன; சமூகப் பிரச்சனைகளின் தோற்றம் சமூகம் சார்ந்ததாக உள்ளன.

4. சமூகப் பிரச்சனைகள் ஒன்றோடொன்று தொடர்புடையவை; இணைந்தவை.

5. அனைத்து சமூகப் பிரச்சனைகளும் சமூகத்திற்குத் தீமையான விளைவுகளை ஏற்படுத்தக்கூடிய சூழ்நிலைகளாகும்.

6. அனைத்து சமூகப் பிரச்சனைகளும் சமூகத்தின் அனைத்து தரப்பினரையும் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ பாதிக்கக் கூடியவை.

7. சமூகப் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கு சமூகப் பொறுப்புடன் கூடிய கூட்டு அணுகுமுறை தேவைப்படுகிறது.

8. சமூகப் பிரச்சனைகள் அனைத்து சமூகங்களிலும் ஏற்படுகின்றன.

## சமூகப் பிரச்சனை: வகைகள்

சமூகப் பிரச்சனைகள் ஒரே வகையினமாக அல்லாது பல்வேறு வகைகளில் அமைகின்றன. கேஸ் (Case, 1964:34) என்பவர் சமூகப் பிரச்சனைகளை அதன் தோற்றத்தின் அடிப்படையில் நான்காக வகைப்படுத்துகிறார். அவை:

1. இயற்பியல் சூழ்நிலையை ஆதாரமாகக் கொண்ட சில தன்மைகளால் ஏற்படும் சமூகப் பிரச்சனைகள்.

2. இயற்கையாகவே அமைந்துள்ள மற்றும் மக்கள்தொகையின் பகிர்வினால் ஏற்படுகிற சமூகப் பிரச்சனைகள்.

3. குறைபாடு உள்ள சமூகநிலையமைப்பிலிருந்து தோன்றுகிற சமூகப் பிரச்சனைகள்.

4. சமூகத்தின் பண்பாட்டு விழுமிய முரண்பாட்டால் உருவாகும் சமூகப் பிரச்சனைகள்.

ரிச்சர்ட் ஃபுல்லர் மற்றும் ரிச்சர்ட் மையர்ஸ் (Richard Fuller and Richard Myers, 1941:367) சமூகப் பிரச்சனைகளைக் கீழ்க்காணும் மூன்று வகைகளாகப் பிரிக்கின்றனர்:

(அ) இயற்பியல் பிரச்சனைகள்: வெள்ளம், பஞ்சம் போன்ற இயற்கை இடர்களினால் உண்டாவன.

(ஆ) தீர்க்க வேண்டிய பிரச்சனைகள்: பிரச்சனைகளினால் ஏற்படும் விளைவுகளில் கருத்தொற்றுமை இருந்தாலும் இவற்றை எப்படி தீர்ப்பது என்பதில் ஒருமித்த கருத்து காணப்படாது. உதாரணம்: குற்றம், *போதைப்பழக்கம், வறுமை போன்றவை.*

(இ) ஒழுக்கம் சம்பந்தப்பட்ட பிரச்சனைகள்: இவற்றின் தன்மை, காரணங்களில் கருத்தொற்றுமை காணப்படாது. உதாரணம்: சூதாட்டம், மணமுறிவு போன்றவை.

ஸ்டான்லி ஐட்ஜென் (Stanley Eitzen, 1983) சமூகப் பிரச்சனைகளை இருவிதமாகப் பிரிக்கிறார். அவை:

(அ) சமூக நெறிமுறைகளையும், விருப்பங்களையும் மீறுகிற செயல்கள் அல்லது நிலைமைகள்.

(ஆ) மக்கள் திரளில் ஒரு பிரிவுக்கு மன வேதனையையும், பொருள் இழப்பையும் ஏற்படுத்துகிற நிலைமைகள்.

சமூகத்தின் நெறிமுறைகள், விழுமியங்கள் முதலியவை சமூக ஒழுங்குக்கு இன்றியமையாதவை. அவற்றை தனிமனிதர்கள் மீறுவது சமூகப் பிரச்சனையாக அமையும். ஆனால் தனிமனிதர்கள் சமூக நெறிமுறைகளையும், விழுமியங்களையும் மீறுவதற்கு சமூகம் தான் பொறுப்பாளி எனவும், சமூகத்தின் குறைபாடுகள் காரணமாகவே தனிமனிதர்கள் சமூக நெறிமுறைகளையும் விழுமியங்களையும் மீறுகிறார்கள் எனவும், ஆகவே தனிமனிதர்கள் சமூக நெறி முறைகளையும், விழுமியங்களையும் மீறுவதற்கு சமூக அமைப்பே காரணம் எனவும் ஸ்டான்லி ஐட்ஜென் கருத்துரைக்கிறார். தனிமனிதர்களின் நெறிமுறை மீறிய செயல்கள் சமூகப் பிரச்சினைகளாக அமைகின்றன என்பது குறித்து இரு வேறு கருத்துகள் இல்லை.

நெறிமுறை மீறல் என்பதை அளவிட எவ்விதமான புறவயக்கட்டளை அளவையும் இல்லை. சமூகம் ஒரு செயலை நெறிமுறை மீறிய செயல் என்று முத்திரை குத்தும் போது, அது நெறிமுறை மீறிய செயலாகிறது. அந்த அடிப்படையிலேயே அது நெறிமுறை மீறிய செயலாகிறது; சமூகப் பிரச்சனையாக அமைகிறது. இவ்வாறாக, சமூகத்தில் யார் வலுவுள்ளவர்களாக, ஆதிக்கமிக்கவர்களாக இருக்கிறார்களோ அவர்கள்தான் ஒரு செயலை, நெறிமுறையற்ற செயல் அல்லது நெறிமுறையான செயல் என்று ஆக்குகிறார்கள். அவ்விதம் நெறிமுறை மீறிய செயலாக அமைகிற ஒரு செயல் சமூகப் பிரச்சனையாக வெளிவருகிறது.

மக்களில் ஒரு பிரிவினருக்கு மனவேதனையையும் பொருள் இழப்பையும் ஏற்படுத்துகிற நிலைமையில் அவர்களுக்கு வேண்டிய அடிப்படைத் தேவைகளை நிறைவேற்றுவதற்கான வாய்ப்புகளையும் நிறுவன ஏற்பாடுகளையும் சமூகம் செய்ய வேண்டும். அவ்வாறு செய்யத் தவறினால் அல்லது எல்லோருக்கும் கிடைக்கிற வகையில் செய்யாமல் ஒரு சிலருக்கு மட்டுமே கிடைக்கிறவாறு செய்தால், பாதிக்கப்பட்டவர்கள் மனோரீதியாகவும் பொருளாதார ரீதியாகவும் துன்பப்படுவார்கள். இவ்வாறு சமூக நிலைமைகளினால் மனோரீதியாகவும், பொருளாதார ரீதியாகவும் பாதிக்கப்படுகிற மக்கள் சமூக விரோதிகளாக, சமூக எதிர்ப்பாளர்களாக உருவாகக்கூடும் என ஐட்ஜென் எச்சரிக்கை விடுக்கிறார். பாதிக்கப்பட்ட மக்கள் மனமுடைந்து சமூகத்தின் மீது எரிச்சல் அடைகிறார்கள். சமூகத்தின் மீது தங்களுக்கு இருக்கிற ஆதங்கத்தையும், எரிச்சலையும், எதிர்ப்புகளையும் சமூக நெறிமுறைகளை மீறுவதன்மூலம் வெளிப்படுத்துகிறார்கள். சமூகக் கட்டுப்பாடுகளை உடைத்து, சமூக விரோத செயல்களான குற்றச் செயல்கள், வன்முறை, பயங்கரவாத நடவடிக்கைகள் முதலியவற்றில் ஈடுபடுகிறார்கள். [8]

## சமூக பிரச்சனையின் நிலைகள்

ஒரு பிரச்சனை 'சமூகப் பிரச்சனை' என்ற நிலையை அடைய கீழ்க்கண்ட மூன்று படிநிலைகளைக் கடக்கிறது என ஃபுல்லர் மற்றும் மையர்ஸ் (Fuller and Myers, 1941:320-28) கூறுகின்றனர்.

**1. விழிப்புணர்வு**

இந்த முதல் நிலையில் குறிப்பிட்ட ஒரு பிரச்சனை நிலவுகிறது என்பதையும், அது விரும்பத்தகாத நிலைமை என்பதையும், அதைத் தீர்ப்பதற்கு நடவடிக்கை எடுக்க வேண்டும் என்பதையும் மக்கள் உணருகிறார்கள். முதலில் ஒரு சிலர் மட்டுமே அறியக்கூடியதாக இருக்கும் இப்பிரச்சனை நாளடைவில் அதிகமானோர் தெரிந்து கொள்ளும் நிலைக்கு நகர்கிறது.

**2. கொள்கையை உருவாக்குதல்**

குறிப்பிட்ட சமூகப் பிரச்சனையைப் பற்றிய விழிப்புணர்வு சமூகத்தில் அதிகரிக்கும்போது அப்பிரச்சனைக்கான தீர்வுகளும் விவாதிக்கப்படுகின்றன. இந்த இரண்டாம் நிலையில் தீர்வுகள் யாவை என்பதும் அவை எவ்வாறு நடைமுறைப்படுத்தப்பட வேண்டும் என்பதும் முடிவு செய்யப்படுகின்றன.

**3. செயலாக்கம்**

அடிப்படைத் தீர்வுகளும் கொள்கைகளும் தீர்மானிக்கப்பட்ட பின்னர், மூன்றாம் நிலையான செயல்நிலையை அடைகிறது.

'சமூகப்பிரச்சனை'யின் உருவாக்கத்தை ஐந்து நிலைகளாக ஃபுளுமர் (Blumer, 1971:290-309) வகைப்படுத்துகிறார்:

(i) பிரச்சனை உருவாதல்.
(ii) பிரச்சனையை நியாயப்படுத்துதல்.
(iii) செயலதாரத்திரட்டு.
(iv) செயல்முறைத்திட்டத்தை உருவாக்குதல்.
(v) திட்டத்தை அமல்படுத்துதல்.

ஒரு சமூகப்பிரச்சனையின் வளர்ச்சியில் நான்கு நிலைகள் காணப்படுகின்றன என மால்கம் ஸ்பெக்டர் மற்றும் ஜான் கிட்ஸ்யூஸ் (Malcolm Spector and John Kitsuse, 1997:141-50) கூறுகின்றனர்.

**1. போராட்டம்**

தற்போது நிலவும் சமூகச் சூழ்நிலை குறித்து மக்கள் அதிருப்தி அடைந்து அந்நிலையை எதிர்ப்பதுடன் இப்பிரச்சனையை பிறரும் அறியச் செய்து பிரச்சனைக்கான காரணத்தைக் களைந்து நிலைமையை மேம்படுத்த முயலுகிறார்கள். பாதிக்கப்பட்டவர்களிடமிருந்து மட்டுமல்லாமல் பாதிக்கப்பட்டவர்கள் சார்பாகவும் எதிர்ப்புகள் எழலாம். இத்தகைய போராட்டங்கள் தனிநபர்களின் பிரச்சனைகளைக் கூட பொதுப்பிரச்சனையாக ஆக்க முயற்சிக்கலாம்; அத்தகைய முயற்சிகள் வெற்றி பெறாமலும் போகலாம்.

**2. அதிகாரமயமாதலும் எதிர்வினையும்**

பிரச்சனையை வெளிப்படுத்துபவர்கள், அது தொடர்பான செயல்வடிவத்தை உருவாக்குபவர்கள் மற்றும் அதிகாரத்தில் உள்ளோரின் கவனமும் இப்பிரச்சனையின்பால் ஈர்க்கப்படுகிறது. இதையொட்டியே இப்பிரச்சனைக்கான தீர்வை வடிவமைப்பதும், தாக்கத்தை மாற்றி அமைப்பதும், இதை முன்னிறுத்திப் போராட்டமாக அல்லது இணக்கமாக மாறுமா, இல்லையா என தீர்மானிக்கப்படுதலும் நிகழ்கின்றன.

**3. நியாயப்படுத்துதல்**

ஒரு சமூகப் பிரச்சனையை நியாயப்படுத்துவதற்கு, அது தொடர்பான குழுவினர் அதிகாரத்தில் இருக்க வேண்டும் அல்லது அத்தகைய பிரச்சனை நிலவுவதாக அதிகாரத்தில் இருப்பவர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும். இப்பிரச்சனைக்காக உரிமை கோருபவர்கள் முதலில் வித்தியாசமாகப் பார்க்கப்படுகிறார்கள். பின்னர் அப்பிரச்சனை குறித்துச் சரளமாகப் பேசக்கூடியவர்களாகவும், இப்பிரச்சனையுடன் இணைந்தவர்களாகவும், அதற்கான தீர்வை உருவாக்குபவர்களாகவும் அங்கீகரிக்கப்படுகிறார்கள்.

**4. இயக்கங்களின் மறு உருவாக்கம்**

அதிகாரப் பொறுப்பில் உள்ளோரின் குறைபாடான செயல்திட்டங்கள் மற்றும் ஆர்வமின்மை காரணமாக பிரச்சனைக்காக போராடுபவர்கள், ஒரு இயக்கத்தை உருவாக்கித் தீர்வு காண ஆட்சியாளர்களை வற்புறுத்துவது. இக்கருத்தின்படி, அடிப்படையில் சமூகப் பிரச்சனை அரசியல்

சார்ந்ததாகவும், அதன் எதிர்வினைகள் குறிப்பிட்ட விதத்தில் வடிவமைக்கப்பட்டதாகவும்,மறு உருவாக்கம் பெற்றதாகவும் விளங்குகிறது.

## தனிமனிதன் மற்றும் சமூகத்தின் மீதான தாக்கம்

ஒரு குறிப்பிட்ட சூழலில் தனிமனித பிரச்சனையாக இருப்பது மற்றொரு சூழலில் சமூகப் பிரச்சனையாகலாம்.

சமூகப் பிரச்சனைகளைப் பற்றிய ஆய்வு, சமூகப் பிரச்சனைகள் தோன்றி வளர்கிற விதத்தையும், காரணங்களையும் உள்ளடக்குகிறது. சமூகப் பிரச்சனைகள் திடீரென்று உருவாகி, வளர்வதில்லை; அவை பல நிலைகளைக் கடந்து வளர்கின்றன. சமூகப் பிரச்சனையின் காரணங்கள் பற்றித் தெரிந்து கொள்வதன் மூலம் பிரச்சனைகளுக்கு எதிரான நடவடிக்கைகளை சரியாகத் திட்டமிட்டு செயல்படுத்த முடியும்.

ஒரு சமூகப் பிரச்சனை ஒரு தனித்த காரணியால் மட்டும் ஏற்படுவதில்லை; பல்வேறு காரணிகள் அதன் தோற்றத்தில் உள்ளடங்குகின்றன. இந்த காரணிகள் பல்வேறுபட்ட தன்மை உடையவை. ஒவ்வொரு சமூகப் பிரச்சனைக்கும் காரணமாக பல காரணிகள் இருந்தாலும் அவற்றில் சில, முதன்மையான காரணிகளாக் விளங்கும். ஒவ்வொரு சமூகப் பிரச்சனையும் தனித்தன்மை மிக்கதாக, தனித்துவமான இயல்புகள் கொண்டதாக மற்ற சமூகப் பிரச்சனைகளிலிருந்து மாறுபட்டதாக அமைவதற்கு இம்முதன்மைக் காரணிகளே காரணமாகின்றன.

சமூகப் பிரச்சனைகள் அனைத்து சமூகங்களிலும் பல்வேறு காரணங்களால் ஏற்படுகின்றன. அவை:

(அ) சமூக அமைப்பு முறைகளில் முரண்பாடுகள் நிலவுவது

(ஆ) பொருளாதார, அரசியல் அமைப்பு முறைகள் குறைபாடுகளுடன் செயல்படுவது

(இ) மத அமைப்புகள் காலச் சூழ்நிலைக்கு ஏற்ப மாறாமலிருப்பது

(ஈ) குறிப்பிட்ட காரணம் என்றில்லாமல் பொதுப்படையான காரணிகளால் உண்டாவது.

(உ) சமூகப்பிரச்சனைகளே பிற சமூகப் பிரச்சனைகளுக்குக் காரணமாக அமைவது. அதாவது, ஒரு சமூகப்பிரச்சனை இன்னொரு சமூகப்பிரச்சனை உருவாகக் காரணமாக அமைவது.
எடுத்துக்காட்டாக, வேலை வாய்ப்பின்மை வறுமைக்கு வழி கோலக்கூடும்; பிறகு இரண்டும் சேர்ந்து குற்றத்திற்கு வழி கோலக்கூடும்.

அனைத்து சமூகப் பிரச்சனைகளும் சமூகத்தின் ஆரோக்கியமற்ற சூழ்நிலைக் காரணங்களால் தோன்றுகின்றன. சமூகப்பிரச்சனைகள் நீக்கமற அனைத்துச் சமூகங்களிலும் – அவை எளிய சமூகங்களாகவோ அல்லது சிக்கலான சமூகங்களாகவோ இருப்பினும் – தோன்றுகின்றன. ஒரு குழுவைச் சார்ந்த தனிமனிதர்களுக்கிடையேயான உறவு பாதிப்படையும் போதும் கோளாறான அனுசரித்தல் மற்றும் முரண்பாடுகள் காரணமாகவும் அவை தோன்றுகின்றன.

சமூகப்பிரச்சனைகளுக்கு அடிப்படையான கீழ்க்கண்ட மூன்று முக்கியமான கூறுகள் கவனத்தை ஈர்க்கின்றன:

1. சமூகப்பிரச்சனைகள் பல்வேறு காரணங்களால் தோன்றுகின்றன. அவற்றைப் பொதுவாக தனிமனிதர்கள் மற்றும் சமூகச் சுற்றுப்புறம் என்ற இரு வகைகளாகக் காணலாம். தனிமனிதர்களிடம் காணப்படும் முக்கியக் காரணங்களாக (அ) பாரம்பரியக் கூறுகள், மற்றும் (ஆ) பெறப்பட்ட கூறுகள் உள்ளன. சமூகச்சுற்றுப்புறத்தில் காணப்படும் முக்கிய காரணிகள்: (அ) சமூக அமைப்புகளில் உள்ள முரண்பாடுகள், (ஆ) பொருத்தமற்று இயங்கும் பொருளாதார அமைப்புகள், (இ) சமய அமைப்புகளில் போதுமான மாற்றங்கள் ஏற்படாமை, (ஈ) தவறாக செயல்படும் அரசியல் அமைப்புகள். அனைத்துச் சமூகப் பிரச்சனைகளுக்கும் மேற்கூறிய அனைத்துக் காரணிகளும் இணைந்தே காரணமாக அமைவதில்லை; ஒவ்வொரு பிரச்சனையைப் பொறுத்து அவை மாறுபடுகின்றன.

2. அனைத்துச் சமூகப் பிரச்சனைகளும் அவற்றின் பொதுவான காரணங்களுக்குத் தளம் அமைத்துத் தருகின்றன.

3. சமூகப் பிரச்சனைகள் ஒன்றுடன் ஒன்று இணைந்ததாகவும், தனித்தனியானதாகவும் இருக்கின்றன. ஒட்டு மொத்தமாக ஊக்குவிக்கும் மற்றும் தூண்டிவிடும் தன்மையை அவை கொண்டிருப்பதால் ஒன்றையொன்று ஊக்குவித்து வளர்க்கின்றன.

ரெய்ன்ஹார்ட் (Reinhardt, 1952:7-12) சமூகப் பிரச்சனைகளின் வளர்ச்சிக்குக் கீழ்க்காணும் மூன்று காரணிகள் உதவுவதாக குறிப்பிடுகிறார்:

**1. பிரிந்தும், பெருக்கமடைந்தும் காணப்படும் ஆர்வமும் செயல்களும்**

ஒரு இயந்திரத்திலோ அல்லது உயிரினத்திலோ உள்ள பகுதிகள் அதிகரிக்க அதிகரிக்க அவற்றின் இணக்கமான இயங்கும் திறன் குறைந்து கொண்டே வரும் என்ற பொதுவான விதி தனிமனிதர்கள், குழுக்கள், நிறுவனங்கள் மற்றும் அமைப்புகள் இடையேயான விருப்பங்களின் முரண்பாட்டு மோதல்கள் காரணமாக மனித சமூகத்திற்கும் பொருந்துகிறது. எடுத்துக்காட்டாக, பல்வேறு சாதிகள் மற்றும் வகுப்புகளுக்கிடையேயான முரண்பட்ட விருப்பங்களின் விளைவால் தோன்றும் தீண்டாமை, சாதி, மதக் கலவரங்கள் மற்றும் அரசியல் குற்றங்கள் ஆகியவற்றைக் குறிப்பிடலாம்.

**2. அதிவிரைவான சமூக மாற்றம் அல்லது நாகரிக வளர்ச்சி**

அறிவியல் தொழில்நுட்பங்கள் மற்றும் இயந்திரங்களின் வருகையால் அதிவேக மாற்றங்கள் ஏற்படுகின்றன. திறன் வாய்ந்த நவீன இயந்திரங்கள் பயன்படுத்தப்படுவதால் தொழில் உற்பத்தியிலும், உறவுகளிலும் மாற்றங்கள் ஏற்பட்டு அவற்றையே நம்பி வாழும் லட்சக்கணக்கானோர் வேலையிழக்க நேரிடுவதும், பிழைப்புக்காக இடம் பெயர்வதும், வர்க்க முரண்பாடுகள் கூர்மையடைவதும் ஆகிய தொடர் நிகழ்வுகளுக்கு காரணமாகின்றன. அதி நவீன கண்டுபிடிப்புகள் மற்றும் பயன்பாடுகளால் சமூக அமைப்பிலும், செயல்பாடுகளிலும் எதிர்மறைப் போக்குகள் உருவாகி அதன் விளைவாக சமூகப் பிரச்சனைகள் தோன்றுகின்றன.

**3. மனிதனின் ஆழ்ந்த அறிவும், அறிவியல் அணுகுமுறையும்**

மனிதனின் அறிவு விரிவடைந்து, சமூகத்தின் இயக்கத்தையும், இயற்கையின் பங்களிப்பையும், அது தொடர்பான சிக்கல்களையும் சரியாகப் புரிந்து கொள்ள முடிவதால் மனிதனிடமும், சமூகத்திடமும் தாக்கத்தை ஏற்படுத்துகிறது.

சமூகப் பிரச்சனைகள் சமூகத்தின் செயல்பாட்டை சீர்குலைக்கின்ற நிலைமை 'சமூக நிலை குலைவு' என அறியப்படுகிறது. ஒரு ஒழுங்கமைப்பைக் கொண்டுள்ள சமூகத்தின் பல்வேறு உறுப்புகள் ஒரு ஒழுங்குமுறையில் ஒன்றோடொன்று பிணைந்துள்ளன. அவை தத்தம் பணிகளை ஒன்றோடொன்று இணைந்தவாறும், பரஸ்பரம் அனுசரித்துக் கொண்டும் செயல்படுத்துகின்றன. இவ்வாறு ஒற்றுமையுடனும், சமன்பாட்டுடனும் சமூகத்தின் உறுப்புகள் அமைந்து செயல்படுகிற நிலைமை 'சமூக நிலையமைப்பு' என அழைக்கப்படுகிறது. ஆக்பனும், நிம்காஃபும் (Ogburn and Nimkoff) "சமூக நிலையமைப்பு என்பது சமூக உறுப்புகள் ஓர் ஒழுங்கு முறையில் இணைந்திருக்கும் நிலை" என வர்ணிக்கின்றனர். உறுப்புகளுக்கிடையே உள்ள ஒட்டிணைவு அல்லது ஒற்றுமைதான் சமூக நிலையமைப்பின் சாராம்சமாக விளங்குகிறது. எனினும் இந்தச் செயல்பாட்டு ஒட்டுறவு, அதாவது உறுப்புகள் ஒன்றோடொன்று இணைந்து அனுசரணையுடன் செயல்படுகிற ஒட்டிணைவு--சமன்பாடு நிலை எப்பொழுதும் அப்படியே அசைவற்று இருப்பது இல்லை; அவை மாற்றத்திற்கு உட்பட்டவை. ஓர் உறுப்பு, மாற்றம் அடையும்போது அதனுடன் இணைந்துள்ள மற்றைய உறுப்புகளும் அதன் மாற்றத்திற்கேற்ப அனுசரித்து மாறுகின்றன. இத்தகைய அனுசரணையான மாற்றத்தின் காரணமாகவே சமூகத்தில் நிலவும் சமன்பாட்டு நிலை குலையாமல் நீடித்து நிற்கிறது.

எலியட் மற்றும் மெர்ரில் (Elliott and Merrill), மோரர் (Mowrer), கில்லின் மற்றும் கில்லின் (Gillin and Gillin) ஆகியோர் "சமூக உறுப்புகளுக்கிடையே சமனியம் முறியும்போது சமூகம் நிலைகுலைகிறது. சமூக உறுப்புகள் ஒருங்கிணைந்து அனுசரித்துச் செயல்படும் சமனியம்தான் சமூக நிலையமைப்பான்மைக்கு ஆதாரம். அந்த ஆதாரம் அதிர்ந்தால் சமூக நிலையமைப்பான்மை அதிரும். சமூகச் சீர்குலைவு தோன்றும்" என தெரிவித்துள்ளது கவனத்திற்குரியது.

சமூகத்திற்குள் நிகழும் மாற்றம், சமூக சமன்பாட்டைத் தகர்க்கிற வகையில் வன்மையாகவும், கடுமையாகவும் இருந்தால் சமூக நிலையமைப்பு ஆட்டம் கண்டு சமூக நிலை குலைவு ஏற்படும். 'சமூக நிலை குலைவு சமூக நிலையமைப்புக்கு எதிரானது' என ஹார்ப்பர் (Harper) கருதுகிறார்.

தனி மனித பிரச்சனை ஒட்டு மொத்த சமூகத்தையோ அல்லது சமூகத்தின் ஒரு பிரிவினரையோ பாதிக்கிறது. எடுத்துக்காட்டாக, மதுவிற்கு அடிமை, போதைப் பழக்கம், ஊழல், எய்ட்ஸ், குழந்தைகளைத்

தவறாகப் பயன்படுத்துதல், தீவிரவாதம், ஏழ்மை, வேலையின்மை மற்றும் குற்றம் ஆகியவை தனி மனிதப் பிரச்சனை மட்டுமல்ல; ஒட்டுமொத்தமாக பொதுமக்களை பாதிப்பது. இத்தகைய பிரச்சனைகள் சமூகத்தின் பல்வேறு கட்டமைப்புகளில் எவ்வாறு முளைத்தெழுகின்றன என்பதையும், எவ்விதம் அவற்றைப் பாதிக்கின்றன என்பதையும், அவற்றின் தன்மை, காரணங்களுடன் கண்டறிவதன் மூலம் அப்பிரச்சனைகளின் தீர்வுக்கான செயல் திட்டங்களை மேற்கொள்ளவும் உதவுகின்றன.

## சமூகப் பிரச்சனைகள்: ஆய்வு முறைகள்

சமூகப் பிரச்சனைகளை ஆராய்ந்தறிய மூன்று முக்கிய ஆய்வு முறைகள் பயன்படுத்தப்படுகின்றன.

### தனிநபர் அல்லது குழு ஆழ்ந்த ஆய்வு முறை

தனிநபர் அல்லது குழு ஆழ்ந்த ஆய்வு முறை சமூகப் பிரச்சனைகளின் உருவாக்கம் பற்றிய சமூகச் செயற்பாங்கை அறிவதற்குப் பயன்படுகிறது. சமூக நிகழ்வுகள், சமூக உறவுகள், மனிதர்களின் தூண்டுதல், பாதிக்கப்பட்ட நபர் மற்றும் தாக்கம் ஆகியவற்றை ஆய்வுக்கு உட்படுத்துகிறது. இந்த ஆய்வு முறையில் முதல் நிலைத் தரவுகளுடன், இரண்டாம் நிலைத் தரவுகளும் பயன்படுத்தப்படுகின்றன. சமூகப் பிரச்சனைகளுக்கான காரணங்களை ஆராய்ந்து அப்பிரச்சனைகளுக்கு பொதுத்தீர்வை உருவாக்க இந்த ஆய்வு முறை உதவுகிறது.

### சமூகச் சுற்றாய்வு முறை

இம்முறையில் ஒரு குறிப்பிட்ட பகுதி மக்களிடமிருந்து அல்லது மாதிரிகளாகத் தெரிவு செய்யப்பட்டவர்களிடமிருந்து முறைப்படுத்தப்பட்ட கேள்விகள் மூலம் தரவுகள் சேகரிக்கப்படுகின்றன. பிச்சையெடுத்தல், போதைப்பழக்கம், பெண் குற்றவாளிகள், வரதட்சணை, இளங் குற்றவாளிகள், பெண்களுக்கெதிரான வன்முறைகள் போன்ற பரந்துபட்ட பிரச்சனைகளை ஆராய இந்த ஆய்வு முறை அதிக அளவில் பயன்படுத்தப்படுகிறது. குறிப்பிட்ட சமூகப் பிரச்சனையுடன் தொடர்புடைய மாறிகள் மற்றும் அவைகளுக்கு இடையேயான தொடர்பினை அறியவும் இந்த ஆய்வு முறை பயன்படுகிறது.

## பல்வகைக் காரணி ஆய்வு முறை

ஒரு குறிப்பிட்ட சமூகப் பிரச்சனையையும் அதனுடன் இணைந்துள்ள பல்வேறு காரணிகளுக்கும் இடையேயான உறவைக் கண்டறிய இம்முறை பயன்படுகிறது. எடுத்துக்காட்டாக சமூகப் பொருளாதார நிலை, பண்பாட்டு உட்குழுக்கள், குடும்பத்தினருக்கு இடையேயான உறவுகள், திருமணத்தகுதி, வாழ்க்கை முறை, ஏமாற்றங்கள், வெறுப்புகள் போன்றவை சமூகப் பிரச்சனைகளுடன் நேரிடையாகவோ அல்லது எதிர்மறையாகவோ இணைந்திருப்பதை வெளிக்கொணர இம்முறை உதவுகிறது. பல்வேறு காரணிகள் பல்வேறு பிரச்சனைகளுடன் இணைந்தவைகளாக இருப்பதையும் இந்த ஆய்வு முறை ஆராய்கிறது. வறுமை மற்றும் குற்றங்களுக்கான தொடர்பு, போதைப் பொருட்களுக்கு அடிமையாதல் மற்றும் பொருளாதார நிலை, தாழ்வுமனப்பான்மை, தற்கொலை, தனிமைப்படுத்துதல், திருமணநிலை ஆகியவற்றை எடுத்துக்காட்டாகக் கூறலாம். சமூகப்பிரச்சனைகளை ஆராய இவ்வாறு வகைப்படுத்தப்பட்ட காரணிகள் தனித்துறை ஆய்வு வாயிலாகவும், பல்துறை ஆய்வு வாயிலாகவும் பயன்படுத்தப்படுகின்றன.

## References


Eitzen, D.Stanley. Social Problems. 2nd ed. (Boston: Allyn and Beacon, 1983).

Elliott, Mabel A. and Francis E. Merrill. Social Disorganisation. (New York: Harper and Row Publishers, 1961).

Fuller, Richard C. and Myres, Richard R. "The Natural History of a Social Problem", American Sociological Review, 1941.

Herbert, Blumer. "Social Problems as Collective Behaviour", Social Problems, 18 (Winter 1971), p.299.

Horton, Paul B. and Leslie Gerald R. The Sociology and Social Problems. (4th ed.). (New York: Appleton Century Crofts, 1970).

Landis, Paul H. Social Problems. (Chicago: J.B.Lippincott Co., 1959).

Merton, R.K and Nisbet (ed.), Contemporary Social Problems. (New York: Harcourt Brace, 1971).

Raab, Earl and Gertrude Jaeger Selznick. Major Social Problems. 2nd ed., (New York: Harper, 1964).

Reinhardt, James M., Meadows Paul and Gilletee John M. Social Problems and Social Policy. (New York: American Book Co., 1952).

Walsh, Mary E. and Furfey Paul H. Social Problems and Social Action. (3rd ed.). (Englewood Cliffs, New Jersey: Prentice Hall, 1961).

Warren, Roland L. "Social Disorganisation and the Interrelationship of Cultural Roles", American Sociological Review, (14), 1949.

Weinberg, Kirson S. Social Problems in Our Times. (Englewood Cliffs, New Jersey: Prentice Hall Inc., 1960).

# சமூகப்பிரச்சனைகள்: கருத்தியல்கள்

அறிவியல் ரீதியில் சமூகப் பிரச்சனைகளை அலசி ஆராய்ந்து அவை எவ்விதம் உருவாகின்றன என்பதைப் பகுப்பாய்வு செய்ய சமூகவியலாளர்களின் பல்வேறு கருத்தியல் அணுகுமுறைகள் உதவுகின்றன.

## சமூக நோய்க்கூறு கருத்தியல்

இக்கருத்தியல் உயிரின ஒப்புமையின் அடிப்படையில் சமூகத்தை நோக்குகிறது. ஓர் உயிரினத்தின் ஆரோக்கியம் அதன் உறுப்புகள் தத்தம் பணியை நிறைவேற்றுவதில் மட்டுமல்ல, அவை ஒருங்கிணைந்து அனுசரணையாகச் செயல்படுவதிலும் அடங்கியுள்ளது. உறுப்புகள் இணைந்து செயல்படாமல் பரஸ்பரம் முரண்பட்டால் உயிரினத்தின் ஆரோக்கியம் குன்றும். உயிரினத்தைப் போலவே, சமூகத்திலும் பல்வேறு உறுப்புகள் இருக்கின்றன. அவை பரஸ்பரம் உறவு கொண்டு இணைந்து செயல்பட்டால்தான் சமூகம் ஆரோக்கியமாக விளங்க முடியும். உறுப்புகள் இணைந்து செயல்படாமல் போனால் சமூகம் பல பிரச்சனைகளைச் சந்திக்கும். சமூகத்தில் எவ்வாறு பிரச்சனைகள் தோன்றுகின்றன என்பதை இக்கோணத்தில் சமூக நோய்க்கூறு அணுகுமுறை விளக்குகிறது. உடலில் எவ்வாறு நோய்கள் ஏற்படுமோ, அதுபோலவே சமூகத்திலும் பிரச்சனைகள் ஏற்படும் என்பது அதன் அனுமானம்.

பிரச்சனைக்களுக்குரிய தனிமனிதர்கள்தான் சமூகப் பிரச்சனைகளுக்கும் காரணம் என்ற கருத்து முன்பு நிலவியது. சரியாக சமூகமயமாகாத நபர்கள் அல்லது உள்ளார்ந்த குறைபாடுகள் உடைய நபர்கள் ஒரு சமூகத்தில் பிரச்சனையாகத்தான் இருப்பார்கள்; அவர்கள் இருக்கிற வரையில் சமூகம் உபாதைகளுக்கு, நோய்களுக்கு, பிரச்சனைகளுக்கு ஆளாகியே தீரும் என்பது வாதமாக இருந்தது. ஆனால் இன்றைக்கு சமூக நோயியலாளர்கள் தனிமனிதர்கள் மீது தங்களின் கவனத்தைச் செலுத்துவதில்லை; மாறாக, சமூக நிறுவனங்களின் மீது கவனத்தைத் திருப்பி சமூக நிறுவனங்களின் குறைபாடுகளால்தான் சமூகம் பிரச்சனைகளுக்கு ஆளாகிறது என்று வாதிடுகிறார்கள்.

சில சமூகவியலாளர்கள் குடிப்பழக்கம், போதைப் பழக்கம். மனநோய் நிலை, குற்றம், இளஞ்சிறார் குற்றம் போன்ற சமூகப் பிரச்சனைகளைப் புரிந்து கொள்ளவும், 'விளக்கவும் சமூக நோய்க்கூறு அணுகுமுறை'

உதவாவது என கருத்துரைத்து, மாற்றாக 'சமூக அமைப்பு ஒழுங்கு குலைவு அணுகுமுறையைப்' பரிந்துரைக்கிறார்கள்.

**சமூக அமைப்பு ஒழுங்கு குலைவு கருத்தியல்**

சமூகம் பொதுவாக ஓர் ஒழுங்குமுறையோடு அமைந்திருக்கும் எனவும், அந்த ஒழுங்குமுறை கெட்டுப் போனால் அல்லது சிதைந்தால் சமூகம் நிலை குலையும் எனவும், அப்படிப்பட்ட நிலையில் சமூகத்தில் பல்வேறு பிரச்சனைகள் தோன்றும் எனவும் 'சமூக ஒழுங்கு குலைவு கருத்தியல்' கருதுகிறது.

சமூக அமைப்பு ஒழுங்கு குலைவைக் கீழ்க்கண்ட மூன்று அறிகுறிகள் மூலம் உணரலாம் என இக்கருத்தியல் குறிப்பிடுகிறது:

1. நெறியிலி நிலை: மக்களை வழிநடத்த, நெறிப்படுத்த நெறிமுறைகள் இல்லாமல் போவது.

2. பண்பாடு முரண்: முரண்பட்ட வாழ்க்கை நெறிகள் நிலவுவது.

3. ஒழுங்குமுறை குலைவு: சமூகத்தில் உரிய வாய்ப்புகள் மறுக்கப்பட்ட நிலையில் ஒரு குழு சமூக நெறிமுறைகளையும், கட்டுப்பாடுகளையும் அலட்சியப்படுத்தி உடைத்தெறிய முற்படுகிறது. இது சமூகம் நிலை குலைவதற்கு வழி வகுக்கிறது.

சமூகம் அல்லது குழுவின் மதிப்பீடுகள் மற்றும் கொள்கைகளின் குழப்பநிலையைத் தனிப்பண்பாக நெறியிலிநிலை வெளிப்படுத்துகிறது. நெறியிலிநிலையின் அடிப்படைக் கருத்தைப் பயன்படுத்தி டர்ஹெய்ம், அவரைத் தொடர்ந்து மெர்டன் சமூக, பண்பாட்டு அமைப்பில் உள்ள முரண்பாடுகளை விவரித்தனர். பண்பாட்டுக் கொள்கைகள், குறிக்கோள்கள், குழு உறுப்பினர்களின் திறமை மற்றும் அதற்கேற்ப செயல்படும் விதம் போன்றவற்றில் ஏற்படுகின்ற இடைவெளி மற்றும் அதன் விளைவாக ஏற்படும் மன அழுத்தம் ஒருவனை செயலிழக்கச் செய்கிறது. "மன அழுத்தத்திற்கான ஆதார அடிப்படை தனிமனிதனின் பண்புகளில் அல்லாமல் பண்பாடு மற்றும் சமூக அமைப்பில் உள்ளது. சமூகப் பிரச்சனை, மக்கள் சமூகத் தகுதியில் தவறுவதிலிருந்து எழுவது அன்று; மாறாக தவறாக நிர்வகிக்கப்பபடும் சமூக அமைப்பினால் உண்டாவதாகும்" என மெர்டன் மற்றும் நிஸ்பெட் (Merton and Nisbert, 1971:823) கூறுகின்றனர்.

பண்பாட்டின் சில கூறுகள் வேகமான மாற்றங்களையும், சில கூறுகள் பண்பாட்டின் சமநிலையைப் பாதுகாத்தும், மற்றும் சில கூறுகள் இணைந்து செயல்படுவதை தடுத்தும் செயலாற்றுகின்றன. உதாரணமாக பொருள்சாரா பண்பாடு விரைவாக மாற்றம் அடைவதை விட, பொருள்சார் பண்பாடு விரைவில் மாற்றம் அடைகிறது என ஆக்பர்ன் கூறுகிறார். இதிலிருந்து பண்பாட்டுப் பின்னடைவு எவ்வாறு சமூகப் பிரச்சனைகளை உருவாக்க முடியும் என்று காண முடிகிறது.

சமூகச் சீர்குலைவு நிலைமைகளில் தனி மனிதர்கள் நிலை குலைந்து போதை மருந்து பழக்கத்திற்கு ஆளாகுதல், குற்றச் செயல்களில் ஈடுபடுதல் போன்ற இன்னோரன்ன பிறழ்வு நடவடிக்கைகளில் ஈடுபடுகிறார்கள்.

சமூக ஒழுங்கு குலைவு ஒரு சமூகத்தின் நிலை மட்டும் அன்று; ஒரு குழுமத்தின் அல்லது ஒரு குழுவின் நிலை, அதன் சமூகக் கட்டுப்பாடு, சமூக ஒழுங்கு, முறைசார்ந்த மற்றும் முறைசாரா வழிகள் மற்றும் அதன் அனுமதிக்கப்பட்ட நடத்தையை வரையறை செய்கிறது.

சமூக ஒழுங்கின்மையானது ஒத்துழைப்பின்மை, பொது மதிப்பீடுகள், ஒற்றுமை, ஒழுங்கு மற்றும் எதிர்பார்ப்பு ஆகிய பண்புகளால் கண்டறியப்படுகிறது.

சமூக ஒழுங்கின்மை தன்மை (அ) கருத்தொற்றுமை இல்லாமை, (ஆ) இணைந்து செயல்படாத நிலை, மற்றும் (இ) குறைந்த வழிமுறைகளைக் கொண்ட சமூகக் கட்டுப்பாடு ஆகியவற்றை உள்ளடக்கியது என வாரன் (Warren) விவரிக்கிறார்.

எலியட் மற்றும் மெரில் (Elliott and Merrill) சமூக ஒழுங்கின்மையால் குழு உறுப்பினர்களிடையே உள்ள உறவுமுறைகள் அறுந்துவிடுகிறது அல்லது கலைகிறது என விளக்குகின்றனர்.

குழுக்களின் சமநிலை மாறும் பொழுது சமூக ஒழுங்கு குலைவு நிகழ்கிறது. சமூக அமைப்பு செயலிழப்பினால் ஏற்றுக் கொள்ளப்பட்ட சமூகக் கட்டுப்பாட்டு முறைகள் வெற்றிகரமாக இயங்குவது இல்லை. சமூக நிலையின் விதிகளற்ற நிலை, செயற்பாட்டில் முரண்பாடு, சமூக முரண்பாடு மற்றும் நம்பிக்கையின்மை போன்றவை சமூகப் பிரச்சனைகள் அதிகரிக்கக் காரணமாகின்றன.

குடும்பத்திற்கு உள்ளே மற்றும் வெளியே உள்ள உறவுமுறைகள் தளர்ந்து, மக்களில் பலர் மன அமைதியின்மையையும் மகிழ்ச்சியற்ற நிலையையும் உணருவதே சமூக ஒழுங்கின்மை. இது வாழ்க்கையின் அடிப்படை நிலையைமாற்றி இதுகாறும் பின்பற்றி வந்த விதிமுறைகள் உடையக் காரணமாகின்றது. அதிருப்தி மற்றும் விரக்தி நிலைக்குக் கொண்டு செல்கிறது. முறைசார்ந்த, ஒழுங்கமைந்த நடத்தைமுறை இந்த மாற்றங்களால் பாதிக்கப்படுகிறது.

சமூகத்தின் மாறுபட்ட, ஏற்றுக்கொள்ளப்படாத குழு நடத்தை ஒரு பகுதியினரால் ஒழுங்கமைந்த நடத்தை முறையாக ஏற்றுக் கொள்ளப்படுவதையும் பரவலாகக் காணலாம் என வொயிட் (Whyte) கூறுகிறார். சமூக ஒழுங்கு குலைவு எப்பொழுதும் சமூகப் பிரச்சனைகளை உருவாக்குவதில்லை எனவும், சமூக ஒழுங்கின்மைக் கோட்பாடு மூலமாக அனைத்துச் சமூகப் பிரச்சனைகளுக்கும் விளக்கம் தர முடியாது என்றாலும் குறிப்பிட்ட சில சமூகப் பிரச்சனைகளுக்கான காரணத்தை இதன் வாயிலாக அறியலாம் எனவும் கூறுகிறார்.

சமூக ஒழுங்கு குலைவு அணுகுமுறையைப் பயன்படுத்தி சமூகப் பிரச்சனைகளுக்கான காரணங்களைக் கீழ்க்கண்ட கேள்விகள் மூலம் ஹார்டன் மற்றும் லெஸ்லி (Horton and Leslie) தெளிவுபடுத்துகின்றனர்:

1. நடைமுறை வழக்கத்திலிருந்த விதிகள் மற்றும் பழக்கவழக்கங்கள் யாவை ?

2. சமூகப் பிரச்சனைகளை பயனற்றதாக்கிய முக்கிய காரணிகள் யாவை ?

3. எந்தெந்த விதிகள் செயலிழக்கச் சமூகப் பிரச்சனைகள் காரணமாகின ?

4. சமூக மாற்றத்தின் தன்மை மற்றும் பாதை யாது ?

5. ஏமாற்றத்திற்கும் சினத்திற்கும் ஆளான குழுக்கள் எவை? அவை முன்வைத்த தீர்வு என்ன ?

6. குழுக்கள் முன் வைத்த பல்வேறு தீர்வுகள் எவ்வாறு பொதுப்படையான சமூக மாற்றத்தில் பொருந்துகின்றன ?

7. எதிர்காலத்திற்கான ஏற்றுக் கொள்ளப்பட்ட விதிகள் யாவை ?

**விழுமியங்கள் முரண்பாடு கருத்தியல்**

சமூக நோய்க்கூறு, சமூக ஒழுங்கு குலைவு ஆகிய கருத்தியல்களை நிராகரித்து, சமூகம் 'நோய்வாய்ப்படுதல்', 'சீர்குலைதல்' என்பதெல்லாம் நாமாகக் கற்பித்துக் கொள்ளுகிற விடயங்களே தவிர இப்படித்தான் இருக்கும் என்று புறவயமாக அமைகிற புலன்கள் அல்ல என விழுமியங்கள் முரண்பாடு கருத்தியல் வலியுறுத்துகிறது. சிலருக்குச் சமூகம் நோய்வாய்ப்பட்டு இருப்பதாகஅல்லது சீர்குலைந்துள்ளதாகத் தோன்றும். அதே சமயம் மற்றவர்களுக்குச் சமூகம் ஆரோக்கியம் மிகுந்ததாக அல்லது சீராக நிலையமைந்துள்ளதாகத் தோன்றலாம் எனவும், அதேபோல நெறிமுறை விதிகளை மீறுவது சமூகச் சீர்குலைவுக்கு வழிவகுக்கிற செயலாகச் சிலருக்குத் தோன்றுவது மற்றவர்களுக்கு முற்போக்கான நடவடிக்கையாகத் தோன்றக்கூடும் எனவும், ஆகவே ஒரு நிலைமை எல்லோராலும் ஒரே மாதிரியாகப் பார்க்கப்படாமல் அவரவர் பார்வையில் அது வேறுபடுவதாக உள்ளது எனவும் இக்கருத்தியல் விவரிக்கிறது.

இந்த அடிப்படையில் ஒரு சமூகத்தின் விழுமிய அமைப்பு முறையை விழுமியங்கள் முரண்பாடு கருத்தியல் அணுகுகிறது. ஒவ்வொரு குழுவும் தமக்கென விழுமியங்கள், நடத்தைவிதிகளைக் கொண்டுள்ளதாகவும், அவற்றில் எது சரி எது தவறானது, எது நல்லது எது கெட்டது என்று வரையறை செய்யப்பட்டுள்ளதாகவும் விளக்குகிறது. இவ்வாறாக விழுமியங்கள், நடத்தை விதிகள், அணுகுமுறைகள் ஆகியவை பல்வேறு குழுக்களிடையே வேறுபட்டு, முரண்பட்டு அமையும் போது சமூகத்தில் பல பிரச்சினைகளுக்கு மூலாதாரமாகத் திகழும் என இக்கருத்தியல் விவரிக்கிறது.

சான்றாக, தொழில்துறைக் களத்தில் முதலாளிகளுக்கும், தொழிலாளிகளுக்கும் இடையேயான விழுமியங்கள் வெவ்வேறானவை; முரண்பட்டு இருப்பவை. முதலாளிகளுக்கு இலாபம் தான் குறிக்கோள்; ஆனால் தொழிலாளிகளுக்கு ஊதியம்தான் முக்கியமானது. இவ்வாறான இருசாராரும் முரண்பட்ட விழுமியங்களை, இலட்சியங்களை மையமாகக் கொண்டு செயல்படும் நிலையில் இவ்விருவருக்குமிடையே

வேறுபாடுகளும் பூசல்களும் ஏற்படுவது தவிர்க்க இயலாததாகின்றன. சுருங்கக்கூறின், எந்த ஒரு நிலையமைப்பிலும் இரு குழுக்களிடையே விழுமிய முரண்பாடு நிகழும் போது அக்குழுக்களிடையே பூசலும், மோதலும் ஏற்படும் எனவும், அதன் விளைவாக சமூக நிலையமைப்பில் அமைதியின்மை உருவாகும் எனவும் இந்த அணுகுமுறை தெளிவுபடுத்துகிறது.

## பிறழ்வு நடத்தை கருத்தியல்

புலன்களால் கண்டறியக் கூடிய பிறழ்வு நடத்தையைக் கொண்டு சமூகப் பிரச்சனைகளை இக்கருத்தியல் அணுகுகிறது. மனிதர்களின் பிறழ்வு நடத்தை பற்றியும், சமூக நெறிமுறைகளிலிருந்து பிறழ்வதற்கான உள்நோக்கம் பற்றியும், சமூகம் ஏற்றுக்கொண்டு வலியுறுத்துகிற நெறிமுறைகளிலிருந்து ஏன், எதற்காக மக்கள் விலகி நடந்து கொள்கிறார்கள் என்பதையும் பிறழ்வு நடத்தை கருத்தியல் விளக்குகிறது.

அனைத்து சமூகங்களிலும் சில முக்கிய பண்பாட்டு இலட்சியங்கள் (கல்வி, வேலை, செல்வம், புகழ் என்பவை) வாழ்க்கையின் குறிக்கோள்களாக நிர்ணயிக்கப்பட்டிருக்கும். அத்துடன் இவற்றை எவ்விதம் அடைவது என்பது குறித்த வழிமுறைகளும் வகுக்கப்பட்டிருக்கும். இலட்சியங்களும், அவற்றை அடைவதற்கான வழிமுறைகளும் ஒருசேர, சமமாக வலியுறுத்தப்படும் போது பிரச்சனை எழுவது இல்லை. ஆனால் இலட்சியங்களுக்கு முன்னுரிமையும், முக்கியத்துவமும் அளித்து வலியுறுத்தும் அதே வேளையில் அவற்றை அடைவதற்கான வழிமுறைகளை வலியுறுத்தாத காரணத்தால், நெறியிழந்த நிலையில் சமூகத்தில் பிரச்சனைகள் ஏற்படும் என்கிறார் ராபர்ட் மெர்டன். வழிமுறைகள் பின்னுக்குத் தள்ளப்பட்டு, இலட்சியம் முக்கியத்துவம் பெறுவதால் மனிதர்கள் இலட்சியங்களுக்கு முன்னுரிமை தருகிறார்கள். எந்த வழியிலாவது சென்று இலட்சியங்களை அடைய வேண்டும் என்று முனைப்புக் காட்டுகிறார்கள். வழிமுறைகள் முக்கியத்துவம் தரப்படாமல் உதாசீனப்படுத்தப்பட்டு புறக்கணிக்கப்படுகின்றன. ஆகவே பணம்தான் பிரதானம் என்று ஆகி பலர் அதைச் சம்பாதிக்க லஞ்சம், கையாடல், பண மோசடி, கள்ள நோட்டு அச்சடித்தல், கள்ளச்சாராயம் காய்ச்சுதல், திருட்டு, கொள்ளை போன்ற மோசமான செயல்களில் ஈடுபடுகிறார்கள். விளைவுதான் முக்கியம், வழி முறையல்ல என்ற நிலையில் இப்படிப்பட்ட பிறழ்வு நடத்தைகள் நிகழவே செய்யும்.

ஒரு சமூகத்தில் பண்பாட்டு இலட்சியங்களும், அவற்றை அடைவதற்கான வழிமுறைகளும் எல்லோருக்கும் பொதுவானதாக அமைந்திருந்தாலும் இலட்சியங்களை அடைவதற்கான வழிமுறைகள் ஒரு குறிப்பிட்ட பிரிவினருக்கு மட்டுமே கிடைக்கப்பெற்று, மற்றவர்களுக்கு அவை கிடைக்காமல் போனால் அல்லது கிடைக்க வழியில்லாமல் போனால் பாதிக்கப்பட்ட பிரிவினர் சமூகம் போற்றுகின்ற விழுமியங்கள், வலியுறுத்துகின்ற நெறிமுறைகள் ஆகியவற்றை மீறுவதன் மூலம் தங்களுடைய ஆத்திரத்தை வெளிப்படுத்துவார்கள் என ஜுலியன் கூறுகிறார். இவ்வாறாக, சமூகம் போற்றுகிற, வலியுறுத்துகிற பண்பாட்டு இலட்சியங்களை அடைய சமூக நெறிகளையொட்டிய வாய்ப்புகள் கிடைக்கப் பெறாதவர்கள் சட்ட விரோதமான வழிகளால் வேலையையும் வருமானத்தையும் தேடிக் கொள்கிற பிறழ்வு நடத்தை சமூகத்தில் நடைபெறுகிறது.

பிறழ்ச்சி என்பது சமூக சிந்தனையிலிருந்து வேறுபட்டு நிற்பது; இது பிறழ்வு நடத்தைக்குக் காரணமாகிறது. பிறருடன் இணக்கமான முறையில் நடந்து கொள்ள முடியாத நிலை அல்லது முரண்பாடு கொள்ளும் நிலையை விவாதிப்பது பிறழ்வு நடத்தை அணுகுமுறை. இவ்வணுகுமுறை ஒருவர் சமூக விதிகளை உடைப்பதால்/மீறுவதால் ஏற்படும் விளைவுகளை ஆராய்கிறது. தனி ஒருவனின் நடத்தை அணுகுமுறை, மாறுபட்ட நடத்தை கொண்டவரின் செயலார்வம் மற்றும் நடத்தை எவ்வாறு பிரச்சனைகளை உருவாக்குகின்றன என்பதை விவரிக்கிறது.

தனி நபரின் பிறழ்வு நடத்தை அணுகுமுறை கீழ்க்கண்ட இரு காரணிகளை விவரிக்கிறது:

1. தனி ஒருவரின் பிறழ்வு நடத்தை எவ்வாறு வளர்ச்சியடைகிறது ?

2. எத்தகைய பிறழ்வு நடத்தை சமூகப் பிரச்சனைகளில் தொடர்பு கொண்டுள்ளது ?

பிறழ்வு நடத்தைக்கான காரணங்களாக ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுவிதிகளை ஒருவரால் பின்பற்ற இயலாமை, மற்றும் ஏற்றுக் கொள்ளப்பட்ட பொதுவிதிகளை ஒருவர் ஏற்றுக்கொள்ளத் தவறுதல் ஆகியவை கூறப்படுகின்றன.

ஒரு மனிதனுக்கு உணர்ச்சிகள், சமூகம் மற்றும் பிற உயிர்களினால் உண்டாவது. சிலர், பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட விதிகளை உடல், மன ரீதியாகத் தொடர்ந்து பின்பற்ற இயலாத குறைபாடு கொண்டவர்களாக உள்ளனர்; அல்லது விதிகளை கற்றுக் கொண்டும் அதைப் பின்பற்ற இயலாதவர்களாக உள்ளனர். உணர்ச்சிக் குறைபாட்டின் விளைவு உளவியல் குறைபாடு; பிறழ்வு நடத்தை.

சமூக விதிகளை ஏற்றுக் கொள்ளத் தவறுகின்ற ஒருவரின் நிலை சமூகத்துடன் ஒத்துவாழ முடியாத குறைபாடு ஆகும். இத்தகைய தனி நபர்கள் நேர்மை, உண்மை, ஒருமைப்பாடு, நீதி மற்றும் ஒத்துழைப்பு போன்ற மதிப்பீடுகள் மற்றும் கொள்கைகளைக் கற்றுக் கொண்டாலும் அவர்களால் கடைப்பிடிக்க இயலாமல் போகிறது. தனது தேவைக்காகப் பொய் கூறுதல், ஏமாற்றுதல், நேர்மையற்ற முறையில் நடத்தல், அவமதித்தல் போன்றவற்றைச் செய்தாலும் அவருக்குக் குற்ற உணர்வும், அவமானமும் ஏற்படுவதே இல்லை. அதையொட்டிய சமூகப் பிரச்சனைகளைத் தங்களுக்கு சாதகமாக மாற்றிக் கொண்டு, தமது தேவையைப் பூர்த்தி செய்யப் பயன்படுத்திக் கொள்வர்.

ஹார்டன் மற்றும் லெஸ்லி (Horton and Leslie, 1970) மூன்று வகையான தனி நபர் பிறழ்வு நடத்தைகளைக் குறிப்பிடுகின்றனர்:

1. குழுக்களின் கொள்கைகளுக்கு ஒத்துப்போகாத பிறழ்வு நடத்தை: பண்பாட்டின் மாறுபாட்டால் மக்கள் பல்வேறு கொள்கைகளுக்கு உட்படும் போது ஒருவருக்கொருவர் முரண்படுகின்றனர். உதாரணமாக ஒருவர் ஒரு குறிப்பிட்ட மதம் மற்றும் சாதியை சார்ந்தவராகவும், ஆனால் அவர் செய்யும் தொழில் அவரது மதம் மற்றும் சாதியக் கொள்கைகளிலிருந்து மாறுபட்டதாகவும் இருக்கலாம். அதே போல் அலுவலகப் பணியாளர் மனசாட்சிக்கு விரோதமாக லஞ்சம் வாங்குவது.

2. பிறழ்வு நடதைக்குக் காரணமாகும் பண்பாடு.

3. ஏற்றுக் கொள்ளப்பட்ட விதிகளிலிருந்து விலகிய வெளிப்படையான பிறழ்வு நடத்தை. எடுத்துக்காட்டாக, ஒருவர் தனது ஊதியத்தை மறைத்து வருமானவரி படிவத்தைப் பூர்த்தி செய்து வரி ஏய்ப்பு செய்வது.

சமூகப் பிரச்சனைகளுக்கு தனிநபர் பிறழ்வு நடத்தை அணுகுமுறையைப் பயன்படுத்தும் போது எழும் வினாக்களாக ஹார்டன் மற்றும் லெஸ்லி கீழ்க்கண்டவைகளைக் கூறுகின்றனர்:

1. சமூகப் பிரச்சனையில் பங்கு கொண்டுள்ள குழுக்கள் மற்றும் பிறழ்வு நடத்தையுடைய நபர் யார்?

2. சமூகப் பிரச்சனைகளுக்கு பிறழ்வு நடத்தையுள்ளவர்கள் காரணமா? அல்லது அவர்கள் பிரச்சனைகளை உருவாக்குகின்றனரா?

3. எந்த முரண்பட்ட பகுதிகள் பண்பாட்டில் உள்ளடங்கியுள்ளன?

4. எந்த மாற்றுமுறைகள் மூலம் பிறழ்வு நடத்தை உள்ளவர்களைத் தொடர்பு கொள்ள முடியும்?

**References**

Becker, Howard S. Social Problems: A Modern Approach. (New York: John Wiley & Sons, 1966).

Clinard, Marshall B. Sociology of Deviant Behaviour, (Rev.ed). (New York: Holt, Rinehart and Winston, 1963).

Horton, Paul B. and Leslie Gerald R. The Sociology and Social Problems. (4th ed.). (New York: Appleton Century Crofts, 1970).

Merton, R.K and Nisbet (ed.), Contemporary Social Problems. (New York: Harcourt Brace, 1971).

Singh, Lal. Anatomy of Social Problems. (New Delhi: Cyber Tech Publications, 2007).

Waller, Willard. "Social Problems and the Mores", American Sociological Review, (1) 1936.

Warren, Roland L. "Social Disorganisation and the Interrelationship of Cultural Roles", American Sociological Review, (14), 1949.

# அலகு – 2 சமூக–சட்டப் பிரச்சனைகள்

## குற்றம்

**வரையறை**

ஜே. வர்மா (J.Varma) குற்றம் "சமூகக் கட்டளைக்கு அல்லது சட்டத்திற்கு எதிராகச் செயலாற்றுவது" எனக் கூறுகிறார்.

எம். பார்மலி என்பவர் "சட்டத்தால் ஏற்கப்படாத, தண்டிக்கப்படக் கூடிய செயல்" எனக் குற்றத்தை வரையறுக்கிறார். குற்றங்களால் நேர்முகமாகவோ, மறைமுகமாகவோ மக்கள் பாதிக்கப்படுகின்றனர்.

குற்றம் என்பதை "சமூகத்திற்கு எதிரான (கேடுவிளைவிக்கும்) ஒரு செயல்" என்று மோரர் (Mowrer, 1959) வரையறுக்கிறார். குற்றம் என்பது சமூக எதிர்ப்புச் செயல், சட்டத்தை மீறும் செயல் அல்லது சட்டத்திற்குப் புறம்பான செயல். குற்றம் என்பது நெறிமுறைகளை மீறுவதாகும் என்றாலும் கூட நெறிமுறைகளிலிருந்து மாறுபடுவது எல்லாம் குற்றமாகக் கருத முடியாது.

குற்றம் என்பதை "குற்றவியல் சட்டத்தை மீறி குறிப்பிட்ட நோக்கத்தோடு செய்யப்பட்ட அல்லது செய்யாதுவிட்ட, நியாயமோ அல்லது தகுந்த காரணமோ இல்லாது செய்யும் செயல்" என பால் தப்பன் (Paul Tappan, 1960:10) வரையறுக்கிறார். இவ்வரையறை நான்கு அடிப்படைத் தன்மைகளைக் கொண்டுள்ளன:

1. செய்யப்பட்ட செயலாகவோ அல்லது செய்யாது விட்ட செயலாகவோ இருக்க வேண்டும்

2. அந்த செயல் புரிபவர் தன்னிச்சையாகவும், அச்செயல் ஒரு நோக்கத்துடனும் செய்யப்பட்டிருக்க வேண்டும்

3. அது குற்றவியல் சட்டத்தை மீறியதாக இருக்க வேண்டும்

4. அஃது ஒரு நியாயமும், முகாந்திரமுமில்லாமல் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

குற்றம் என்பது "சட்டப்படி அனுமதிக்கப்படாத, குறிப்பிட்ட உள்நோக்கத்தோடு செய்யப்பட்ட, சமூக நலனுக்கு குந்தகம் விளைவிக்கும் குற்ற நோக்கத்தைக் கொண்ட மற்றும் சட்டப்படி தண்டனைக்குரிய செயல்" என ஹால் ஜெரோம் (Hall Jerome, 1947:8-18) வரையறை செய்கிறார். இது கீழ்கண்ட ஐந்து குணநலன்களைக் கொண்டுள்ளது எனக் கூறுகிறார்:

1. சட்டப்படி தடைசெய்யப்பட்டது

2. உள்நோக்கம் கொண்டது

3. சமூகத்துக்குக் கேடு விளைவிப்பது

4. குற்ற உணர்வோடு செய்யப்பட்டது

5. இச்செயலுக்கான தண்டனை வகுக்கப்பட்டதாக இருப்பது.

குற்ற நடத்தையானது கற்றுத் தெரிந்து கொள்வது எனவும், சமூகப் புறச்சூழ்நிலையால் பெறப்படுவது எனவும் சமூகவியலாளர்கள் கருதுகின்றனர். சமூகவியல் விளக்கங்கள் இருவகைப்படும். அவை சமூகக் கட்டமைப்பு விளக்கங்கள் – இதில் குறிப்பிடத்தக்க சிந்தனையாளர்கள் மெர்ட்டன் (Merton), கிளிபோர்டு ஷா (Clifford Shaw), கோகன் (Cohen), குளோவர்டு மற்றும் ஓலின் (Cloward and Ohlin) போன்றவர்கள்; சமூக நடைமுறை பற்றிய விளக்கங்கள் – இதில் சுதர்லாண்டு (Sutherland), ஹாவர்டு பேக்கர் (Howard Becker) மற்றும் வால்ட்டர் ரெக்லெஸ் (Walter Reckless) போன்ற சிந்தனையாளர்கள் அடங்குவர். உளவியல் சார் கோட்பாடுகள் குற்றம் புரிபவரின் ஆளுமை வளர்ச்சியில் உள்ள குறைபாடுகளை, குற்றத்திற்கான காரணங்களாகக் காட்டுகின்றன.

### குற்றங்களின் தன்மைகள்

இந்தியாவில் நிகழும் குற்றங்களில் 14.5 லட்சம் குற்றங்கள் இந்திய குற்றவியல் சட்டத்தின்கீழ் திருட்டு, கன்னக்கோல் திருட்டு, அபகரித்தல், கொள்ளை, கொலை, கலகம் விளைவித்தல், கடத்திச் செல்லுதல், ஏமாற்றுதல், நம்பிக்கை மோசடி போன்ற செயல்களுக்காகவும், 34.7 லட்சம் குற்றங்கள் வட்டார மற்றும் சிறப்புச் சட்டங்களான வாகன ஊர்தி சட்டம், மதுவிலக்குச் சட்டம், சூதாட்டத்தடைச் சட்டம், கலால் வரி சட்டம்,

ஆயுதத் தடுப்புச் சட்டம், விபச்சாரத் தடுப்புச் சட்டம், போதைப் பொருள் தடுப்புச் சட்டம், ரயில்வே சட்டம், வெடிமருந்துச் சட்டம் போன்றவற்றின் கீழும் பதிவாகியுள்ளன. இந்தியாவின் மொத்த மக்கள் தொகையில் குற்ற விகிதம் 0.25 விழுக்காடு ஆகும்.

இந்தியாவில் ஒவ்வொரு ஆண்டும் விசாரணைக்கு வரும் 58 லட்சம் குற்றங்களில் 30 விழுக்காடுகள் இந்தியக் குற்றவியல் சட்டத்தின் கீழும், 70 விழுக்காடுகள் வட்டார மற்றும் சிறப்புச் சட்டங்களின் கீழும் பதிவானவை. இந்தியக் குற்றவியல் சட்டத்தின் கீழ் பதிவான குற்றங்களில் மூன்றில் ஒரு பகுதி பொருளாதாரக் குற்றங்களாகும். தண்டனை பெற்ற மொத்தக் குற்றவாளிகளில் ஏறத்தாழ 85 விழுக்காடு குற்றவாளிகள் 6 மாதத்திற்கும் குறைவாகவே தண்டனை பெறுகின்றனர். மொத்த குற்றவாளிகளில் 97 விழுக்காடு ஆண்களாகவும் 3 விழுக்காடு பெண்களாகவும் உள்ளனர். குற்ற விகிதம் சமூக அடிமட்டத்தில் உள்ள ஏழைகள் மத்தியில் அதிகமாகக் காணப்படுகிறது. பதினெட்டு வயதிற்கும் முப்பது வயதிற்கும் இடைப்பட்டவர்களிடையே குற்றச் செயலின் விகிதம் அதிகமாக இருக்கிறது.

## குற்றங்களுக்கான காரணங்கள்

குற்றங்கள் பல காரணங்களால் நிகழலாம். மனிதனின் மன ஒழுங்கு குலைவு, பலவீனமான மனநிலை, தற்பெருமை, குற்ற உணர்ச்சிகள், தாழ்வு மனப்பான்மை போன்றவைகளும் குற்றம் புரிய ஏதுவான காரணங்களாகக் கண்டறியப்பட்டுள்ளன. ஒருவருடைய குற்றச் செயல்களுக்கு அவருடைய ஆளுமைத் தன்மையயும் சூழ்நிலையையும் ஆராய்ந்தே முடிவுகட்ட வேண்டும். ஆளுமையின் சமூக நோய்க் கூறு பண்புகளாகிய மனக் குறைபாடு, உணர்ச்சி நிலையற்ற தன்மை, மனப்பூசல்கள், மற்றும் உளநோய் முதலியவைகளும் குற்ற நடத்தைக்குக் காரணமாக இருக்கின்றன. குற்றத்தின் அளவு, அமைப்பு, பரப்பளவு, நிலப்பகுதி வாரியாக வேறுபடுகிறது.

சில குற்றங்கள் நேரடியாகப் பொருளியல் நிலையுடன் தொடர்புடையதாக விளங்குகிறது. வறுமையின் கொடுமையால் வயிற்றுப் பசிக்காக எந்தக் குற்றத்தையும் புரிகிறான். வேலை கிடைக்காதபோது மனம் உடைந்து, வாழ்க்கையில் வெறுப்பு அடைந்து, தனது தேவைகளுக்குத் திருட்டுத் தொழிலில் ஈடுபடுகின்றனர். தமது தேவைகளை நிறைவேற்ற சமூகத்திற்கு எதிரான நடவடிக்கையில்

ஈடுபடுகின்றனர். வேலை இல்லாத் திண்டாட்டதாலும் சமூக ஒழுக்கம் குலைந்து குற்றம் ஏற்படுகிறது.

குடும்பத்தின் கட்டுப்பாடுகள் முன்பு போல் இப்போது இல்லை. பெற்றோருக்கும் குழந்தைகளுக்கும் இடைவெளி அதிகமாகி வருகிறது. பாசமும், பண்பும் குறைந்து குற்றச் செயல் புரியும் உணர்வு தலைதூக்கி நிற்கிறது. தன்னிச்சையாக கவலையற்ற வாழ்வு வாழ்தலை மக்கள் விரும்புகின்றனர். கல்வி அறிவு இல்லாதவர்கள் வாழ்வில் பொருளீட்ட அதிகத் துன்பப்பட நேரிடுகிறது. இக்கால கல்வி முறை சுயநலத்தையும், ஒருங்கின்மையையும் அதிகப்படுத்தி விட்டதோடு பல இளைஞர்கள் தம் வாழ்விற்கு தேவையானவற்றைத் தேடும் திறன் இல்லாமல், வேலை வாய்ப்பு இல்லாமல் பல ஆண்டுகளைக் கழிக்கின்றனர். இந்தக் காரணங்களால் குற்றச் செயல்கள் மிகுதியாகின்றன.

இன்றைய திரைப்படங்களில் வன்முறைக்காட்சிகள், பல வகைக் குற்றங்களை வெளிக்காட்டுவதோடு வீர தீரச் செயல்கள், முரட்டுத் தனம், பாலுணர்வைத் தூண்டி அதனைப் பெறுவதற்கு ஆசையை உண்டாக்கி குற்றச் செயல்களை செய்யத் தூண்டுகின்றன.

தற்போது போக்குவரத்து வசதிகள் அதிகமாக உள்ளதால் குற்றம் புரிந்தவர்கள் தப்பிப் போக அதிக வாய்ப்புகள் உள்ளன. நகர்ப்புறத்தில் இருந்து கிராமங்களுக்கும், கிராமப்புறத்தில் இருந்து நகர்களுக்கும் தலை மறைவாகி விடுகின்றனர்.

குற்றவாளிகளின் சமுதாய உறவு அவர்கள் செய்யும் குற்றங்களால் துண்டிக்கப்பட்டு விடுகிறது. அவர்களின் பெற்றோருக்கு தீராத அவமானம் நேரிடுகிறது. உடன்பிறந்த சகோதர, சகோதரிகளின் வாழ்க்கையும் பாதிக்கப்படுகிறது. அந்தஸ்து குலைகின்றது. அவனுடன் இணைந்து குற்றவாளியின் குடும்பமும் பல இன்னல்களை அனுபவிக்கிறது. செய்த குற்றத்திற்குத் தண்டனை பெற்று அதனால் சமூக உறவில் ஏற்படும் ஒழுங்கு குலைவு பல்வேறு பிரச்சனைகள் ஏற்படுவதற்கு வழி செய்கிறது. தண்டனைக்குள்ளானவர் குடும்பப் பொறுப்புகளை ஏற்று குடும்பத்தில் உள்ள மற்றவர்களைக் காப்பாற்றி வருபவராக இருந்திருந்தால் இப்போது அக்குடும்பம் பொருளாதார நெருக்கடியைச் சந்திக்க வேண்டியதாகிறது. மனைவி மற்றும் குந்தைகளை விட்டுவிட்டு அந்தக் குடும்பத்தலைவன் சிறைக்கு அனுப்பப்பட்டால் அவர்களின் நிலை அந்தோ பரிதாபம்! மனைவி மற்றும் குடும்பத்தினரால் தனிமைப்படுத்தப்பட்டு வெறுத்து

ஒதுக்கப்படுகிறான். அடிக்கடி சிறைக்குச் செல்லும் கணவன் அல்லது மனைவி காரணமாக திருமண உறவு பாதிக்கப்பட்டு விவாகரத்தில் முடிகிறது.

## குற்றங்களின் வகைகள்

ஹோவர்டு பெக்கர் (Howard Becker, 1966: 226-38) நான்கு வகையான குற்றங்களைக் குறிப்பிடுகிறார்: (அ) தனிநபர் குற்றம், (ஆ) குழு ஆதரவோடு நிகழும் குற்றம், (இ) ஒழுங்குப்படுத்தப்பட்ட குற்றம், (ஈ) சூழ்நிலையால் நிகழும் குற்றம்.

### (அ) தனிநபர் குற்றம்

ஒரு நபர் மட்டுமே ஈடுபட்டுச் செயல்படுத்தும் குற்றம் தனிநபர் குற்றமாகும். இத்தகைய குற்றத்திற்கான காரணம் பெரும்பாலும் தனிப்பட்டதாகவும், அந்த நபர் சார்ந்ததாகவும் அமைகிறது.

### (ஆ) குழு ஆதரவோடு நிகழும் குற்றம்

பிறருடன் தோழமை கொண்டு அவர்கள் துணையோடு குற்றங்கள் நடக்கின்றன. இவ்வித குற்ற நடத்தையைச் சுதர்லாண்டு தமது "மாறுபட்ட மன்றக்கோட்பாடு" (Theory of Differential Association) மூலம் விளக்குகிறார்.

### (இ) ஒழுங்கு நெறிப்படுத்தப்பட்ட குற்றம்

ஒழுங்குநெறிப்படுத்தப்பட்ட குழுக்களை உருவாக்கி குற்றச் செயல்கள் நிகழ்த்தப்படுகின்றன. குழு உறுப்பினர்களின் செயல்களை வழி நடத்துவதற்காக குறிப்பிட்ட விழுமியங்களும் நடத்தை நெறிகளும் உருவாக்கப்பட்டு குற்றங்கள் செய்வதை ஊக்குவித்தும், அவ்வித குற்றச்செயல்களின் அடிப்படையில் சமூக அந்தஸ்து வழங்கியும் இக்குழுக்கள் செயல்படுகின்றன. சூழ்நிலை சந்தர்ப்பவசத்தால் நிகழும் குற்றம் அடிப்படைக் காரணத்தைக் கொண்டிராததாகவும், அக்குற்றம் செய்ய வேண்டும் என்ற ஆழமான எண்ணமில்லாததாகவும் இருக்கலாம்.

(ஈ) சூழ்நிலையால் நிகழும் குற்றம்

சூழ்நிலைச் சந்தர்ப்பங்கள் குற்றம் நிகழக் காரணமாகின்றன. புறச்சூழல் தூண்டும் இத்தகைய குற்ற நிகழ்வுகளில் ஒரு குறிப்பிட்ட அடிப்படைக் காரணம் இல்லாமலும் காணப்படும்.

## குற்றமும், தண்டனையும்

குற்றம் சமுதாய விரோதமானது; சமுதாயத்தால் ஏற்றுக் கொள்ளப்படாதது; குற்றங்களுக்கேற்ற தண்டனை தருவது சமுதாயத்தின் இயல்பாகும். தண்டனை என்பது பொது நீதியின் ஆயுதம் ஆகும். சமுதாயத்தின் நலன் கருதியும், மக்களின் நலனுக்காகவும் தண்டனை வழங்கப்படுகிறது. குற்றங்கள் எதிர்பாராத விதமாக நடந்தாலோ அல்லது முன்பே தீர்மானித்து செய்தாலோ குற்றம், குற்றம் தான். எனினும் இரண்டு வகைக்கும் தண்டனையின் அளவு மாறுபடுகிறது. குற்றம் புரிபவர்கள் சமூகத்தின் விரோதிகள் எனக் கருதி மரண தண்டனையோ அல்லது நாடு கடத்தலோ அல்லது சித்ரவதையோ கொடுக்கப்பட்டது. குற்றவாளி களுக்குத் தண்டனை கொடுத்துத் தண்டிப்பதை விட அவர்கள் திருந்தி வாழ வழிவகுக்கவேண்டும் என்ற சிந்தனை நாளாவட்டத்தில் மேலோங்கியது. சமூகம் முன்னேற முன்னேற, தண்டனை முறைகளும் மாறி வந்தன. ஒருவன் மற்றொருவனது கண்களுக்கு ஊறுவிளைவித்தான் என்றால் பதிலுக்கு இவன் கண்களுக்கு ஊறுவிளைவிக்கும் "பழிக்குப் பழி" என்ற விதத்தில் தண்டனை முன்பு வழங்கப்பட்டது. ஆனால் நவீன சமுதாயத்தில் தண்டனை என்பது குற்றங்களைத் தடுக்க மட்டுமே பயன்படுத்த வேண்டிய ஆயுதம் என்ற சிந்தனை வளர்ந்தது. சிறைத் தண்டனை அளிப்பது குற்றவாளிக்கும் சமுதாயத்திற்கும் பாதுகாப்பானது எனக் கருதப்பட்டது.

ஈவு இரக்கமின்றி கொலை, கொள்ளை, திருட்டு, பயங்கரவாதம், ஆள் கடத்தல் உள்ளிட்ட கொடுங்குற்றங்களில் ஈடுபட்டு சமூகத்தின் அமைதியை குலைத்த குற்றவாளிகளால் சமூகத்தில் சட்டத்தை மதித்து வாழும் மக்களுக்கு பாதிப்பு ஏற்படும் என்ற காரணத்தால், அவர்கள் குடிமகனுக்கான சுதந்திர உரிமைகள் பறிக்கப்பட்டுக் கைதிகளாகச் சிறையில் அடைக்கப்படுகின்றனர். சிறைத் தண்டனையின் நோக்கமே குற்றம் புரிந்தோர் தங்களது கடந்த காலத் தவறுகளை உணர்ந்து மனம் திருந்தி, விடுதலையாகிச் சென்று சமூகத்துடன் இணைந்து வாழ

வேண்டும்; மீண்டும் நாம் சிறைக்கு வரக்கூடாது என்ற எண்ணம் ஏற்பட வேண்டும் என்பதே.

தற்போது நடைமுறையில் இருக்கும் "**சிறைச்சாலைகள் சட்டம், 1894**" சிறை விதிகளை செயல்படுத்துகின்றது. சிறை, நீதித்துறையின் நேரடிப் பார்வையின் கீழ் செயல்படும் ஓர் அமைப்பு. சிறைச்சாலையில் பலவித பிரிவுகள் உள்ளன. குற்றவாளிகள் புரிந்துள்ள குற்றத்தின் தன்மையைப் பொறுத்துக் குறிப்பிட்ட பிரிவில் அடைத்து வைக்கப்படுவர்.

சிறைச்சாலையிலும் பலவிதச் சீர்திருத்தங்கள் கொண்டு வரப்பட்டன. சிறைத்தண்டனை பெற்ற கைதிகளுக்கு கல்வியறிவு, வேலை வாய்ப்பு, பொழுது போக்கு ஆகியவை வழங்கப்பட்டன. இவை அனைத்தும் குற்றவாளியை மறுபடியும் சமுதாயத்தில் ஒரு நல்ல குடிமகனாக இணைப்பதற்காக ஏற்படுத்தப்பட்டன. ஒரு குற்றவாளிக், அவன் செய்த குற்றத்தின் தன்மையைப் பொறுத்து தண்டனைக்கு காலம் விதிக்கப்படுகின்றது. எனினும் சிறையில் அவன் நடந்து கொள்கின்ற விதத்தினைப் பொறுத்து அவனது தண்டனைக் காலம் குறைக்கப்படுகிறது. அவனது நன்னடத்தை காரணமாக விதிக்கப்பட்ட தண்டனைக் காலம் முடிவடையும் முன்னதாகவே விடுதலை செய்யப்படுகிறான். ஒருவனுடைய நன்னடத்தையால் சில சலுகைகளைச் சிறையிலேயே பெறமுடியும். குறிப்பிட்ட காலம் வரை ஒரு கைதி சிறையில் நல்ல முறையில் நடந்து கொண்டால் காவலர்களின் பாதுகாப்பில் வெளியில் சில காரியங்களுக்குச் சென்று வர முடியும். இதற்கு "பரேல்" என்று பெயர். பரேலில் வெளியில் செல்வதற்கு குற்றவாளி தனக்கு விதிக்கப்பட்ட தண்டனைக் காலத்தில் பாதி அளவாவது கழித்திருக்க வேண்டும். தண்டனை பெற்ற குற்றவாளிகள் தங்களின் தவறுகளை உணர்ந்து திருந்தி வாழ இவை உதவுகின்றன.

தண்டனை என்பது ஒரு வகைத் துன்பம் ஆகும். தண்டனையில் துன்பம் மதிப்பிடப்பட்டு சில மதிப்பீடுகளால் நியாயமாக்கப்படுகிறது. ஒரு குழு, கூட்டாகச் சேர்ந்து தன் குழுவில் உள்ளவரைத் தண்டிப்பது சமுதாயத்தினரால் அங்கீகரிக்கப்பட்டுள்ளது. தண்டனை நபர் சார்ந்த குழுவின் முடிவையும் குற்றத்தின் தன்மையையும் பொறுத்ததாகும். தண்டனையின் மூலம் குற்றவாளிக்குச் சமுதாயத்தில் மதிப்புக் குறைவு, அன்னியப்படுதல் போன்றவை ஏற்படுகிறது. தண்டனை பெறுவது என்பதே அவமானகரமானதாகக் கருதப்படுகிறது.

தண்டனையின் முதன்மை நோக்கம் குற்றங்கள் நிகழாமல் தடுப்பதாகும். குற்றவாளி ஒரு தடவை குற்றம் செய்து தண்டனை பெற்றால் அடுத்த முறை தண்டனைக்குப் பயந்து குற்றம் புரியமாட்டான் என்ற அடிப்படையில் தண்டனை கொடுக்கப்படுகிறது. குற்றவாளிகளைத் திருத்தி நல்வழிப்படுத்தவும், நல்வாழ்க்கை வாழவும் தண்டனை உதவி புரிகிறது. குற்றவாளியை நெறிப்படுத்த, சமூகம் தண்டனையை வரையறுத்து செயல்படுத்துகிறது.

தண்டனை கீழ்க்கண்ட மூன்று கோட்பாடுகளைக் கொண்டுள்ளது:

1. குற்றம் புரிந்தவருக்கு தண்டனை அளித்து அவரைத் திருத்துவது.

2. குற்றம் புரிந்தவருக்கு தண்டனை அளிப்பதன் மூலம் மற்றவர்கள் அந்தக் குற்றத்தைச் செய்யாமல் இருக்க தயக்கப்படுத்துவது அல்லது அவரே மீண்டும் குற்றம் புரியத் தடுப்பது.

3. குற்றம் புரிந்தவரைப் பதிலுக்குத் தண்டிப்பது.

நமது தண்டனை முறைகள் குற்றவாளிகளைத் தண்டித்தல், நடத்தையைச் சரி செய்தல் என இரண்டு முக்கிய நோக்கங்களைக் கொண்டதாக அமைக்கப்பட்டுள்ளன. குற்றங்களின் தன்மைக்கேற்றவாறு சிறைத்தண்டனை, தூக்குதண்டனை, அபராதம் போன்றவை விதிக்கப்படுகின்றன. இந்தியச் சிறைச்சாலைகளில் 1920க்கு முன்பு மிகவும் கொடூரமான நிலை நிலவியது. இந்தியச் சிறைச்சாலைகள் சீர்திருத்தக் குழுவின் பரிந்துரைகள் 1920ல் செயல்படுத்தப்பட்ட பிறகு நிலைமை பெருவாரியாக முன்னேற்றம் அடைந்தது. மத்தியச்சிறை, மாவட்டச்சிறை மற்றும் கிளைச்சிறைகளில் கைதிகளை வகைப்படுத்துதல், தனிமைப்படுத்துதல், கல்வி அளித்தல், குடும்பத்தோடும் சமூகத்தோடும் தொடர்பு கொள்ள வாய்ப்புகள் ஏற்படுத்திக் கொடுத்தல் போன்ற மாறுதல்கள் நிகழ்ந்துள்ளன. காலப்போக்கில் திறந்தவெளிச் சிறைகள் நிறுவப்படும் அளவிற்கு நிலைமை மேம்பட்டுள்ளது. தற்சமயம் 17 மாநிலங்களில் 31 திறந்தவெளிச் சிறைகள் இருக்கின்றன. திறந்த வெளிச் சிறைக்கு மாற்றுவதற்கு முன் மூன்றில் ஒரு பகுதி தண்டனைக் காலத்தைச் சாதாரண சிறையில் கழித்தவராகவும், நன்னடத்தை, நல்ல உடல் மற்றும் உளநிலையோடு 20 வயதுக்கும் 50 வயதுக்கும் இடைப்பட்டவராகவும் இருக்க வேண்டும் என்பது குறிப்பிடத்தக்கது. இந்தியாவில் 1,200 சிறைச்சாலைகள் உள்ளன. இவற்றில் 6% மத்தியச் சிறைகள், 18%

மாவட்டச் சிறைகள், 75% கிளைச் சிறைகள் மற்றும் 1% சிறப்புச் சிறைகள். இந்தியச் சிறைச்சாலைகளில் சராசரியாக 1.5 லட்சம் கைதிகள் அடைக்கப்பட்டுள்ளனர். அவர்களில் 60% வழக்கு நிலுவையில் உள்ள குற்றம் சாட்டப்பட்ட 'விசாரணைக் கைதிகள்' மற்றும் 40% தண்டனை அனுபவிக்கும் 'தண்டனைக் கைதி'களாவர்.

கல்வி, பொருளாதாரம், வாழ்க்கை நிலை போன்றவற்றில் ஒரு சமூகம் முன்னேறும் போது அங்குக் குற்றத்தின் அளவு குறைகிறது என ச. பாலமுருகன் ( 2005) கூறுவது கவனிக்கத்தக்கது.

## நன்னடத்தை விடுதலை

நன்னடத்தை விடுதலை என்பது குற்றவாளிகள் தமது தண்டனைக் காலத்தின் எஞ்சிய பகுதியை நிறுவன மேற்பார்வையுடனோ அல்லது மேற்பார்வையில்லாமலோ சிறைக்கு வெளியே சமூகத்தில் வாழ அனுமதிப்பதாகும். இம்முறை 1958ம் ஆண்டு இந்தியாவில் அறிமுகப்படுத்தப்பட்டது. இம்முறையில் தண்டனைக் கைதியை அதிக பட்சமாக மூன்று ஆண்டுகள் வரை நன்னடத்தையில் வெளியே விடலாம். நடத்தை சரியில்லை என்றால் எப்பொழுது வேண்டுமானாலும் சிறைக்குள் கொண்டு வரும் அதிகாரத்தோடு இது செயல்படுத்தப்படுகிறது. சில மாநிலங்கள் இதைச் சமூக நலத்துறையுடனும் மற்றும் சில மாநிலங்கள் சிறைத்துறையுடனும் இணைத்துள்ளன.

நன்னடத்தை அதிகாரியின் பரிந்துரையில் நன்னடத்தைக் கைதிகள் குடும்பத்தினருடன் சேர்ந்து வாழ அனுமதிக்கப்படுகின்றனர். இம்முறையினால் பல நன்மைகள் விளைகின்றன. (1) நன்னடத்தையில் விடுதலை பெற்றவருக்கு 'குற்றவாளி' அல்லது 'கைதி' என்ற அடைமொழி கிடையாது. (2) நன்னடத்தையாளரின் பொருளாதார வாழ்க்கைக்குப் பாதிப்பு இருக்காது. (3) அவர் குடும்பம் பிற தொல்லைகளுக்கு ஆளாகவேண்டியதில்லை. (4) நன்னடத்தையாளன், வாழ்க்கையின் மீது ஆத்திரமோ, வெறுப்போ அடைவதில்லை. (5) அரசுக்குச் செலவு குறைவு.

# இளங்குற்றம்

இளமைப் பருவத்தில் ஒருவன் நேர்வழியைத் துறந்து குறுக்கு வழியில் தன் வாழ்வை அமைத்துக் கொள்ள விழைவதாலும், சமுதாயத்திற்கு விரோதமான எண்ணங்கள் இளம் வயதிலேயே தோன்றுவதாலும் அவன் இளம் குற்றவாளி ஆகிறான். கூட்டுக் குடும்ப வாழ்க்கைமுறை, சமுதாயக் கட்டுப்பாடு, கண்டிப்புமுறை போன்றவை சிதறுண்டிருக்கும் இக்காலத்தில் இளம் குற்றவாளிகளின் எண்ணிக்கை வெகுவாக வளர்ந்துள்ளது. திருட்டு, கொலை, கொள்ளை போன்ற செயல்களில் ஈடுபடும் இளம் குற்றவாளிகள் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. எனினும் இளம் குற்றவாளிகளின் சரியான எண்ணிக்கையும், துல்லியமான புள்ளி விவரங்களும் இல்லை.

இளைஞர் நீதி சட்டத்தின்படி, (1986) 'இளங்குற்றவாளி' என்பதற்கான அதிக பட்ச வயது ஆண்களுக்கு 16 எனவும் பெண்களுக்கு 18 எனவும் வரையறுக்கப்பட்டுள்ளது.

இளங்குற்றமானது "இளைஞர்களின் தவறான நடத்தை" என பிரய்ட் லேண்டர் (Fried Lander,1959) கூறுகிறார். இளம் வயதுள்ள ஒருவனுடைய நடத்தை சமுதாயத்திற்கும், அவனுக்கும் அபாயகரமானதாக அமையும் போது அவன் இளம் குற்றவாளியாகக் கருதப்படுகிறான்.

"இளங்குற்றவாளிகளை "குற்ற நடத்தைக் கோட்பாட்டை மீறுபவர்கள்; குழந்தைகளும், வாலிபர்களும் செய்யக்கூடாத நடத்தை முறைகளை செய்பவர்கள்" என வால்டர் ரெக்லஸ் (Walter Reckless,1969) வரையறுக்கிறார்.

இளங்குற்றவாளிகளை குற்றத்தின் தன்மையைப் பொறுத்து ஐந்து வகைகளாக ஈட்டன் மற்றும் போல்க் (Eaton and Polk,1969) பிரிக்கின்றனர்:

1. சிறு அத்துமீறல்கள் (முறையற்ற நடத்தை மற்றும் சிறிய சட்ட மீறல்கள் போன்றவை).

2. குறிப்பிடத்தக்க போக்குவரத்து மீறல்கள் (வாகனங்களைத் திருடுதல், விபத்துக்களை உண்டாக்குதல் போன்றவை).

3. சொத்துக்களின் மீதான அத்துமீறல்கள் (பொருள்களை களவாடுதல், ஏமாற்றி பணம் பறித்தல் போன்றவை).

4. போதைக்கு அடிமையாதல் (குடி, போதை மாத்திரை, கஞ்சா போன்றவற்றை அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்துதல்).

5. உடல் ஊறு விளைவித்தல் (கொலை,வெட்டு, குத்து போன்ற செயல்கள்).

இளம் வயதினர் செய்யும் குற்றங்கள் இந்தியக் குற்றவியல் சட்டத்தின் கீழும், வட்டார மற்றும் சிறப்பு சட்டங்களின் கீழும் பதிவு செய்யப்படுகின்றன. இவர்கள் மிக அதிகமாகச் செய்த குற்றங்கள் வரிசையில் திருட்டு, பொது அமைதிக்கு ஊறு விளைவித்தல், கன்னமிட்டுத்திருடுதல், கொலை, கொள்ளையடித்தல், கற்பழிப்பு, கடத்தல் மற்றும் மறைத்து வைத்தல், வன்முறை கொள்ளை ஆகியவை அமைந்துள்ளன. வட்டார மற்றும் சிறப்பு சட்டங்களின் கீழ் வரும் குற்றங்களில் மது விலக்குச் சட்டத்தின் கீழ் 35 விழுக்காடும், சூதாட்டத்தின் கீழ் 16.2 விழுக்காடும் இளம் வயதினர் கைது செய்யப்பட்டுள்ளனர். இந்தியக் குற்றவியல் தண்டனை சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்ட 38 ஆயிரம் இளைஞர்களில் 11 விழுக்காடு இளைஞர்கள் தகுந்த ஆலோசனை மற்றும் எச்சரிக்கைக்குப் பின்னர் அனுப்பப்பட்டனர்; நன்னடத்தையின் பேரில் 25 விழுக்காடு விடுதலை செய்யப்பட்டனர்; 13 விழுக்காடு அபராதம் விதிக்கப்பட்டனர்; 10 விழுக்காடு விசாரணைக்குப் பின் விடுவிக்கப்பட்டனர். இரண்டு விழுக்காடு மட்டுமே சிறப்புக் காப்பகங்களுக்கு அனுப்பி வைக்கப்பட்டனர். கிட்டத்தட்ட 39 விழுக்காடு வழக்குகள் நிலுவையில் உள்ளன.

குற்ற விகிதம் பெண்களைவிட ஆண்களிடம் அதிகமாக காணப்படுகிறது. விடலைப் பருவமாகிய 12 வயது முதல் 16 வயது வரை உள்ளவர்களிடம் குற்ற எண்ணிக்கை மிக அதிகமாக உள்ளது. இளைஞர் குற்ற விகிதம் கிராமப்புறங்களை விட நகர்ப்புறங்களில் அதிகமாகக் காணப்படுகிறது. கிட்டத்தட்ட மூன்றில் இரண்டு பங்கு (64%) இளங்குற்றவாளிகள் தம் பெற்றோருடன் குடியிருப்பவர்கள்; காப்பாளர்களோடு இருப்பவர்கள் 24 விழுக்காடாகும்; நிரந்தர வீடற்றவர்களாக 13 விழுக்காடு உள்ளனர். 42 விழுக்காடு எழுத்தறிவில்லாதவர்கள்; பாதிபேர் (52%) ஆரம்ப, நடுநிலை மற்றும் இடைநிலை வகுப்புகள் வரை படித்தவர்கள்; ஆறுவிழுக்காடு மட்டுமே உயர்நிலைப்பள்ளி சென்றவர்கள். கிட்டத்தட்ட ஐந்தில் நான்குபேர் (57%)

ஏழைக் குடும்பத்தை சேர்ந்தவர்கள். ஐந்தில் நான்கு இளங்குற்றவாளிகள் முதல் முறையாக குற்றம் செய்தவர்களாகவும், பத்தில் ஒருவர் மட்டுமே திரும்பத் திரும்பக் குற்றம் செய்தவர்களாகவும் இருக்கிறார்கள்.

## இளங்குற்றத்திற்கான காரணிகள்

குற்றத்திற்கான காரணிகளில் தனிநபர் காரணிகளும், சூழ்நிலைக் காரணிகளும் இணைந்துள்ளன. இளம் குற்றவாளிகள் உருவாவதற்கு ஒன்றுக்கு மேற்பட்ட காரணங்கள் வழிவகுக்கின்றன. பெற்றோர் மரணம், மதுவிற்கு அடிமையான வேலை இல்லாத தந்தை, ஒழுங்கீன நடத்தையுடைய தாய், சாதகமற்ற வீட்டுச் சூழ்நிலை, மோசமான நண்பர்கள், பள்ளியிலிருந்து பாதியிலேயே நிறுத்தப்படுதல், பெற்றோரால் ஒதுக்கி வைக்கப்படுதல், வீட்டை விட்டு ஓடிப்போதல், உழைப்பில் ஈடுபடுத்துதல், மோசமான கெட்ட பழக்கவழக்கங்கள், பாலுணர்வு குற்றங்கள், திருடுதல் போன்ற நேரிடையான காரணங்களுடன் பால், வயது, சாதி, சமூகச்சூழல் போன்றவையும் குற்றம் செய்யத்தூண்டுகின்றன. தனியாகவோ, ஒன்று சேர்ந்தோ குற்றச் செயல்களில் ஈடுபடுகிறார்கள்.

### குடும்பம்

இளையோர் குற்ற நடத்தைக்குக் குடும்பம் முக்கியக் காரணியாக விளங்குகிறது. குழந்தைப் பருவ அனுபவங்கள் மற்றும் குழந்தை வளர்ப்பு முறைகள் குழந்தையின் ஆளுமை உருவாக்கத்திலும் எண்ணம், விழுமியங்கள் மற்றும் வாழ்வு முறையிலும் தாக்கத்தை ஏற்படுத்துகின்றன. பெற்றோர் சண்டையினாலும், மணமுறிவு காரணமாக பெற்றோரைப் பிரிந்து வாழும் சூழ்நிலையிலும் வளரும் குழந்தைகள் மனரீதியாக மிகவும் பாதிப்பிற்கு உள்ளாகின்றனர். சிதறிய குடும்ப அமைப்பு, பெற்றோரால் வெறுத்து ஒதுக்கப்படுதல், பெற்றோரின் கட்டுப்பாடு இன்மை, குடும்பத்தின் ஏழ்மை என பட்டியல் நீள்கின்றன. மணமுறிவு, பெற்றோர் மரணம் போன்ற குடும்பச் சிதறுதல், குழந்தைக்கு அரவணைப்பையும், கட்டுப்பாட்டு ஒழுக்கத்தையும் கொடுக்க இயலாத சூழலை உருவாக்குகிறது. இது போன்ற குழந்தைகள் குடும்பச் சூழ்நிலை காரணமாக படிப்பில் கவனம் செலுத்த இயலாமல் தவறான வழிக்குச் சென்று விடுகின்றனர். வெறுப்பாலும், எதிர்ப்புணர்ச்சியாலும் பாதுகாப்பும் மனத்திருப்தியும் இல்லாத, ஒதுக்கப்படும் அல்லது புறக்கணிக்கப்படும் சிறார்கள் தவறு இழைக்கும் தன்மையுடைய குழுக்களிலே சேர்ந்து விடும் அபாயம் நேருகிறது. குற்ற நடத்தை கொண்ட பெரும்பாலான சிறார்கள் பெற்றோரின்

அன்பும், ஆதரவும் குறைவாகப் பெற்றவர்களாகவும், பெற்றோரின் கட்டுப்பாட்டுக்கு உட்படாத நிலைமையில் வாழ்ந்து வந்தவர்கள் என்பதும், அத்துடன் ஏழ்மையான குடும்பப் பொருளாதாரப் பின்னணி கொண்டவர்கள் என்பதும் அவர்களைப் பற்றிய ஆய்வுகளில் இருந்து தெரிய வருகின்றன.

## சூழ்வட்டம்

குற்றச் செயல்களில் ஆர்வத்தை ஏற்படுத்தி, ஈடுபட ஊக்குவிப்பதில் சூழ்வட்டம் முக்கியப் பங்காற்றுகிறது.

## திரைப்படமும், இழிபொருள் இலக்கியமும்

கெட்ட நடத்தைகள், புகைப்பிடித்தல், குடிப்பழக்கம் மற்றும் கொடூரச் செயல்கள் போன்றவற்றை உத்திகளுடன் விவரிப்பதன் மூலம் திரைப்படங்களும், நச்சுப் புத்தகங்களும் இளைஞர்கள் மற்றும் குழந்தைகள் மனதில் ஆழமான பாதிப்பை உண்டாக்குகின்றன. பல்வேறு குற்றச் செயல்களின் வழிமுறைகளையும், இலகுவாக பணம் சம்பாதிக்கும் ஆசையையும், விரும்பத்தகாத கேடுவிளைவிக்கும் முரட்டுத்தனத்தையும், பாலுணர்ச்சியையும் தூண்டிவிட்டு, பகல் கனவுகளை உருவாக்கி, தீய நடத்தைகளில் ஈடுபட ஊக்குவிக்கின்றன.

## இளையோர் நீதிமன்றங்கள்

இந்திய நாட்டின் 1986– இளையோர் நீதி சட்டப்படி,

1. இளம் குற்றவாளிகள் 14 வயதிற்குள் இருந்தால் அவர்களை சிறைப்படுத்த முடியாது.

2. 16 வயதிற்குட்பட்ட குற்றவாளி ஜாமீனில் வெளியில் செல்லலாம்.

3. இளம் குற்றவாளிகளுக்கு எக்காரணத்தினாலும் மரண தண்டனை விதிக்கக்கூடாது.

4. சில வகை குற்றங்களுக்குத் தண்டனையாக அபராதம் மட்டும் விதிக்க முடியும்.

5. இளம் குற்றவாளிகளை விசாரணை செய்ய தனி இளையோர் நீதிமன்றம்.

இளம் குற்றவாளிகள் அவர்கள் செய்யும் குற்றங்களான திருட்டு, வீட்டை உடைத்துத் திருடுதல், சூதாட்டம், பயணச்சீட்டு வாங்காமல் பயணம் செய்தல், தற்கொலை முயற்சி, பலாத்காரம், கொலை போன்றவற்றால் பிரிக்கப்படுகின்றனர். இளம் குற்றவாளிகளை விசாரணை செய்ய உருவாக்கப்பட்டுள்ள தனி இளையோர் நீதிமன்றங்கள் உருவாக்கப்பட்டுள்ளன. வயது வந்த குற்றவாளிகளின் நீதிமன்ற நடைமுறைகளிலிருந்து மாறுபட்டவை. இளையோர் நீதிமன்றங்களில் சீருடை அணிந்து காவலர்கள் வர அனுமதி இல்லை; வழக்கு விசாரணை ரகசியமாகவே வைக்கப்படும்; விசாரணையின் போது சிறப்பு அனுமதி பெறாமல் பொதுமக்கள் யாரும் நீதிமன்றத்தில் அனுமதிக்கப்படுவதில்லை. பொதுநலன் கருதி வழக்குரைஞர் இருப்பது நல்லது என்று நீதிபதி கருதினால் மட்டுமே வழக்குரைஞர் ஒருவர் சாதாரண உடையில் அனுமதிக்கப்படுவார். இளையோர் நீதிமன்றங்களில் பொதுவாக பாதுகாவலரிடம் ஒப்படைத்தல், எச்சரிக்கை செய்து சிறு அபராதம் விதித்தல், விடுவித்தல், சீர்திருத்தப் பள்ளிக்கு அனுப்புதல், நன்னடைத்தையின்பால் விடுவித்தல் மற்றும் சிறைத் தண்டனை ஆகியவை வழங்கப்படுகின்றன.

குற்றம் செய்தவர்களில் 16 வயதுக்குட்பட்ட ஆண்களும் 18வயதுக்குட்பட்ட பெண்களும் இளைஞர் நீதி சட்டத்தின் கீழ் நெறிப்படுத்தப்பட வேண்டும். இவர்களைப் பாதுகாக்கவும், சீர்திருத்தவும் முயற்சி மேற்கொள்வதுடன் தொழிற்பயிற்சி மற்றும் ஆதாரக்கல்வி பெறவும், வெளிப்பள்ளியில் சென்று படிக்கவும் வழிவகை செய்யப்படவேண்டும். குறிப்பிட்ட குழந்தைகளுக்கு பெற்றோரிடமோ, பாதுகாவலரிடமோ, பாதுகாக்க அமர்த்தப்பட்டவரிடமோ அல்லது நிறுவனத்திடமோ நல்ல பாதுகாப்பான சூழ்நிலை இல்லை என்று கருதும் பட்சத்தில் ‘குழந்தை நல வாரியம்’ அவர்களை இளையோர் விடுதிக்கு அனுப்ப வேண்டும். இளங்குற்றவாளிகளுக்குச் சிறப்பு விடுதிகளை அமைத்துக் கொடுத்து அவர்களின் உறைவிடம், கல்வி, தொழிற்பயிற்சி மற்றும் நல்ல பண்புகள் வளர்த்தலுக்கு வழிவகை செய்ய வேண்டும். மாநிலங்கள் இளைஞர்களின் மறுவாழ்விற்காகச் சிறப்புநிதி ஒதுக்கி அவர்களுக்காகவே செலவிட வேண்டும் என்றும், அவ்வாறு செயல்படுவதற்குச் சரியான ஆலோசனை வாரியங்களை உருவாக்கி, வேண்டிய நிதி ஆதாரங்களைத் தடையின்றி பெற்றுத் தரவும் வழிவகை செய்ய வேண்டும் என்றும் இச்சட்டம் மேலும் கூறுகிறது.

## மறுவாழ்விற்கான நடவடிக்கைகள்

இளங்குற்றவாளிகளைப் பாதுகாக்கவும், சீர்திருத்தவும் அரசாங்கம் பல்வேறு நடவடிக்கைகளை மேற்கொண்டு வருகிறது. இளங்குற்றவாளிகளைப் பாதுகாக்கவும், சீர்திருத்தவும் இந்தியாவில் அத்தாட்சி பெற்ற பள்ளிகள், சீர்திருத்தப் பள்ளிகள், பிராஸ்டல் பள்ளிகள் மற்றும் நன்னடத்தை விடுதிகள் ஆகிய நிறுவன அமைப்புகள் செயல்படுகின்றன. இந்தியா முழுமைக்கும் ஒரே சட்டமாகச் செயல்படும் இளையோர் நீதி சட்டத்தின்படி இளம் குற்றவாளிகள் எந்தச் சூழ்நிலையிலும் வயது வந்த குற்றவாளிகளோடு சிறையில் அடைக்கப்படாமல் சீர்திருத்தப்பள்ளிகளிலும், உற்றாய்வு இல்லங்களிலும், குழந்தைகள் விடுதிகளிலும் மட்டுமே தங்க வைக்கப்பட வேண்டும். அங்கு அவர்கள் திருந்தி வாழ வழி அமைத்துத் தரப்படுகிறது.

### பார்ஸ்டல் பள்ளிகள்

16 வயது முதல் 21 வயது வரையுள்ள வாலிபக் குற்றவாளிகளுக்காக பார்ஸ்டல் பள்ளிகள் உருவாக்கப்பட்டுள்ளன. இப்பள்ளிகளில் இரண்டு ஆண்டுகள் முதல் ஐந்து ஆண்டுகள் வரை குற்றவாளிகளை வைத்திருக்கலாம். தொழிற் பயிற்சியுடன் கல்வி கற்பிக்கப்படுகிறது. இப்பள்ளிகள் சிறைச்சாலைத்துறை ஆணையரின் கீழ் இயங்குகின்றன. ஒவ்வொரு பள்ளிக்கும் மாவட்ட நீதிபதி, குற்றவியல் நீதிபதி, மாவட்ட கல்வி அதிகாரி மற்றும் அரசு சாரா நிறுவனங்களைச் சேர்ந்த நான்கு உறுப்பினர்களைக் கொண்ட மேற்பார்வைக் குழு அமைக்கப்பட்டுள்ளது.

### நன்னடத்தை விடுதிகள்

நன்னடத்தையினால் விடுவிக்கப்படும் இளைஞர்களுக்கு இவ்விடுதிகளில் தங்கும் வசதி செய்து கொடுத்து, ஒரு மேலாளரின் கண்காணிப்பில் தங்க வைக்கப்படுகிறார்கள். இவர்கள் வெளியில் சென்று வேலை செய்ய உரிமையும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

### காவல் இல்லங்கள்

நீதிமன்றத்தில் வழக்கு நடக்கும் காலத்தில் இளம்குற்றவாளிகளை காவலில் வைப்பதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள இந்த இல்லங்கள் வீடற்றவர்களையும், கைவிடப்பட்டவர்களையும், கவனிப்பாரற்ற

குழந்தைகளையும் தங்க வைக்க உபயோகப்படுத்தப்படுகின்றன. இந்த இல்லங்களில் தனிமைப்படுத்துதல், கல்வி கற்பித்தல், தொழிற்பயிற்சி தருதல், பொழுதுபோக்கு, சுகாதாரம் மற்றும் பாதுகாப்பு வசதிகள் ஏற்படுத்தப்பட்டு அரசாலும் தன்னார்வத் தொண்டு நிறுவனங்களாலும் இவை நடத்தப்படுகின்றன. ஆண்களுக்கும், பெண்களுக்கும் தனித்தனி இல்லங்கள் இருக்கின்றன.

**சீர்திருத்தப்பள்ளிகள்**

நீதிமன்றத்தால் தண்டனை அளிக்கப்பெற்று பாதுகாவலில் வைக்கப்பட வேண்டிய சிறுவர்கள் சீர்திருத்தப் பள்ளிகளில் மூன்று ஆண்டுகள் முதல் ஏழு ஆண்டுகள் வரை வைக்கப்படுகின்றனர். இப்பள்ளிகளில் அவர்களின் நலன் கருதி மூன்று வகை அணுகுமுறைகள் செயல்படுத்தப்படுகின்றன: (அ) ஆரோக்கியமான ஆளுமை வளர்ச்சிக்கும், ஒழுங்குபடுத்துவதற்கும் ஏற்புடைய நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படுதல், (ஆ) தீய செயல்களுக்கு ஊக்கம் தரும் புறச்சூழ்நிலைகளைக் கட்டுப்படுத்துதல், (இ) குறிப்பிடத்தக்க தடுப்பு நடவடிக்கைகளை செயல்படுத்துதல்.

**தடுத்தல் நடவடிக்கைகள்**

பள்ளிகளில் கட்டுப்பாடுகள் இருக்க வேண்டும்; குழந்தைகளை அதிக அக்கறையோடு கவனிக்க வேண்டும். படிப்பு மட்டும் அல்லாமல் கேளிக்கைகளும் பள்ளியில் இருக்க வேண்டும்.

பயிற்சி அளிக்கப்பட்ட ஆசிரியர்களை பணியில் அமர்த்த வேண்டும்; ஆசிரியர்கள் குழந்தைகளின் பிரச்சனைகளைப் புரிந்து கொண்டு செயல்பட வேண்டும்.

பெற்றோர்கள் வீட்டில் போதுமான அன்பு, பாசம் அக்கறை காட்ட வேண்டும்.

நல்ல குடும்பச் சூழல், விரும்பத்தக்க கல்வி நிலையம், போதுமான அளவு கேளிக்கை, ஓய்வு ஆகியவை இருந்தால் இளம் குற்றவாளிகள் உருவாகுவது பெருமளவில் குறையும். குற்றங்களில் ஈடுபடும் இளம் சிறார்களையும், சிறைக்குச் சென்று திரும்பி வரும் சிறார்களையும் கண்டறிந்து அவர்கள் மீண்டும் தவறு செய்யாமல் திருந்தி

வாழ்வதற்குத் தேவையான கல்வி, வேலை வாய்ப்பிற்கான ஏற்பாடுகளையும் வழி முறைகளையும் செய்வதற்கு மாவட்டம் தோறும் தனிப்பிரிவு துவங்கலாம்.

## References


Albert K.Cohen, Delinquent Boys: The Culture of the Gang. (New York: The Free Press, 1955).

Albert K.Cohen, Deviance and Control. (Englewood Cliffs, New Jersey: prentice Hall Inc., 1966).

Clifford Shaw, Henry Mckay et al. Delinquency Areas: A Study of the Geographical Distribution of School Truants, Juvenile Delinquents and Adult Offenders in Chicago. (Chicago: University of Chicago Press, 1929).

Fried Lander, W.A. Introduction to Social Welfare. 1959.

Hall Jerome, General Principles of Criminal Law. Indian Polis, 1947.

Howard Becker (ed.), Social Problems: A Modern Approach. (New York: John Wiley and Sons, Inc.).

Merton, R.K. Social Theory and Social Structure. (New York: The Free Press, 1968).

Mowrer Ernest,R. Disorganisation: Social and Personal. 1959.

Reckless, Walter C. The Crime Problem. (Bombay: Vakils, Feffer and Simons Pvt.Ltd., 1971).

Richard Cloward and Lloyd Ohlin, Delinquency and Opportunity: A Theory of Delinquent Gangs. Glencoe, Illinois: The Free Press, 1960).

Shaw, C.R. and H.D.Mckay, Social Factors in Juvenile Delinquency. Report on the Causes of Crime. (Washington:, Govt. Printing Office, 1931).

Sutherland, E.H. and D.R.Cressay, Principles of Criminology. Sixth ed. (Bombay: The Times of India Press, 1965).

Tappan, Paul W. Crime, Justice and Correction. (New York: Mc Graw Hill, 1960).

Tappan, Paul W. "Who is a Criminal?" *American Sociological Review,* 12 (1), Feb. 1947.

பாலமுருகன்,ச. மனிதமும் உரிமையும். (சென்னை: பாரதி புத்தகாலயம். 2005).

# தவறான செயல்களில் ஈடுபடுத்தக் கடத்துதல்

உலகம் முழுவதும் 'ஆள் கடத்தல்' பரவலாக நடந்து வருகிறது. ஆண்டுக்கு சுமார் ஒரு கோடி மனிதர்கள் நாடு விட்டு நாடு கடத்தப்படுகிறார்கள் அல்லது அந்த நாட்டுக்குள்ளேயே கடத்தப்படுகிறார்கள் என ஐக்கிய நாடுகள் சபை வெளியிட்டுள்ள புள்ளி விவரம் தெரிவித்துள்ளது. பெரும்பாலும் வேலைக்காகவும், விபசாரத்திற்காகவும் ஆட்கள் கடத்தப்படுகின்றனர். குறிப்பாகப் பெண்கள் அதிகளவில் கடத்தப்படுகின்றனர். இந்தியாவில் மாநிலத்துக்குள் ஆட்களைக் கடத்துவது, மாநிலம் விட்டு மாநிலத்துக்கு ஆட்களை கடத்தும் சம்பவங்கள் அதிகரித்து வருகின்றன.

அண்மைக்காலமாக தவறான செயல்களில் ஈடுபடுத்தக் கடத்துதல் அதிக அளவில் நடைபெறுகின்றன. பெண்களும் குழந்தைகளும் பாலியல் தொழிலுக்காகவும், ஆபாசப் படங்கள் எடுக்கவும், பிச்சை எடுக்கவைக்கவும், ஆபத்தான தொழில்கள், வீட்டு வேலை மற்றும் பண்ணை வேலைகள், கேளிக்கை மற்றும் விளையாட்டுக்களில் ஈடுபடுத்தவும், ஏமாற்று திருமணத்திற்காகவும் எனச் சட்டத்திற்குப் புறம்பான பல்வேறு செயல்பாடுகளுக்காகக் கடத்தப்படுகின்றனர். இத்தகைய கடத்தலின்போது பாலியல் வன்முறைகள் பரவலாக நிகழ்கின்றன. பெருமளவு கடத்தல்கள் பாலியல் தொழிலில் ஈடுபடுத்த வழிவகுக்கிறது என்பது கசப்பான உண்மை.

கடத்துதல் மனித சமுதாயத்திற்கு எதிராக நடைபெறும் வெறுக்கத்தக்க கொடிய குற்றங்களில் ஒன்றாகும். சட்டத்துக்கு விரோதமாகக் குழந்தைகளைக் கடத்தும் 'குழந்தைகள் வணிகம்' இந்தியாவில் அதிகமாகியுள்ளது என்று ஐக்கிய நாடுகள் குழந்தைகள் நலப்பிரிவு கவலை தெரிவித்துள்ளது. முக்கிய நகரங்களில் ஆண்டுக்கு சுமார் 1000 குழந்தைகள் காணாமல் போகின்றனர். இந்தியா முழுவதும் 1997ஆம் ஆண்டிலிருந்து 2005ஆம் ஆண்டு வரை கடத்தல் தடுப்பு சட்டத்தின் கீழ் 67,905 வழக்குகள் பதிவாயுள்ளன (வி.சித்தன்னன், 2006). உலகமயமாக்கத்தால் பெருகிவரும் நுகர்வோர் கலாச்சாரமும், தகவல் தொடர்பு சாதனங்களின் வளர்ச்சியும் இக்கடத்தல் தொழில் தங்கு தடையின்றி வளர உதவுகின்றன; லாபகரமானதாகவும் அதே சமயத்தில் குற்றவாளிகள் தப்பிப்பது எளிதாகவும் இருப்பதால் கடந்த இருபது

ஆண்டுகளாக உலகளாவிய வியாபாரமாக கடத்தல்தொழில் உருவாகியுள்ளது.

கடத்தல் பற்றிய விரிவான தகவல்கள் நம் நாட்டில் இல்லை. பதிவு செய்யப்பட்டுள்ள தகவல்கள் பெரும்பாலும் பாலியல் தொழிலில் ஈடுபடுத்திடக் கடத்தப்படும் பெண்கள் மற்றும் குழந்தைகளைப் பற்றியதாகவே உள்ளன. ஒரு மாநிலத்திற்குள்ளும், ஒரு மாநிலத்திலிருந்து மற்றொன்றிற்கும் ஒவ்வொரு ஆண்டும் ஆயிரக்கணக்கான குழந்தைகளும் பெண்களும் கடத்தலுக்கு உள்ளாவதுடன், கடத்தலுக்கு வழியாகவும் இலக்காகவும் இந்தியா மாறியுள்ளது என்பதைப் புள்ளி விபரங்கள் கவலையுடன் தெரிவிக்கின்றன. இக்கடத்தல்கள் தனிப்பட்ட நபர்களாலும், குழுக்களாலும் நடத்தப்படுகின்றன. கடத்தல் பல்வேறு காரணங்களால், பலவித பரிமாணங்களில் நடைபெறுகிறது.

குழந்தையின் சம்மதம் இன்றியும், விருப்பத்திற்கு மாறாகவும் அல்லது பெற்றோரின் சம்மதத்துடனும் குழந்தைகளை அவர்களின் இயல்பான குடும்பப் பின்னணியிலிருந்து பிரித்து வேறு இடங்களுக்கு ஒரு பொருளைப் போலக் கொண்டு செல்வதும், இதன் வாயிலாகப் பொருளாதார லாபம் பெறுதலும் ‘குழந்தைக் கடத்தல்’ ஆகும். ‘குழந்தைக் கடத்தல்’ என்பது 18 வயதிற்குட்பட்ட குழந்தைகளை அச்சுறுத்தியோ, பலவந்தமாகவோ, பிற வகையான வன்முறைகளைக் கையாண்டோ, ஏமாற்றியோ, கடத்தியோ, அதிகாரதுஷ்பிரயோகம் செய்தோ, இன்னலுக்கு ஆளாகியுள்ள நிலையைப் பயன்படுத்தியோ, பணம் அல்லது பயன்களைக் கொடுத்தோ அல்லது பெற்றுக் கொண்டோ, நாட்டில் எல்லைக்குள் அல்லது எல்லைக்கு அப்பால் கொண்டு செல்லுதல், இடம் பெயரச் செய்தல், தங்க வைத்தல் ஆகியனவாகும்.

இந்தியாவில் சராசரியாக ஒரு நாளில் 36 சிறுமிகள்/ பெண்கள் திருட்டுத்தனமாகவும், பலவந்தமாகவும் கடத்தப்படுகிறார்கள் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. திருட்டுக் கடத்தலிலும், பலவந்தக் கடத்தலிலும் கடத்தப்படுகிற விதம் வேறுபடுவதால் அதன் அடிப்படையில் இரண்டும் வெவ்வேறாகக் கருதப்படுகின்றன. பதினெட்டு வயது நிரம்பாத 'மைனர்' பெண்ணை ஆசை வார்த்தை காட்டி, இச்சகம் பேசி அவளுடைய சட்டப்பூர்வமான காப்பாளரின் இசைவின்றித் திருட்டுத்தனமாக தூக்கிச் செல்வது அல்லது அழைத்துச் செல்வது ‘திருட்டுக் கடத்தல்’ . இதில் பாலின நோக்கம் இல்லாதிருந்தாலும் தூக்கிச் செல்லும் செயலே குற்றச் செயலாகிறது. கடத்தப்படுகிற பெண்ணின் சம்மதம் ஒரு பொருட்டல்ல;

அவளின் சம்மதம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் அது ஒரு குற்றச் செயலே. ஒரு பெண்ணை (எந்த வயதாக இருந்தாலும் சரி) வலுக்கட்டாயப்படுத்தி, வஞ்சனை செய்து அல்லது ஏமாற்றி அவளுடைய விருப்பத்திற்கு மாறாக பாலுறவு வைத்துக் கொள்ளும் நோக்கத்துடன் அல்லது திருமணம் முடிக்கும் நோக்கத்துடன் தூக்கிச் செல்வது 'பலவந்தக் கடத்தல்'.

திருட்டுக் கடத்தல் மற்றும் பலவந்தக் கடத்தல்களில் கீழ்க்காணும் அவலங்கள் காணப்படுவதாக ராம்அஹுஜா (Ram Ahuja, 1997) கூறுகிறார்:

- பலவந்தக் கடத்தல்களில் மணமான பெண்களை விட மணமாகாத பெண்களே அதிகம் கடத்தப்படுகின்றனர்.

- கடத்துபவர்களும், கடத்தப்படுகிறவர்களும் பெரும்பாலும் இளம் வயதினரே.

- பெரும்பாலான கடத்தல் நிகழ்வுகளில் கடத்துபவரும், கடத்தப்படுபவரும் அந்நியராய் இருப்பதில்லை. ஒருவருக் கொருவர் ஓரளவு பரிச்சயம் உடையவர்களாகவே இருக்கிறார்கள். அப்படிப்பட்ட நிலையில் கடத்துகிறவர், கடத்தப்படுபவரை மிரட்டவோ, கடத்தப்படுகிறவர் கடத்தலுக்கு எதிர்ப்புக் காட்டுவதோ கிடையாது.

- குடும்பத்தில் பெற்றோருடைய கட்டுப்பாடு இல்லாமலும், வீட்டில் உள்ளவர்கள் அன்பாக இல்லாமலும் இருக்கும் சூழ்நிலையில் கடத்துபவருக்கும், கடத்தப்படுபவருக்கும் இடையே ஓர் அனுசரணையான தொடர்பு ஏற்படுகிறது. இந்தத் தொடர்பு அல்லது பரிச்சயம் கடத்துபவரோடு கடத்தப்படும் பெண் சேர்ந்து போக வழிவகுக்கிறது.

- பெரும்பாலும் கடத்தல் நிகழ்வில் ஒருவர் மட்டுமே ஈடுபடுகிறார்.

- பெரும்பாலான கடத்தல்களுக்கு அடிப்படை நோக்கங்களாக பாலின இச்சையும், திருமணமும் இருக்கின்றன. பத்தில் ஒரு நிகழ்வினத்தில் தான் பொருளாதார நோக்கம் அடிப்படையாக இருக்கிறது.

➢ எண்பது சதவிகிதத்திற்கு மேற்பட்ட கடத்தல் நிகழ்வினங்களில் கடத்தப்படுபவர் பாலியல் வன்முறைக்கு ஆளாகிறார்.

### கடத்தலுக்கான நோக்கங்களும், காரணங்களும்

வறுமை, கல்வியின்மை, அறியாமை, பாலியல் ரீதியாக எளிதில் சுரண்டலுக்கு ஆளாகும் தன்மை, உள்நாட்டுப்போர், பலவீனமான மற்றும் வலுவிழந்த சட்ட அமலாக்கம் போன்ற பல்வேறு காரணங்களால் கடத்தல் அதிகரித்துள்ளது. சமூகத்தில் பலவீனமானவர்களாக, மற்றவர்களை சார்ந்திருப்போராக பெண்கள் இருப்பதால் பாலியல் வன்முறையோடு தொடர்புடைய கடத்தலுக்கு அதிக அளவில் பலியாகிறார்கள். பெண்கள் கடத்தப்படுவதற்கு முக்கிய காரணங்களாக வறுமை, கல்லாமை அல்லது போதிய கல்வியறிவின்மை, தொழில் சார்ந்த திறன்இன்மை, வேலை வாய்ப்பு இன்மை, சிதறும் குடும்பங்கள், வறட்சி, வெள்ளம் மற்றும் கலவரங்கள், பாலியல் கொடுமைக்கு ஆளாக்கப்பட்டிருத்தல், சமூக—சமய மரபாக சில பிரிவினரிடையே விளங்கும் பாலியல் தொழில், பெண்களை போகப் பொருளாகப் பாவிக்கும் மனப்பாங்கு, நுகர்வோர் கலாச்சாரம், உடலுறுப்பு விற்பனை போன்றவை திகழ்கின்றன.

குழந்தைகள் பல்வேறு நோக்கங்களுக்காக – கொத்தடிமையாக, வீட்டு வேலை, விவசாயம், கட்டுமானம், நெசவு, ஆயத்தஆடைத் தொழில் உழைப்பிற்காகவும்,பிச்சையெடுக்கச்செய்ய, உடலுறுப்புகளைக் களவாடி விற்க, போதைமருந்துகள் கடத்திட, விற்பனை செய்ய உள்ளிட்ட சட்டத்திற்கு எதிரான செயல்பாடுகளுக்காகவும், பாலியல் தொழிலில் ஈடுபடுத்துதல், பாலியல் சுற்றுலா, ஆபாசசினிமா மற்றும் புகைப்படம் எடுக்க உள்ளிட்ட பாலியல் சுரண்டலுக்காகவும், சர்க்கஸ், நடனக் குழுக்கள் உள்ளிட்ட பொழுதுபோக்கு வகைகளுக்காகவும், ஒட்டகப்பந்தயம் உள்ளிட்ட விளையாட்டுத் தொழிலில் ஈடுபடுத்தவும், திருமணத்திற்காகவும், தத்துக்கொடுக்கவும் – கடத்தப்படுகிறார்கள். ஏழ்மையின் காரணமாகவும் பணத்தாசையால் மயங்கியும் பெற்றோர்களே சில நேரங்களில் உடந்தையாகி தங்கள் குழந்தைகளை கொத்தடிமையாகவும், பாலியல் தொழிலுக்காகவும் விற்பதும், அறிமுகமில்லாத புது நபர்களுடன் திருமணம் என்ற பெயரில் அனுப்புவதும் நடைபெறுகிறது.

கடத்தலுக்குத் துணை செய்பவர்களாக குடும்பம், பெற்றோர், உறவினர், நண்பர்கள், தரகர்கள், சமூக விரோதிகளின் கூட்டமைப்பு,

வேலை வாங்கித் தருவதாகக் கூறும் மோசடிக் கும்பல், உள்ளூர் குற்றவாளிக் கும்பல்கள், ஊழல் செய்யும் காவல்துறை–பாஸ்போர்ட் அலுவலக–விமான நிலையப் பணியாளர்கள், சிறுவர் இல்லங்கள்–குழந்தைக் காப்பகங்கள்–தத்து கொடுக்கும் தொழிலில் ஈடுபட்டுள்ள போலியான தன்னார்வ நிறுவனங்கள், பாலியல் தொழில் நடத்துனர்கள்–இடைத்தரகர்கள், சுற்றுலா அமைப்பாளர்கள், தொழிலாளிகளை வேலைக்கு அமர்த்தும் கங்காணிகள், குழந்தைகளுடன் உடலுறவுக்கு விழையும் மனநோயாளிகள் போன்றவர்கள் திகழ்கின்றனர்.

கடத்தல் திட்டமிட்ட கூட்டு முயற்சியாகவும் செயல்படுத்தப்படுகிறது. ஏழ்மையான குடும்பங்களைச் சேர்ந்த பெண் குழந்தைகளைக் கடத்தியோ, ஏமாற்றியோ, விலைக்கு வாங்கியோ கொண்டு வந்து அவர்கள் வளர்ந்ததும் பாலியல் தொழிலில் ஈடுபடுத்தும் கும்பல்கள் நாடெங்கும் பரவியுள்ளன. குறிப்பாக, வட மாநிலங்களில் பல பகுதிகளில் பழங்குடியினச் சிறுமிகள் மோசடிக் கும்பல்களால் கடத்தி வரப்பட்டு விபச்சார விடுதிகளில் விற்கப்படும் கொடுமையும், நாட்டின் சில பகுதிகளில் பாரம்பரியமாய் இத்தொழிலில் குழந்தைகள் தள்ளப்படும் கயமையும் கவனிக்கத்தக்கது.

பெரு நகரங்களிலும் சுற்றுலாத் தலங்களிலும் பாலியல் தொழிலில் ஈடுபடுத்தப்படும் குழந்தைகளில், கணிசமான அளவினர் கடத்தி வரப்பட்டவர்களாவர். உலகெங்கும் 2 மில்லியன் குழந்தைகள் இத்தொழிலில் ஈடுபடுத்தப்படுவதாக மதிப்பிடப்பட்டுள்ளது. குழந்தை உரிமைகள் மீதான ஐ.நா உடன்படிக்கையில் 18 வயதிற்கு கீழ் உள்ள குழந்தைகளை பணமோ, பொருளோ வேறு சலுகைகளோ கொடுத்து பாலியல் இச்சைகளுக்குப் பயன்படுத்தும் செயல் விபச்சாரம் என்றும், மனித மாண்பிற்கே களங்கம் கற்பித்துக் கேவலப்படுத்தும் ஒரு இழி செயல் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளது. இத்தகைய கொடுமைகளுக்கு உள்ளாகும் குழந்தைகள் தங்களுடைய அவலங்களை வெளியில் சொல்ல முடியாத நிலையில் இருக்கின்றனர்.

பெண், குழந்தைகளிடம் பாலுறவு கொள்வதால் பாலியல் நோய்கள், எயிட்ஸ் போன்ற உயிர்க்கொல்லிநோய்கள் தொற்றும் அபாயம் இல்லை என்ற நம்பிக்கை காரணமாக விபச்சாரத்தில் குழந்தைகள் அதிகளவு பயன்படுத்தப்படுகின்றனர். சட்டங்கள் தெளிவாகவும், கடுமையானதாகவும் இல்லாததால் குற்றவாளிகள் மிக எளிதில் தப்பித்துவிடுகின்றனர். மேலும் இத்தகைய குழந்தைகளை அடையாளம் காண்பது, கொடுமைகளில் இருந்து அவர்களைப் பாதுகாப்பது நடைமுறையில் பல்வேறு சிக்கல்கள்

கொண்டதாக உள்ளன. கடத்தலில் குழந்தைகள் குடும்பத்திலிருந்து பிரிக்கப்பட்டு நிராதரவாக இடம் விட்டு இடம் மாற்றப்படுவதால் பலவித கொடுமைகளுக்கும், மனச் சிதைவுக்கும் பாதிப்புகளுக்கும் ஆளாகின்றனர். அதிலும் குறிப்பாக பாலியல் தொழிலில் ஈடுபடுத்தக் கடத்தப்பட்ட குழந்தைகள் எச்.ஐ.வி/எய்ட்ஸ் மற்றும் இதர பாலியல் தொற்றுகளுக்குப் பலியாகி வருகின்றனர்.

**கடத்தல் செயல்படும் முறைகள்**

1. பார்வைக்கு சந்தேகம் எழாதவகையில் பேருந்து நிலையத்திலோ, தொடர்வண்டி நிலையத்திலோ, பள்ளியிலோ அல்லது விளையாடும் இடத்திலோ குழந்தையிடம் நட்புடன் பழகுதல்.

2. அதிக சம்பளத்திற்கு வேலைக்கு ஆள் எடுப்பதாக விளம்பரப்படுத்துவது.

3. உள்ளூர்வாசிகள் துணையுடன் நலம்விரும்பிகளாக நடித்து குடும்பத்தினரை அணுகுவது.

4. கடன் தொல்லையிலிருந்து விடுபட குழந்தையை விற்பதற்கு பெற்றோர்களைச் சம்மதிக்க வைப்பது அல்லது பணத்திற்காக குழந்தையை விற்பது தவறில்லை என மூளைச் சலவை செய்வது.

5. வரதட்சணையின்றி திருமணம் முடித்துத் தருவதாகப் பொய்யான வாக்குறுதிகள் மற்றும் நம்பிக்கைகளை விதைத்தல்.

6. சினிமா மற்றும் தொலைக்காட்சிகளில் நடிப்பதற்கு வாய்ப்பு ஏற்படுத்தித் தருவதாக ஆசை காட்டுதல்.

7. வேலை வாய்ப்பு அளிக்கும் நிறுவனங்களாகவும், திருமணத் தகவல் பரிமாற்ற மையங்களாகவும் செயல்படுதல்.

### கடத்தப்படுவதால் ஏற்படும் பாதிப்புகள்

உரிமைகள் மீறப்படுதல், உடல் உழைப்பு சுரண்டப்படுதல், பாலியல் கொடுமைகளுக்கு ஆளாக்கப்படுதல், அடித்தல், சூடுபோடுதல், சித்திரவதை, போன்ற உடல் பாதிப்பை ஏற்படுத்தக் கூடிய அனைத்து செயல்களும், பாலியல் இன்பத்திற்கும் பாலுறவுக்கும் பயன்படுத்துதல், வயதுவந்தவர்களால் தவறாகக் கையாளப்படுதல், விபச்சாரத்தில் தள்ளுதல் ஆகிய பாலியல் கொடுமைகளும், மிரட்டுதல், இழிவான வார்த்தைகளை உபயோகித்தல், மற்ற குழந்தைகளுடன் ஒப்பிட்டுத் தாழ்த்திப்பேசுதல், அன்பு, பாசம், அரவணைப்புக் காட்டாது புறக்கணித்தல், குழந்தைப் பருவமும், சுதந்திரமும், குழந்தையின் தனித்தன்மையும் பறிபோதல், ஆரோக்கியம், கல்வி, விளையாட்டு மறுக்கப்படுதல், தன்னைப்பற்றிய தாழ்வான கருத்தும் மனசிதைவும் போன்ற மனரீதியாக பாதிப்புகளும் ஏற்படுகின்றன.

### கடத்தலும், சட்டமும்

மனிதர்களைக் கடத்துதல் குற்றம் என இந்திய அரசியல் சாசனத்தின் பிரிவு 23ல் கூறப்பட்டுள்ளது. அத்துடன் கடத்தலைத் தடுக்கப் பல சிறப்புச் சட்டங்களும் இயற்றப்பட்டு, நடைமுறைப்படுத்த பல நடவடிக்கைகளும் எடுக்கப்பட்டு வருகின்றன. கடத்தலைத் தடுக்கவும் மனித உரிமைகளைக் காக்கவும் சர்வதேச அளவில் பல உடன்படிக்கைகள் இயற்றப்பட்டுள்ளன. குறிப்பாக, குழந்தைகள் கடத்தப்படுவதிலிருந்து பாதுகாக்க ஐக்கிய நாடுகள் சபை குழந்தைகள் உரிமைகள் மீதான சர்வதேச உடன்படிக்கையை ஏற்படுத்தி அனைத்து நாடுகளும் குழந்தைகள் கடத்தலை ஒழிக்கக் கடுமையான நடவடிக்கைகள் எடுக்கவேண்டும் என வலியுறுத்தியுள்ளது. அதேபோல் பெண்களுக்கு எதிரான அனைத்துவித பாரபட்சங்களையும் அகற்ற இயற்றப்பட்டுள்ள சர்வதேச அறிக்கையும் பெண்ணுரிமைகளை மீறுகின்ற இக்கடத்தலைத் தடுக்க நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென வலியுறுத்துகிறது. குழந்தைகள் மற்றும் பெண்கள் கடத்தப்படுவதற்கு எதிரான சர்வதேச உடன்படிக்கைகளையும், அறிக்கைகளையும் ஏற்றுக் கொண்டு இந்தியாவும் ஒரு உறுப்பு நாடாக கையொப்பமிட்டுள்ளது என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது.

'மனித உரிமைகள் குறித்த சர்வதேச பிரகடனம் 1948', 'பெண்களுக்கெதிரான அனைத்து வகை பாரபட்சங்களையும் நீக்குதல் குறித்த அறிக்கை 1979', மனிதர்கள் கடத்தல் குறிப்பாக பெண்கள்,

குழந்தைகள் கடத்தல் மற்றும் கடத்தலில் ஈடுபடுவோரைத் தண்டித்தல் குறித்த ஐ.நா. உடன்படிக்கையின் ஓர் பகுதியாக விளங்கும் ஆவணம் போன்ற சர்வதேச உடன்படிக்கைகள் பெண்களுக்கெதிரான வன்முறைகள் மற்றும் மனித உரிமைகள் மீறப்படுதலைத் தடுக்க வலியுறுத்துகின்றன.

இந்திய அரசியல் சாசன அமைப்பின் பிரிவு–23 மனிதர்களை, குறிப்பாகப் பெண்களையும் குழந்தைகளையும் கடத்துவதும், விற்பதும், வாங்குவதும் மற்றும் இவை தொடர்பான எந்தச் செயலும் தண்டனை பெறக்கூடிய குற்றமே என்று அறிவிக்கிறது. இவற்றுடன், பாலியல் தொழிலுக்காகக் கடத்தல் (தடுப்பு) சட்டம், 1956 (1986ல் திருத்தி அமைக்கப்பட்டது), இந்தியக் குற்றவியல் சட்டம், 1860 (பிரிவுகள் 361/366–/372/373/375), குற்றச் சட்டம் (திருத்தப்பட்டது), 1983, பெண்களுக்கெதிரான வன்கொடுமை (தடுப்பு) ஆணை, மகளிரை கேவலமாகச் சித்தரிக்கும் (தடுப்பு) சட்டம், 1986 சிறப்புச் சட்டங்களும் உள்ளன. பாலியல் தொழிலில் பெண் குழந்தைகள் கடத்தப்பட்டு ஈடுபடுத்தப்படுவதைத் தடுக்கும் விபச்சாரக் கடத்தல் தடுப்பு சட்டம் 1956ன் கீழ் அனைத்து மாவட்டங்களிலும் சிறப்புக் காவல்துறை அதிகாரிகள் நியமிக்கப்பட்டுள்ளனர். அனைத்துக் காவல் நிலையங்களிலும் குழந்தைகள் நலனுக்கெனவும் பாதுகாப்பிற்காகவும் “சைல்டு லைன் – 1098” தொலைபேசி சேவையுடன் காவல்துறை அதிகாரி ஒருவர் குழந்தைநல அலுவலராகப் பொறுப்பாளராக்கப்பட்டிருக்கிறார்.

ஆபத்தில் சிக்கியுள்ள குழந்தைகளை உடனடியாக காப்பதற்கு ஏற்படுத்தப்பட்டுள்ள இலவச அவசர தொலைபேசி சேவை ‘சைல்டு லைன் 1098’ அனைத்து மாவட்டங்களிலும் அனைத்து மகளிர் காவல் நிலையங்களிலும் இயங்குகிறது. இச்சேவை காவல்துறை ஒத்துழைப்புடன் தொண்டு நிறுவனங்களால் பல நகரங்களில் இயக்கப்படுகிறது. குழந்தை பாதுகாப்பற்ற ஆபத்தான சூழலில் இருந்தால், அனாதையாக்கப்பட்டு கவனிப்பாரற்று இருந்தால், கொத்தடிமையாகவோ வேலைகளிலோ அமர்த்தப்பட்டிருந்தால், சித்திரவதை மற்றும் பாலியல் தொந்தரவுக்கு உட்படுத்தப்பட்டால், பாலியல் தொழிலில் ஈடுபடுத்தப்பட்டால், குழந்தைகள் விற்கப்பட்டோ அல்லது குழந்தை நலன் பாதிக்கும் வண்ணம் இடம் மாற்றப்பட்டிருந்தால் குழந்தையின் நலன் கருதும் நபர் அல்லது பாதிக்கப்பட்ட குழந்தை ‘சைல்டு லைன் 1098’ எண்ணை அழைக்கலாம். இதைத்தவிர, குழந்தைகள் பாதுகாப்பிற்குக் காவல்துறை பல சிறப்புப் பிரிவுகளை ஏற்படுத்தியுள்ளது. பெண்ணுரிமைகள் மீறல், பெண்களைப்

பாதுகாக்கும் சட்டங்கள் முறையாக செயல்படுத்தாமை போன்ற பிரச்சனைகளுக்கு மாநில மகளிர் ஆணையத்தை அணுகலாம்.

"பாலியல் வியாபாரத்திற்காக குழந்தைகள் மற்றும் பெண்கள் கடத்தப்படுதலைத் தடுப்பதற்கான தேசிய செயல்திட்டம்" 1998ஆம் ஆண்டு முதல் அனைத்து மாநிலங்களிலும் மாநில ஒருங்கிணைப்பு குழு, மாவட்ட ஆலோசனை குழுக்கள், கிராமக் கண்காணிப்பு குழுக்கள் என மூன்றடுக்குச் செயல்திட்டமாகச் செயல்படுத்தப்பட்டு வருகிறது. குழந்தைகள் மற்றும் பெண்கள் கிராமப்புறங்களிலிருந்து அதிக எண்ணிக்கையில் கடத்தப்படுவதால் கடத்தலைக் கட்டுப்படுத்த கிராமக் கண்காணிப்புக் குழுக்கள் அவசியமாக்கப்பட்டுள்ளன. குழந்தைகள் மற்றும் பெண்களைப் பாதுகாக்கவும், கடத்தப்படுதலைத் தடுக்கவும் தமிழ்நாட்டில் "மாநில ஒருங்கிணைப்பு குழு" 2002ம் ஆண்டு அமைக்கப்பட்டது. அனைத்து மாவட்டங்களிலும் மாவட்ட ஆலோசனை குழுக்களும், கிராமப் பஞ்சாயத்துத் தலைவரைத் தலைவராகக் கொண்டு கிராமங்கள் தோறும் கிராமக் கண்காணிப்புக் குழுக்களும் அமைக்க 05.09.2002 அன்று தமிழக அரசால் (அரசு ஆணை எண். 138) ஆணை பிறப்பிக்கப்பட்டது. இதன்படி, கிராம அளவிலான கண்காணிப்புக் குழுக்கள் முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் மற்றும் மறுவாழ்வுப் பணிகளை மேற்கொள்ளவும், மூன்று மாதங்களுக்கு ஒரு முறை கால மாற்றமின்றி கூட்டம் நடத்திடவும், பள்ளி செல்லும் வயதினை அடைந்துள்ள குழந்தைகள் அனைவரும் பள்ளிக்குச் செல்கின்றனரா என்பதை உறுதி செய்யவும், குழந்தைகள் தாமாகவோ அல்லது பெற்றோர்களின் சம்மதத்துடன் இடம்பெயர்ந்து செல்வதை கண்காணிக்கவும், கிராம சபைக் கூட்டங்களில் குழந்தைகளின் உரிமைகள் குறித்தும் மகளிர் மற்றும் சிறுவர் கடத்தல் குறித்தும் விவாதிக்கப்படவும், குழந்தை உரிமைகள், அரசின் கொள்கைகள் திட்டங்கள், பெண்கள் மற்றும் குழந்தைகள் பாதுகாப்புக் குறித்த தகவல்களை அனைவரும் அறியும் வண்ணம் தெரியப்படுத்தவும், பெற்றோர், ஆசிரியர்கள், ஒருங்கிணைந்த குழந்தை வளர்ச்சித் திட்டப் பணியாளர்கள், சுய உதவிக்குழு உறுப்பினர்கள், கிராமப்புற மருத்துவ நலப் பணியாளர்கள், இளைஞர்கள், உள்ளூர் காவல் துறை அலுவலர்கள், கிராம நிர்வாக அலுவலர், கிராமப் பஞ்சாயத்து உறுப்பினர்கள் ஆகியோர் இணையமாகப் பணிபுரிதல் அவசியமாக்கப்பட்டுள்ளது.

## கடத்தல் தடுப்பு நடவடிக்கைகள்

- பெண்கள் மற்றும் குழந்தைகள் கடத்தப்படுதலைப் பற்றி காவல்துறையினருக்கும், 'சைல்டு லைன் 1098' என்ற தொலைபேசி எண்ணுக்கும் விரைவாகத் தகவல் தர வேண்டும்.

- காவல் துறை கண்காணிப்பு நடவடிக்கைகளை தீவிரப்படுத்த வேண்டும். குழந்தைகள் காணாமல் போன வழக்குகளை குற்றப் புலனாய்வுத்துறை பிரத்யேகமாகக் கவனித்து, காணாமல் போன குழந்தைகளைக் கண்டுபிடிக்க முனைப்பாக நடவடிக்கை எடுக்க வேண்டும்.

- கருத்துரைகள் மூலமாகவோ, திருவிழா மற்றும் பொதுநிகழ்ச்சிகளில் கலைவடிவிலோ பெண்களும் குழந்தைகளும் கடத்தப்படுவது பற்றியும், குழந்தை உரிமைகள் மற்றும் குழந்தை பாதுகாப்பு சட்டங்கள் பற்றியும் மக்களிடையே விழிப்புணர்வை உருவாக்க வேண்டும்.

- மாவட்ட, வட்டார மற்றும் ஊராட்சி அளவில் கடத்தப்படுதலைத் தடுத்திட அரசு, சுய உதவிக் குழுக்கள் மற்றும் தொண்டு நிறுவனங்களை உள்ளடக்கிய கண்காணிப்புக் குழுக்களை ஏற்படுத்தி ஒருங்கிணைந்த நடவடிக்கைகள் மூலமாக குழந்தை உரிமைகள், குழந்தைகளின் பாதுகாப்பற்ற சூழல், பெண் குழந்தைகள் பாதுகாப்பு, குழந்தை கடத்தல், குழந்தைகளுக்குத் தீங்கிழைப்பு, குழந்தை சுரண்டல் மற்றும் குழந்தைகளைப் பாதுகாக்க உள்ள சட்டங்கள், குழந்தைகள் பாதுகாப்பு அமைப்புகள், குழந்தைகளைப் பாதுகாப்பதில் கிராம சமுதாயப் பிரதிநிதிகளுக்கு உள்ள கடமைகள், குழந்தை கடத்தலைத் தடுக்கும் செயல்முறைகள், பெண்கள் கடத்தல், பெண்கள் கடத்தலுக்கான காரணங்கள், பாதிப்புகள், பெண்களைப் பாதுகாக்கும் சட்டங்கள், பெண்கள் பாதுகாப்பிற்கான நிறுவன அமைப்புகள் குறித்த விழிப்புணர்வு பிரச்சாரம் நாடு தழுவிய அளவில் தீவிரமாக மேற்கொள்ளப்பட வேண்டும்.

- 14 வயதிற்குட்பட்ட அனைத்துக் குழந்தைகளுக்கும் பள்ளிக் கல்வியை உத்திரவாதப்படுத்தும் 'அனைவருக்கும் கல்வி

இயக்கம்' நாடு முழுவதும் செயல்படுத்தப்பட்டு, 100% பள்ளி சேர்க்கையும் பள்ளி இருப்பும் உத்திரவாதப்படுத்தப்பட்டு குழந்தைகள் வேலைக்காகவும் பாலியல் தொழிலுக்காகவும் கடத்தப்படுவதைத் தடுக்க வேண்டும்.

**References**


Ahuja, Ram. Social Problems in India. (Jaipur:Rawat Publication, 1997).

Kumar, A. (ed). Social Problems. (New Delhi: Anmol Publications (P) Ltd., 2002).

Prasad, K.J. Regional Profile on the Sexual Exploitation and Trafficking of Children. (Hyderabad: SALT,1996).

Sithannan,V. Immoral Traffic and Prostitution in India. (Chennai: Jeywin Publications, 2006).

# அலகு – 3 சமூக–பொருளாதாரப் பிரச்சனைகள்

## வறுமை

வறுமை ஒரு முதன்மையான சமூகப் பிரச்சனை. தனி மனிதனையும், குடும்பத்தையும், சமுதாயத்தையும் நிலைகுலையச் செய்யும் தன்மை கொண்டது. 'வறுமை' என்பது குறித்துக் கருத்தொற்றுமையுடன் கூடிய பொருள் விளக்கம் எட்டப்படவில்லை. "செழுமைக்கு மாறான நிலையே வறுமை" என எடுத்துக் கொள்ளப்படுகிறது. இக்கருத்தை ஆதரிப்பவர்கள் "வறுமை என்று எதுவும் கிடையாது. எந்த ஒரு நிலைமை செழுமை என்று கருதப்படுகிறதோ, அந்நிலை இல்லாத நிலைமைதான் வறுமை" என வாதிடுகிறார்கள். செழுமை நிலை இல்லாத நிலைதான் வறுமைநிலை என எடுத்துக் கொண்டால், அதே அடிப்படையிலேயே வறுமை நிலை இல்லாத நிலைமைதான் செழுமை நிலை என்று எடுத்துக் கொள்ள வேண்டியதாயிருக்கும். எது செழுமை நிலை என்பதைப் புரிந்து கொண்டால் மட்டுமே வறுமை நிலையைப் புரிந்து கொள்ள முடியும்.

வறுமை என்பதை "பெரும்பாலான மக்களுக்கு அவசியமான, விருப்பமான பொருள்களை வாங்கப் போதுமான பணம் இல்லாமை" என்ற அடிப்படையில் ஆய்வாளர்கள் சிலர் வறுமைக்குப் பொருள் விளக்கம் தருகிறார்கள். கில்லன் மற்றும் கில்லன் (Gillin and Gillin) "போதுமான வருமானம் இல்லாத காரணத்தால் ஒருவன் உடல் அளவிலும், மனநிலை அளவிலும் தகைதிறம் பெறுகிற அளவுக்கு உயர்ந்த வாழ்க்கைத்தரம் பெறாமல் போவதும், அவனது சமூகத்தில் நிலவும் தரங்களுக்கேற்ப அவனும் அவனைச் சார்ந்து வாழ்பவர்களும் முழு இயங்குதிறனுடன் செயல்பட முடியாமல் போவதுமான நிலைமையே வறுமை ஆகும்" என்கின்றனர்.

ஒரு மனிதன் ஓரளவு பாங்கான வாழ்க்கை வாழ எத்தகைய வருமான அளவு போதுமானதாக இருக்கும் என்பதை நிர்ணயிக்கப் பல்வேறு நாடுகள் பல்வேறு வருமான அளவுகோல்களைக் கொண்டுள்ளன. அவ்வாறே இந்தியாவிலும் 1991–இல் ஒரு நபருக்கும், அவனுடைய மூன்று உறுப்பினர் கொண்ட குடும்பத்திற்கும் கிராமப்புறங்களில் குறைந்தபட்சம் வருடத்திற்கு 6,420 ரூபாயும், நகர்ப்புறங்களில் 7,320 ரூபாயும் தேவைப்படும்

ஆனால் 'வறுமைக்கோடு' என்பதை ஒரு குறிப்பிட்ட அளவு வருமான வரம்பின் அடிப்படையாகக் கருதுவதை சில வல்லுநர்கள் விமர்சிக்கிறார்கள். ஜான் கென்னத் கால்பிரெய்த் (John Kenneth Galbreith) "ஒருவனுடைய வருமானத்தை அவன் சார்ந்துள்ள சமுதாயத்தின் சராசரி வருமானத்தோடு தொடர்புபடுத்திப் பார்க்க வேண்டும்" எனவும், "மக்களுடைய (சராசரி) வருமானம் அவர்களுடைய உயிர்வாழ்வுக்குப் போதுமானதாக இருந்தாலும், அது சமுதாயத்தின் (சராசரி) வருமானத்திற்குக் கீழே இருந்தால் மக்கள் வறுமை நிலையில் இருக்கின்றனர் என்று பொருள்'' எனவும் விளக்குகிறார். இதே கருத்தில் ''ஒரு நாட்டின் சராசரி குடும்ப வருமானத்தில் பாதிக்கு குறைவாக வருமானம் உடைய குடும்பங்கள் அனைத்தும் வறுமைக் குடும்பங்கள் தான்'' என்கிறார் விக்டர் ஃபைக்ஸ்.

வறுமை பற்றிய பொருள் விளக்கத்தின் தன்மை எவ்வாறாக இருப்பினும் 'வறுமை' என்பது பொருளாதார அடிப்படையிலானது என்பதிலும், வறுமையை நிர்ணயிக்கத் தளமாக இருப்பது வருமானமே என்பதிலும் இருவேறு கருத்துகள் இல்லை.

**வறுமைக்கான காரணங்கள்**

வறுமை பல காரணங்களால் உண்டாகிறது. அவை ஆட்சார்புடைய காரணிகள், மக்கள் தொகையியல் காரணிகள், புவியியல் காரணிகள், பொருளாதாரக் காரணிகள், சமூகக் காரணிகள் என வகைப்படுத்தப்படுகின்றன.

**ஆட்சார்புடைய காரணிகள்**

ஆட்சார்புடைய காரணிகள் தனிநபர்களின் உடல், மனநிலை சம்பந்தப்பட்ட தனி நபர்களின் உடல் பலவீனம், மன வலிமைக் குறைவு, சோம்பேறித்தனம், ஊதாரித்தனம் போன்ற இயல்புகளைக் கொண்டுள்ளன.

(i) உடல் பலவீனம் : பிறவியிலேயோ அல்லது நாள்பட்ட நோயினாலோ அல்லது மூப்பினாலோ ஏற்படும் உடல் பலவீனத்தால் தனி மனிதர்களுடைய உழைக்கும் சக்தியும், சம்பாதிக்கும் ஆற்றலும் பாதிக்கப்பட்டு வறுமைக்கு வழி கோலுகிறது. ஹண்டர் (Hunter) "வறுமைக்கும், உடல் பலவீனத்திற்கும் இடையே கூட்டாளி உறவு இருக்கிறது" என்கிறார். அதாவது, ஒன்று இன்னொன்றிற்கு வழி வகுத்து தனிநபர்களுடைய

துன்பங்களை அதிகரிக்கிறது. உடல் பலவீனத்தின் காரணமாக ஒருவனால் வேலை செய்ய முடியாததால் வருமானம் குறைகிறது; வறுமையை அதிகரிக்கிறது. வறுமையும் தன் பங்கிற்கு உடல்பலவீனத்தை அதிகரிக்கிறது. போதுமான வருமானம் இல்லாததால் போதுமான ஊட்டச்சத்து கிடைக்காமல் அவனால் கடினமாக உழைக்கவும் சம்பாதிக்கவும் முடியாமல் போகிறது.

(ii) உடல் குறைகள், ஊனங்கள் : உடல்குறைகள் அல்லது ஊனங்களால் ஒருவன் வேலை செய்யவோ, போதுமான அளவில் சம்பாதிக்கவோ இயலாத நிலை ஏற்படுகிறது.

(iii) மனநிலைக் குறைபாடு : பிறப்பில் அல்லது விபத்தினால் ஏற்படும் மனநிலைக் குறைபாடுகளால் வேலை செய்யவும், சம்பாதிக்கவும் இயலாததால் வறுமை ஏற்படுகிறது.

(iv) குறைவான படிப்பு : குறைவான படிப்பினால் வேலை கிடைக்கவும், போதுமான அளவு சம்பாதிக்கவும் இயலாததால் வறுமை ஏற்படுகிறது. குறைவான கல்வியறிவு உடையவர்களிடையே வேலையின்மை விகிதம் அதிகம் காணப்படுவது இதை உறுதிப்படுத்துகிறது.

(v) சோம்பல் : சோம்பேறித்தனமும் வறுமைக்கு முக்கியக் காரணமாகிறது.

(vi) ஒழுக்கச் சிதைவு : ஒழுக்கச் சிதைவும் குணக்கேடும் மனிதர்களின் நிலைகுலைவிற்கும், வறுமைக்கும் வழிவகுக்கின்றன. குடி, பரத்தமை, சூதாட்டம் போன்ற தீய பழக்கங்கள் வசதியுடையவர்களைக் கூட வறுமை எனும் படுகுழியில் தள்ளுகின்றன. இத்தீய பழக்கங்கள் அவர்களுடைய பணத்தைக் கரைப்பதோடு வேலை செய்து சம்பாதிக்கக்கூடிய ஆற்றலையும் அரித்து விடுகின்றன.

(vii) ஆளுமைக் கோளாறு : தங்களுடன் பணிபுரியும் பிறருடன் ஒத்துப் போக இயலாதவர்களாகவும், வேலை நிலைமைகளுக்கேற்ப அனுசரித்துப் போக இயலாதவர்களாகவும் ஆளுமைக் கோளாறுகள் உடையவர்கள் இருப்பதால் அவர்களுக்குப் பொருளாதார வாய்ப்புகள் குறைந்து அதனால் வறுமைக்கு உள்ளாகிறார்கள்.

### மக்கள் தொகைக் காரணிகள்

மக்கள் தொகைக் காரணிகளில் முக்கியமானவைகளாக மக்கள் தொகைப் பெருக்கம், உடல் நலக்குறைவு, போதுமான உணவின்மை, மருத்துவச் செலவுகள், தொற்று நோய்கள் போன்றவைகள் தொடர்ந்து இருந்து வருகின்றன. குடும்ப அளவு வறுமையோடு நெருங்கிய உறவு கொண்டுள்ளது. அதிகமான குழந்தைகள் இருக்கும் குடும்பத்தில் தலா வருமானம் குறைந்து, வாழ்க்கைத் தரமும் குறைந்து வறுமை சூழ்கிறது. ஒரு இந்தியக் குடும்பத்தின் சராசரி அளவு 4.2 நபர்களைக் கொண்டதாக இருப்பது குறிப்பிடத்தக்கது. அளவுக்கு அதிகமான மக்கள்தொகைப் பெருக்கம் வறுமையை உண்டாக்கும் என்பதற்கு இந்தியா சான்றாகத் திகழ்கிறது.



### புவியியல் காரணிகள்

(அ) சாதகமற்ற தட்பவெப்பநிலை: வேலைக்கும், பொருளாதார உற்பத்திக்கும் சாதகமான தட்ப வெப்ப நிலை இருத்தல் அவசியம். மிகக் கடுமையான வெப்பம் அல்லது கடும் குளிர் நிலவும் பகுதியில் வேலைக்கும், உற்பத்திக்கும் சிறிதளவே வாய்ப்பிருக்கும் சூழலில் அங்கு வறுமை ஏற்படுகிறது.

(ஆ) இயற்கை வளங்கள் இல்லாமை: ஒரு நாடு செழிக்க நிலவளம், நீர்வளம், கனிமவளம் முதலிய இயற்கை வளங்கள் போதுமான அளவில் இருக்க வேண்டும். இவை இல்லாத நாடுகள் பின்தங்கியும், வறுமைப்பட்டும் இருக்கின்றன.

(இ) இயற்கைச் சீற்றங்கள்: எரிமலை, சூறாவளி, வெள்ளம், நிலநடுக்கம், சுனாமி போன்ற இயற்கைச் சீற்றங்கள் பொருளாதார உற்பத்தி ஆதாரங்களைச் சேதப்படுத்தி, நாசம் விளைவிக்கின்றன. இதன் விளைவாக வறுமை ஏற்படுகிறது.

### பொருளாதாரக் காரணிகள்

(அ) பொருளாதாரக் கொள்கை: ஒரு நாடு போதுமான இயற்கை வளங்களும், உழைக்கும் மனித ஆற்றலும் கொண்டிருந்தாலும் அந்த நாட்டின் அரசாங்கம் கடைபிடிக்கும் முன்யோசனையற்ற அல்லது தீங்கான பொருளாதாரக்கொள்கை காரணமாக மக்கள் வறுமையில் வாழ நேரிடும்.

(ஆ) விவசாயம்: பொருளாதார அடிப்படையாக விவசாயத்தைக் கொண்டுள்ள நாடுகளில் விவசாயத்திற்கான இடுபொருள்களான தரமான விதைகள், உரங்கள், நீர்ப்பாசனம், கடனுதவி முதலியன போதிய அளவில் கிடைக்காமல் போனாலும், விவசாய முறைகளும் உத்திகளும் பழமையானவையாக இருந்தாலும், குடும்ப பாகப்பிரிவினை காரணமாக நிலங்கள் பிரிக்கப்பட்டு துண்டு துண்டாக அமைந்தாலும், அதிகமான அல்லது குறைவான மழையினாலும் அல்லது பூச்சிகளின் தாக்குதலினாலும் உற்பத்தி பாதிக்கப்பட்டு வறுமை அதிகரிக்கிறது.

(இ) சமமில்லாத செல்வப் பகிர்வு: ஒரு நாட்டின் செல்வம் அந்த நாட்டு மக்களிடையே சமமாகப் பகிர்ந்திராமல் இருந்தால், பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகவும் ஏழைகள் மேலும் ஏழைகளாகவும் ஆகி இதன் காரணமாகவும் அங்கு வறுமை பீடித்திருக்கும்.

(ஈ) பொருளாதாரக் குமிழ்வு: பொருளாதாரக் குமிழ்வினால் வணிகமும், வர்த்தகமும் வீழ்ச்சியடையும்; ஆலைகளிலும், தொழிற்சாலைகளிலும் உற்பத்திப் பணி முடங்கும். சிறு வியாபாரிகளும், தொழிலாளர்களும் வேலையிழக்கும் நிலை ஏற்பட்டு வறுமை பரவும்.

(உ) வேலையின்மை: நகர்ப்புறங்களிலும், கிராமப்புறங்களிலும் வறுமை நிலவுவதற்கு வேலையில்லாத் திண்டாட்டம் முக்கியக் காரணமாகும்.

(ஊ) முடங்கும் செல்வம்: ஒரு நாட்டினுடைய செல்வத்தின் பெரும் பகுதி நகைகள் போன்ற பொருளாதாரப் பயனில்லாத வடிவங்களில் முடங்கிக் கிடந்தாலோ அல்லது கருப்புப் பணமாகப் பதுக்கி வைக்கப்பட்டிருந்தாலோ அந்நாட்டின் பொருளாதார வளர்ச்சி தடைப்பட்டு அதன் விளைவாக வறுமை ஏற்படும்.

**சமூகக் காரணிகள்**

(அ) பழக்கவழக்கங்கள்: தீய பழக்கவழக்கங்களும், பழமையான மரபுகளும் வறுமைக்குக் காரணமாக அமைகின்றன. எடுத்துக்காட்டாக, திருமணங்களையும், பண்டிகைகளையும் ஆடம்பரமாக செலவழித்துக் கொண்டாடும் வழக்கமும், வரதட்சணை முறையும் பல குடும்பங்களை வறுமையில் தள்ளுகின்றன.

(ஆ) மதக் கோட்பாடு: விதி தொடர்பான மதக் கோட்பாடும் வறுமை உருவாக்கத்தில் பங்கேற்கிறது. எடுத்துக்காட்டாக, ஒரு மனிதனுடைய வாழ்க்கை அமைப்பை விதி நிர்ணயிக்கிறது எனவும் அதனை யாராலும் மாற்ற முடியாது, அப்படி மாற்ற முயன்றாலும் அந்த முயற்சி தோல்வியைத்தான் தழுவும் என்ற விதி தொடர்பான நம்பிக்கை மக்கள் கடுமையாக உழைத்து வாழ்க்கையில் முன்னேறத் தடையாக நிற்கிறது.

(இ) போர்: போரினால் நிலங்களும், பொருளாதார வளங்களும் நாசமடைகின்றன. உள்நாட்டு, வெளிநாட்டு வர்த்தகம் சீர்குலைகிறது. இவ்வித நாசவிளைவுகள் வறுமையைத் தோற்றுவிக்கின்றன.

இந்தியாவின் வறுமைக்கான சமூகக் காரணங்களாக கீழ்க் கண்டவற்றை கங்குலி குறிப்பிடுகிறார்:

1. அந்நியர் ஆட்சி
2. ஏற்றத்தாழ்வுகள் கொண்ட வர்க்க அமைப்பின் சுரண்டல்
3. அதிக அளவு மக்கள் தொகை
4. மூலதனக் குறைவு
5. அதிக அளவிலான கல்வியறிவின்மை
6. வாழ்க்கையில் முன்னேற நோக்கமின்மையும், பொருளாதார ஊக்கமின்மையும்.
7. உடல்நலக் குறைவும், வெப்பமான பருவகாலச் சூழலில் வேலை செய்வதற்கான உடல் திறன் இன்மையும்.
8. நில உடமையில் காணப்படும் ஏற்றத்தாழ்வுகள்.

## வறுமையின் விளைவுகளும், அரசின் திட்டங்களும்

வறுமையின் விளைவுகளில் குறைந்து வரும் வாழ்க்கைத் தரம், உணவுப் பொருட்கள் பற்றாக்குறை, வீட்டு வசதியின்மை, குடிசைப்

பகுதிகள் உருவாதல், அதிகரிக்கும் குற்றச் செயல்கள், உடல் நலக்குறைவு முக்கியமானவை.

வறுமைக் கோட்டிற்கு கீழ் வாழ்பவர்களின் வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கு அரசாங்கம் மேற்கொண்டு வரும் பல்வேறு திட்டங்கள் குறிப்பிடத்தக்க அளவு பயனை அளிக்கவில்லை. பொருளாதார வளர்ச்சியின் வேகத்தை விட மக்கள் தொகையின் வளர்ச்சி அபரிமிதமாக இருந்து வருவது முக்கியக் காரணமாக கருதப்படுகிறது. "பணக்காரர்கள் மேன்மேலும் பணக்காரர்களாகிறார்கள்; ஏழைகள் மேன்மேலும் ஏழைகளாகிறார்கள்" என்று நெடுங்காலமாகக் கூறப்பட்டுவரும் மேற்கோள் இந்தியாவைப் பொருத்தமட்டில் பெரும்பாலும் உண்மையே. மொத்த இந்திய மக்கள் தொகையில் பாதிக்கும் மேற்பட்டோர் வறுமைநிறைந்த வாழ்க்கையைப் பொறுத்துக்கொள்ள வேண்டியதிருக்கிறது. வறுமையில் வாழ்பவர்கள் போதுமான அளவு உணவுப்பொருட்களை வாங்க சக்தியற்றவர்களாக உள்ளனர். மக்களின் அவசியத் தேவைகளான மருத்துவ வசதி, நோய்த்தடுப்பு ஏற்பாடு, கல்வி, போக்குவரத்து வசதி போன்றவை விரிவடைந்திருந்தாலும் அவற்றின் தரம் பின்தங்கியதாகவே உள்ளது.

வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம், சுகாதார மருத்துவ வசதிகள் போன்றவை இன்னும் 20 விழுக்காடு இந்திய மக்களுக்கு தலையாய பிரச்சனையாகத் தொடர்கின்றன. வறுமையை முற்றிலுமாக அகற்றுவதற்கும், வறுமையின் அளவைக் குறைப்பதற்கும் மத்திய மாநில அரசுகள் தொடர்ந்து பல்வேறு திட்டங்களை நடைமுறைப்படுத்தி வருகின்றன. ஐந்தாண்டுத் திட்டங்கள், வங்கிகளை தேசியமயமாக்குதல், இருபது அம்ச பொருளாதாரத் திட்டம், ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டம், வேலை வாய்ப்பு உறுதித் திட்டம், வீட்டு வசதித் திட்டம், ஊரக மேம்பாட்டுத் திட்டங்கள், கிராமப்புற இளைஞர்களுக்கான சுய வேலை வாய்ப்பு பயிற்சிகளும் உதவிகளும், நிலமற்ற விவசாய கூலித் தொழிலாளர்களுக்கான நலத்திட்டங்கள் போன்றவற்றின் மூலம் வேலை வாய்ப்புகளை உருவாக்கி வருமானத்தை உயர்த்த நடவடிக்கை மேற்கொள்ளப்பட்டது.

பல்வேறு வளர்ச்சித்திட்டங்களுக்கான மத்திய, மாநில அரசுகளின் நிதி ஒதுக்கீடுகள் மாநில அரசுகள், உள்ளாட்சி அமைப்புகள் மூலம் செலவிடப்படுகின்றன. வளர்ச்சித் திட்டங்களுக்கும், பல்வேறு சமூகநலத் திட்டங்களுக்கும், நலிந்த பிரிவினருக்கான உதவிகளுக்குத் தரப்படும்

மானியங்களும் பெருமளவில் நமது செலவினங்களில் பங்கு பெறுகின்றன. பல லட்சம் கோடிகள் கடந்த பல ஆண்டுகளாகச் செலவு செய்யப்பட்டும், எத்தனையோ ஐந்தாண்டுத் திட்டங்கள் தீட்டிய பிறகும், நாடாளுமன்ற மற்றும் சட்டப்பேரவை உறுப்பினர்களின் தொகுதி வளர்ச்சி நிதி ஒதுக்கீடுகள் செய்தும் இந்தியாவின் வளர்ச்சி எதிர்பார்த்த இலக்கை எட்டாமல் அடித்தட்டு மக்களின் வாழ்வில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்படவில்லை என்பது கண்கூடு.

'மகாத்மா காந்தி தேசிய ஊரக வேலைவாய்ப்பு உறுதியளிப்புத் திட்டத்தின்' கீழ் **2009–10** நிதி ஆண்டில் **4.33** கோடி கிராமப்புற குடும்பங்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கப்பட்டுள்ளதன் மூலம் **203**கோடி மனித வேலை நாட்கள் உருவாக்கப்பட்டன. இத்திட்டத்தால் பயன் அடைந்தவர்களில் **52** சதவீதம் பேர் தாழ்த்தப்பட்ட, பழங்குடி வகுப்புகளைச் சேர்ந்தவர்கள். இந்த வேலைவாய்ப்பு திட்டத்தில் மகளிர் **49** சதவீதம் பங்கேற்றுள்ளனர். தேசிய ஊரக வேலைவாய்ப்பு திட்டத்தால் கிராமப்புறங்களில் மக்களின் ஊதியம் உயர்ந்து, இதுவரை பொருளாதார வாய்ப்பு மறுக்கப்பட்ட சமூகங்களுக்கு இத்திட்டம் பெரிய வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது. ஆண்டில் நூறு நாள்களுக்கு வேலை வழங்கும் தேசிய ஊரக வேலை உறுதித் திட்டத்தில் ஊதியத்தை எண்பது ரூபாயிலிருந்து நூறு ரூபாயாக உயர்த்தி வழங்கும் அதே வேளை அத்தியாவசியப் பொருள்களின் விலை தொடர்ந்து உயர்ந்து வருகிறது. ஏழைகளின் முன்னேற்றம் எப்போதுமே ஓரடி முன்னால் வைத்தால், ஈரடி பின்னால் செல்லும் நிலையில் உள்ளது.

இந்தியக் கிராமங்கள் பொருளாதாரத்திற்கு வலுவும், உரமும் சேர்ப்பதாக இல்லை. விவசாயமும், கைவினை மற்றும் குடிசைத் தொழில்களும் நாளுக்கு நாள் நலிவுற்று வருகின்றன. விளைநிலங்களில் பெரும்பாலான பகுதி நீர்ப்பாசன வசதியற்றதாகவும், ஆண்டுக்கு ஒரு போகம் மட்டுமே விளைவிக்கப்படுவதாகவும் உள்ள நிலையில் ஆண்டு முழுவதும் தொடர் உழைப்பு நிரந்தரமற்றதாகவும், வாழ்க்கை பாதுகாப்பற்றதாகவும் கிராமப்புற ஏழைகளுக்கு வாய்த்துள்ளது.

ஊழல், முறைகேடுகள் ஒரு புறம் இருக்க, பல்வேறு திட்டங்களுக்கு ஒதுக்கீடு செய்யப்பட்ட நிதி முழுமையாக பயனாளிகளைச் சென்றடையாமல் போகிறது. நிதி ஒதுக்கீடுகள் திசைதிருப்பி விடப்படுவது அரசியலிலும், நிர்வாகத்திலும் சகஜமாகி விட்டது. முறையான நிதிநிர்வாகம் இல்லாமல் இருப்பதும், பொதுப்பணம் என்பது "கேள்வி கேட்பாரற்ற பணம்" என்ற

மனப்போக்கு அதிகாரிகள், அரசியல்வாதிகள் மத்தியில் மட்டுமல்ல, மக்கள் மத்தியில் கூட ஏற்பட்டிருப்பது மிகவும் துரதிர்ஷ்டவசமானது. முறையான திட்டங்கள், கண்காணிப்பான அரசு, நேர்மையான அதிகாரிகள், மக்கள் நலனை மட்டுமே கருத்தில் கொண்ட அரசியல்வாதிகள், விழிப்புடன் செயல்படும் எதிர்க்கட்சிகள் மற்றும் ஊடகங்கள் இருந்தால் இந்தியாவின் வறுமையை முற்றிலுமாக அகற்றுவது சாத்தியமே.

**References**

Ahuja, Ram. Social Problems in India. 2nd ed. (Jaipur: Rawat Publications, 1997).

Shankar Rao, C.N. Sociology. 6th ed.(New Delhi: S.Chand&Co., Ltd., 2010).

Singh, Lal. Anatomy of Social Problems. (New Delhi: Cyber Tech Publications, 2007).

Sivananda, J. Contemporary Social Problems. (New Delhi: Alfa Publications, 2006).

# வேலையின்மை

வேலையின்மை பிரச்சனை எல்லா நாடுகளிலும் – முன்னேறிய நாடுகளானாலும் பின்தங்கிய நாடுகளானாலும் – காணப்படுகிறது. காரணங்களும், பரப்பெல்லையும் நாட்டுக்கு நாடு வேறுபட்டிருந்தாலும் வேலையின்மை நிலை உலகம் முழுவதும் பரவிக்கிடக்கிறது. "வேலையின்மை" என்பதை "உழைக்கக்கூடிய வயதில் (அதாவது 15 வயதிலிருந்து 59 வயதுக்குள்) உள்ள உடல் வலிமையுடையவர்கள் வேலை செய்ய ஆர்வம் இருந்தாலும் நடப்பு ஊதிய விகிதத்தில் வேலை செய்ய வாய்ப்பு கிட்டாமல் இருக்கும் நிலை" என எளிமையாக அறிஞர்கள் விவரிக்கிறார்கள். அதாவது "வேலை செய்ய ஆர்வமிருந்தும் வேலை கிடைக்காமலிருப்பதை" வேலையின்மை எனவும், "வேலை செய்ய ஆர்வமும், உடல் வலிமையும் இருந்தும், வேலை வாய்ப்பு கிடைக்காமல் இருப்பவர்களை" வேலையில்லாதவர்கள் எனவும் வரையறுக்கப்படுகிறது. இந்த விளக்கத்தின்படி உடல்நிலை அல்லது மனநிலை குறைபாட்டினால் வேலை செய்ய தகுதி இல்லாதவர்களையும் வேலைவாய்ப்பு கிடைத்தும், வேலை செய்ய உடலில் வலு இருந்தும் வேலை செய்யும் விருப்பம் இல்லாதவர்களையும் 'வேலையில்லாதவர்கள்' என்ற வகையினத்தில் அடக்க முடியாது. 'வேலை செய்யத் தகுதி இல்லாதவர்கள்' அல்லது 'வேலையில் சேர்த்துக் கொள்ளப்பட முடியாதவர்கள்' என்னும் பிரிவில் குழந்தைகள், நோயாளிகள், முதியோர், உடல் ஊனமுற்றவர்கள் அடங்குவர். 'வேலை செய்ய ஆர்வமில்லாதவர்கள்' என்னும் பிரிவில் சோம்பித்திரிவோர், பண்டாரங்கள், பிச்சைக்காரர்கள், சொத்து வைத்திருப்பதால் வேலை எதுவும் செய்யாதவர்கள் ஆகியோர் அடங்குவர். இவர்கள் 'ஒட்டுண்ணிகள்' எனக் கருதப்படுகின்றனர்.

## வேலையின்மையின் வகைகள்

வேலையின்மையை இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம். அவை: (i) சுய விருப்பாற்றலுக்கு உட்பட்ட வேலையின்மை – உழைக்கும் வயதில் உடல் வலிமையுடைய ஒருவன் நடப்பு ஊதிய விகிதத்தில் வேலை செய்ய மறுத்து வேலையின்றி இருப்பது, (ii) சுய விருப்பாற்றலுக்கு உட்படாத வேலையின்மை – நடப்பு ஊதிய விகிதத்தில் அல்லது அதற்குக் குறைவான ஊதிய விகிதத்தில் வேலை செய்ய ஒருவன் விரும்பினாலும், அவனுக்கு வேலை வாய்ப்பு கிடைக்காமல் இருப்பது. இருக்கிற வேலைகளின் அளவை விட வேலை செய்ய ஆர்வமுடையவர்களின் எண்ணிக்கை அதிகமாக

இருந்தால், அந்த நிலையில் சுய விருப்பாற்றலுக்கு உட்படாத வேலையின்மை ஏற்படுகிறது.

வேலையின்மை நிலை பல காரணங்களால் உண்டாகிறது. காரணங்களைப் பொறுத்து அது பல்வேறு வகைகளில் அமைகிறது.

(அ) பருவகால வேலையின்மை: சில குறிப்பிட்ட பொருளாதார நடவடிக்கைகள் ஒரு குறிப்பிட்ட பருவகாலத்தில் மட்டும் மேற்கொள்ளப்படுவதாக இருக்கும். அப்போது வேலைக்கு அதிக ஆட்கள் தேவைப்படுவதால் அதிகமானோருக்கு வேலை கிடைக்கும். மாறாக, வேலை மந்தமாக இருக்கும் சமயங்களில் அதிக எண்ணிக்கையில் ஆட்கள் தேவைப்படாத நிலையில், பலருக்கு வேலை கிடைக்காது. இவ்வாறு பருவத்திற்கு ஏற்றாற் போல் ஊசலாடும் வேலைவாய்ப்பு காரணமாக நிரந்தர வேலையில் இருப்போர் எண்ணிக்கை குறைவானதாகவே உள்ளது. குறிப்பாக, இந்தியாவில் பருவமழையை சார்ந்து இருக்கும் விவசாய நடவடிக்கைகள் வருடத்தில் ஐந்திலிருந்து ஏழு மாதம் வரை மட்டுமே மேற்கொள்ளப்படுகிறது. இந்தக்காலத்தில் மட்டும் விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பு இருக்கும். அறுவடை முடிந்ததும் அடுத்த சுமார் ஐந்திலிருந்து ஏழு மாதம் வரை விவசாய வேலை நடைபெறாத போது இத்தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பு இருக்காது. இவ்வாறாக பருவங்கள் சுழற்சி முறையில் மாறி மாறி வருவதனால் வேலை வாய்ப்பிலும் அதே முறையில் மாற்றங்கள் ஏற்படுகின்றன.

(ஆ) இடைவரவு வேலையின்மை: கட்டடப் பணிகள் போன்ற சில பணிகளில் அவ்வப்போது உருவாகும் வேலை வாய்ப்புகளுக்கு ஏற்ப வேலைக்கு ஆட்கள் தேவைப்படுவார்கள். வேலை நிறைவடைந்ததும் அவர்கள் வேலையின்றிப் போகிறார்கள். இவ்வாறு அமைகிற வேலையின்மை 'இடைவரவு வேலையின்மை' என அழைக்கப்படுகிறது. மீண்டும் வேலைவாய்ப்பு எப்போது உருவாகும், அது எவ்வளவு நாள் நீடிக்கும் என்பது நிச்சயமில்லாததாக இருக்கும்.

(இ) சுழல் வடிவிலான வேலையின்மை: வணிகமும், வர்த்தகமும் ஏற்ற–இறக்கங்களை, செழுமையையும்–குமிழ்வையும் சந்திப்பதுண்டு. இவ்வணிகச் சுழல்கள் பொதுவாக ஓர் ஒழுங்கான கால இடைவெளியில், சுழற்சி முறையில் ஒன்றையொன்று தொடர்ந்து நிகழும். செழுமைக் காலத்தில் தொழில் முனைவோருக்கும், வணிகர்களுக்கும் நல்ல விற்பனை வாய்ப்பு ஏற்பட்டு தொழில் உற்பத்தி நடவடிக்கைகள் மேலோங்கும்.

அதனால் அதிகமானோருக்கு வேலை கிடைக்கும். மாறாக, விற்பனை வாய்ப்பு சரியும் போது தொழில் உற்பத்தி சுருங்குவதால் வேலையிலிருந்து பலர் வெளியேற்றப்படுவர். மீண்டும் செழுமையடையும் போது வேலை வாய்ப்புகள் உருவாகும். இவ்வாறு ஓர் ஒழுங்கான இடைவெளியில் வணிகச் சுழல்களால் உண்டாகிற வேலையின்மை 'சுழல் வடிவிலான வேலையின்மை' என்று அழைக்கப்படுகிறது.

(ஈ) இயக்கத் தடையினால் விளையும் வேலையின்மை: வேலை அளிப்பதற்கும் வேண்டுகைக்கும் இடையேயான சமன்பாட்டில் இயக்கத்தடை ஏற்பட்டு, இரண்டும் இசையாமல் நிற்பதன் விளைவாக இந்த வகை வேலையின்மை ஏற்படும். எடுத்துக்காட்டாக, போதுமான வேலை வாய்ப்புகள் உருவாகி, தொழில் முனைவோரும் வேலைக்கு ஆட்களை சேர்க்க விருப்பமாக இருந்தும் கூட செய்தித் தொடர்பு இடைவெளியினால் வேலை வேண்டுவோருக்கும், வேலைவாய்ப்பு தரத் தயாராக இருப்போருக்கும் இடையே தொடர்பில்லாமல் போவதால் இந்த இடைவெளிக் காலத்தில் வேலையின்றி இருக்கும் நிலைமை ஏற்படும்.

(உ) கட்டமைப்பு வேலையின்மை: பொருளாதாரக் கட்டமைப்பின் தன்மை காரணமாகவும் மக்கள் வேலையின்றி இருக்கக்கூடும். ஒரு பொருளாதார அமைப்புமுறை ஏராளமானோருக்கு வேலை வாய்ப்புகளை உருவாக்கக்கூடிய திறன் கொண்டதாக இருந்தும் அது வேலை வாய்ப்புகளை போதுமான அளவு உருவாக்காமல் இருப்பதற்கு இலாபக்கணக்கை பிரதானமாகக் கொண்டதான முதலாளித்துவ பொருளாதார அமைப்பு காரணமாக அமையலாம். அத்தகைய அமைப்பு முறையில் இலாப நோக்கம் உற்பத்தியை முடுக்கி விடுகிற உந்து விசையாக செயலாற்றி, அதிகமானோரை வேலையில் ஈடுபடுத்தினால் இலாபத்தின் பரும அளவு குறையக் கூடும் என்ற அச்சத்தை தொழில் முனைவோரிடம் ஏற்படுத்தி வேலை வாய்ப்புகள் மேலும் உருவாகாமல் தடுக்கிறது. இதனால் பலர் வேலையின்றி இருக்கக் கூடிய நிலை ஏற்படுகிறது.

(ஊ) தொழில்நுட்ப வேலையின்மை: பணித்துறைகளில் தானியங்கி இயந்திரங்களையும் புதிய தொழில் நுட்பங்களையும் புகுத்தும்பொழுது இந்த வகை வேலையின்மை ஏற்படுகிறது. பொதுவாக, மனிதனைக் காட்டிலும் செயலுரம் மிக்கதான இயந்திரம் தானியங்கியாக வடிவமைக்கப்பட்டு பயன்படுத்தப்படும் போது மனித உழைப்பு தேவையில்லாமல் போகிறது. இதனால் அதிகமான தொழிலாளர்கள் வேலையிலிருந்து அப்புறப்படுத்தப்படுகிறார்கள்.

(எ) குறை வேலை: தன்னுடைய தகுதிக்கும் திறமைக்கும் பொருத்தமற்ற வேலையில் இருக்கிற ஒருவனிடமிருந்து முழுமையாக அல்லது பயனுள்ள முறையில் வேலை வாங்கப்படாமல் இருந்தால் அந்த நிலை 'குறை வேலை' எனப்படுகிறது. ஒருவனின் ஆற்றலின் அளவுக்கேற்ப அவனுடைய வேலையின் அளவு அமையாமல் ஆற்றலின் சிறு பகுதியே அந்த வேலையில் உபயோகப்படுத்தப்படுகிறது.

## இந்தியாவும் வேலையின்மையும்

இந்தியாவில் நீண்ட காலமாகவே வேலையின்மை ஒரு பிரச்சனையாக நிலவி வந்தாலும் அதன் பரப்பெல்லை பற்றி கிடைக்கும் புள்ளி விவரங்கள் வேலையின்மையின் பரும அளவைப் பற்றிய உண்மையான நிலையை பிரதிபலிப்பதாக இல்லை. பெரும்பாலான புள்ளி விவரங்கள் நகரங்களைச் சார்ந்தனவாக இருக்கின்றன. வேலைவாய்ப்பகங்களில் பதிவு செய்வது தனிநபர் விருப்பத்திற்குட்பட்ட தாகையால் வேலையில்லாத எல்லோரும் அவற்றில் பதிவு செய்வது கிடையாது. மேலும், பதிவு செய்கிறவர்களில் பலர் ஏற்கனவே வேலையில் இருப்பவர்களாகவும், இருக்கிற வேலையைக் காட்டிலும் நல்ல வேலை கிடைக்க வேண்டும் என்பதற்காக இவர்களும் வேலை வாய்ப்பகங்களில் பதிவு செய்வதால் வேலையில்லாதோர் பற்றிய புள்ளி விவரங்களை முழுவதும் ஏற்க இயலாத நிலை ஏற்படுகிறது. அத்துடன், வேலையில் இருந்தாலும் தகுதியுடைய பலர் பயனுற வேலையில் இல்லாமல் 'குறை வேலையின்மை' நிலையில் இருப்பினும் இந்த வகையான வேலையின்மையைப் பற்றி புள்ளி விவரங்கள் சுட்டிக்காட்டுவதில்லை.

வேலையின்மை பிரச்சனை ஒரு தேசியப் பிரச்சனையாக அனைத்து பகுதிகளிலும் பரவியிருந்தாலும், அதனுடைய தீவிரம் நகர்ப்புறங்களில் பெரிதும் காணப்படுகிறது. பாலின விகித அளவிலும் வேலையின்மையின் பரப்பெல்லை வேறுபடுகிறது. வேலையின்மை கிராமப்புறங்களில் ஆண்களைவிட பெண்களிடம் அதிகமாகவும், ஆனால் நகர்ப்புறங்களில் பெண்களை விட ஆண்களிடம் அதிகமாகவும் இருக்கிறது. வயது அளவிலும் வேலையின்மையின் பரப்பெல்லை வேறுபடுகிறது. மற்றைய வயதினரைக் காட்டிலும் 18–30 வயதினரிடம் வேலையின்மையின் அளவு கூடுதலாகக் காணப்படுகிறது.

### வேலையின்மை நிலவும் களங்கள்

வேலையின்மை குறிப்பாக மூன்று களங்களில் அதிகமாகக் காணப்படுகிறது. அவை (i)விவசாயத்துறை, (ii)தொழில்துறை, (iii)படித்தவர்கள்.

### விவசாயத்துறை

விவசாயத் துறையில் வேலையின்மை பல காரணங்களால் ஏற்படுகிறது. முதலாவதாக, ஒவ்வோர் ஆண்டும் இந்தியக் கிராம மக்கள் தொகையில் சுமார் 50 இலட்சம் பேர் பிறப்பு காரணமாக கூடுதலாக சேருகிறார்கள். ஏற்கெனவே கிராம மக்களில் 70 சதவிகிதம் பேர் விவசாயத்தை சார்ந்து வாழும் நிலையில் இவர்களும் கூடுதலாக சேரும் போது நிலத்தின் மீது அழுத்தம் அதிகரிக்கிறது. அதிகரிக்கும் இந்த அழுத்தத்திற்கு ஏற்றவாறு அதிகப்படியான வேலை வாய்ப்புகளை உருவாக்க இயலாமல் விவசாயத்துறை திணறுகிறது. இரண்டாவதாக, குடும்பத்திற்கு சொந்தமான உரிமை நிலங்கள் பாகப்பிரிவினை காரணமாக பிரிக்கப்பட்டு துண்டு துண்டாகப் போய், அவ்வாறு துண்டுபடுகிற நிலங்கள் அளவில் சிறியதாகவும் அதிகமானவர்களுக்கு வேலை வழங்குவதற்கேற்ற வாய்ப்பு இல்லாமலும் அமைந்துள்ளன. மூன்றாவதாக, பெரும்பான்மையான பகுதிகளில் விவசாயம் பருவ மழையைச் சார்ந்து இருப்பதால், குறிப்பிட்ட பருவ காலத்தில் மட்டுமே விவசாயம் நடைபெறுகிறது. இதனால் வருடத்தில் 200 நாட்களுக்கும் குறைவாகவே விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை கிடைக்கிறது; மீதி நாட்களில் வேலையின்றி இருக்கிறார்கள்.

### தொழில்துறை

இந்தியாவில் தொழில்துறையில் வேலையின்மை பல காரணங்களால் ஏற்படுகிறது. முதலாவதாக, குறைவான தொழில் வளர்ச்சி வேலை வாய்ப்புகளை அதிகமாக உருவாக்கவில்லை. இரண்டாவதாக, தொழில்கள் அமையும் பாங்கில் காணப்படுகிற குறைபாடு. அதாவது, தொழில்கள் சில இடங்களில் குவிந்தும், சில இடங்களில் இல்லாமலும் காணப்படுவதால் குறிப்பிட்ட பகுதிகளில் வேலையின்மை இயல்பாகவே தலைதூக்குகிறது. மூன்றாவதாக, பழைய இயந்திரத் தளவாடங்கள், திறன் குறைந்த தொழிலாளர்கள், பழமையான தொழில் நுட்ப உற்பத்தி முறைகள், குறைவான உற்பத்தி அளவு போன்றவை உற்பத்திச் செலவை அதிகரித்து இலாப அளவைக் குறைக்கிறது. இலாப வருவாய் குறைவதால் மேற்கொண்டு தொழில்கள் விரிவடையாமல் சுருங்கிப் போவதின்

விளைவாக வேலை வாய்ப்புகளும் குறைகின்றன. நான்காவதாக, தொழிற்சாலைகளை நவீனப்படுத்துதல், புதிய தொழில் நுட்ப முறைகளை அறிமுகப்படுத்துதல் போன்ற சீரமைப்பு நடவடிக்கைகள் பலரை வேலையிலிருந்து விடுவிக்க வேண்டிய நிலையை ஏற்படுத்துகின்றன. ஐந்தாவதாக, பருவகால உற்பத்தித் தொழில்களான சர்க்கரை, அரிசி ஆலைகள் முதலியவற்றில் ஒரு குறிப்பிட்ட பருவத்தில் மட்டுமே உற்பத்தி நடைபெற முடியும். எனவே தொழிலாளர்களுக்கு அந்த பருவத்தில் மட்டுமே வேலை கிடைக்கும்; மற்ற நேரத்தில் வேலையின்றி இருக்க நேரிடுகிறது.

**படித்தவர்களிடையே வேலையின்மை**

இந்தியாவில் படித்தவர்களிடையே நிலவும் வேலையின்மைக்கு முக்கியக் காரணமாக இருப்பது தவறான நமது கல்வி அமைப்பு முறை என விமர்சிக்கப்படுகிறது. மற்றவர்களுடன் அறிவு சார் போட்டியிடுவதற்கும், கற்பதைப் பயன்படுத்தி வாழ்க்கைக்காக சம்பாதிப்பதற்குத் தேவைப்படுகிற திறமைகளை இன்றைய கல்விமுறை கற்றுத் தருவதில்லை எனவும், வெறும் ஏட்டுச் சுரைக்காயாகத்தான் இருக்கிறது எனவும், இதனால் படித்துப் பட்டம் பெற்றோர் செயல் முறை வேலைகளுக்குத் தகுதியாவதில்லை எனவும் கருதப்படுகிறது. நம் நாட்டில் படித்தவர்களுக்கான வேலைகள் அதிகமாக உருவாகிடப் போதுமான வாய்ப்பில்லாததால், அவர்கள் வேலையின்றி இருக்கிறார்கள் என வாதிடுபவர்களும் உண்டு. "படித்தவர்களிடையே நிலவும் வேலையின்மைக்குக் கல்விமுறை காரணமல்ல; போதுமான எண்ணிக்கையில் வேலைகளை உருவாக்கித் தருவதற்கு ஆற்றலில்லாத பொருளாதாரமே காரணம்" என்கிறார் எஸ்.சி. பந்த் (S.C.Pant). படித்த இளைஞர்கள் உடலுழைப்பு வேலைகளில் ஆர்வம் காட்டுவதில்லை; நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு செய்கிற வேலைகளையே பெரிதும் விரும்புகிறார்கள்; உடலுழைப்பு வேலைகளைச் செய்வதை விட சும்மா இருப்பதே மேலானது என்று சோம்பிக் கிடக்கிறார்கள் என மற்றொரு பிரிவினர் கருதுகின்றனர்.

வேலையில்லாத படித்தவர்களின் எண்ணிக்கையில் எஸ்.எஸ்.எல்.சி வரையிலும் அதற்கு சற்று மேலும் படித்தவர்கள், பட்டதாரிகளை விட எண்ணிக்கையில் அதிகமாக இருக்கிறார்கள். வேலை வாய்ப்பகங்களில் பதிவு செய்த படித்தவர்களில் 70 சதவிகிதம் பேர் பள்ளி இறுதிநிலை வரை படித்தவர்காளாகவும், மீதம் 30 சதவிகிதம் பேர் பட்டப்படிப்பு, பட்ட மேற்படிப்பு படித்த பட்டதாரிகளாகவும், பொறியியல், மருத்துவம் போன்ற தொழிற்கல்வி பயின்ற பட்டதாரிகளாகவும் உள்ளனர். எனினும், வேலையில்லாத

பட்டதாரிகளில் கலைப்படிப்பு பட்டதாரிகள் அதிக எண்ணிக்கையில் இருக்கிறார்கள்.

பட்டதாரிகளிடையே வேலைதேடுவோரின் எண்ணிக்கை அதிகரித்து வருவதற்கு, வேகமான கல்வி வளர்ச்சியும் முக்கிய காரணங்களில் ஒன்று. 1950க்குப் பிறகு இந்தியாவில் அதிக எண்ணிக்கையில் கல்லூரிகளும், பல்கலைக் கழகங்களும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இவற்றில் அதிக எண்ணிக்கையில் மாணவர்கள் சேர்ந்து வருவதால் பட்டதாரிகளின் எண்ணிக்கை வேகமாக அதிகரித்துக் கொண்டு வருகிறது. ஆனால் அதற்கு ஈடாக வேலை வாய்ப்புகள் அதிகரிக்கவில்லை.

படித்த இளைஞர்களிடையே நிலவும் வேலையின்மை அவர்களிடம் விரக்தியையும், கோபத்தையும் ஏற்படுத்துகின்றன. இத்தகைய உணர்ச்சிகள் அவர்களைத் தீவிரவாதிகளாகவும், போராட்டக் காரர்களாகவும் மாற்றி சமூகத்தில் கொந்தளிப்பை ஏற்படுத்தி, சமூக ஒழுங்குக் குலைவை ஏற்படுத்தவல்லது என்பது கவலைக்குரியதாகும்.

## வேலையின்மைக்கான காரணங்கள்

வேலையின்மைக்குப் பல காரணிகள் பொறுப்பாக இருக்கின்றன. அவற்றை (i) அகவயக் காரணிகள், (ii) புறவயக் காரணிகள் என இரண்டு வகையினங்களாக சாப்டிடன் பிரிக்கிறார்.

### அகவயக் காரணிகள்

அகவய அல்லது ஆட்சார்புடைய காரணிகள் ஒரு தனி நபரின் உடல்நிலை அல்லது மனநிலையுடன் தொடர்புடையவை. குறிப்பாக உடல் ஊனங்கள், முதுமைநிலை, தள்ளாமை, மன வலிமைக் குறைவு, குணக் கோளாறுகள் ஆகியவற்றோடு சம்பந்தப்பட்டவை. ஒருவனுக்கு வேலை செய்ய ஆர்வம் இருந்தாலும் அவனிடமிருக்கும் மனவலிமைக்குறைவு, போதிய கல்வியின்மை, பயிற்சியின்மை முதலிய குறைபாடுகளால் அவனுக்கு வேலை வாய்ப்புக் கிட்டாமல் போகலாம். அத்தகைய குறைபாடுகளில் சில பிறவியிலேயே அமைந்திருக்கலாம் அல்லது விபத்தினால் ஏற்பட்டிருக்கலாம். அவை குணப்படுத்தக் கூடிய அளவில் அல்லது குணப்படுத்த முடியாத நிலையில் இருக்கலாம். கீழ்க்கண்டவை அகவயக் காரணிகளுள் அடங்கும்:

(அ) வயது: வேலைவாய்ப்புப் பெறுவதில் இளைஞர்களுக்கும், வயதானவர்களுக்கும் சில இடர்ப்பாடுகள் இருக்கின்றன. இளைஞர்களுக்கு கல்வித் தகுதியும், பயிற்சியும் இருந்தாலும், அனுபவமின்மை வேலை பெறத் தடையாக இருக்கிறது. அவ்வாறே வயதானவர்களுக்கு, குறிப்பாக 60 வயதைக் கடந்தவர்களுக்கு, அவர்களுடைய மூப்பே வேலைக்குத் தடையாக அமைகிறது. எண்ணற்ற இளைஞர்கள் வேலைக்காகக் காத்திருக்கையில் அவர்களுக்கு வழிவிட வேண்டி வயதானவர்களுக்கு ஓய்வு கொடுக்கப்பட்டு, வேலையிலிருந்து விலக்கப்படுகிறார்கள்.

(ஆ) வேலைத் தகுதியின்மை: வேலை செய்ய ஆர்வம் இருந்தாலும் குறிப்பிட்ட வேலைக்குத் தேவைப்படும் ஆற்றல், தகுதி இல்லாமலிருப்பதால் அத்தகையோருக்கு வேலை வாய்ப்புக் கிட்டாமல் போகிறது. தொழில் நிறுவனங்கள், பணியிடங்கள் ஆகியவற்றில் தகுதிகளும், பயிற்சியும் ஒரு சேரக் கொண்டவர்களையே வேலைக்கு வைத்துக் கொள்ள விரும்புவதால் அவ்வாறு கொண்டிராத பல இளைஞர்கள் வேலை வாய்ப்புப் பெற இயலாத நிலை ஏற்படுகிறது.

(இ) உடல்நலக்குறைவும் உடல் ஊனங்களும் : நீண்ட நாள் உடல் நலக்குறைவு, உடல் ஊனங்கள் ஆகியவற்றின் காரணமாகவும் பலர் வேலை வாய்ப்பின்றி இருக்கிறார்கள். இத்தகைய குறைகள் காரணமாக வேலைக்குத் தகுதியில்லாமல் போவதால் அவர்களுக்கு வேலை கிடைப்பதில்லை. வேலையில் நிகழும் விபத்துக்களால் தொழிலாளர்களுக்கு உடல் நலக்குறைவும், உடல் ஊனங்களும் ஏற்பட்டு அவற்றின் விளைவாக அவர்கள் வேலையிலிருந்து நீக்கப்படுவதுடன், வேறு வேலை செய்வதற்குத் தகுதியற்ற நிலையில் பலர் நிரந்தரமாக முடங்கிப் போகின்றனர்.

புறவயக் காரணிகள்

புறவய அல்லது ஆட்சார்பற்ற காரணிகள் தனி மனிதர்களின் வாழ்வு மற்றும் பணி சூழ்நிலையில் இயங்குபவை. அவற்றில் முக்கியமானவையாக விளங்கும் பருவ கால வேலைத் தேவை, தொழில் நுட்ப மாற்றம், முதலீடு, ஊதிய அமைப்பு முறை, வரி விகிதங்கள், தொழில் தகராறுகளால் ஏற்படும் உற்பத்தித் தடங்கல்கள், உயரும் உற்பத்திச் செலவுகள், குறையும் இலாப வாய்ப்பு போன்றவை வேலையின்மைக்கு அடிகோலும்.

**வேலையின்மையைக் கட்டுப்படுத்தும் நடைமுறைகள்**

வேலையின்மைப் பிரச்சனையைத் தீர்ப்பதில் நகர்ப்புறங்களில் மட்டுமல்லாது கிராமப் புறங்களிலும் முக்கிய கவனம் செலுத்த வேண்டியது அவசியமாகிறது. ஏனெனில் கிராமப்புற வேலையின்மை, நகர்ப்புற வேலையின்மையின் கடுமையை மேலும் அதிகரிக்கச் செய்யவல்லது. கிராமப்புறங்களில் வேலை இல்லாதவர்கள் வேலை தேடி நகர்ப்புறங்களுக்கு வரும்போது அங்கு ஏற்கெனவே கணிசமான அளவில் இருக்கும் வேலை தேடுவோரின் கூட்டத்தில் இவர்களும் சேர, வேலைதேடுவோரின் மொத்த எண்ணிக்கை உயர்கிறது.

கிராமப்புற வேலையின்மையைக் குறைக்கக் கீழ்க்கண்ட நடைமுறைகளை மேற்கொள்ளலாம்:

(அ) விவசாய மேம்பாடு: விவசாயத்தை மேம்படுத்தி அதிக வேலை வாய்ப்புகளை உருவாக்க நீர்பாசன வசதிகளை மேம்படுத்துவது, தரிசு நிலத்தைப் பண்படுத்துவது, மண் வளத்தைப் பாதுகாப்பது, தோட்டப்பயிர்ப் பண்ணைகளை உருவாக்குவது, கலப்புப் பண்ணை முறையை விரிவுபடுத்துவது, காய்–கனி–மலர்த் தோட்டங்களை ஏற்படுத்துவது போன்ற நடவடிக்கைகளைச் செயல்படுத்தலாம்.

(ஆ) மீன் வளம், வனவளப் பணிகள்: விவசாய மேம்பாட்டுடன் மீன்வள, வனவளப் பணிகளை மேற்கொள்ளலாம்.

(இ) கிராமத் தொழில்களை மேம்படுத்துதல்: கிராமத் தொழில்களை மேம்படுத்த வலிமையான அடிப்படைத் தளமும், உறுதியான விற்பனை வாய்ப்பும், நிதி உதவி, கடன் வசதிகள், குறைந்த கட்டணத்தில் மின்சாரம் வழங்குதல், உற்பத்தி வரி மற்றும் தீர்வையை முற்றிலும் விலக்கிக் கொள்ளுதல் முதலிய நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம்.

நகர்ப்புற வேலையின்மையைப் போக்கக் கீழ்க்கண்டவற்றை செயல்படுத்தலாம்:

(அ) தொழில் வளர்ச்சி: நகர்ப்புறங்களில் தொழில் வளர்ச்சிக்குப் பெரிய, சிறிய மற்றும் கைவினைத் தொழில்கள் உள்ளிட்ட குடிசைத் தொழில்கள் தொடங்க தீவிர முயற்சிகள் மேற்கொள்ள வேண்டும். சிறுதொழில்களை மேம்படுத்தத் தகுந்த பாதுகாப்பு அளிப்பதுடன்

அவற்றைப் பெரிய தொழில்களுடன் இணைக்க ஆவன செய்யவேண்டும். சிறு தொழில் முனைவோருக்கு ஆலோசனையும், நிதி உதவியும், விற்பனை வசதிகளும் செய்து தர வேண்டும். நகர்ப்புற மேம்பாட்டுத் திட்டங்கள், உற்பத்தித் தொழில்கள், போக்குவரத்து, செய்தித் தொடர்பு, மின்சார வசதி, உள்கட்டமைப்பு முதலியவற்றை உள்ளடக்கியதாக தொழில் வளர்ச்சி முயற்சிகள் அமைய வேண்டும்.

(ஆ) கட்டுமானப் பணிகள்: முறைசாரா அமைப்பு தொழிலாளர்களில் கணிசமான அளவினர் கட்டுமானத் தொழில் வாயிலாகவே வேலை வாய்ப்புகளைப் பெறுகிறார்கள் என்பதால் நிதியுதவியின் மூலமாகவும், கட்டுமானப் பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்துவதன் மூலமாகவும் கட்டுமானப் பணிகளின் வளர்ச்சிக்கு ஊக்கம் தர வேண்டும்.

(இ) மூன்றாம் நிலைத் துறை மேம்பாடு: கல்வி, சுகாதாரம், சமூக சேவைகள், அலுவலகப் பணிகள் முதலிய களங்கள் அமைந்த மூன்றாம் நிலைத் துறையில் வேலை வாய்ப்புகளை அதிக அளவில் உருவாக்க வேண்டும். இந்தப் பணிகளும், வேலைகளும் வளர்ச்சியடையும் போது வர்த்தகமும், வணிகமும் செழிக்கவும் வேலை வாய்ப்புகள் அதிகம் உருவாகவும் வாய்ப்பாக அமையும்.

### படித்தவர்களிடையேயான வேலையின்மையைக் கட்டுப்படுத்துதல்

வேலையின்மைக்கு 'வேலைத் தகுதியின்மை' ஒரு முக்கிய காரணம். எனவே வேலைக்குத் தகுதி பெறும் வண்ணம் கல்வி முறையைத் திட்டமிட்டுச் சீரமைத்து, தொழிற்கல்விப் பயிற்சியை பாடத்திட்டத்தில் புகுத்த வேண்டும். கல்விமுறையானது வெறும் பாடப்புத்தக செய்திகளை மட்டும் திணித்து, மூளையை புத்தகப்பையாக ஆக்கி வேலைக்கு சேரத் தகுதியும், ஆற்றலும் இல்லாமல் மாணவர்களை உருவாக்குவதற்குப் பதிலாக அவர்கள் தமது திறமைகளைப் பயன்படுத்தும் வகையிலும் தொழிற் பயிற்சியுடன் கூடிய கல்வித் திட்டமாக சீரமைக்கப்பட வேண்டும். தொழிற் பயிற்சி அனுபவம் கிடைக்க, படிப்பு விடுமுறைக் காலத்தில் அல்லது படிப்பு முடிந்த பிறகு தொழிற்கூடங்களில் பயிற்சி பெற ஏற்பாடு செய்யலாம். சுய வேலை வாய்ப்புக்கும், சிறு தொழில்கள் ஆரம்பிக்கவும் நிதியுதவி அளிக்கலாம்.

அரசாங்கம் தொழிற் பேட்டைகளை நிறுவி, படித்தவர்கள் அங்கு தொழில் அலகுகளை நடத்தப் போக்குவரத்து வசதி, மின்சார வசதி,

தண்ணீர் மற்றும் எரிவாயு வசதிகளுடன் குறைவான வாடகையில் இடம் தரலாம். புதிய தொழில் முனைவோருக்கு மூலப்பொருள்கள் வாங்கவும், உற்பத்தியான பொருள்களை விற்கவும், ஏற்றுமதி செய்யவும் அரசாங்கம் உதவி செய்யலாம்.

படித்தவர்கள் அலுவலக வேலைகள் மட்டுமே அவர்களுடைய கல்வித் தகுதிக்கு ஏற்ற வேலைகள் என்று கருதி, உடலுழைப்பு வேலைகளைப் புறக்கணிக்கும் மனப்பான்மையைப் போக்கவும், உடலுழைப்புப் பணிகளை மேற்கொள்ள அவர்களைத் தயார்படுத்தவும் பயிற்சி முகாம்கள் நடத்தலாம். இத்தகைய முகாம்கள் இளைஞர்களிடம் இருக்கும் வேலைத் திறமையைக் கண்டுபிடித்து அவர்களுக்கு ஏற்ற வேலை கிடைக்க உதவும். வேலைக்கு ஆள் தேடும் தொழில் முனைவோரைத் தொடர்பு கொண்டு இம்முகாம்களில் கலந்து கொள்ளச் செய்தால், தமக்குத் தேவையான பொருத்தமானவர்களைக் கண்டறிந்து வேலையில் அமர்த்துவதற்கான வாய்ப்பும் இதன் மூலம் ஏற்படும்.

கல்வியும், பயிற்சி திட்டங்களும் நம் நாட்டின் பொருளாதாரத் தேவைகளை நிறைவேற்றும் வண்ணம் அமைக்கப்பட்டு, பொருளாதார வளர்ச்சியில் படித்தவர்கள் அதிகளவில் பங்கேற்கும் வண்ணம் ஊக்குவிக்கப்பட வேண்டும்.

பெருகிவரும் படித்தோர் வேலையின்மையைப் போக்கத் தொடக்கக் கல்வி முதல் உயர்கல்வி வரையில் பல சீர்திருத்த நடவடிக்கைகள் தேவைப்படுகின்றன. நம் நாட்டில் உயர்கல்வி எந்த அளவு தரம் தாழ்ந்துள்ளது என்பதை, தேசிய உயர்கல்விக்குழு கருத்தாய்வின்படி 90 சதவீதக் கல்லூரிகளிலும், 70 சதவீதப் பல்கலைக்கழகங்களிலும் மிக மோசமான தரத்தில் கல்வி போதிக்கப்படுகின்றன என்று தெரிவித்திருப்பதிலிருந்து அறியலாம்.

சமீபத்தில் "நாஸ்காம்" எனும் அகில இந்திய கம்ப்யூட்டர் கட்டமைப்பு, மெக்கின்ஸி என்னும் சர்வதேச அமைப்புடன் இணைந்து நடத்திய ஆய்வின்படி "இந்தியாவில் முதுகலை மற்றும் முது அறிவியல் படித்துப் பட்டம் பெற்றவர்களில் பத்தில் ஒரு மாணவரும், பொறியியல் பட்டம் பெற்ற நான்கில் ஒரு மாணவரும்தான் வேலை செய்யத் தகுதியானவர்களாக இருக்கிறார்கள் என்றும், மற்றவர்கள் தங்கள் படிப்புக்கு ஏற்ற வேலையில் திறம்படப் பணியாற்றும் சக்தியற்றவர்களாக இருக்கிறார்கள்" எனவும் கணித்துள்ளது.

கல்லூரிகளைத் தொடங்கி நடத்த அரசிடம் நிதி ஆதாரம் பற்றாக்குறையாக இருப்பதைக் காரணமாகக் காட்டி, கல்வியைத் தனியார் மயமாக்க வேண்டிய கட்டாயம் 1990களில் உருவானது. வணிக நோக்கத்தில் நடத்தப்படும் இத்தகைய கல்லூரிகள் பலவற்றிலும் தரமான கல்வி அளிக்கப் படுவதில்லை என்ற உண்மை கசப்பானதே. சமீப காலத்தில் தகுதியில்லாத பல தனியார் கல்லூரிகளுக்குத் தன்னாட்சி அந்தஸ்து அளித்தும், சுயாட்சிப் பல்கலைக் கழகங்கள் என்ற அங்கீகாரம் அளித்ததும் உயர் கல்வியின் தரம் வெகுவாக பாதிக்கப்பட்டுள்ளதற்கான முக்கியக் காரணங்களுள் ஒன்றாகும்.

தரமற்ற கல்வியைப் பெறும் அதிக மாணவர்கள் சமூகத்தின் அடித்தட்டில் இருந்து வருபவர்களே. வசதி படைத்தவர்கள் நம் நாட்டிலேயே சிறந்த கல்லூரி, பல்கலைக்கழகங்களிலோ அல்லது வெளிநாட்டின் பல்கலைக்கழகங்களிலோ சேர்ந்து பட்டம் பெற்று விடுகிறார்கள். வெளிநாட்டில் சென்று கல்வி பெற இந்திய மாணவர்கள் ஆண்டுக்கு செய்யும் செலவு மட்டும் ரூ.35,000 கோடி என ரிசர்வ் வங்கியின் புள்ளி விபரம் தெரிவிக்கிறது. இவர்களில் மிகப்பெரும்பான்மையினர் வசதியான குடும்ப மாணவர்களே என்பதில் இருவேறு கருத்து இல்லை.

## பருவகால வேலையின்மையைக் கட்டுப்படுத்துதல்

பருவகால வேலையின்மையை நீக்க வேலை இல்லாத காலத்தில் வளர்ச்சிப் பணி திட்டங்களை அரசு மேற்கொள்ளலாம். எடுத்துக்காட்டாக, விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலை இல்லாத காலத்தில் தரிசு நிலத்தைப் பண்படுத்துவது, நில அரிப்பைத் தடுப்பது, ஏரி மற்றும் நீர்பாசன ஆதாரங்களை சீரமைப்பது, கால்வாய்களைத் தூர் வாருவது, மரங்கள் நடுவது போன்றவற்றால் வேலை வாய்ப்புகளை உருவாக்கித் தரலாம்.

## தொழில்நுட்ப மாற்றத்தால் ஏற்படும் வேலையின்மையைக் கட்டுப்படுத்துதல்

உற்பத்தியில் தொழில்நுட்ப மாற்றங்கள் புகுத்தப்படும்பொழுது தொழிலாளர்கள் வேலை இழப்பது தவிர்க்க முடியாதது. அப்படிப்பட்ட நிலையில் அவர்களுக்கு மாற்று வேலைகளை உருவாக்கித் தரவும், அமர்த்தப்படும் வேலையில் அதற்கேற்ற பயிற்சியும் தரலாம். வேலைக் காப்புறுதித் திட்டத்தின் கீழ் வேலையின்மை நீடிக்கும் காலத்தில் நிவாரணம் வழங்கப்படுவதும், விபத்தின் காரணமாக வேலை இழக்கின்ற

தொழிலாளர்களுக்கு தொழிலாளர்கள் ஈட்டுறுதி சட்டத்தின் கீழ் அல்லது தொழிலாளர் அரசு காப்புறுதி சட்டத்தின் கீழ் நிவாரணம் வழங்கப்படுவதும் இங்குக் குறிப்பிடத்தக்கவை.

**References**

Ahuja, Ram Social Problems in India. 2nd ed. (Jaipur: Rawat Publications, 1997).

Madan, G.R. Indian Social Problems: Social Disorganisation and Reconstruction. Vol.I (New Delhi:Allied Publishers Pv t.Ltd., 1980).

Shankar Rao, C.N. Sociology. 6th Rev.ed. (New Delhi: S.Chand &Co.Ltd., 2010).

# பிச்சை கேட்டல்

பொருளுதவி வேண்டி வார்த்தைகளாலோ அல்லது குறிப்புகளாலோ இறைஞ்சுபவர்கள் 'பிச்சைக்காரர்கள்'. இவர்களில் குழந்தைகள், பெண்கள், உடல் திறன் கொண்டவர்கள், வயது வந்தோர், உடல் குறையுடன் இருப்போர், சமயச் சின்னங்கள்/அடையாளம் தரித்தவர்கள், மன வளர்ச்சி குன்றியவர்கள், ஆதரவற்ற முதியோர் எனப் பல்வேறு வகையினர் உள்ளனர். உடல் குறைகள் கொண்ட பிச்சைக்காரர்களில் உடல் உறுப்புகளை இழந்தவர்களும், உடல்உறுப்பு வளர்ச்சி குறைந்தவர்களும், உடல் இயக்கத்திறன் குறைந்தவர்களும், வயதுக்கேற்ற அளவு உடல்வளர்ச்சி குறைந்தவர்களும் அடங்குவர்.

இந்தியாவில் பிச்சை கேட்பவர் எண்ணிக்கை பற்றிய துல்லியமான புள்ளி விபரம் இல்லை. 1969ஆம் ஆண்டு 20 லட்சம் பேர் என ஜி.ஆர். மதன் (1969:238), 2006ஆம் ஆண்டில் 1.8 கோடி பேர் என ஜெ.சிவானந்தா (2006:170) மதிப்பிட்டிருக்கிறார்கள். பெருநகரங்கள், நகரங்கள், கிராமங்கள் என அனைத்துப் பகுதிகளிலும் காணக்கூடியவர்களாக இவர்கள் இருக்கிறார்கள். பிச்சைக்கான வாய்ப்புகள் அதிகம் உள்ள பெருநகரங்களிலும், புகழ்பெற்ற கோவில்கள் உள்ள ஊர்களிலும், சுற்றுலாத்தலங்களிலும் அதிகளவு காணப்படுகின்றனர். நகரங்களிலும், கிராமங்களிலும் ஆதவற்ற அனாதைகளும், மனநலம் குன்றியவர்களும் பிச்சைகேட்பவர்களில் கணிசமானவர்களாக இருக்கிறார்கள். பிச்சைக்காரர்களில் அடிக்கடி இடம் விட்டு இடம் செல்பவர்களில் மதச் சின்னங்களையும், அடையாளங்களையும் தரித்து பிச்சை கேட்பவர்கள் அதிகமானவர்களாகவும், மாறாக மனநலம் பாதிக்கப்பட்டவர்களும், உடல் குறை உள்ளவர்களும் குறைவாகவும் இடம் பெயர்கிறார்கள். பெரும்பாலான பிச்சைக்காரர்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தில் (நகரத்தில், கிராமத்தில்) நிரந்தரமாக வசிப்பவர்களாக இருக்கிறார்கள்.

பொதுவாக வீடுகளில் பிச்சை கேட்பவர்கள் உணவு, உடை ஆகியவற்றைக் கேட்பவர்களாகவும், பொதுமக்கள் அதிகம் நடமாடும் கடைத் தெருக்கள், பேருந்து மற்றும் தொடர்வண்டி நிலையங்கள், வழிபாட்டுத் தலங்கள் போன்ற இடங்களில் பிச்சை கேட்பவர்கள் பணமாகக் கேட்பவர்களாகவும் இருக்கின்றனர்.

பொதுமக்களின் அனுதாபத்தைப் பெற பல்வேறு உத்திகளை இவர்கள் பயன்படுத்துகின்றனர். பாட்டுப் பாடுதல், ஆன்மிகத்தைத் துணையாக்கி

ஈகை கேட்பது, ஆசிவழங்கி பிச்சை கேட்பது, உடல் ஊனத்தைக் காட்டுதல், உண்மையான அல்லது பொய்யான காயத்தைக் காட்டுதல், பட்டினியான அல்லது உடல் ஊனமுற்ற குழந்தையைக் காட்டுதல், தங்களது ஆதரவற்ற நிலையைத் தெரியப்படுத்தும் எழுதப்பட்ட அல்லது அச்சிடப்பட்ட துண்டுப் பிரசுரங்களை விநியோகித்தல், பொதுமக்கள் முன் தங்களை சாட்டையால் அடித்துக் கொண்டு ரத்தம் வரச்செய்தல் போன்ற செயல்களின் மூலம் தங்களது துன்பமான நிலையைக் காண்பித்து பிச்சையிடத் தூண்டுகிறார்கள். அநாதையாக ஆதரவின்றித் திரியும் குழந்தைகளை அழைத்து வந்தும், கடத்தியும், ஊனப்படுத்தியோ அல்லது அத்தகைய குழந்தைகளை வாடகைக்கு எடுத்தோ பிச்சை கேட்பதும் நடைபெறுகிறது. பிச்சை கேட்பவர் மக்களின் கவனத்தைக் கவர்ந்து உணர்ச்சியைத் தூண்டும்படி செய்து தன்பால் மனதை ஈர்ப்பார். பிச்சை கேட்பதற்குத் தேவைப்படுகின்ற முக்கிய உத்தி நடிப்பு. பணிந்து கெஞ்சியும், பயம் கொள்ளச் செய்தும், கட்டாயப்படுத்தியும் பிச்சை கேட்கிறார்கள். விலங்குகள் மற்றும் குழந்தைகளைக் காட்டியும் பிச்சை கேட்கிறார்கள்.

பிச்சை கேட்டல் சமூக உளவியல் நோய்க் கூறு தன்மையுடையது. உடல் ஊனமுற்றோர், சமூகத்தின் விளிம்பு நிலையில் இருக்கும் பொருளாதார வசதி குறைந்தோர், உழைக்கத் திராணியற்றோர், சோம்பித்திரிவோர் ஆகியோர் தங்களைப் படைத்த இறைவனையும், சமூகத்தையும் குறை கூறி தங்களது இயலாமையையும், வாழ வழி இல்லாத நிலையையும் முதன்மைப்படுத்தி பிச்சை கேட்டலை ஒரு தொழிலாகவே மேற்கொள்கிறார்கள். பிச்சை கேட்பதைத் தொழிலாகக் கொண்டவர்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தை/பகுதியைத் தமக்கென ஒதுக்கிக் கொள்கிறார்கள். ஒருவரது குறிப்பிட்ட அந்த இடத்தை/பகுதியை மற்றவர்கள் அங்கீகரித்து, ஏற்றுக் கொண்டு தங்களுக்குள் அனுசரித்துப் போகிறார்கள். மற்ற எவரேனும் ஊடுருவும் போது அல்லது ஆக்கிரமிக்க முனையும் போது எதிர்த்துச் சண்டை, சச்சரவு நிகழ்கிறது. நண்பர்களுக்குள் இடங்களை/ பகுதிகளை பரஸ்பரம் மாற்றிக் கொள்வதும் உண்டு. பிச்சை கேட்பவர்கள் ஒருவருக்கொருவர் அறிமுகமானவர்களாகவும், பழக்கமுள்ளவர்களாகவும் இருப்பதால் இவர்களிடையே எழுதப்படாத சட்டமாக தொழில் முறை நடத்தை முறைகள் உள்ளன. சில நேரங்களில் அவர்களுக்குள் கடன் கொடுத்தல், வாங்கல் போன்ற பணப் பரிவர்த்தனைகளும் நிகழ்வதுண்டு. ஏறத்தாழ ஒத்த உடல்கூறு குறையுள்ள பிச்சைகேட்போர் (உதாரணமாக, தொழுநோய் பீடித்தவர்கள்) தங்களுக்குள் வெளிப்படையான, தாராளமான முறையில் பொருட்களைப் பங்கிட்டுக் கொள்வதில் உடன் பட்டவர்களாகவும், உடல் கூறு குறைகளில்

மாறுபட்டவர்கள் (உதாரணமாக, பார்வையிழந்தவர்களும் பேசும் திறனற்றவர்களும்) தங்களுக்குள் உறவை ஏற்படுத்திக் கொண்டு இணைந்து பிச்சை கேட்பவர்களாகவும் உள்ளனர். பெறும் வருமானத்தைப் பங்கு பிரித்து, கூட்டாக உண்டு, உறங்கி வாழ்கின்றனர்.

**பிச்சைக்காரர்கள் உருவாகக் காரணங்கள்**

பிச்சைக்காரர்கள் உருவாவதற்கு ஒரு குறிப்பிட்ட காரணியையோ அல்லது சில குறிப்பிட்ட காரணிகளையோ மட்டும் காட்டுவது இயலாதது; ஏனெனில் பல்வேறு காரணங்களால் ஒன்றிணைந்து உருவாகும் சூழ்நிலையே பிச்சைக்காரர்கள் உருவாக வழிவகுக்கிறது என்கிறார் ஜி.ஆர்.மதன். தனிப்பட்ட நபரின் சூழ்நிலை ஒன்றுக்கு மேற்பட்ட காரணிகளால் தாக்கம் பெறுகின்றன. பொதுவாகக் குடும்பத்தின் வறுமை அல்லது குடும்பத்தால் கைவிடப்பட்ட நிலையில் வேலையின்மை, உடல் ஊனம், சமூகப் பாதுகாப்புத் திட்டங்கள் செயல்படுத்தாமை ஆகியவை ஒருவரை பிச்சை கேட்கும் நிலைக்குத் தள்ளுகிறது. பிச்சை எடுத்தலுக்கு பொருளாதாரக் காரணம் முக்கியமானதாக இருந்த போதிலும் சமூக மற்றும் ஆன்மிகக் காரணங்களும் குறிப்பிடத்தக்க பங்கு வகிக்கின்றன. அனைத்து மதங்களும் தான தர்மங்களை இல்லாதவர்களுக்கு செய்ய வேண்டும் என வலியுறுத்துவதும் பிச்சை எடுத்தலை வளர்த்து ஊக்குவித்து வருகிறது.

பிச்சைகேட்கும் சூழ்நிலையை உருவாக்கும் காரணிகளில் பொருளாதாரம், சமூகம், உயிரியல், சமயம் சார்ந்தவையாக குடும்ப அமைப்புக் குலைவு, கூட்டுக் குடும்பங்களின் சிதறிய அமைப்பு, ஆதரித்து–பாதுகாத்து–மறுவாழ்வுக்கு வழிசெய்யும் சமூகப் பொறுப்பு மிக்க அரசுத்திட்டங்கள் மற்றும் அமைப்பு அரசுகள் இல்லாமை, ஆதரவற்ற அனாதைகள்–முதியோருக்கான போதுமான நிறுவன அமைப்புகள் இல்லாமை, பிச்சையை வருவித்து– வளர்த்து– ஊக்குவிக்கும் மக்களின் ஈகை குணம், வறுமை, வேலை இழப்பு, வேலையில்லாத் திண்டாட்டம், பிச்சையினால் கிடைக்கும் அபரிமிதமான வருமானம், அடிக்கடி நோய்வாய்ப்படுவது, நிலையாக நோயுற்று இருப்பது, உடல் ஊனம், மனநலம் பாதிப்பு, முதிய வயது, பொதுமக்களின் தயாள ஈகை குணம், அனாதையாதல், ஊனப்படுத்தப்பட்டு பிச்சை கேட்கச் செய்தல் ஆகியன முக்கியமானவை.

தனி நபரின் பொருளாதாரத்தில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தும் இயற்கைச் சீற்றங்கள், பெற்றோர் மரணம், தாய் தந்தையரின் மோசமான

நடத்தைகள், பொறுப்பற்ற குடும்ப உறுப்பினர்கள் போன்ற காரணிகள் சோர்வையும், உளவியல் ரீதியான பாதிப்பையும் ஏற்படுத்தி செயலற்றவர்களாக முதியவர்களையும், குழந்தைகளையும் இத்தொழிலில் ஈடுபட வைக்கிறது.

**பிச்சை எடுத்தலின் வகைகள்**

**1. சமய உணர்வைப் பயன்படுத்தி பிச்சை எடுப்பவர்கள்**

துறவிகள் ஆன்மிகவாதிகள், யோகிகள் மற்றும் சாதுக்கள்.

**2. சமய அடையாளங்களைப் பயன்படுத்தி பிச்சை எடுப்பவர்கள்**

சூபாலித் துறவிகளும், ஆன்மிக ஞானம் இல்லாதவர்களும் சமய அடையாளத்தைப் போலியாகப் பயன்படுத்தி பிச்சை எடுப்பவர்கள்.

**3. உடல் ஊனமுற்ற பிச்சைக்காரர்கள்**

தங்களிடன் உடல் ஊனத்தைக் காட்டிப் பிச்சை எடுப்பவர்கள்.

**4. குழந்தை பிச்சைக்காரர்கள்**

வறுமை அல்லது வலுக்கட்டாயத்தின் காரணமாகப் பிச்சை எடுக்கும் குழந்தைகளும், சிறுவயதினரும்.

**5. பகுதி நேரப் பிச்சைக்காரர்கள்**

ஏதாவது ஒரு வேலை செய்து வரும் இவர்கள் அதிகப்படியான வருமானத்திற்காக பகுதி நேரமாக இத்தொழிலைச் செய்பவர்கள்.

**6. புத்தி சுவாதீனமில்லாத பிச்சைக்காரர்கள்**

புத்தி சுவாதீனமில்லாத இவர்களைக் குடும்பமும், சமூகமும் புறக்கணித்துவிட, இத்தொழிலைச் மேற்கொள்கிறார்கள்.

**7. உடல் ஆரோக்கியமான பிச்சைக்காரர்கள்**

உடல் ஆரோக்கியமாக இருந்தும் சோம்பலின் காரணமாக இத்தொழிலை மேற்கொள்பவர்கள்.

**8. வயதான பிச்சைக்காரர்கள்**

மூப்பின் காரணமாக வேலை எதுவும் செய்ய முடியாத நிலையில் குடும்பமும் புறக்கணிப்பதால் இத்தொழிலுக்கு வருபவர்கள்.

## பிச்சை கேட்பவர்களின் வகைகள்

1. உடல் திறனுள்ள வயதுவந்தோர்
2. உடல் திறனுள்ள குழந்தைகள்
3. பரம்பரையாகப் பிச்சைகேட்போர்
4. உடல் நலம் குன்றிய, நோய்வாய்ப்பட்டோர்
5. உடல் ஊனமுற்றோர்
6. மனநலம் பாதிக்கப்பட்டோர்/மனவளர்ச்சி குன்றியோர்
7. முதுமை, தள்ளாமை
8. சமயச் சின்னங்கள்/அடையாளம் தரித்திருப்பவர்கள்

## பிச்சை கேட்கும் வழிமுறைகள்

பிச்சை கேட்பவர் பல்வகையான முறைகளைப் பயன்படுத்தி மக்களின் சமய உணர்வுகள், நம்பிக்கைகள், மனித நேயம் ஆகியவற்றைத் தட்டி எழுப்பித் தங்களுக்கு பிச்சையிடத் தூண்டுகிறார்கள். இவற்றைப் பொதுவாக கீழ்க்கண்ட வகைகளாகப் பிரிக்கலாம்:

### சாதாரணமான முறைகள்

மக்களிடம் அனுதாபம் பெறுவதற்காக அவர்களின் உணர்வுகளைத் தொடும் வகையில் உருக்கமாகப் பேசி, நடித்து அந்தந்த சூழ்நிலை சந்தர்ப்பங்களுக்கு ஏற்றமாதிரி தங்களை அனுசரித்துக் கொண்டு மாற்றிக் கொள்ளும் பிச்சைக்காரர்களின் பொதுவான முறை இது. பிச்சைக்கு அணுகும் மனிதர்களின் விருப்பமும் எண்ணமும் நிறைவேற வாயார உருக்கமாக வாழ்த்துவதன் மூலம் பிச்சையிடும் மனநிலைக்கு அவர்களை தயார்படுத்துகிறார்கள். ஆண்களிடம் நல்ல உடல் நலத்துடன் குடும்பத்தினர் அனைவரும் செல்வ செழிப்புடன் நீடூழி வாழ வாழ்த்துவது, பெண்களிடம் கணவன் மற்றும் குழந்தைகளைக் குறிப்பிட்டு வாழ்த்துவது, முதியோர்களிடம் அவர்களது மகிழ்ச்சியான நிம்மதியான எதிர்கால வாழ்க்கைக்காகப் பிரார்த்தித்து வாழ்த்துவது போன்றவை இதில் அடங்கும்.

வாழ்க்கையில் தனக்கு ஏற்பட்டதாக பல்வேறு கஷ்ட நஷ்டங்களையும், துரதிர்ஷ்ட நிகழ்வுகளையும் புனைகதைகளாகக் கேட்போர் உருகும் வகையில் சொல்வர். நோய் பீடித்தவர்களும், காயம், புண் கொண்டவர்களும் அதைக் காட்டி மக்கள் மனதைக் கரைக்க முயல்வர். தெய்வத்தால் வஞ்சிக்கப்பட்ட தனக்கு உடல் ஊனம் ஏற்பட்டதையும், தன் வாழ்க்கையில் நிகழ்ந்த மீள முடியாத சோகத்தையும் எழுத்தில் வடித்து துண்டுப்பிரசுரங்களாக விநியோகிப்பதும் இவ்வகையில் அடங்கும். உரத்த குரலெடுத்துப் பாடல்களைப் பாடியும், வித்தைகள் காட்டியும் மக்களின் கவனத்தை ஈர்ப்பர்.

### சமயத் தோற்றம்

சமயத்தை அடிப்படையாகப் பயன்படுத்தி பிச்சை கேட்போர் சமய பூசைகள், இயற்கையின் நிகழ்வுகளைக் கட்டுப்படுத்தவும், மழை வேண்டியும் வழிபாடு நடத்துதல், வழிபாட்டுத் தலங்களுக்கு யாத்திரையாக செல்வது, ஆசீர்வாதம் செய்வது, சாலை ஓரங்களில் வழிபாட்டு இடங்களை அமைத்துக் காணிக்கை பெறுவது போன்ற செயல்களின் மூலமாக சம்பாதிக்கிறார்கள்.

### பயமுறுத்தி, கட்டாயப்படுத்தும் முறை

வற்புறுத்தி, பயமுறுத்தி, கட்டாயப்படுத்தி பிச்சை கேட்பது; பொது இடத்தில் இடைஞ்சல் தர்மசங்கடம் ஏற்படுத்துவது; காலில் விழுவது,

காலைப் பிடித்து கெஞ்சுவது; அருகில் வந்து ரணங்களைக் காட்டுவது; மனநலம் குன்றியவன் போல் பாவனை செய்வது போன்ற செயல்கள் மூலமாக அருவருப்படைந்து தம்மை விரட்டுவதற்காக சில்லரை தருவார்கள் என்ற அணுகுமுறையைப் பின்பற்றுகிறார்கள்.

**உடலை வருத்திக் காட்டுதல், மாயதந்திர ஏமாற்றுதல்**

மக்களின் கவனத்தைக் கவர இயற்கையின் மாறுபாடான பிறவிகளை வைத்துப் பிச்சை கேட்பது – எடுத்துக்காட்டாக, 2 கால் மாடு, பிறப்புறுப்பற்ற குழந்தை. ஊனமான குழந்தைகளுக்கு விதவிதமான பயிற்சிகள் கொடுத்துப் பிச்சை கேட்க வைப்பது; தனக்குப் பல குழந்தைகள் உள்ளதாகக் காட்டி பிச்சை கேட்டல்.

"மொத்தத்தில் ஒவ்வொரு மனிதனிடமும் காணப்படும் பாசஉணர்வு மற்றும் பலவீனமான ஆளுமைப் பரிமாணங்களை மிகச் சரியான முறையில் தனக்குச் சாதகமாக்க அனைத்து முயற்சிகளையும் பிச்சைகேட்பவர்கள் மேற்கொள்வர்" என சென்குப்தா (1945:28) கூறுகிறார். 'பிச்சைகேட்போர் தங்கள் வேண்டுகோளை வலுவானதாக்குவதற்குப் பிறரது கவனத்தைக் கவருதல், கருணையான வேண்டுகோள் விடுத்தல், தன்னுடைய தேவையின் அவசியத்தை அணுகுபவரை உணரச் செய்தல் ஆகிய மூன்று உளவியல்–உடலியல் வழிமுறைகளைப் பயன்படுத்துகிறார்கள்' என அவர் விளக்குகிறார்.

1. கவனத்தை ஈர்ப்பதான ஏற்ற இறக்கத் தொனிகளுடனான கருணைக் கோரிக்கைகள்: உணர்ச்சிகரமாக பாவனையுடன் சொல்லுதல், சொல்லிக் கொண்டு வரும்போதே இடையிடையே தேம்புதல், விசும்புதல்; தேர்ந்த நடிகரைப் போல குரலை ஏற்றி இறக்கி, முகபாவனைகளை நொடிப் பொழுதில் அக்குறிப்பிட்ட சூழலுக்கும் நபருக்கும் தக்கவாறு மாற்றுதல்; உடலை கூனிக் குறுக்கி பணிவு காட்டுதல்; வலியைக் காட்ட முக்கல், முனகலுடன் முகத்தை அஷ்டகோணலாக்கி தமது இரங்கல் நாடகத்தை வெற்றிகரமாக அரங்கேற்றுகிறார்கள்.

2. உணர்ச்சிகளைத் தட்டி எழுப்ப ஒரே மாதிரியான கருணைக் கோரிக்கைகளை திரும்பத்திரும்ப வலியுறுத்துதல்: ஒவ்வொரு முறையும் இதைக் கேட்பவர்கள் வேறு வேறு நபர்களாக புதிய காதுகள், புதிய கண்கள், புதிய மனதுக்காரர்கள் கொண்டவர்களாக இருப்பதால் கடந்து செல்லும் மக்களிடம் ஒரே மாதிரி திரும்பத் திரும்ப சொல்லிக் கொண்டே

இருந்தாலும் அவர்களுக்குப் புதியதாகவே ஒலிக்கிறது. மேலும் ஒரே மாதிரியாக திரும்பத் திரும்ப அதே கருணை கோரிக்கைகளை அனிச்சையாக சொல்லிக் கொண்டே இருப்பதால் தமது முழு கவனத்தை தம்மைக் கடப்பவர்கள் மீது பதிய வைத்து அவர்களை எடை போடவும், அதற்குத் தக்கவாறு தமது அடுத்த அம்பை எய்துவதற்கும் அது வாய்ப்பாக இருக்கிறது. அத்துடன் ஒரே தொனியில் மீண்டும் மீண்டும் சொல்வதனால் குறைவான அளவு உடல் சக்தியே அதற்காக செலவாகிறது.

3. அணுகுபவரின் மனதில் தாக்கத்தை ஏற்படுத்த அந்தந்த சூழ்நிலைக்கேற்ப வாழ்த்துவது, பிரார்த்திப்பது, இறைஞ்சுவது, கோவிலுக்கு முன்பாக எனில் அந்தந்த கடவுள்களுக்கு ஏற்ற மாதிரி சமயச் சின்னங்களையும் அடையாளங்களையும் தரிப்பது, உணவு விடுதிகள் மற்றும் பலகாரக்கடைகளுக்கு முன்பு நின்று கையேந்தி யாசிப்பது போன்ற உபாயங்களை மேற்கொள்கிறார்கள்.

ஒருவன் எந்த அளவுக்குப் பிறரை ஏமாளியாக்கி அதிகம் சம்பாதிக்கிறானோ அவன் அனைத்து விதமான வழிமுறைகளையும் வெற்றிகரமாகப் பின்பற்றி, தேர்ந்த நடிகனின் திறமைகளோடு தொழில் செய்கிறான் என்று பொருள். பிச்சை கேட்கும் விதம், பயன்படுத்தும் வார்த்தைகள், செயல்கள், உடலசைவுகள், முக பாவனைகள் முக்கிய இடம் பெறுகின்றன. பிச்சைக்காரர்களில் மிகப்பெரும்பாலானோர் வேலை செய்வதற்கான உடல் தகுதியைப் பெற்றுள்ளவர்களாக இருந்தாலும் கஷ்டப்படாத, சுகமான வாழ்க்கைக்காகவே பிச்சை கேட்டலைத் தொழிலாகக் கொண்டுள்ளனர்.

## பிச்சை கேட்டலின் விளைவுகள்

பிச்சை கேட்டல் தனிமனிதன் மற்றும் சமூகத்தின் மீது பல்வேறு விளைவுகளை ஏற்படுத்துகின்றன. பிச்சை கேட்பவரின் ஆளுமை அடுத்தவர்களைச் சார்ந்ததாகவும், எல்லோரிடமிருந்தும் எப்போதும் எதிர்பார்க்கும் மனநிலை கொண்டதாகவும் இருக்கிறது. தன் சுயத்தன்மையை இழப்பதுடன் மானம், அவமானம், சுயமரியாதை, தன்னம்பிக்கை ஆகியவற்றை முற்றிலுமாக இழக்கிறான். தன்நிலையிழந்த இத்தகையவர் பொய் சொல்வதற்கும், ஆள் மாறாட்டத்திற்கும், எதையும் செய்வதற்கும், குற்றச் செயல் புரிவதற்கும் தயங்குவதில்லை. பிச்சை கேட்டல், ''குற்றத்தின் இளைய சகோதரன்'' என்று கருதப்படுகிறது. பிச்சை கேட்பதைத் தொழிலாகக் கொண்டவன் தனக்குப் போதுமான அளவு

உணவோ, பணமோ கிடைக்காத போது திருடுவதற்கும், ஏனைய பிற குற்றங்களைச் செய்வதற்கும் தயாராக இருக்கிறான்.

பிச்சை எடுத்தல் ஒரு நீண்டகால சமூகப் பிரச்சனையாக, கிராமம் முதல் நகரம் வரை காணப்படுகிறது. நாள்பட்ட நோயாளிகளாகவும், வியாதியைப் பரப்புபவர்களாகவும் உள்ள பிச்சைக்காரர்கள் பொது சுகாதாரத்திற்குக் கேடு விளைவிப்பவர்களாக உள்ளனர். சரிவரக் குளிக்காமல், நாள் கணக்கான அழுக்கு உடைகளுடன், கண்ட இடங்களில் உமிழ்ந்தும், சிறுநீர் மற்றும் மலம் கழித்தும், அசுத்தமான இடங்களில் வாழும் இவர்கள் பொதுமக்கள் கூடும் இடங்களில் நடமாடுவதால், தொற்று நோய் பரவுவதற்கும், சுற்றுப்புறச் சுகாதாரக்கேடு விளைவிப்பதற்கும் காரணமாக இருக்கிறார்கள். நாள்பட்ட நோய் பீடித்த, காயங்கள் மற்றும் சீழ்வடியும் ரணங்களைக் கொண்ட பிச்சைக்காரர்கள் அருவருப்பான காட்சியை ஏற்படுத்துவதுடன், பிஞ்சு உள்ளங்களில் பயத்தையும் உண்டாக்குகிறார்கள்.

உடல் திறன் இருந்தும் உழைக்க விருப்பமில்லாமல் சோம்பேறித்தனமாகத் திரியும் பிச்சைக்காரர்கள் பொது அமைதிக்கும், பொதுமக்களின் பாதுகாப்பிற்கும் ஆபத்தாக இருக்கிறார்கள். அடுத்தவர்களின் உழைப்பில் இரந்து வாழும், பிச்சை கேட்டலைத் தொழிலாகக் கொண்டுள்ளோர் சமூகத்தின் ஒட்டுண்ணியாக உள்ளனர். உற்பத்திக்கு உதவாமல், நுகர்வுக்காகவே வாழும் இவர்கள் நாட்டின் வளர்ச்சிக்கு எள்ளளவும் பயனாக இல்லாததோடு, நாட்டின் முன்னேற்றத்திற்குத் தடையாகவும் சமூகத்திற்குச் சுமையாகவும் உள்ளனர்.

### பிச்சை கேட்பதைத் தடுக்கும் வழிமுறைகள்

இந்தியாவில் சுதந்திரத்திற்கு முன்னரே பல்வேறு மாகாணங்கள் பிச்சை கேட்டலைத் தடுப்பதற்காக சட்டம் இயற்றின. சிறைத்தண்டனையோ, அபராதமோ, இவை இரண்டும் சேர்த்தோ விதிப்பதற்கு இவை வழி செய்கின்றன. இந்தியக் குற்றவியல் சட்டம் பிச்சை எடுக்கக் குழந்தைகளை ஈடுபடுத்துவதையும், பொது இடங்களில் பிச்சை கேட்டலையும் தண்டனைக்குரியதாக்கி உள்ளது.

பிச்சை கேட்டதலுக்கு ஆணிவேராக இருப்பது வறுமை. வறுமையைப் போக்கப் பல ஐந்தாண்டு திட்டங்களையும், வளர்ச்சித் திட்டங்களையும் அரசு உருவாக்கினாலும், வறுமையை முழுமையாக அகற்ற முடியவில்லை. வேலைக்கு உத்திரவாதம் அளித்து வறுமையைக் கணிசமான அளவு

குறைப்பது இப்பிரச்சினையைத் தீர்க்க உதவும். பிச்சை கேட்டலைத் தடுப்பதற்கு இந்தியாவின் அனைத்து மாநிலங்களுக்குமான பொதுவான, கடுமையான சட்டங்களை நடைமுறைப்படுத்தலாம். இந்திய அரசியலமைப்புச் சட்டம் பிச்சை கேட்டலைத் தடை செய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

அனாதையான ஏழ்மைநிலையில் உள்ள குழந்தைகள் போன்றவர்கள் பிச்சை கேட்பதைத் தடுக்க, காப்பகங்களில் பராமரித்து கல்வி மற்றும் வேலைக்குரிய பயிற்சிகளை அளிக்கலாம். அரசு மற்றும் தன்னார்வ நிறுவனங்கள் காப்பகங்களை ஏற்படுத்தி நடத்துவதன் மூலம் அவர்கள் பிச்சை கேட்பதைத் தவிர்க்கலாம். இதேபோல், உடல் ஊனமுற்றவர்களுக்கும், மனநிலை பாதித்தவர்களுக்கும், ஆதரவற்ற பெண்களுக்கும் காப்பகம் அமைத்துப் பராமரிக்கலாம்.

அனைத்து மதங்களும், தான தர்மங்களை, இல்லாதவர்களுக்குச் செய்ய வேண்டும் என வலியுறுத்துவதும், ஆன்மிகக் காரணங்களும், ஈகைக் குணமும் பிச்சை அளிப்பதற்கு ஆதாரமாகவும், பிச்சை கேட்டலை வளர்த்து ஊக்குவித்தும் வருகின்றன. தனிப்பட்ட நபர்களுக்கு ஈகை வழங்குவதற்கு மாற்றாக நிறுவனம் சார்ந்த அமைப்புகளுக்கு வழங்கப் பொதுமக்களிடம் விழிப்புணர்வை ஏற்படுத்துதல்; அவ்வாறு அளிப்பதன் மூலம் உண்மையிலேயே உதவி தேவைப்படுபவர்களுக்கு மட்டும் உதவ வழிகோலும். அவ்வகை கருத்துருவாக்கம் காலப்போக்கில் தனிநபர்களுக்கு பிச்சையிடுதலைத் தவிர்க்கும்.

## மறுவாழ்வுக்காக மேற்கொள்ள வேண்டிய நடைமுறைகள்

பிச்சைகேட்டல் உலகளாவிய, மிகப்பழமையான நிகழ்வு. ஒவ்வொரு நாட்டிலும், எல்லாக் கால கட்டங்களிலும் பிச்சை கேட்டலைத் தொழிலாகக் கொண்ட ஒரு பிரிவினர் இருந்தே வந்துள்ளனர். எங்கெல்லாம் சமூக, பொருளாதார மற்றும் இயற்கை அடிப்படையிலான பாதிப்புகள்/மாற்றங்கள் ஏற்பட்டு, அவற்றை எதிர்கொள்ள, முறையான அமைப்பு ரீதியிலான முயற்சிகள் மேற்கொள்ளப்படவில்லையோ, அங்கெல்லாம் பிச்சை கேட்டல் நிலை தோன்றுகிறது.

இந்தியாவில் ஏறத்தாழ அனைத்து மாநிலங்களிலும் பிச்சைகேட்போரைப் பிடித்து, காவலில் வைப்பதற்கான சட்டங்கள் இருந்தபோதிலும் அவற்றைச் சரிவர நடைமுறைப்படுத்த முடிவதில்லை.

ஏனெனில் பிச்சைகேட்பவர்கள் பல்வேறு வகையினராக – சிறுவர்கள், சிறுமிகள், வயதுக்குவந்த ஆண்கள், பெண்கள், முதியவர்கள், உடல் ஊனமுற்றோர், பார்வை இழந்தோர், மனநலம் குன்றியோர், நாள்பட்ட நோய்களால் பாதிக்கப்பட்டோர், சமய அடையாளச் சின்னங்களைத் தரிப்போர் – இருக்கிறார்கள். இவர்களுள் ஒவ்வொரு பிரிவினரும் தனித்தனியான தேவை உள்ளவர்களாகவும் தனியாகப் பிரித்து வைக்கப்பட்டு, பாதுகாக்கப்பட்டு, மறுவாழ்வுக்கான வாய்ப்புகள் வழங்கப்பட வேண்டியவர்களாகவும் உள்ளனர். ஏராளமான அளவு பயிற்சி பெற்ற அலுவலர்களும், நிதியும் தொடர்ந்து தேவைப்படும் இத்தகைய பொறுப்புக்களை ஏற்க அரசு தயங்குகிறது.

மறுவாழ்வுத்திட்டங்களை நடைமுறைச் செயலாக்கும் பொறுப்பில் இருக்கும் அலுவலர்கள் பிச்சை கேட்போரை கருணையுடனும், தாராள மனதுடனும் அணுகுவது இவர்களை ஊக்குவிப்பதற்கு ஒப்பாகும். அதனால் இவர்களைப் பிடித்து, அடைத்து வைப்பதற்கு மாறாக கண்டும் காணாமல் விட்டு விடுகிறார்கள். தொடர்வண்டிகளில் பயணச்சீட்டு இல்லாமல் பயணிக்கும் ஆயிரக்கணக்கான பிச்சைக்காரர்களையும், பேருந்து மற்றும் தொடர்வண்டி நிலையங்களையே இருப்பிடமாக்கி வசிக்க அடைக்கலம் அளிக்கும் போக்கும் ஒரு உதாரணமாகும். இவர்களைப் பிடிப்பதிலும், கட்டுப்பாட்டுக்குள் வைத்திருப்பதிலும், மறுவாழ்வுக்கான நடவடிக்கைகளை மேற்கொள்வதிலும் நடைமுறைப் பிரச்சனைகள் காரணமாக கண்டிப்பான அலுவலர்களும் கூட தங்கள் பொறுப்பு மிக்க கடமையிலிருந்து ஒதுங்கிக் கொள்கிறார்கள். எனவே, பிச்சைக்காரர்களை அகற்றும் அரசின் முயற்சிகள் இப்பிரச்சனையின் மேலோட்டமான பூச்சு வேலையாக மட்டுமே இருப்பதால் பிச்சை கேட்டல் தழைத்து வருகிறது. தமிழ்நாடு உள்ளிட்ட பல மாநிலங்களில் பிச்சை கேட்போருக்கான தங்கும் இல்லங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆயினும் பல்லாயிரக்கணக்கான பிச்சைக்காரர்கள் இன்றும் பொது இடங்களில் அலைந்து, திரிந்து, பிச்சை கேட்டுக் கொண்டு இருக்கிறார்கள். சட்டதிட்டங்களுக்குட்பட்ட அத்தகைய கட்டுப்பாடான நிறுவன அமைப்பில் ஒரே இடத்தில் நிரந்தரமாகத் தங்கியிருக்கும் மனநிலையில் இவர்கள் இல்லாததால் இத்திட்டம் பெயர் அளவிலேயே செயல்படுகிறது. பல ஆண்டுகளாக உழைக்காமல், சோம்பலாகிப்போன இப்பிரிவினரை ஊக்கப்படுத்தி மறுவாழ்க்கைக்கு உட்படுத்துவது மிகவும் சிக்கலான, சிரமமான பணியாகும்.

பிச்சைகேட்டலை வறுமையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் மனநிலை பொதுமக்களிடமும், அதிகாரிகளிடமும் இருப்பதால் இரக்கத்துடன்

இப்பிரச்சனை அணுகப்படுகிறது. அதன் காரணமாகப் பிச்சைக்காரர்கள் பிடிக்கப்பட்டாலும் அவர்கள் தண்டிக்கப்படாமல் விட்டுவிடுவதால், மீண்டும் மீண்டும் இத்தொழிலுக்கே வந்து சேருகிறார்கள். சட்டங்கள் கடுமையாகப் பின்பற்றப்பட வேண்டும். அபராதமோ, சிறைத் தண்டனையோ பிச்சை கேட்டலை ஒழித்து விட முடியாது என்பதை அனுபவம் உணர்த்துகிறது. பிச்சை கேட்டலுக்கு முக்கியக் காரணமான வறுமையை அகற்ற, வறுமை ஒழிப்புத் திட்டங்கள் நடைமுறைப்படுத்தப்பட வேண்டும். அனைவருக்கும் வேலை, குறைந்த பட்ச உத்திரவாதமான வருமானம் உறுதிப்படுத்தப்பட வேண்டும்.

பிச்சைக்காரர்களுக்கான பாதுகாப்பு மற்றும் மறுவாழ்வு இல்லங்கள் அமைத்தல்.

சமூக உதவித்திட்டங்கள், சமூகப் பாதுகாப்பு திட்டங்கள், வேலை வாய்ப்புக்கான பயிற்சிகள் மற்றும் வேலை வாய்ப்புகளை ஏற்பாடு செய்தல்.

அரசு சாரா தொண்டு நிறுவனங்களை இப்பணியில் ஈடுபடுத்துதல்.

சட்டங்களைக் கடுமையாகவும், உறுதியாகவும் நடைமுறைப்படுத்துதல்.

உழைப்பின் மகத்துவத்தையும், அவசியத்தையும் போதிக்கும் ஆற்றுப்படுத்துதல், ஆலோசனை மற்றும் வழிகாட்டும் திட்டங்களை செயல்படுத்துதல்.

சமூகத்தோடு இணைக்கப்பட வேண்டும்; சமூகத்தால் புறக்கணிக்கப்பட்டவர்கள் என்ற மனநிலையை மாற்றுதல்.

**References**

Kumarappa, M. (ed.), Our Beggar Problem. (1945).

Madan, G.R. Indian Social Problems: Social Disorganisation and Reconstruction. Vol.I. (New Delhi:Allied Publishers Pv t.Ltd., 1980).

Singh, Lal , Anatomy of Social Problems. (New Delhi: Cyber Tech Publications, 2007).

Sivananda, J. (ed.), Contemporary Social Problems. (New Delhi: Alfa Publications, 2006).

# அதிகளவு மக்கள்தொகை

மக்கள்தொகை என்பது ஒரு இடத்தில் அல்லது ஒரு நாட்டில் உள்ள மொத்த மக்களின் எண்ணிக்கை. ஒரு இடத்தில் அல்லது நாட்டில் உள்ள மக்களின் எண்ணிக்கை, அடர்த்தி, வளங்களின் அளவு மற்றும் வளங்களை விநியோகிக்கும் முறையைப் பொறுத்து மக்கள்தொகை அதிகமா அல்லது குறைவா எனத் தீர்மானிக்கப்படுகிறது.

புவி முழுவதும், வளர்ந்து வரும் அனைத்து நாடுகளும் மக்கள்தொகைப் பெருக்கத்தால் பாதிக்கப்பட்டுள்ளன. மக்கள் தொகைப் பெருக்கம் பொருளாதார வளர்ச்சியினால் கிடைக்கும் பயன்களை விழுங்கி விடுகிறது. ஒரு நாடு மக்கள் தொகைப் பெருக்கத்தால் அவதியுறுகின்றது என்பதை அந்நாட்டின் மண்வளம் மற்றும் காடுவளங்கள் அழிந்து வருவதில் இருந்து தெரிந்து கொள்ளலாம். மொத்த மக்களின் எண்ணிக்கை, அதிகரிக்கும் பிறப்பு விகிதம், குறைந்த அளவு இறப்பு விகிதம் மற்றும் மருத்துவ வசதிகள், இயற்கை வளங்களை நுகரும் பண்பு, நவீன தொழில் நுட்பத்தினால் ஏற்படும் பின்விளைவுகள் போன்றவை மக்கள் தொகைப் பெருக்கத்துடன் நெருங்கிய தொடர்புடையவை.

உலக நிலப்பரப்பில் 2.4% நிலப்பரப்பை மட்டும் இந்தியா கொண்டுள்ளது. ஆனால் உலக மக்கள் தொகையில் 16 விழுக்காடு இந்தியாவில் வாழ்கிறார்கள். உலக மக்கள்தொகை அளவில் இந்தியா இரண்டாவது இடத்தில் உள்ளது. இந்தியாவை விட 2 1/2 மடங்கு அளவு கொண்ட ஆஸ்திரேலியாவின் மொத்த மக்கள் தொகைக்கு இணையாக ஒரு வருடத்தில் இந்தியாவில் பெருகும் மக்கள் தொகை உள்ளது. நம் நாட்டின் 2001ஆம் ஆண்டின் மக்கள்தொகை 1901 ஆம் ஆண்டை விட நான்கு மடங்கு உயர்ந்தும், 1941 ஆம் ஆண்டு மக்கள் தொகையை விட மூன்று மடங்கு அதிகமாகவும் உள்ளது.

## மக்கள் தொகைப் பெருக்கத்தை நிர்ணயிக்கும் காரணிகள்

மக்கள் தொகைப் பெருக்கத்தை பிறப்பு, இறப்பு மற்றும் இடப்பெயர்ச்சி ஆகிய மூன்று காரணிகள் தீர்மானிக்கின்றன. நம் நாட்டின் அதிவேக மக்கள் தொகைப் பெருக்கத்திற்கு பிறப்பும், இறப்பும் முக்கியப் பங்கு வகிக்கின்றன. இந்த நூற்றாண்டு தொடக்கத்தில் பிறப்பின் அளவும் இறப்பின் அளவும் ஏறக்குறைய ஒரே அளவில் இருந்தது. இதன் விளைவாக மக்கள் தொகை வளர்ச்சி நிலைபெற்றிருந்தது. இந்நிலை 1921 ஆம்

ஆண்டுக்குப் பிறகு மாறிவிட்டது. அதிகரித்த உணவு உற்பத்தி, தடுக்கப்பட்ட கொள்ளை நோய்கள், மேம்படுத்தப்பட்ட பொது மற்றும் தனி மனித சுகாதாரம் போன்றவை காரணமாக இறப்பின் அளவு குறைந்தது; ஆனால் அதற்கு இணையாக பிறப்பின் அளவு குறையவில்லை. இந்நிலையில் மக்கள் தொகை வளர்ச்சி அதிவேகத்தில் அதிகரித்தது.

**பிறப்பு மற்றும் இறப்பு (1901–1990)**
(பத்தாண்டு,1000 மக்களுக்கு)

| | பிறப்பு | இறப்பு |
|---|---|---|
| 1901–11 | 49.2 | 42.6 |
| 1911–21 | 48.1 | 47.2 |
| 1921–31 | 46.4 | 36.3 |
| 1931–41 | 45.2 | 31.2 |
| 1941–51 | 39.9 | 27.4 |
| 1951–61 | 41.7 | 22.8 |
| 1961–71 | 41.2 | 19.0 |
| 1971–81 | 37.2 | 15.0 |
| 1991 | 29.5 | 9.8 |

**மக்கள்தொகை (1901 – 2001)**

| ஆண்டு | மொத்த மக்கள் தொகை (மில்லியனில்) | சராசரி வளர்ச்சி விகிதம் | அதிகரித்த மக்கள் தொகை |
|---|---|---|---|
| 1901 | 238.4 | – | – |
| 1911 | 252.1 | (–) 0.03 | 5.7% |
| 1921 | 251.3 | 1.04 | 0.3% |
| 1931 | 279.0 | 1.33 | 11.0% |
| 1941 | 318.7 | 1.25 | 14.2% |
| 1951 | 361.1 | 1.96 | 13.3% |
| 1961 | 439.2 | 2.20 | 21.5% |
| 1971 | 548.2 | 2.22 | 24.8% |
| 1981 | 683.3 | 2.14 | 24.8% |
| 1991 | 843.9 | 1.9 | 23.5% |
| 2001 | 1027.0 | – | 18.5% |

## பிறப்பு விகிதம்

இந்தியாவில் ஒவ்வொரு விநாடிக்கு ஒரு குழந்தை, ஒரு நாளில் 10,000, ஒரு வாரத்தில் 78,000, ஒரு ஆண்டில் 27 மில்லியன் குழந்தைகள் பிறக்கின்றன. அதிகமான குழந்தைகள் பிறப்புகளுக்கு அதிகமான இறப்பு விகிதம் காரணமாக அமைகிறது. அதிகமான இறப்புகள் காரணமாக தாங்கள் பெற்றுக் கொள்ளும் குழந்தைகள் அனைவரும் உயிர் வாழமாட்டார்கள், சில குழந்தைகள் இறந்தாலும் சில குழந்தைகள் உயிருடன் இருக்கும் என்ற நம்பிக்கையில் பெற்றோர் அதிக குழந்தைகளைப் பெற்றுக் கொள்கிறார்கள். இதனால் அதிகமான பிறப்புகள் ஏற்படுகின்றன.

## இறப்பு விகிதம்

குழந்தைகள் இறப்பு விகிதம் கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. தேசிய அளவிலான தட்டம்மை, பிளேக், காலரா, மலேரியா போன்ற நோய் தடுப்புத் திட்டங்கள், நவீன மருத்துவ வசதிகள், பஞ்சம், வெள்ளம் போன்ற இயற்கை சீற்றங்களை எதிர்கொள்ளும் நவீன தொழில் நுட்பம், பாதுகாப்பான உணவு விநியோகம் ஆகியவை இறப்புவிகிதத்தை குறைத்துள்ளன. தற்போது இந்திய மக்களின் சராசரி ஆயுட்காலம் 63.8 வயதாக உயர்ந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

### இந்திய மக்களின் சராசரி ஆயுட்காலம்

| ஆண்டு | ஆண்கள் | பெண்கள் |
|---|---|---|
| 1901 | 28.63 | 23.96 |
| 1911 | 22.59 | 23.31 |
| 1921 | 19.42 | 20.91 |
| 1931 | 26.91 | 26.59 |
| 1941 | 32.09 | 31.37 |
| 1951 | 32.45 | 31.66 |
| 1961 | 41.89 | 40.55 |
| 1971 | 46.40 | 44.70 |
| 1981 | 50.90 | 50.0 |
| 1999 | 58.10 | 59.10 |
| 2000 | 62.80 | 63.80 |

**சமூகக் காரணிகள்**

## வாழ்விடம்

அவரவர்கள் வாழும் இருப்பிடம் – கிராமம் மற்றும் நகரம் – குழந்தைகள் பிறப்பு அளவை தீர்மானிப்பதில் முக்கியப் பங்கு பெறுகிறது. கிராமங்களில் அதிகளவாக 3.5%, நகரங்களில் குறைந்தளவாக 2.5% குழந்தைகள் பிறக்கிறார்கள்.

## இளம் வயது திருமணம்

சட்டரீதியான திருமணவயதை அரசாங்கம் நிர்ணயித்திருந்தாலும் அதிகமான பழங்குடி மற்றும் கிராமப்புற பெண்கள் குறைந்த வயதில் திருமணம் செய்துவிக்கப்படுகிறார்கள். பெண் குழந்தைகளின் இளம் வயது திருமணத்தால் இனப்பெருக்க கால அளவு அதிகமாகிறது. இது அதிக எண்ணிக்கையிலான குழந்தைகள் பெறக் காரணமாகிறது.

## கூட்டுக்குடும்ப முறை

கூட்டுக்குடும்ப அமைப்பில் சமூக, பொருளாதார நோக்கில் குழந்தை பிறப்பு மற்றும் வளர்ப்பு ஒரு சுமையாகத் தோன்றுவதில்லை. கூட்டுக்குடும்பம் அதிக குழந்தைகள் பெற ஊக்குவிக்கிறது.

## பெண்களின் கல்வியறிவின்மை

திருமண வயது, கல்வி, கருவுறுதல் ஆகியவற்றிற்கு இடையே நெருங்கிய தொடர்பு உண்டு. கல்வித் தகுதிக்கும் பிறப்பு வீதத்திற்கும் இடையே எதிர்முகத் தொடர்பு இருப்பதை ஆய்வு முடிவுகள் காட்டுகின்றன. பெண்களின் அதிகக் கல்வித் தகுதி அவர்களுடைய கருவுறுதலைக் குறைக்கிறது. இந்தியாவில் பெருமளவு பெண்கள் படிக்காதவர்களாக இருக்கிறார்கள். பெண்களின் கல்வியறிவின்மையும், குறைவான சமூகத் தகுதி நிலையும் அதிக எண்ணிக்கையில் குழந்தைகள் பெற்றுக் கொள்ள காரணமாகிறது.

மத நம்பிக்கை

மக்களின் மத நம்பிக்கை, அதிகப்படியான குழந்தைகள் பெறுவதற்கு ஒரு காரணமாக அமைகிறது. குழந்தைகள் கடவுள் தரும் வரமென்று போதிக்கும் மதங்கள், கருக்கலைப்பு மற்றும் குடும்பக்கட்டுப்பாடுக்கு எதிரான கொள்கைகளைக் கொண்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

**மக்கள் தொகைப் பெருக்கத்தின் விளைவுகள்**

உணவுப் பற்றாக்குறை

மனிதனின் அடிப்படைத் தேவைகளில் முக்கியமானது உணவு. இந்தியாவில் மக்கள் தொகைப் பெருக்கத்திற்கும் உணவு உற்பத்திக்கும் இடையேயான இடைவெளி அதிகரித்து வருகிறது. ஆண்டுக்கு 4 முதல் 5 சதவீதம் வரை உணவுத் தேவை அதிகரித்துக் கொண்டே செல்கிறது. ஆனால் உணவு உற்பத்தி நாளுக்கு நாள் குறைந்து கொண்டே வருகிறது. அதிகளவு விவசாய நிலங்களை அழித்து வீடுகள் மற்றும் வணிக வளாகங்களை உருவாக்குதல், தண்ணீர் பற்றாக்குறை, பழமையான விவசாய உற்பத்தி முறைகள் ஆகியவை உணவு உற்பத்தி குறைந்து வருவதற்கு முக்கியக் காரணங்களாகும். மக்கள் தொகைப் பெருக்கம் உணவு உற்பத்தியில் தன்னிறைவு ஏற்படத் தடையாக இருக்கிறது.

வறுமை

நம் நாடு பொருளாதார வளர்ச்சியில் முன்னேற்றம் அடைந்து வந்தாலும் பெருகிவரும் மக்கள்தொகைப் பெருக்கம் அந்த முன்னேற்றத்தை விழுங்கி விடுகிறது. இந்தியாவில் 70 சதவீத மக்கள் விவசாயம் மற்றும் விவசாயம் சார்ந்த தொழில்களில் ஈடுபட்டுள்ளனர். வறுமைக் கோட்டுக்குக் கீழ் வாழ்ந்த மக்கள் எண்ணிக்கை 1951–ல் 17 கோடியாக இருந்தது. தற்போது 27 கோடியாக உயர்ந்துள்ளது. ஒவ்வொரு வருடமும் புதிதாக 1.08 கோடி மக்கள் இவர்களுடன் சேர்கிறார்கள். இந்தியாவின் சராசரி குடும்ப அளவான 4.2 நபர்கள் மற்ற நாடுகளை ஒப்பிடும் போது மிகவும் பெரியது. மக்கள் தொகைப் பெருக்கத்தின் விளைவாக தனிநபர் வருமானம் குறைகிறது. இதன் காரணமாக மக்களிடையே சேமிப்புக் குறைகிறது; முதலீடும் குறைகிறது.

## குறைந்த வாழ்க்கைத்தரம்

மக்கள்தொகைப் பெருக்கத்தினால் வாழ்க்கைத்தரம் குறைகிறது. நம் நாட்டின் மக்கள் தொகைப் பெருக்கம் காரணமாக உணவு, உடை, உறைவிட தேவைகளும் கூடுகின்றன. குடிநீர் வசதி, சுகாதார வசதி, வீட்டு வசதி, மருத்துவ வசதி, பள்ளி வசதி போதுமானதாக இல்லை. வளர்ந்த நாடுகளை ஒப்பிடும் போது இந்தியர்களின் வாழ்க்கைத்தரம் மிகவும் பின்தங்கிய நிலையில் உள்ளது. அடிப்படைத் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலாமல் போவதால் மக்களுக்கு அதிருப்தி ஏற்படுகிறது.

## குடியிருப்புப் பற்றாக்குறை

மக்கள் தொகைப் பெருக்கத்தினால் வீடுகளின் தேவையும் அதிகரிக்கிறது. இந்தியாவில் ஏறக்குறைய 520 மில்லியன் மக்கள் குடிசைகளிலும், போதிய வசதியில்லாத குடியிருப்புகளிலும் வாழ்கிறார்கள்.

## சுகாதாரக் குறைவு

மக்கள் தொகைப் பெருக்கத்தின் விளைவால் நாட்டின் சுகாதாரம் பாதிக்கப்படுகிறது. பெருகி வரும் மக்கள் தொகைக்கு இணையாக உணவு உற்பத்தி இல்லாத நிலையில் போதுமான உணவு கிடைக்காத மக்களின் உடம்பில் நோய் எதிர்ப்புச் சக்தி குறைகிறது. இதன் விளைவாக மிக எளிதாக நோய்வாய்ப்படுகின்றனர். அதிகமான மக்கள் நோய்களினால் அவதியுறுவதால் நாட்டின் பொருளாதார வளர்ச்சி தடைபடுகிறது.

## வேலையின்மை

நாட்டில் வளர்ச்சித் திட்டங்கள் மூலம் உருவாக்கும் வேலைவாய்ப்புகள் மிகக் குறைவு அல்லது போதுமானதாக இல்லை. போதுமான வேலைவாய்ப்புகள் உருவாகாத நிலையில் ஒவ்வொரு ஆண்டும் வேலை தேடுவோர் எண்ணிக்கை அதிகரித்து வேலையின்மை ஒரு பெரிய பிரச்சனையாக உருவாகி வருகிறது. 2009 ஆம் ஆண்டு கணக்கெடுப்பின்படி வேலையில்லாதோர், வேலைவாய்ப்புக்காகக் காத்திருப்போர், தகுதியான வேலையைத் தேடுவோர் எண்ணிக்கை 10 கோடியாக அதிகரித்துள்ளது.

## கல்வி வாய்ப்பின்மை

பெருகிவரும் மக்கள் தொகையின் காரணமாகப் பள்ளிக்குச் செல்லும் குழந்தைகள் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. ஆனால் மக்கள் தொகைப் பெருக்கத்திற்கு இணையாகக் கல்விக் கூடங்கள் இல்லாததால் பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் படிக்க இடம் கிடைக்காதவர்கள் அதிகரித்து வருகிறார்கள்.

## சுற்றுச்சூழல் பாதிப்பு

மக்கள்தொகைப் பெருக்கம் சுற்றுச்சூழலை அதிகளவில் பாதிக்கிறது. மக்கள் தொகை அதிகரிக்க அதிகரிக்க, இயற்கையின் ·மீதான தாக்கம் அதிகமாகிறது. மக்களின் எண்ணிக்கை, தனி நபரின் சராசரி நுகரும் அளவு, விவசாய உற்பத்தி அளவு, தொழிற்சாலை உற்பத்தி அளவு, தொழில்நுட்பம், மாசுபடுத்துதல் மற்றும் இயற்கை வளங்களை அழித்தல் ஆகியன சுற்றுச்சூழல் பாதிப்பை உருவாக்கும் காரணிகளுள் முக்கியமானவை. காடுகள், நீர்வளம், கடல் வளம், தாதுவளம், மண்வளம் ஆகிய இயற்கை வளங்களை அளவுக்கு அதிகமாகப் பயன்படுத்துவதால் கடுமையான விளைவுகள் உருவாகின்றன. நம் நாட்டின் காடுவளம் ஆண்டு தோறும் சுமார் 1.2% குறைந்து வருகிறது. காடுகளை அழிப்பதால் காலநிலை மாற்றங்கள் ஏற்படுகின்றன; மழை அளவு குறைகிறது; உணவு உற்பத்தி பாதிக்கப்படுகிறது. நீரின் தேவை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. பெருகி வரும் தொழிற்சாலைகள், விவசாயத்திற்கான நீர்ப்பாசன வசதிகள் ஆகியவை நீரின் தேவையை அதிகப்படுத்துகின்றன. தொழிற்சாலைகளிலிருந்து வெளியேற்றப்படும் கழிவுநீர், நீர்நிலைகள் மாசுபடுவதற்குக் காரணமாக அமைகிறது; நீர் ஆதாரங்கள், குளங்கள் அழிகின்றன. போதிய குடிநீர் இன்மையால் மக்கள் அவதியுறுகிறார்கள். காடுகளை அழித்தல், நிலக்கரி, எண்ணெய் போன்றவற்றை எரித்தல், அதிக எண்ணிக்கையில் வாகனங்கள், குளிர்சாதனப் பெட்டி, குளிர்சாதன வசதி பயன்படுத்துதல் போன்றவை காற்று மண்டலத்தில் கார்பன்–டை ஆக்சைடு மற்றும் நச்சு வாயுக்கள் அதிகமாவதற்குக் காரணமாகின்றன. சூரியனிலிருந்து பெறப்படும் வெப்பம் எதிரொலிக்க இந்த வாயுக்கள் காரணமாக அமைகின்றன. புவி வெப்பமடைவதால் வறட்சி, கடலின் நீர்மட்டம் உயர்தல், பனிமலை உருகுதல், பருவ காலநிலை மாற்றங்கள் போன்றவை நிகழ்கின்றன.

## குடும்பக் கட்டுப்பாடு திட்டம்

உலகத்திலேயே முதன் முதலாகக் குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தை அரசாங்கம் வாயிலாக நடைமுறைப்படுத்திய நாடு இந்தியா. நாட்டு மக்களின் சமூக, பொருளாதார வளர்ச்சிக்கு மிகவும் இடற்பாடாக மக்கள் தொகைப் பெருக்கம் உள்ளது என்று உணர்ந்த நிலையில் 1952 ஆம் ஆண்டு குடும்பக் கட்டுப்பாடு திட்டத்தைத் துவங்கியது. இந்தியாவின் குடும்பநலத்திட்ட மக்கள் தொகைக் கொள்கை, பிறப்பு மற்றும் இறப்பு விகிதங்களைக் குறைப்பதை முக்கியமாகக் கருதுகிறது. இத்திட்டம் கணிசமான அளவில் பிறப்பு வீதத்தைக் குறைத்திருக்கிறது. இருந்த போதிலும் இந்தியாவில் குடும்ப நலத்திட்டம் முழு வெற்றி பெறாமைக்கான காரணங்கள்:

குடும்பநலத் திட்டத்தை முழுவதுமாக ஏற்றுக் கொள்ளமுடியாத இந்திய மக்களின் கலாச்சாரம், சமூகப் பொருளாதார இயற்பண்புகள்.

குடும்பநலத் திட்டம் மற்றும் செயலாக்கத்தில் போதுமான ஈடுபாடு, கண்காணிப்பு, தொடர் நடவடிக்கை, ஒருங்கிணைப்பு இல்லாமை.

அதிக அளவு குழந்தைகள் இருந்தால் தங்களது விவசாய வேலைகளில் உதவுவார்கள்; வயதான காலத்தில் பாதுகாப்பாக இருப்பார்கள் என்ற மக்களின் நம்பிக்கையின் விளைவாகக் குடும்ப நலத்திட்டத்தில் அவர்களின் ஈடுபாடு குறைவான குடும்பக்கட்டுப்பாடு திட்டத்தைப் பற்றிய போதுமான விழிப்புணர்வின்மையும், குடும்பகட்டுப்பாடு பற்றிய பயமும் காரணமாக அமைகின்றன.

மக்கள் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்த பிறப்பு வீதம் மிக விரைவாகக் குறைக்கப்பட வேண்டும். மக்கள்தொகையைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வருவது நம் நாட்டின் முன்னேற்றத்திற்கு அவசியமாகும்.

## References

Ahuja, Ram. Social Problems in India. 2nd ed. (Jaipur: Rawat Publications, 1997).

Shankar Rao, C.N. Sociology. 6th Rev.ed. (New Delhi: S.Chand &Co.Ltd., 2010).

# கருப்புப் பணம்

## கருப்புப் பணம்: வரையறை

கருப்புப்பணத்தை "அரசாங்கத்தின் சட்டங்களுக்கும் நடைமுறைகளுக்கும் எதிரான விதத்தில் சம்பாதிப்பதும், பெறுவதும்," எனவும் "அரசாங்கத்திற்குச் செலுத்த வேண்டிய வரியைச் செலுத்தாமல் ஏமாற்றி வைத்திருக்கும் பணம்" எனவும் சங்கர் ராவ் (2010:638) வரையறுத்துள்ளார்.

"கணக்கில் காட்டப்படாத, மறைக்கப்பட்ட வருமானம் மற்றும் வெளிப்படையாகக் காட்டப்படாத, முழுவதுமாகவோ அல்லது பகுதியாகவோ அமுக்கப்பட்ட பணப் பரிவர்த்தனைகள்" என மமோரியா (C.B.Mamoria) வரையறுக்கிறார்.

கருப்புப்பணம், தினந்தோறும் எல்லா இடங்களிலும் கோடிக்கணக்கில் உற்பத்தியாகிப் பெருகி வருகிறது. இது கள்ளச் சந்தை, ஊழல், வரி ஏய்ப்பு போன்றவற்றோடு மிக நெருங்கிய தொடர்பு கொண்டது. குறிப்பாக, "வரி ஏய்ப்பு செய்யப்பட்ட பணமே கருப்புப்பணம்" எனப்படுகிறது. இது "இணைப் பொருளாதாரம்" எனவும், "அங்கீகரிக்கப்படாத பொருளாதாரம்" எனவும், "அதிகாரப்பூர்வமற்ற பொருளாதாரம்" எனவும் கருதப்படுகிறது. சமூகத்திற்கும், நாட்டின் பொருளாதாரத்திற்கும் மிகப் பெரிய தீங்கு விளைவிப்பதால் இது ஒரு சமூக–பொருளாதாரப் பிரச்சனையாகத் திகழ்கிறது.

## கருப்புப் பணத்திற்கான காரணங்கள்

ராம் அஹூஜா, கருப்புப் பணத்திற்கானக் காரணங்களாக கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடுகிறார்:

- அதிகளவு வருமான வரி
- பல்முனை விற்பனை மற்றும் சுங்க வரிகள்
- அரசாங்கத்தின் விலைக் கட்டுப்பாட்டுக் கொள்கை

- பண வீக்கம்

- பொருட்களின் பற்றாக்குறையும், ஒதுக்கீடு அளவும்

- பத்திரப்பதிவு கட்டண ஏய்ப்பு

- தேர்தல் செலவுகள்

சட்டத்திற்குட்பட்ட வழிகளில் சம்பாதித்த பணத்தை முறையாக முழுவதுமாகக் கணக்குக் காட்டாமல் மறைப்பதாலும், சட்டத்திற்குப் புறம்பான கையூட்டு, கள்ளச்சந்தை, கடத்தல், "ஹவாலா" பரிவர்த்தனை ஆகியவைகளால் பெற்ற பணமும் கருப்புப் பணத்தின் ஊற்றுக் கண்களாகத் திகழ்கின்றன.

கருப்புப் பணத்தின் விளைவுகள்

1. அரசாங்க கருவூலத்திற்குச் சேர வேண்டிய வருமானம் தடைப்படுகிறது.

2. நாட்டின் பொருளாதார வளர்ச்சியைத் தடுக்கிறது. பொருளாதார முன்னேற்றத் திட்டங்களையும், திட்டச் செயல்பாடுகளையும் சீர்குலைக்கிறது.

3. நாட்டின் பொருளாதாரத்தைக் கட்டுப்படுத்தும் அரசாங்கத்தின் திறனைக் கட்டுப்படுத்துகிறது.

4. பணவீக்கத்தை அதிகரிக்கிறது.

5. பொருளாதார நிலைகுலைவுக்கு வழி வகுக்கிறது.

6. சமூக ஏற்றத்தாழ்வுகளை ஊக்குவிக்கிறது. ஏழை மேலும் ஏழையாகவும், பணக்காரர்கள் மேலும் பணக்காரர்களாகவும் உதவுகிறது.

7. கையூட்டு, கடத்தல் போன்ற குற்றங்களை வளர்க்கிறது.

8. வறுமைக்கும், வேலையின்மைக்கும் காரணமாகிறது.

வருமான வரி ஏய்ப்பு, கருப்புப் பணம் உருவாகவும், கள்ளச் சந்தையை உருவாக்கவும் வழிகோலுகிறது. இந்தியாவைப் பொறுத்தவரை, வரி ஏய்ப்பு செய்பவர்களின் சொர்க்க பூமியாக வெளிநாட்டு வங்கிகள் செயல்படுகின்றன. வெளிநாட்டில் உள்ள வங்கிகளில் இந்தியா உட்பட பல நாடுகளைச் சேர்ந்தவர்கள், தாங்கள் சட்ட விரோதமாகச் சேர்த்த கோடிக்கணக்கான பணத்தை முதலீடு செய்துள்ளனர். இது 72 லட்சம் கோடி ரூபாய் என மதிப்பிடப்பட்டுள்ளது. இவர்களின் பெயர் மற்றும் விவரங்கள் ரகசியமாக வைக்கப்படுகின்றன. இது முற்றிலும் ஊழல் பணம்; கருப்புப் பணம். சுவிட்சர்லாந்து வங்கிகளில் இந்தியாவைச் சேர்ந்த அரசியல்வாதிகள், தொழிலதிபர்கள் உள்ளிட்டோர் பதுக்கிவைத்துள்ள கருப்புப்பணத்தின் மதிப்பு 1லட்சம் கோடி டாலருக்கு மேல் இருக்கும் எனக் கூறப்பட்டாலும் வங்கிகளில் முதலீடு செய்யப்பட்டுள்ள பணம் பற்றித் தெரிவிக்க சுவிட்சர்லாந்து வங்கிகள் மறுத்து வருகின்றன. வங்கியில் முதலீடு செய்துள்ள தொகை பற்றித் தெரிவிக்க மறுப்பதற்கு அந்த நாட்டுச் சட்டம் வழி செய்கிறது: இது பண முதலைகளைப் பாதுகாக்க ஏதுவாகிறது.

தமது நாட்டில் வரி ஏய்ப்பு செய்த பலர் சுவிஸ் வங்கிகளில் பணத்தைப் பதுக்கி வைத்துள்ளதாகவும், இவ்வாறு ரகசிய கணக்கு வைத்துள்ள தங்கள் நாட்டவர்களின் பெயர், விவரங்களை வெளியிட வேண்டுமெனவும் இந்தியா தொடர்ந்து வலியுறுத்தி வருகிறது. வரி ஏய்ப்பு செய்தவர்கள் பற்றிய தகவலைப் பெற இந்தியா–சுவிட்சர்லாந்து நாடுகளுக்கிடையே உரிய சட்ட நடைமுறைகள் இல்லை. வரி மோசடி மற்றும் வரி ஏய்ப்பு என்ற இரண்டையும் தனித்தனியாக சுவிஸ் வங்கி அணுகுகிறது. சுவிட்சர்லாந்து நாட்டில் வரி ஏய்ப்பு என்பது கிரிமினல் குற்றமல்ல. இந்தக் குற்றத்திற்காக சிறைத்தண்டனை விதிக்கப்படுவதில்லை; மாறாக கடும் அபராதம் மட்டுமே விதிக்கப்படுகிறது. சுவிஸ் வங்கியில் பணத்தை பதிக்கியுள்ள தங்கள் நாட்டவர்களைப் பற்றி எந்த ஒரு நாடு அறிய விரும்பினாலும் அந்த நபர்களின் பெயர் மற்றும் சுவிஸ் நாட்டில் எந்த வங்கியில் அவர்கள் கணக்கு வைத்துள்ளனர் என்ற விவரங்களைத் தெரிவித்தால் மட்டுமே உதவ முடியும் என்ற நிபந்தனையை சுவிஸ் வங்கிகள் கொண்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

வெளிநாடுகளில் பெருமளவில் சட்ட விரோத முதலீடு செய்ததாகவும், ரூ.2000கோடி அளவுக்குச் சட்டத்திற்குப் புறம்பான பணமாற்ற நடவடிக்கைகளில் (Hawala transactions) ஈடுபட்டதாகவும் குற்றச்சாட்டுகள் சுமத்தப்பட்டுள்ள முன்னாள் மாநில முதல்வர் ஒருவர் ”என் மீது கூறப்படும் குற்றச்சாட்டுகள் பொய்யானவை, ஆதாரமற்றவை. இதன் பின்னணியில்

அரசியல் சதி உள்ளது. என் மீதான குற்றச்சாட்டுகள் தொடர்பாக அதிகாரிகளின் விசாரணைக்கு முழு ஒத்துழைப்பு அளிக்கத் தயாராக உள்ளேன். குற்றச்சாட்டுகள் நிரூபிக்கப்பட்டால் அரசியலை விட்டு விலகத் தயார்'' என ஆவேசமாகத் தெரிவித்ததும், ஆனால் அத்தகைய விசாரணைக்குச் சம்மன் அனுப்பியும், ஆஜராகாமல் சட்டத்தின் ஓட்டைகளைப் பயன்படுத்தி ஒளிந்து கொண்டிருப்பதும் சமீபகால வரலாறு. இக்குறிப்பிட்ட அரசியல்வாதி மட்டுமல்லாது இவருக்கு முந்தைய பலரும் இவ்வாறான வீராவேச அறிக்கைகளும் பேட்டிகளும் அளித்ததும், அவர்கள் மீதான குற்றச்சாட்டுகள் நாளடைவில் நீர்த்துப்போகச் செய்யப்பட்டதும், போதிய ஆதாரங்கள் இல்லை என கைவிடப்பட்டதும் மேலும் மேலும் இத்தகையோர் ஊழலில் ஈடுபட ஊக்கம் அளிப்பதாக உள்ளது.

வெளிநாட்டு வங்கிகளில் முதலீடு செய்யப்பட்டுள்ள பல கோடி கருப்புப்பணத்தால் வரி வசூலில் தேக்க நிலை ஏற்படுகிறது. மொத்த உள்நாட்டு உற்பத்தியில் கருப்புப்பணத்தின் பங்கு 40 சதவீதம் என கணக்கிடப்பட்டுள்ளது. இருப்பினும், இது பற்றிய துல்லியமான தகவல்கள் இல்லை. இந்தியாவில் கடந்த 2008 முதல் 'பார்டிசிபேட்டரி நோட்ஸ்' (பிஎன்) எனும் வெளிநாட்டுக் கருப்புப் பணம் அதிகளவில் புழக்கத்தில் உள்ளது. இவை எங்கு அச்சடிக்கப்படுகிறது; எந்த நாட்டின் டாலர் என எந்த ஒரு முறையான தகவல்களும் இல்லை. பெரிய வணிகர்களிடம் மட்டுமே புழங்கும் பிஎன் டாலரால் விலைவாசி கடுமையாக உயர்ந்துள்ளது. இந்தியாவில் சுமார் 60 பில்லியன் டாலர் மதிப்புள்ள பிஎன் டாலர் புழக்கத்தில் உள்ளது. 'இது சூதாட்டப் பணம்' என பாண்டியன் (27.02.10) விமர்சிக்கிறார்.

இந்திய அரசியல் சூழலில் பணபலமும், ஆள்பலமும் தவிர்க்க முடியாத இயல்பாக மாறியுள்ளன. எந்தக் கட்சியானாலும் தேர்தல் களம் இறங்கப் பணம் தேவைப்படுகிறது. ஒவ்வொரு தேர்தலிலும் பணத்தின் தேவையும் அதிகரித்துக் கொண்டே போகிறது. தற்போதுள்ள நிலையில் தேர்தலில் போட்டியிட கோடி ரூபாய் தேவை என்று சொல்லப்படுகிறது. இத்தனை பணத்தையும் திரட்ட அரசியல்வாதிகள் தொழிலதிபர்களை நாடுகிறார்கள். தொழிலதிபர்களும் பணம் தருகிறார்கள்; ஆனால் தாங்கள் வெற்றி பெற விரும்பும் கட்சிக்குத் தொகையைக் கூடுதலாகத் தருகிறார்கள். இப்படிப் பணத்தை வாங்கிய அரசியல் கட்சிகள் ஆட்சியில் அமர்ந்தால் அவர்கள் கேட்பதைச் செய்தாக வேண்டும். இதுதான் அரசியல் கட்சிகள் கொடுத்தாக வேண்டிய நன்றிக் கடன். நன்றி இல்லாத ஆளும்

கட்சியின் நம்பிக்கைத் துரோகத்தை, நம்பிக்கையில்லாத் தீர்மானம் மூலமாக பழிவாங்கவும் தொழிலதிபர்கள் தயங்குவதில்லை.

தேசியக் கட்சியாக இருந்தாலும், பிராந்தியக் கட்சியாக இருந்தாலும் "நன்கொடைகள்" மூலம் வசூலான பணத்தில்தான் மக்களவை மற்றும் பேரவைத் தேர்தல்களைச் சந்திக்கின்றன. அரசியல் கட்சிகளுக்கான நன்கொடைகளில் சுமார் 85 முதல் 90 சதவீதம் வரை ரொக்கமாக வசூலிக்கப்படுகின்றன. கீழ்நிலையில் வசூலாகும் நிதி, கட்சித் தலைமைக்குச் சென்று சேரும் என்பது பொதுவான நம்பிக்கை. ஒவ்வொரு கட்சியும் தனக்கென பிரத்யேகமான நிதி வசூல் முறையைக் கொண்டிருக்கின்றன. யாருக்கும் எந்தக் கட்டுப்பாடும் கிடையாது. நேர்மையான வழியில் பணம் வருவதை உறுதிப்படுத்த முடியாத, உரிய கணக்குகள் இல்லாத இந்த நிதிவசூல் நடைமுறைகளால் அரசியல் அமைப்பு பாதிக்கப்படுகிறது. திடீர் பணக்காரர்கள் தோன்றுகிறார்கள். ஒவ்வோர் அரசியல் குடும்பத்திலும் குறைந்த பட்சம் ஒருவர் பெரிய தொழிலதிபராக வலம் வருகிறார். இப்பணபலம் பல்வேறு தருணங்களில் அரசு நிர்வாகத்தைப் முடக்கி, நிர்வாக அமைப்பையே சிதைக்கும் அளவுக்குப் போகிறது.

தேர்தலுக்கு எந்தெந்தக் கட்சிகள், யாரிடம், எத்தகைய அமைப்புகளிடம் நிதிபெற்றிருக்கிறது என்பதைப் பட்டியலிடுவதுமில்லை; கணக்குகள் முறையாகத் தணிக்கை செய்யப்படுவதுமில்லை. எனவே தங்களுக்கு எப்படி நிதி கிடைத்தது என்பதை ஒரு போதும் அரசியல் கட்சிகள் வெளிப்படையாகக் காட்டுவதே இல்லை. ஒரு காலத்தில் உண்டியல் மூலமும், துண்டு ஏந்தியும் தேர்தல் நிதி வசூல் நடத்துவது கட்சிகளின் வழக்கமாக இருந்தது. வீடு வீடாகச் சென்றும், கடை வீதியிலும் நிதி வசூலித்தபோது மக்களும் தங்களிடம் இருந்த சிறு தொகை, சில்லறை என மனமுவந்து கொடுத்தார்கள். ஆனால் இப்போது நிதிவழங்கும் விழாக்கள் மட்டுமே நடக்கின்றன; பல லட்சங்களும், கோடிகளும் திரட்டியதாகச் சொல்லி வழங்கப்படுகிறது. தேர்தல்களில் செய்யப்படும் செலவுகள் அதிர்ச்சி அளிப்பதாக உள்ளன. பணத்தை தண்ணீராக வாரி இறைப்பது பெரும்பாலான அரசியல் கட்சிகளின் நடைமுறை வாடிக்கையாக ஆகியுள்ளது. கள்ளப் பணம் ஆறாகப் பெருக்கெடுத்து தேர்தல் வெற்றி, தோல்விகளைத் தீர்மானிக்கிறது. பண முதலைகளின் நேரடியான அல்லது மறைமுகமான ஆதரவின்றி அரசியல் கட்சிகள் இயங்க முடியாத நிலை உருவாகியுள்ளது. ஆட்சி அதிகாரத்தைப் பங்கிடுவதிலும், மாற்றி அமைப்பதிலும் இவர்களின் தலையீடு அதிகரித்து வருகிறது. இந்திய நாடாளுமன்றத்திலும், மாநில சட்ட மன்றங்களிலும்

அதிகரித்து வரும் கோடீஸ்வர உறுப்பினர்களின் எண்ணிக்கையே இதற்கு சான்று. ஜனநாயகம் என்ற நிலப்பரப்பை பணநாயகம் என்ற கருமேகங்கள் சூழ்ந்து அச்சுறுத்துகின்றன.

பெரிய தொழில் வர்த்தக நிறுவனங்களும், அரசியல் கட்சிகளும் கூட்டாகப் பண பலத்தை மட்டுமே நம்பி ஆட்சியில் நுழைய முயல்கிறார்கள். தேர்தலில் போட்டியிட, வெற்றி பெற, தேவைப்படும் பெரும் தொகையை அரசியல் கட்சிகளுக்கு தொழில் வர்த்தக நிறுவனங்கள் அளிப்பதன் மூலம் பதிலுக்குப் பெறும் சலுகைகள் பற்றி இந்திய பொதுவாழ்வில் விவாதங்கள் ஏதும் எழுவதில்லை. மேற்கு ஐரோப்பிய நாடுகளில் தேர்தல் செலவிற்காக அரசு கொடுக்கும் மானியமும், தனியார் நிறுவனங்களின் அன்பளிப்பும் கிடைக்கிறது. கூடவே வெளிப்படையான முறையில் நிதி உதவிகள் எந்த முறையில் திரட்டி, பயன்படுத்தப்பட்டன என்று மக்களுக்குத் தெரிவிக்கவும்படுகிறது. அமெரிக்காவில் 1971லும் 1974லிலும் தேர்தலில் பண துஷ்பிரயோகத்தைத் தடுப்பதற்கும் வெளிப்படையோடு செயல்படவும் சட்டங்கள் கொண்டு வரப்பட்டன. இங்கிலாந்தும் 1983, 2000, 2006 ஆண்டுகளில் படிப்படியாகச் சீர்திருத்தச் சட்டங்கள் கொண்டு வந்தது. தேர்தல் நிதிபற்றி அநேக ஊழல் குற்றச்சாட்டுகளை எதிர்கொண்ட ஜப்பானும் 1994ல் சட்டங்கள் கொண்டு வந்தது. அரசாங்கமே தேர்தல் செலவில் பெரும் பங்கை ஏற்றுக்கொண்டு, எஞ்சிய செலவு மட்டும் தனியார் அன்பளிப்பு மூலம் பெறலாம் என்பதை இந்தியா நடைமுறைப்படுத்தவில்லை. அரசியல் கட்சிகளுக்கு அன்பளிப்பு தரக் கூடாது என்றதொரு சட்டம் நம் நாட்டில் இல்லை. அரசியல் கட்சிகள் பெறும் அன்பளிப்புத் தொகையை வெளிப்படையாக அமைத்துக் கொள்ள 2003ல் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின் மூலம் வழி வகுக்கப்பட்டது. ஆனால் உருப்படியான பலன் எதுவும் ஏற்படவில்லை.

கடந்த தேர்தலின் போது அரசியல் கட்சிகள் எல்லாம் தத்தம் கட்சிகளுக்காக போட்ட 'பட்ஜெட்'டுகளின் மதிப்பு மொத்தம் ரூ4000 கோடி என்றும், ஆனால் உண்மையில் ரூ50,000 கோடி செலவழிந்திருக்கும் என்பதும் அநேகரின் கணிப்பு. இந்த ரூ50,000 கோடியில் ரூ15,000 கோடி ஓட்டு "வாங்கு"வதற்காக செலவழிக்கப்பட்ட தொகை எனவும், போக்குவரத்துச் செலவுகள், கூட்டங்கள் நடத்தும் செலவுகள், விளம்பரங்கள், தொண்டர்கள் சம்பளம் போன்றவற்றிற்காக ரூ35,000 கோடி செலவிடப்பட்டிருக்கலாம் எனவும் கணிக்கப்படுகிறது. தேர்தலுக்காக அரசியல் கட்சிகள் செலவழித்த தொகை குறித்த விவரங்களை, தேர்தல் ஆணையத்திடம் குறிப்பிட்ட காலக் கெடுவிற்குள் தாக்கல் செய்ய

வேண்டும் என்ற விதிமுறை காரணமாக ஒவ்வொரு கட்சியும் 2009 தேர்தலின் போது என்னென்ன காரணங்களுக்காகப் பணம் செலவழித்தன என்பது பற்றிய பட்டியலைத் தேர்தல் ஆணையத்திடம் தாக்கல் செய்துள்ளன. இதுவரை 22 கட்சிகள் தங்களின் செலவு கணக்குக் குறித்த விவரங்களை தாக்கல் செய்துள்ள பட்டியலில் ஆளும் காங்கிரஸ் கட்சி முதலிடத்தில் உள்ளது. கடந்த 2004 தேர்தலில் 125 கோடி ரூபாய் செலவழித்திருந்த இந்த கட்சி, 2009 தேர்தலில் 380 கோடி ரூபாய் செலவழித்துள்ளது. இது முந்தைய தேர்தலை விட மூன்று மடங்கு அதிகம். ஒவ்வொரு கட்சியும் இவ்விதமாக செலவு செய்துள்ளன.

**கருப்புப் பணத்தை கட்டுப்படுத்தும் நடவடிக்கைகள்**

1. ஒவ்வொரு குடிமகனும் அரசாங்கத்திற்குச் சேர வேண்டிய வரியை முழுவதுமாக செலுத்தப் பொது மக்களிடையே நேர்மையை வளர்க்க வேண்டும்.

2. கண்காணிப்புடன் அரசு செயல்பட்டு, வரி ஏய்ப்பாளர்களைக் கண்டிப்புடன் தண்டிக்க வேண்டும். நடைமுறையில் இருக்கும் சட்டங்களைக் கண்டிப்புடன் செயல்படுத்த வேண்டும்.

3. வரி ஏய்ப்பாளர்கள் மீது கடும் நடவடிக்கை மேற்கொள்ளப்பட வேண்டும்.

4. சொத்துவரி, வருமான வரி, முதலீட்டு வருவாய் வரி போன்றவற்றின் வரிவிதிப்பை எளிமைப்படுத்த வேண்டும். வரிச் சுமையை குறைப்பதன் மூலம் வரி செலுத்துவோரை ஊக்கப்படுத்தலாம்.

5. கள்ளச் சந்தையை ஒழிக்க, பொருட்களின் விற்பனை மீதான கட்டுப்பாடுகளைத் தவிர்க்க வேண்டும்.

6. வருமான வரித் துறையில் நேர்மையான அதிகாரிகளை மட்டுமே பணியில் அமர்த்த வேண்டும்.

7. பொருளாதார புலனாய்வுத் துறையின் நடவடிக்கைகளை வேகப்படுத்த வேண்டும்.

8. அனைத்து மட்டங்களிலும் ஊழலைத் தடுத்து நிறுத்த உறுதியான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

9. தனியார் துறையின் புது முதலீடுகளையும், ஆடம்பரச் செலவுகளையும் தொடர் கண்காணிப்பின் கீழ் கொண்டு வர வேண்டும்.

10. அரசியல் கட்சிகள் பெறும் நன்கொடைகளையும், தேர்தல் செலவுகளையும் முறைப்படுத்த தேர்தல் ஆணையத்திற்கு மேலும் கூடுதல் அதிகாரம் வழங்க வேண்டும்.

11. வருமான வரித்துறையின் அறிவு சார் விசாரணைத் துறையும், ஒழுங்குமுறைத் துறையும் நவீனத் தொழில் நுட்பத்தைப் பயன்படுத்தி வரி ஏய்ப்பைத் தடுத்து நிறுத்த வேண்டும்.

12. தற்போதைய சட்ட விதிகளின்படி, நிதித்துறையின் வருவாய்பிரிவின் கீழ் இயங்கும் அமலாக்க இயக்குநரகம், நிதி புலானய்வுத்துறை ஆகிய அமைப்புகள் மட்டும் வரி ஏய்ப்பில் ஈடுபடுவோர் மீது நடவடிக்கை எடுக்க முடியும். இந்த அதிகாரத்தை வருமான வரித்துறையின் உயர் அதிகாரிகளுக்கும் வழங்க வேண்டும்.

13. பொருளாதார நிபுணர்கள் மற்றும் வருமான வரித்துறை அதிகாரிகளின் ஒருங்கிணைப்புடன் வெளிநாட்டு வங்கிகளில் முதலீடு செய்யப்பட்டுள்ள இந்தியக் கள்ளப்பணம் குறித்து முழுமையான ஆய்வு நடத்த வேண்டும். வெளிநாட்டு வங்கிகளில் இந்தியாவைச் சேர்ந்தவர்கள் முதலீடு செய்துள்ள தொகை பற்றிய விவரத்தைப் பெற பல வழிகளில் முயற்சி மேற்கொள்ள வேண்டும்.

14. கணக்கில் காட்டாமல் அன்னிய நாட்டு வங்கிகளில் பதுக்கி வைத்துள்ள அரசியல்வாதிகள், தொழிலதிபர்களின் பணம் தொடர்பான விவரங்களை வெளிக் கொண்டுவரவும், இவ்வங்கிகளில் இந்தியர்கள் குவித்துள்ள கருப்புப் பணத்தை மீட்டுக் கொண்டுவரவும், கருப்புப் பணத்தை வெளிநாட்டு வங்கிகளில் முதலீடு செய்வதைத் தடுப்பதற்காக ரகசியங்களை வெளியிடும் வகையிலும் வருமான வரிச் சட்டம் 1961ல் திருத்தங்கள் செய்ய வேண்டும்.

15. ஓட்டு வாங்கக் கொடுக்கப்படும் பணம் வெளிப்படையான தேர்தல் ஒழுங்குமுறைகளைக் கெடுத்து விடுகிறது. “ஓட்டுக்கு நோட்டு” என்ற அருவருப்பான வியாபாரத்தை அடியோடு நசுக்க வேண்டும். ஒரு வேட்பாளர் இந்த வியாபாரத்தில் இறங்கினார் என்பது தெரியவந்தால்,

அந்தத் தொகுதியில் பத்து ஆண்டுகளுக்கு அவர் போட்டியிடும் தகுதியை இழக்கச் செய்யலாம்; அவரது அரசியல் கட்சிக்கு ஐந்து ஆண்டுகளுக்கு அந்தத் தொகுதியில் நிற்கும் வாய்ப்பைப் பறிக்கலாம். இவ்வாறான கண்டிப்பான நடவடிக்கைகளோடு தற்போது நடந்து வரும் தேர்தல் ஊழல் முறைகேடுகளைத் தடுத்து நிறுத்த வேண்டும்.

## References


பாண்டியன், தா. *தினமணி*, 27.02.2010.

Ahuja, Ram. Social Problems in India. 2nd ed. (Jaipur: Rawat Publications, 1997).

Kumar, A. (ed.), Social Problems. (New Delhi: Anmol Publications (P) Ltd., 2002.

Mamoria, C.B. Social Problems and Social Disorganisation in India.

Shankar Rao, C.N. Sociology. 6th Rev.ed. (New Delhi: S.Chand &Co.Ltd., 2010).

# ஊழல்

## வரையறை

ஊழல் "கையூட்டுப் பெறும் செயல்" என எளிய நடையில் வரையறுக்கப்படுகிறது. "ஊழல் என்பது தனிப்பட்ட நலனுக்காக பதவியையும், அதிகாரத்தையும், செல்வாக்கையும் பயன்படுத்துவதன் மூலம் சட்டத்தை மீறுவதும், சமூக நெறிகளிலிருந்து விலகுவதும்" என ராம் அகூஜா (Ram Ahuja, 1997:449) கூறுகிறார். "சுயலாபத்திற்காக – அது பணத்திற்காக இல்லாமலிருந்தாலும் – அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்துவது ஊழல்" என்கிறார் பெய்லி (டக்ளஸ் மற்றும் ஜான்சன்,1971). "ஊழல் என்பது நெறிகள் மற்றும் அரசாங்கப் பணி அல்லது பதவியின் கடமையில் இருந்து தனிப்பட்ட ஆதாயத்திற்காக தவறிய, விலகிய, மாறுபட்ட நடத்தை" என ஸீஃப்டெல் (மைக்கேல், 1983) குறிப்பிடுகிறார். "தனிப்பட்ட லாபங்களுக்காக பதவியை முறைகேடாகவும், தவறாகவும் பயன்படுத்துவது ஊழல்" என ஜெ.நை (J.Nye) கருத்துரைக்கிறார்.

ஊழல் பல்வேறு வடிவங்களாகப் பரந்து விரிந்துள்ளது. அவற்றுள் முக்கியமானவை :

1. கையூட்டு – சட்டத்திற்குப் புறம்பாக நேர்மையற்ற முறையில் ஒருவருக்குச் சாதகமான செயலைச் செய்து அதற்கு ஈடாகப் பணம், பொருள், பரிசு பெறுவது.

2. சொந்த பந்தங்களுக்குச் சாதகமாக, முறையற்ற வழியில் செயல்படுவது.

3. பொதுச் சொத்தை / பணத்தை அபகரித்தல்.

4. அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்தி ஆதரவளித்து பேணுதல்.

5. தகுதியானவரை ஒதுக்கி த் தகுதியற்றவருக்கு சலுகை அளித்தல்

அரசாங்கத்திலும், பொது வாழ்விலும் ஊழல் பெருக்கெடுத்து சமூகத்தின் அடித்தளத்தையே அரித்து வருகிறது. ஊழல் அனைத்து மட்டங்களிலும் காணக் கூடியதாக உள்ளது. சுயலாபத்திற்காக, முறையற்ற

வழிகளைப் பயன்படுத்திக் காரியம் சாதிக்க எத்தனிப்பதால் ஊழல் உருவாகிறது.

**ஊழல் நடத்தையின் கூறுகள்**

1. சுயலாபத்திற்காக குறுக்கு வழியில் செயலாற்றுதல்.

2. முறையற்ற, நேர்மையற்ற நோக்கத்தை அடைவதற்காக கையூட்டாக பணத்தையோ, பொருளையோ கொடுத்தல்.

3. தகுதியற்றவனுக்குச் சாதகமாக செயல்பட்டு, தகுதியானவனுக்கு அநீதி வழங்குவது.

4. ஒட்டுமொத்த சமூகத்திற்கும் தீமை விளைவிப்பது.

ஊழலில் தனிமனிதர்களும், குழுக்களும் தனித்தனியாகவோ அல்லது இணைந்தோ இருவழிப்பாதையாக "கொடுத்தலும், பெறுதலும்" என்ற அடிப்படையில் இருசாராரும் நன்மை அடைய அனைத்து விதமான நேர்மையற்ற, நெறிகளற்ற வழிமுறைகளை மேற்கொள்கிறார்கள். முறையற்ற வழிகளில் சுயலாபத்திற்காகப் பதவியையும், அதிகாரத்தையும், செல்வாக்கையும் பயன்படுத்துவதை மட்டுமல்லாமல் கையூட்டு கொடுக்கல், வாங்கல் நடவடிக்கைகளையும் ஊழல் குறிக்கிறது.

ஊழல்நடத்தை பேராசையைக் குறிக்கிறது. தன் தகுதிக்கும், திறமைக்கும் மேல் அதிகமாகவே ஒருவன் ஆசைப்படுவதால் இது தவிர்க்க இயலாததாகிறது. பணமே குறிக்கோளாகவும் கருவியாகவும் செயலாற்றி, இருப்பவரிடமும் இல்லாதவரிடமும் தாக்கத்தை ஏற்படுத்துகிறது. இருப்பவன் இதைப் பயன்படுத்தி மேலும் வளமாகவும், அதிகாரத்துடனும் வாழ்கிறான்; வசதியில்லாதவன் கொடுக்க இயலாததால் தாழ்வான நிலையிலேயே தொடர்ந்து இருக்கிறான். ஒரு சிலர் வாழ, பலரையும் பலியாக்குகிறது ஊழல். ஆளும்வர்க்கத்தினர் விளிம்புநிலையில் உள்ள ஏழ்மையானவர்களைத் தங்களின் பிடியில் தொடர்ந்து வைத்திருக்க ஊழல் உதவுகிறது.

ஊழலில் பொதுவான நடைமுறையாகக் கையூட்டு – பணம் அல்லது பொருள் – திகழ்கிறது. அது மேல்மட்டத்தில் இருந்து கீழ்மட்டம் வரை ஊடுருவினாலும் கையூட்டு பெற்றதற்காகப் பிடிபடுபவர்கள் மிகச் சிலரே.

அதுவும் கீழ்மட்டத்தில் இருப்பவர்களே பிடிபடுகிறார்கள். மேல்மட்டத்தில் இருப்பவர்கள் பல்வேறு வழிகளில் தப்பித்து விடுகிறார்கள். எப்படியாவது காரியத்தைச் சாதிக்க கையூட்டு ஒரு கடவுச்சீட்டாகக் கருதப்படுகிறது. வருமான வரி ஏய்ப்பும் ஒரு ஊழல் நடத்தையே. அது கருப்புப் பணம் உருவாகவும், கள்ளச் சந்தையை உருவாக்கவும் வழிகோலுகிறது. கலப்படம் என்ற மற்றொரு ஊழல் நடத்தை, உணவுப்பொருட்கள் முதல் கட்டுமானப் பொருட்கள் வரை எதையும் விட்டு வைப்பதில்லை. சந்தானம் கமிட்டி அறிக்கை பெருகிவரும் ஊழலை வெளிச்சத்திற்குக் கொண்டு வந்து, இதைத் தடுக்க வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியுள்ளது.

**இந்தியாவும் ஊழலும்**

கௌடில்யர் தனது அர்த்தசாஸ்திரம் நூலில் அரசு வருமானத்தை அரசாங்க நிர்வாகத்தில் இருப்பவர்கள் சுருட்டுவதைக் குறிப்பிட்டுள்ளார். அரசாங்கப் பணியாளர்களின் நாற்பது வகையான சுருட்டல் வகைகளையும், ஊழல் நடத்தைகளையும் அவர் குறிப்பிடுகிறார். அசோகர் காலத்தில் குறைவான அளவு ஊழல் இருந்ததாக மஜூம்தார் (Majumdar, 1960:113) கூறுகிறார். காலனி ஆதிக்கத்தில் வரிவசூல் செய்யும் அதிகாரம் ஒரு சிலரிடமே இருந்ததால் ஊழல் புரிவதற்கான வாய்ப்பு குறைவாகவே இருந்துள்ளது. ஆங்கிலேயர் ஆட்சிக்காலத்தில் அரசாங்கப் பணிகளில் இருந்த இந்தியர்கள் மட்டுமின்றி ஆங்கிலேயர்களும் லஞ்சம் பெற்றுள்ளார்கள். உதாரணமாக உயர்பதவியில் இருந்த ராபர்ட் கிளைவ், வாரன் ஹேஸ்டிங்ஸ் போன்றோர் ஊழல் புரிந்ததைக் கண்டுபிடிக்கப்பட்டு அவர்கள் இங்கிலாந்து திரும்பியவுடன் பாராளுமன்றக் கமிட்டியால் விசாரணைக்கு உட்படுத்தப்பட்டிருக்கிறார்கள். முதலாம் மற்றும் இரண்டாம் உலகப் போர்கள் காலத்தில் விரிவடைந்த பொருளாதார நடவடிக்கைகள், பொருட்களுக்கான கட்டுப்பாடுகள், தட்டுப்பாடு காரணமாக இந்தியாவில் ஊழலின் புது ஊற்றுக்கண்களைத் திறந்துவிட்டது (ஹல்லயா, 1948:13–51).

சுதந்திரத்திற்குப் பின்னர் அரசியல் மற்றும் அதிகார உயர்மட்டங்களில் கொஞ்சம், கொஞ்சமாகவும், கீழ்மட்டங்களில் விரைவாகவும் ஊழல் பரவத் தொடங்கியது. கடந்த 40 ஆண்டுகளில் பிரதமர்கள், முதலமைச்சர்கள் மத்திய மாநில அமைச்சர்கள் உள்ளிட்ட அரசியல்வாதிகளும் பலதுறைகளின் உயர்மட்ட அரசாங்க அதிகாரிகள் பலரும் ஊழல் குற்றச்சாட்டுக்கு ஆளாகியுள்ளனர். அரசு சாரா ஜெர்மானிய அமைப்பான 'ஒளிவுமறைவற்ற சர்வதேசம்' 15 ஆண்டுகளுக்கு முந்தைய தனது கணிப்பில் உலகத்திலேயே ஊழல் மிகுந்த நாடுகளில் இந்தியா 7வது

இடத்தில் இருப்பதாகத் தெரிவித்தது. அந்த இடத்திலிருந்து படிப்படியாக இன்னும் முன்னேறி வருகிறது. இந்திய அரசாங்கத்தின் எந்த துறைகளிலெல்லாம் பணம் அதிகமாகப் புழங்குகிறதோ, எங்கெல்லாம் வெளிப்படையாக இல்லாத திரை மறைவு நடவடிக்கைகளுக்கு வாய்ப்பு இருக்கிறதோ, அதிகாரத்தைத் தவறாகப் பயன்படுத்த வழிமுறைகள் இருக்கிறதோ அங்கெல்லாம் லஞ்சமும், ஊழலும் பல்கிப் பெருகுகின்றன. நேர்மையான அரசியல்வாதிகள் குறைந்து, நேர்மையற்றவர்கள் பெருகிப் போனதால் அரசியலும் ஊழலுக்கு முக்கிய காரணமாகிவிட்டது. பியாயமற்ற, நெறிகளற்ற தேர்தல் கூட்டணிகள், வரம்புக்கு மீறிய தேர்தல் செலவுகள், ஆட்சிக் கவிழ்ப்புகள், கட்சித் தாவல்கள் என அனைத்திலும் ஊழல் ஊடுருவியுள்ளது. அரசியலும், அரசியல்வாதிகளும் ஊழலாகிப் போனதை சகித்துக் கொண்டு, சகஜமானதென நினைக்கும் மனப்பான்மைக்கு இந்திய மக்கள் ஆட்பட்டிருக்கிறார்கள்.

பசிக்காக ரொட்டி திருடுபவனை அக்கறையாகத் தண்டிக்கும் நம் நாட்டுச் சட்டம், நாட்டையே கொள்ளையடித்து நாசம் செய்யும் ஊழல் பெருச்சாளிகளைக் கண்டும், காணாமலும் விட்டு விடுகிறது. அவர்கள் எல்லாம் அரசியல் பெருந்தலைகளுக்கோ அல்லது அதிகார மையத்திற்கு நெருக்கமானவர்கள் என்பதே காரணம். ராணுவத்தளவாடங்கள் வாங்கியதிலிருந்து, மாட்டுத்தீவனம், உரம், தொலைதொடர்பு அலைக்கற்றைகள் உள்ளிட்ட கோடிக்கணக்கான பணம் தொடர்பான பலநூறு ஊழல் புகார்கள் வெளிச்சத்திற்கு வந்திருந்தாலும் கூட, சாக்ளா விசாரணைக்குழு முதல் தாஸ் விசாரணைக் குழு, சர்க்காரியா விசாரணைக் குழு, சங்கரானந்த் விசாரணைக்குழு உள்ளிட்ட குழுக்கள் அறிக்கைகள் அளித்திருத்தாலும் கூட, ஊழலுக்காக தண்டிக்கப்பட்ட அரசியல்வாதிகளும், அதிகாரிகளும் ஓரிருவரே என்ற கசப்பான உண்மை இன்றைய நிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

இந்தியா தான் உலகிலேயே பெரிய ஜனநாயக நாடு என்று பெருமைப்பட்டுக் கொள்ளப்படுகிறது. ஆனால் அந்த ஜனநாயகமே இன்று மிகப்பெரும் ஆபத்தைச் சந்தித்துக் கொண்டிருக்கிறது. சமுதாயச் சூழ்நிலையை மாசுபடுத்தித் தாழ்வுறச் செய்யும் ஊழல் சக்திகளை அடக்கி வைக்க முடியவில்லை என்பதோடு மட்டுமல்லாது, குற்றப் பின்னணி கொண்டோருக்கும் அரசியலுக்கும் நெருங்கிய தொடர்பும் உருவாகியுள்ளது. சட்டமன்றங்களுக்கும், நாடாளுமன்றத்திற்கும் போக்கிரித் தலைவர்களை அரசியல் கட்சிகள் வேட்பாளர்களாகவும் நிறுத்துகின்றன. இதனால் இவர்களுக்கு புதிய மரியாதையும், மதிப்பும்

கிடைக்கிறது. இவர்கள் அரசாங்க உயர் அதிகாரிகளுடன் நெருங்கிய தொடர்பு கொண்டு, தங்களது காரியங்களைச் சுலபமாகக் கையூட்டு அளித்து நிறைவேற்றிக் கொள்கிறார்கள்.

ஊழல் அங்கிங்கெணாதபடி உலகளாவிய தன்மையாகி ஏறத்தாழ அனைத்து நாடுகளிலும் பரவியுள்ளது. பல ஆண்டுகளாகவே ஊழல் மலிந்துள்ள உலகநாடுகளின் வரிசையில் இந்தியாவும் முக்கிய இடத்தை வகித்து வருகிறது. இந்தியா என்றால் ஊழல்; இந்தியர்கள் என்றால் லஞ்சம் கொடுப்பவர்கள், பெறுபவர்கள் என்ற பெயர், நம் நாட்டில் மட்டுமல்ல, வெளிநாடு வரை கொடிகட்டிப் பறக்கத் தொடங்கியிருப்பது, 2009ம் ஆண்டுக்கான சர்வதேச ஊழல் அறிக்கையின் மூலம் தெளிவாகிறது. உலகளாவிய ஊழல் பட்டியலில் இந்தியா 84வது இடத்தில் உள்ளதாக 'டிரான்ஸ்பரென்சி இண்டர்நேஷனல்' என்ற சர்வதேசக் கண்காணிப்பு தன்னார்வ அமைப்பு புள்ளிவிபரங்களின் அடிப்படையில் தயாரிக்கப்பட்டுள்ள தனது பட்டியலில் தெரிவித்துள்ளது. 2004ஆம் ஆண்டில் மொத்தம் உள்ள 180 நாடுகளில் 90வது இடத்தில் இருந்த இந்தியா கடந்த 5ஆண்டுகளில் ஊழல் அதிகரித்துவிட்ட நிலையில் 84வது இடத்திற்கு முன்னேறியுள்ளது.

"நாட்டில் 1050 சிறிய கட்சிகள் உள்ளன. இவற்றில் பெரும்பாலான கட்சிகள் தேர்தலில் போட்டியிடுவதில் அக்கறை காட்டாத, போட்டியிடாத, பெயரளவில் மட்டுமே செயல்படுபவை. கட்சிகளைப் பதிவு செய்யும் அதிகாரம் மட்டுமே தேர்தல் கமிஷனுக்கு உண்டு. அவற்றின் பதிவை ரத்து செய்யும் அதிகாரம் கிடையாது. இப்படிப்பட்ட 'லெட்டர் பேடு' கட்சிகளின் எண்ணிக்கை அதிகரிக்காமல் தடுக்க மத்திய அரசு நடவடிக்கை எடுக்க வேண்டும். கிரிமினல் பின்னணி உடையவர்கள் தேர்தலில் போட்டியிடுவதை தடை செய்ய வேண்டும்" என தலைமைத் தேர்தல் ஆணையரே சமீபத்தில் யோசனை தெரிவித்துள்ளார்.

**ஊழலுக்கான காரணங்கள்**

ஊழலுக்குப் பல்வேறு காரணங்கள் ஊற்றுக்கண்களாக உள்ளன. அவற்றுள் முக்கியமானவை:

அனைவருக்கும் சமமான வாய்ப்புகள் இல்லாமல் இருப்பது

வறுமை

குறைந்து வரும் நல்லொழுக்கம்

கடமை தவறுதல்

சம்பாதிக்கும் முனைப்பு

பொருள்மயமான வாழ்க்கை அமைப்பு

சுயநலம்

கடுமையான தண்டனையின்மை

"ஆள்பவர்களுக்கும், ஆளப்படுபவர்களுக்குமான இடைவெளி அதிகரிக்கும்போது அது ஒட்டுமொத்த ஊழலுக்கும் காரணமாகிறது" என்கிறார் செகல் (Segal).

ஊழலுக்கான முக்கியக் காரணங்களாக ராம் அகூஜா (Ram Ahuja, 1997:463-65) கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடுகிறார்.

1. நாட்டு நலனை விடத் தமது சொந்த நலனை முன்னிறுத்திச் செயல்படும் புதிய தலைமுறை அரசியல்வாதிகள்.

2. மக்கள் நலனை மையப்படுத்தாத, சுய லாபத்திற்காகச் செயல்படும் அதிகார வர்க்கம்.

3. அரசின் தவறான பொருளாதாரக் கொள்கைகளும், திட்டங்களும், ஒளிவு மறைவான செயல்முறையாக்கமும்.

4. செயற்கையாகப் பற்றாக்குறையை உருவாக்குவதன் மூலம் அத்தியாவசியப் பொருட்களின் தட்டுப்பாட்டை ஏற்படுத்தி பதுக்கல், கள்ளச் சந்தை, கொள்ளை லாபம் பெற வழிவகுப்பது.

5. நிர்வாகப் பொறுப்பில் இருப்பவர்களிடம் அரிதாகிப் போன நேர்மை, சேவை மனப்பான்மை, தியாகம், நல்லொழுக்கம்.

6. பொறுப்பற்ற, கண்காணித்தல் இல்லாத, திறமையற்ற நிர்வாக அமைப்பு.

ஊழலுக்கான காரணங்களைப் பொருளாதார, சமூக, அரசியல், சட்டம் மற்றும் நீதித்துறை சார்ந்தவைகளாக வகைப்படுத்தலாம்:

1. பொருளாதாரக் காரணங்களாக ஆடம்பர வாழ்க்கையில் வேட்கை, லாப நோக்கம், பணவீக்கம், ஒளிவுமறைவான அனுமதி அளிக்கும் முறை, நேர்மையற்ற வர்த்தக நிறுவனங்கள்.

2. சமூகக் காரணங்களாக பொருளாசையான வாழ்க்கை, சமூக விழுமியங்கள் மதிப்பிழத்தல், கல்வியறிவின்மை, எஜமானத்தன்மையின் எச்சம், மக்களின் சகிப்புத்தன்மை, பொதுமக்களின் பாராமுகம், சுரண்டலான சமூக அமைப்பு.

3. அரசியல் காரணங்களாக திறமையற்ற அரசியல் தலைமை, அரசியல் நேர்மையின்மை, முறைகேடான தேர்தல் நிதி வசூல், கிரிமினல்கள் – அரசியல்வாதிகள் கூட்டு, அரசியல் பண்பாட்டு சீரழிவு.

4. சட்டம் சார்ந்த காரணங்களாகப் போதுமானதாக இல்லாத வீரியமற்ற சட்டங்கள், சட்டத்தில் ஓட்டைகள், சட்டங்களைச் செயல்படுத்துவதில் சிரமங்கள்.

5. நீதித்துறை சார்ந்த காரணங்களாக அதிகக் காலமும், பணமும் விரயமாகும் நீதிமன்ற நடைமுறைகள், நீதித்துறையின் பாரபட்சம், நடுவர்களிடையே காணப்படும் பொறுப்பின்மை, நடைமுறைக் கோளாறுகள் காரணமாகக் குற்றத்திலிருந்து விடுவிக்கப்படும் போக்கு.

ஊழல் பெருகுவதற்கானக் காரணங்களாகக் குன்னார் மிட்ரல் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடுகிறார்:

1. ஒட்டுமொத்த சமூகத்திற்கும் – உள்ளூர் முதல் தேசிய அளவுவரை – விசுவாசமாக இல்லாதிருத்தல். இது பாரபட்சம் காட்டுவதற்கும், சமூக ஒழுங்கு குறைவதற்கும் வழிவகுக்கிறது.

2. காலனி ஆதிக்கதிலிருந்து விடுபட்டு சுய ராஜ்யம் மலர்ந்த போது நிகழ்ந்த சமூக செயல் இயக்கத்தினால் உருவான அதிக வாய்ப்புகளும், இடையூறுகளும்.

3. ஒரு சிலரிடம் குவியும் சகலக் கட்டுப்பாடுகளும், அதிகாரங்களும்.

4. அரசாங்கத்தின் கீழ் மற்றும் நடுத்தர அலுவலர்களின் குறைவான ஊதியம்.

5. ஊழல், ஊழலை வளர்க்கும் விதமான நிர்வாக அமைப்பு.

6. ஊழல் எந்த அளவு பரந்து, விரிந்துள்ளது என்பதைக் கணக்கிடுவது எளிதானதல்ல. கண்களுக்குப் புலனாகும் மற்றும் புலனாகாததாக இது உள்ளது. பண்பாட்டின் ஒரு பகுதியாகவே ஊழல் மாறிவிட்டதால் அவற்றைக் கண்டறிவதும் எளிதாக இல்லை. ஊழலுக்குத் துணை போகாத, உடந்தையாக இல்லாத, கையூட்டுப் பெறாத ஒருவர் 'பிழைக்கத் தெரியாதவராகக்' கருதப்படுவதோடு மட்டுமல்லாமல் அத்தகையோர் களை எடுக்கப்பட்டு, சமயங்களில் உயிருக்கே பாதுகாப்பில்லாத நிலைக்கு ஆளாக்கப்படுகிறார்கள்.

நம் நாட்டில் அனைத்து நிலையிலும் கையூட்டும், ஊழலும் புரையோடிப் போயிருகின்றன. இந்தியத் தண்டனைச் சட்டம் பிரிவு 161ன் படி, அரசாங்க ஊழியர் கையூட்டு பெற்றால், மூன்று ஆண்டு தண்டனை. 162 பிரிவின்படி கையூட்டு வாங்குவது மட்டுமின்றி, கையூட்டு கொடுப்பதும் குற்றம். அரசு அலுவலுக்காக ஓராண்டுக்கு கிட்டத்தட்ட ஆயிரம் கோடி ரூபாய் லஞ்சமாக பொதுமக்கள் வழங்குகின்றனர் எனக் கணிக்கப்பட்டுள்ளது. 'யாரோ வாங்கிக் கொண்டு போகட்டும்; நம் வேலை ஆனால் சரி' என மக்கள் இயல்பாக நினைக்கத் தொடங்கி விட்டனர்.

ஹாங்காங் நாட்டைச் சேர்ந்த "அரசியல் பொருளாதார அபாயங்கள் குறித்த ஆலோசனை அமைப்பு" அரசு அதிகாரிகளின் செயல்பாட்டுத் திறனின் அடிப்படையில் ஆசிய நாடுகளின் அரசு நிர்வாகம் குறித்து அண்மையில் நடத்தியுள்ள ஆய்வில், ஆசியாவிலேயே மிக மோசமான அரசு அதிகாரிகளைக் கொண்ட நாடுகள் பட்டியலில் மோசமான இடத்தை இந்தியா பெற்றுள்ளது. இந்தியாவின் வளர்ச்சித் திட்டங்களுக்கு முட்டுக்கட்டை போடும் இத்தகைய அதிகாரவர்க்கத்தின் மெத்தனப்போக்குதான் பெரும்பாலான தேக்கங்களுக்குக் காரணம் என்பதை அந்த அமைப்பு உறுதிப்படுத்தி உள்ளது. அரசு அதிகாரிகளிடம் தொடர்பு கொள்வது என்பது ஓர் இந்தியக் குடிமகனை மிகவும் விரக்தி கொள்ளச் செய்யும் கசப்பான அனுபவமாகவே இருக்கும் என்பதையும் அந்த

அமைப்பு சுட்டிக்காட்டுகிறது. அரசு நிர்வாக இயந்திரத்தைச் சீர்படுத்தும் முயற்சிகள் நிறைவேற்ற முடியாமல் போவதற்கு "அசைக்க முடியாத அதிகார மையமாக" அதிகாரவர்க்கம் உருவெடுத்திருப்பதே காரணம் எனவும் அந்த அமைப்புத் தெரிவித்துள்ளது. நாட்டின் வளர்ச்சிக்கு எதிராக, அதன் நாடி நரம்புகள் அனைத்திலும் ஊடுருவி செல்லரித்து வரும் சுரண்டலுக்கும், ஊழலுக்கும் அரசியல்வாதிகள் மட்டுமே காரணம் அல்லர்; அதன் சூத்திரகாரிகளாக இருந்து இயக்கிவரும் அரசு அதிகாரிகளும் தான். உளவியல் ரீதியாக சுரண்டலுக்குப் பழகிவிட்ட நமது அரசு, நிர்வாக இயந்திரத்தின் அதிகார வர்க்கம் அரசியல்வாதிகளின் முறைகேடுகளுக்கு ஒத்துழைக்கிறது. அதிகாரிகளின் உறுதுணை இல்லாமல் இங்கு எந்த ஊழலும் அரங்கேற முடியாது என்பது அழுத்தமான உண்மை.

2009 செப்., 18ல் மத்திய லஞ்ச ஒழிப்பு ஆணையம் டில்லியை மையமாக வைத்து முதல்முறையாக 123 ஊழல் அதிகாரிகளின் பெயர்களையே தனது இணையதளத்தில் வெளியிட்டுள்ளது. இவர்களின் தகுதிகளும், பணிப் பொறுப்புகளும் அதிர்ச்சியடைய வைக்கின்றன. இப்படிப் பெயர்களை வெளியிட்டாலும், அவர்கள் பிணையம், வாய்தா, மேல் முறையீடு போன்ற சட்ட நுணுக்கங்களின் அனுகூலத்தால் வெளியே வருவதும், பழையபடி பணிக்கே சில அதிகாரிகள் திரும்புவதும் வாடிக்கையாகி வருகின்றன. எடுத்துக்காட்டாக, கடந்த 2006–07ல் அரசு ஊழியர்கள் 700 பேர் மீது ஊழல் வழக்கு பதிவு செய்ததில், தண்டிக்கப்பட்டோர் 81 பேர்தான்; 2007–08ல், 2,289 பேரில், 65 பேர் மட்டுமே தண்டனை பெற்றவர்கள். 2006–07ல் பதிவான, 6,292 ஊழல் புகாரில், 29 பேரும்; 2007–08ல், 7,591 ஊழல் புகாரில், 45 பேரும்; 2008–09ல் 7,322 ஊழல் புகாரில், 40 பேர் மட்டுமே தண்டிக்கப்பட்டுள்ளனர்.

"வழக்குத் தொடுப்பதற்கு அரசியல் அனுமதி பெறுவது, பெரும் அளவிலான சாட்சிகளைத் திரட்ட நேரிடுவதால் ஏற்படும் தாமதம் ஆகியவை ஊழல் தடுப்பு அமைப்புகளுக்கு இடையூறாக உள்ளன. 9,000 ஊழல் வழக்குகள் அப்படியே 10 ஆண்டுகளாகத் தேங்கிக் கிடக்கின்றன. வழக்குத் தொடர அனுமதி அளிக்கும் முறையில் விரைவு தேவை" என முன்னாள் உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதி கே.ஜி.பாலகிருஷ்ணன் குறிப்பிட்டுள்ளார். "இந்திய அரசியல் நிர்ணயச் சட்டத்தின் பிரிவுகள் 309, 310, 311 ஆகியன ஐ.ஏ.எஸ்., ஐ.பி.எஸ். அதிகாரிகள், எம்.எல்.ஏ., எம்.பி.,க்கள், அமைச்சர்கள் ஆகியோர் மீதான கையூட்டு, ஊழல் தொடர்பான விசாரணையைத் தொடங்குவதைத் தவிர்க்கின்றன; தாமதப் படுத்துகின்றன" என இதுபற்றி விரிவாக எழுதியுள்ள பி.சி.அலெக்சாண்டர்,

மேற்கண்ட சட்டப்பிரிவுகளில் உரிய மாற்றங்களைக் கட்டாயம் கொண்டு வர வேண்டும் எனவும் வற்புறுத்துகிறார்.

லஞ்சமும், ஊழலும் அரசு இயந்திரத்தில் தலைவிரித்தாடியதையும், முறையற்ற வழிகளில் ஏராளமான சொத்துக்களை வாங்கிக் குவித்த அதிகாரிகளைக் கட்டுப்படுத்தி களை எடுப்பதற்காக அதுவரை நடைமுறையில் இருந்த இந்திய குற்ற நடத்தை சட்டம் மற்றும் குற்றவியல் நடைமுறைச் சட்டம் ஆகியவற்றால் இயலாமல் போனதால் கடுமையான ஷரத்துக்களுடன் 1947ஆம் ஆண்டு ஊழல் தடுப்புச் சட்டம் நிறைவேற்றப்பட்டது. காலத்தின் தேவைக்கேற்ப இச்சட்டம் 1988ஆம் ஆண்டு திருத்தம் செய்யப்பட்டு மேலும் கடுமையாக்கப்பட்டது. 1947ஆம் ஆண்டு சட்டத்தில் குறிப்பிடப்பட்ட அனைத்து ஊழல் நடவடிக்கைகளையும் – கையூட்டு, பொதுச் சொத்தை அபகரித்தல், கைமாறாகப் பலன் பெறுதல், வருமானத்திற்கு அதிகமாகச் சொத்து சேர்த்தல் – இந்த சட்டம் ஏற்றுக் கொண்டு, ‘பொது ஊழியர்’ என்ற வகையினத்தில் பல்வேறு ஊழியர்களையும் – மத்திய, மாநில, யூனியன் பிரதேச அரசு ஊழியர்கள், பொதுத்துறை நிறுவனங்கள், நாட்டுடமையாக்கப்பட்ட வங்கிகள், மத்திய, மாநில அரசுகள் மற்றும் உள்ளாட்சி நிர்வாகத்தில் இருந்து நிதி பெறும் அமைப்புகளில் பணியாற்றும் ஊழியர்கள் – இணைத்து இச்சட்டத்தின் கீழ் கொண்டு வந்துள்ளது.

ஊழல் தடுப்புச் சட்டம் 1947 மற்றும் அதன் திருந்திய வடிவமான 1988ன் படி பதிவு செய்யப்படும் மற்றும் தண்டிக்கப்படும் குற்றவாளிகள் எண்ணிக்கை நீருக்கு வெளியில் தெரியும் பனிக்கட்டி அளவே என்றால் அது மிகையாகாது. ஊழலும், தில்லுமுல்லுகளும் அரசியலிலும், அரசு நிர்வாகத்திலும் நிரந்தர இடம் பெற்றுள்ளன. பேரத் தொகை, கமிஷன், சலுகை ஒப்பந்தங்களிலிருந்தும், முதலீடுகளிலிருந்தும் குறிப்பிட்ட சதவீத மாமூல் வசூல் ஆகியவை அரசியல் மற்றும் அரசு மேல்மட்டங்களில் எழுதப்படாத விதியாகவே ஆகியுள்ளது. சட்டத்திற்குப் புறம்பான செயல்களுக்காக மட்டுமல்லாது சட்டத்திற்குட்பட்ட, அனுமதிக்கப் பட்டவற்றை ஒருவர் பெறவேண்டுமென்றால் கூடக் கையூட்டுக் கொடுக்க வேண்டியுள்ளது.

அரசு நிர்வாகமும், அரசுத் துறைகளும், தேர்தல்களும், தேர்ந்தெடுக்கப்படும் அரசியல்வாதிகளும் ஊழலின் ஊற்றுக்கண்களாக இருக்கிறார்கள். இவர்களிடம் தொடங்கிய ஊழல் காவல் துறை, நீதித்துறை உட்பட்ட அனைத்து துறைகளுக்கும் பற்றிவிட்டது. ”நீதித்துறையில் 26

சதவீத அளவுக்கு ஊழல் மலிந்து கிடக்கிறது" என முன்னாள் உச்ச நீதிமன்ற நீதிபதி கீர்பால் தெரிவித்துள்ளது இங்குக் கவனிக்கத்தக்கது.

தேர்தலுக்கு முன் இருந்த ஆளுங்கட்சியினர் மீது போட்ட ஊழல் வழக்குகள், ஆட்சி மாறும் போது அக்குற்றஞ்சாட்டப்பட்டவர்கள் அரசியல் காரணங்களுக்காக விடுவிக்கப்படுகின்றனர். ஊழல் குற்றம் சாட்டப்பட்டவரைத் தேர்தலில் போட்டியிட அனுமதிப்பதும், இன்னும் வழக்கு நீதி மன்றத்தில் விசாரணை நிலையில் தான் இருக்கிறது என்று அவரை அமைச்சராக்குவதும், முதல்வராக்குவதும் ஊழல் தலைமை இடத்திலேயே கோலோச்ச இடம் தந்துவிடுகிறது. இந்நிலையில், அடிமட்டத்தில் ஊழலை ஒழிக்க வாய்ப்பின்றிப் போய் விடுகிறது. சீன ஞானி கன்பூசியஸ் சொன்ன "தலைமையிடம் நேர்மை இருந்தால் தான், ஏனைய எல்லா இடங்களிலும் நேர்மை பரவும்" என்ற கருத்து இங்கே மிகப் பொருந்தும்.

ஊழல் புரிவோருக்கு கடவுள் பயமும் இல்லை; கர்ம வினை பயமும் இல்லை. சட்டத்தின் சந்து பொந்துகள் வழி தப்பிவிடக் கூடிய ஓட்டைச் சட்டம் தான் ஊழல் தடுப்புச் சட்டம் என்பதை அறிந்திருப்பதால், சட்டத்தின் பயமும் இல்லை.

**ஊழலின் விளைவுகள்**

ஊழல் ஒட்டுமொத்த சமூக, பொருளாதார அரசியல் அமைப்பில் பேரழிவை ஏற்படுத்துகிறது. சமூகப் பொறுப்பின்மையையும், பொருளாதாரப் பாதுகாப்பின்மையையும், அரசியல் நிரந்தரத்தன்மையின்மையையும் ஏற்படுத்துகிறது. சமுதாய வாழ்வின் அடித்தளமான பரந்த மனப்பான்மையைப் பாதித்து, குறுகிய மனப்பான்மையை வளர்த்து, குறுக்கு வழியில் செல்லத் தூண்டுகிறது. சாதிப் பற்றையும், மத வாதத்தையும், பிராந்திய வாதத்தையும் பொதுவாழ்வில் மலிந்துள்ள ஊழல் வளர்க்கிறது. இதனால் மக்களிடையே பிளவு உருவாவதும், அரசியல் நாகரிகம் ஆட்டம் காண்பதும் தவிர்க்க இயலாததாகிறது.

கையூட்டுக்காக அதிகாரத்திலிருப்போர் சட்டத்தையும், விதிமுறைகளையும் வளைப்பதும், முறைகேடுகள் புரிவதும், முறைகேடாக ஈட்டிய பணத்தையும் அதனால் பெறும் அந்தஸ்தையும் குற்ற உணர்வின்றி பகட்டாகப் பறைசாற்றுவதும் அடித்தட்டு மக்களிடையே வெறுப்பையும், பகையையும் உருவாக்குகிறது.

வளர்ச்சிக்கான திட்டங்களும், திட்டச் செயல்பாடுகளும் ஊழலின் காரணமாக நிர்வாகத்தைத் தவறான, திறமையற்ற அமைப்பாக மாற்றி முடக்குகிறது. வளர்ச்சிக்கு ஊழல் தடையாக இருக்கிறது. அரசு இயந்திரத்தைக் கையாலாகாததாக்கி, சமூக ஒழுங்கைக் காக்கத் தவறுகிறது. தில்லுமுல்லு செயல்கள், சிவப்பு நாடா முறை, வேண்டுமென்றே காலதாமதப்படுத்துதல், பொறுப்பைத் தட்டிக் கழித்தல், திறமையின்மை, தவறான மற்றும் தாமதமான முடிவுகள், பொது விஷயங்களில் அக்கறையின்மை, அப்பட்டமான விதிமுறை மீறல்கள் ஆகியவை ஊழலின் விளைவுகளாக அன்றாடம் காணக்கூடியதாக உள்ளன.

சந்தேகத்திற்கிடமான, தவறான, முறையான வழிகளில் செயலாற்ற விரும்பாத நேர்மையாளர்களும் கூட நாளடைவில் ஒட்டுமொத்த சூழலுக்குத் தகுந்தமாதிரி தங்களை மாற்றிக் கொண்டு விரைந்து சம்பாதிக்க விழையும் சூழல் உருவாகிறது. வளைந்து கொடுத்து, நெளிவு சுழிவுகளுடன் பணியாற்ற மறுப்பவர்கள் பல்வேறு வழிகளில் அழுத்தம் தரப்பட்டு பாதிக்கப்படும் நிலையும் உருவாகிறது. மன உறுதியினாலோ அல்லது சந்தர்ப்ப சூழ்நிலைகளினாலோ ஊழலுக்கு இரையாகாதவர்கள் விரக்தியுடனும், மன இறுக்கத்துடனும், பாதுகாப்பின்மையுடனும், கவலையுடனும் வாழ நேரிடுகிறது.

"கொடுக்க வேண்டியதைக் கொடுத்தால் எதையும் சாதிக்கலாம்" என்ற நிலைமைக்கு இன்று இந்தியா ஆக்கப்பட்டுள்ளது. ஆயினும் ஊழல் புரிந்து, கையூட்டு அல்லது கமிஷன் பெற்று அளப்பரிய செல்வத்தைச் சேர்த்து வைத்திருக்கும் எத்தனை இந்நாள், முன்னாள் அரசியல்வாதிகள், அரசாங்கத்தின் உயர் பதவியில் இருந்தோர், இருப்போர் கைது செய்யப்பட்டு, தண்டனை பெற்றுள்ளார்கள் அல்லது அவர்களின் சொத்துக்கள் பறிமுதல் செய்யப்பட்டுள்ளன என்பதை விரல்விட்டு எண்ணிவிடலாம். கண்டறியமுடியாமை, தேட முடியாமை, சாட்சியங்கள் போதாமை ஆகிய காரணங்களால் விசாரணைக்கு உட்படுத்தவோ அல்லது தண்டனை அளிக்கவோ முடிவதில்லை.

மாகடல் போல் பரவியுள்ள வறுமைச் சூழ்நிலையில் கண்ணைக் கூசவைக்கும் அளவு செல்வவளம் படைத்த தீவுத் திட்டுகள் தலைதூக்கியுள்ளன. அனுபவிப்பது என்ற பெயரில் ஆரவாரப்பகட்டுடன் செலவு செய்வதற்கு அதிகாரப்பலம் உடையவர்கள் முன்னுதாரணங்களாக அமைந்துள்ளனர்.

விலை உயர்வுக்கு ஊழல்தான் முக்கிய காரணம்; வரலாறு காணாத அளவு, விலைகள் உயர்ந்ததற்கு உணவுப் பொருள் ஏற்றுமதி, இறக்குமதியில் நடைபெற்ற ஊழலே காரணம். எனவே இது குறித்து நாடாளுமன்ற கூட்டுக் குழு விசாரிக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று எதிர்க்கட்சிகள் சமீபத்தில் ஒருமித்து வலியுறுத்தியுள்ளது இங்குக் கவனிக்கத்தக்கது.

**ஊழலைக் களையும் வழிமுறைகள்**

ஊழல் ஒரு நீண்டகால பிரச்சனை எனவும், ஒட்டுமொத்த சமூக, பொருளாதார அமைப்பை முழுவதுமாக சரிசெய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது எனவும் சந்தானம் கமிட்டி கருத்துரைத்துள்ளது. அக்கமிட்டி கீழ்க்கண்ட வழிமுறைகளைப் பரிந்துரைத்துள்ளது:

1. ஏகபோக அதிகாரம் குவிந்திருப்பதைக் குறைத்தல்.

2. அரசாங்க அலுவலர்களின் குறைந்த சம்பளத்தை உயர்த்துதல், குறைவான வருமானம் பெறுபவர்களுக்கு சமூக, பொருளாதார பாதுகாப்புத் திட்டங்கள் ஏற்படுத்துதல்.

3. சிறப்புக் காவல் துறையையும், கண்காணிப்புத் துறையையும் பலப்படுத்துதல்.

4. தண்டனைச் சட்டம் உள்ளிட்ட ஊழல் தொடர்பான சட்டங்களை மாற்றியமைத்து, ஊழல் புரிந்தவர்களை விரைவாகவும், கடுமையாகவும் தண்டிக்க வகை செய்தல்.

5. அரசு அலுவலர்களை ஊழல் செய்யத்தூண்டும் தனியார் துறையினர் மீது நடவடிக்கை எடுத்தல்.

6. தனிமனிதர்களின் வருமானவரி கணக்குகளையும், வணிக, தொழில் நிறுவன அறிக்கைகளையும் பொதுமக்களுக்கு வெளிப்படையாக அறிவித்தல்.

7. அமைச்சர்கள் மற்றும் மக்கள் பிரதிநிதிகள் மீதான ஊழல் குற்றச்சாட்டுகளை விசாரிக்க சிறப்பு நடைமுறைகள் ஏற்படுத்துதல்.

8. அரசியல் கட்சிகளுக்கு வணிக நிறுவனங்கள் அளிக்கும் நன்கொடைகளைக் கட்டுப்படுத்துதல்.

9. ஊழல் குறித்துப் புகார் தெரிவிப்பவர்களைப் பற்றிய விபரங்களை வெளியிடாமல் பாதுகாத்தல்.

10. குறுகிய காலத்தில் வருமானத்திற்கு அதிகமான சொத்துக்களைக் குவித்திருப்போர் பற்றிய விபரங்களை பொதுமக்களுக்கு தெரிவிப்பதன் மூலமாக, குறுக்கு வழியில் சம்பாதிப்பதைக் கேள்வி கேட்பார் உண்டு என்ற நிலையைத் தோற்றுவிக்க முடியும். அவ்வாறு முறையற்ற வழிகளில் சம்பாதித்த லட்சாதிபதிகளையும், கோடீஸ்வரர்களையும் தடுப்பதற்கு திறமையான, ஊழலுக்கு எதிரான அலுவலர்களைக் கொண்ட அமைப்பை ஏற்படுத்த வேண்டும்.

11. பொதுமக்களைத் திரட்டி ஊழலுக்கு எதிரான இயக்கமாக கட்டமைக்கப்பட வேண்டும்; ஊழலுக்கு எதிரான விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டும்.

ஊழலை உணர முடியுமே தவிர, நிருபிப்பது கடினம். ஆகவே, சிறு தடயங்கள் கிடைத்தாலும், அதைத் தீவிரமாக விசாரித்து நடவடிக்கை எடுக்க வேண்டும். ஊழல் நிரூபிக்கப்பட்டால் உரியவர்களின் சொத்து உடனடியாக பறிமுதல் செய்யப்பட வேண்டும்.

ஆங்கிலக் காலனி ஆட்சிமுறையில் ஏற்படுத்தப்பட்டு இன்றளவும் தொடருகின்ற ஆள்பவருக்கும்–ஆளப்படுபவர்களுக்குமான இடைவெளி கணிசமாகக் குறைக்கப்பட வேண்டும். ஆட்சி அதிகாரத்தில் இருப்பவர்களுக்கும், அரசாங்க அலுவல்கள் புரிபவர்களுக்கும் ஜனநாயகத்தின் அடிப்படைத் தன்மைகளையும் உணர்வுகளையும் புரிய வைப்பதன் மூலம் எதேச்சாதிகாரப்போக்கைக் களைந்து இந்த இடைவெளியைக் குறைக்கலாம்.

இந்தியாவை ஆங்கிலேயர் காலத்தில் இருந்தே சிறைப்படுத்தி சீரழித்து வருவது "ரெட் டேப்பிசம்" (Red tapism) எனப்படும் சிவப்புநாடா கலாச்சாரம். அரசியல்வாதிகளின் மோசடிகளை அதிகாரிகளும், அதிகாரிகளின் தவறுகளை அரசியல்வாதிகளும் பரஸ்பரம் கண்காணித்துத் தடுக்கத் தொடங்கினால் மட்டுமே சிவப்பு நாடாவிற்குள் சிறைப்பட்டிருக்கும் இந்தியாவைச் சற்று தாமதமாகவேனும் விடுவிக்க முடியும்.

மத்திய, மாநில அரசு ஊழியர்கள் கையூட்டுக் கேட்டால் ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள லஞ்ச ஒழிப்புத்துறை அலுவலகத்தில் புகார் செய்யலாம் அல்லது மாநில லஞ்சம் மற்றும் ஊழல் கண்காணிப்புத் துறையை அணுகலாம்.

உயர் படிப்புகளையும் பயிற்சிகளையும் பெற்று பதவிக்கு வரும் உயர் அதிகாரிகளுக்கும், அவர்களுக்கு கீழ் பணியாற்ற வரும் அலுவலர்களுக்கும் பணிகுறித்த பயிற்சியுடன், சேவை மற்றும் நேர்மை உணர்வு குறித்த உளவியல் பயிற்சிகளும் அளிக்கப்பட்டு சமூகத்தின் வளர்ச்சிக்கு அவர்களது சிந்தனையும், செயல்பாடும் தூண்டப்படவேண்டும்.

**References**


Ahuja, Ram. Social Problems in India. 2nd ed. (Jaipur: Rawat Publications, 1997).

Doughlas and Johnson, Deviance. (Philadelphia: Lippincott Co., 1971).

Halayya, M. Corruption in India. (1948).

Michael , Clarke (ed.), Corruption: Causes and Consequences. (London: Francecis Publishers, 1983).

Nye, J. “Corruption and Political Development: A Cost-Benefit Analysis”, *American Political Review,* 1967.

Santhanam Committee Report on Prevention of Corruption, Govt. of India, 1964.

Shankar Rao, C.N. Sociology. 6th Rev.ed. (New Delhi: S.Chand &Co.Ltd., 2010).

# அலகு – 4 நடத்தைசார் பிரச்சனைகள்

## மதுவுக்கு அடிமை

மது அருந்துவதால் ஏற்படும் சுகமான உணர்வுக்காகவும், உடல் ரீதியிலான தளர்வு பெறுவதற்காகவும், மனக்கிளர்ச்சி பெறுவதற்காகவும், நட்புணர்வு வளர்ப்பதற்காகவும் மது அருந்துகிறார்கள் என்ற அடிப்படையில் அளவுடன் மது அருந்துபவரையும், எப்போதாவது மது அருந்துபவரையும் குடிப்பழக்கத்திற்கு அடிமையான 'குடிகாரர்கள்' என வகைப்படுத்தப்படுவதில்லை. "குடிகாரர்" என்பவர் பொதுவாகக் குறிப்பிட்ட கால இடைவெளியில் மது அருந்த உந்தப்படுபவராகவும், அதிக அளவு மது அருந்தித் தன்நிலை மறப்பவராகவும், ஆழமான மற்றும் மீளமுடியாத காரணங்களுக்காக மது அருந்துபவராகவும் கருதப்படுகிறார்.

மதுப் பழக்கத்திலிருந்து விடுவித்துக்கொள்ள இயலாமல் இருக்கும் நிலைமையை "குடிப்பழக்கம்" என்றும், அளவிற்கு அதிகமாகக் குடிப்பவனை "குடிகாரன்" என்றும், சுயக்கட்டுப்பாட்டை இழந்து தன்னால் மது அருந்தாமல் இருக்க முடியாது, குடியை நிறுத்த முடியாது என்ற நிலையை அடைந்தால் 'மது போதைக்கு அடிமை' என்றும் கருதப்படுகிறார். உடல் நிலைக்கும், குடும்பத்தினருக்கும், சமுதாயத்திற்கும் கேடு விளைவிக்கிறது என்று தெரிந்திருந்தும் கூட குடிப்பழக்கத்திற்கு அடிமையாகிறார்கள். மது ஒரு தூண்டுளியல்ல; மாறாக அது மைய நரம்பு மண்டலத்தை சோர்வடையச் செய்து செயல்பாட்டைத் தடுக்கிறது. மது அருந்துபவர் குறைந்த கட்டுப்பாடும், மிகுந்த சுதந்திரமும் பெற்றவர் போல் உணர்கிறார். சுய நினைவை இழக்கச் செய்து, ஒரு வித மயக்கத்திற்குள்ளாக்கி, குறிப்பிட்ட சில மணி நேரத்திற்கு அவனது கஷ்டத்தையோ, பிரச்சனையையோ, துன்பத்தையோ மறக்க உதவும் குடி, கொஞ்சம் கொஞ்சமாக அவன் உடலைப் பாதிக்கிறது. மது, அருந்துபவனை மட்டுமல்லாமல் அவனது குடும்பத்தையும், சமுதாய நலன்களையும் பாதிக்கிறது. அடிக்கடி மது அருந்துவதும், அதிக அளவு மது அருந்துவதும் தீமையான மற்றும் ஆபத்தான விளைவுகளுக்கு அடிகோலும். உடல் நலத்தையும், வேலை செய்யும் திறனையும் பாதித்து வருமானம் இழக்கவும் காரணமாகிறது.

## குடிப்பழக்கம்: வரையறை

ரிச்சர்டு வாஸ்கின் (Richard Waskin, 1964) "குடிகாரர் என்பவர் அளவுக்கு அதிகமாகக் குடிப்பவர். அவரால் குடிக்காமல் இருக்க முடியாது. குடி மனதையும் உடல் நலம் மற்றும் மனநலத்தையும் பாதிக்கிறது. உறவுகளைச் சிதைக்கிறது. அவரது சமூக, பொருளாதார செயல்பாடுகளைத் தாக்குகிறது. இப்பாதிப்புகளுக்கு ஆளானவர் மது போதைக்கு ஆட்பட்டவர்" என வரையறுக்கிறார்.

"ஒருவருடைய குடிப்பழக்கம் அவருடைய வாழ்க்கைமுறை மற்றும் பிறரோடு உள்ள உறவுகளைப் பாதிக்குமேயானால் அவரை மது போதைக்கு அடிமையானவர்" என்கிறார் கிளினிபெல் (Clinebell, 1956).

குடிப்பழக்கத்தை "ஒருவன் தன்னையே சிறிது சிறிதாக அழித்துக் கொள்ளும் ஒருவகைத் தற்கொலை" என மெனிங்கர் (Menninger) கருதுகிறார்.

குடிபோதை நான்கு இயல்புகளைக் கொண்டுள்ளது: (i) அளவுக்கு அதிகமாக மது அருந்துவது, (ii) குடிப்பவர் தன்னைக் கட்டுப்படுத்த முடியாமல் இருப்பது, (iii) தன் குடிப்பழக்கம் பற்றி வளர்ந்து வரும் கவலை, (iv) குடிப்பவரது சமூக செயல்பாடுகளில் ஏற்படும் பாதிப்புகள்.

டான் கோகலன், மது அருந்துபவர்களை ஐந்து வகையாகப் பாகுபடுத்துகிறார்: (i) அரிதாக மது அருந்துபவர் –வருடத்தில் ஒன்று அல்லது இரண்டு முறை மது அருந்துபவர், (ii) எப்போதாவது மது அருந்துபவர் – மாதம் ஒரு முறைக்கும் குறைவாக மது அருந்துபவர், (iii) சிறிதளவு மது அருந்துபவர் – மாதம் ஒன்று அல்லது இரண்டு முறை மது அருந்துபவர், (iv) குறிப்பிடத்தக்க அளவு மது அருந்துபவர் – மாதத்தில் மூன்று, நான்கு முறைகள் மது அருந்துபவர், மற்றும் (v) அதிகமாக மது அருந்துபவர் – தினமும் மது அருந்துபவர் அல்லது ஒரே நாளில் பலமுறை மது அருந்தும் நிரந்தரக் குடிகாரர்கள்.

உலகம் முழுவதிலும் பெண்களை விட ஆண்களே குடிப்பழக்கத்திற்கு அதிகம் அடிமையாகிறார்கள். வளர்க்கப்படும் விதத்திலும், சமூகமயமாக்கப்படுதலிலும் மதுவுக்கு எதிரான மனப்பான்மை கொண்டவர்களாகப் பெண்கள் உருவாக்கப்படுகிறார்கள். மதுவுக்குச்

சாதகமான சமூகத் தளத்தில் இருந்து பெண்கள் தள்ளியே நிறுத்தப்படுகிறார்கள்.

## குடிப்பழக்கத்திற்கான காரணங்கள்

குடிப்பழக்கத்திற்கு எவ்வாறு, ஏன் அடிமையாகிறார்கள் என்பதை விளக்குவது கடினமானது. மதுவுக்கு அடிமையானவர்கள் அனைவரையும் ஒரே வகையினமாகக் கருதமுடியாது. அவர்கள் பல்வேறு ஆளுமைத் தன்மை கொண்டவர்கள் என்பதுடன் மது அருந்துவதற்கான காரணங்களும் நோக்கங்களும், அவர்களிடம் மது ஏற்படுத்தும் தாக்கமும் ஒரே மாதிரியாக இருப்பதில்லை.

பல குடிகாரர்களின் உறவினர்கள் குடிப்பழக்கத்திற்கு அடிமையானவர்களாக இருந்த போதிலும் குடிப்பழக்கத்திற்கு பரம்பரையான, பாரம்பரிய கூறுகள் தூண்டுதல் காரணிகளாக செயல்படுகின்றன என அறுதியிட்டுக் கூற முடியாது. உளவியல் கருத்தியல்கள் மது அருந்துவதன் நோக்கங்களை முன் வைத்து குடிப்பழக்கத்தை விவாதிக்கின்றன. பொறுப்புகளில் இருந்து மீளவும், மனவலியைக் குறைப்பதற்கும், கவலைகள் மறந்து உற்சாகம் பெறவும், குடும்பப் பூசல்கள், வியாபாரக் கஷ்டங்கள், தாழ்வு மனப்பான்மை போன்றவற்றிலிருந்து தப்பிக்கும் மார்க்கமாகவும், துயர நினைவுகளை அழிப்பதற்கும், சமூகத் தயக்கங்களை அகற்றுவதற்கும், கோழைத்தனத்தை வென்றெடுத்து தைரியம் பெறவும், செயலூக்கம் பெறவும், சோகத்தைத் துரத்தி மகிழ்ச்சி பெறவும், தோல்வியைத் தாங்கிக் கொண்டு வெற்றியை நோக்கிச் செல்லவும், ஏமாற்றங்கள் மற்றும் விரக்தியிலிருந்து விடுவித்துக் கொள்ளவும் ஆகிய பல்வேறு காரண காரியங்களை இக்கருத்தியல்கள் நோக்குகின்றன. எனினும் இத்தகைய கவலைகள், சிரமங்கள், துயரங்கள், துன்பங்கள் கொண்டுள்ள அனைவரும் குடிப்பழக்கத்திற்கு உள்ளவாதில்லை; ஒரு சிலரே குடிகாரர்கள் நிலையை அடைகிறார்கள் என்பது கவனிக்கத்தக்கது.

திரும்பத்திரும்பக் குடிப்பதற்கான ஆர்வமே "மது போதை"க்கான ஆரம்பம். குடிப்பழக்கத்திற்கு காரணங்களாக கிளினிபெல் (Clinebell, 1956) கீழ்க்கண்டவற்றை குறிப்பிடுகிறார்: (1) அதிகாரத்துவம், (2) வெளிப்படையாக ஒதுக்கி வைத்தல், (3) நல்லொழுக்க வலியுறுத்தல் போதாமை, (4) வெற்றியை மட்டுமே போற்றி வணங்கும் தன்மை, (5) அளவுக்கு அதிகமாக கவலைப்படல், (6) உணர்ச்சி வெளிப்பாட்டில்

முதிர்ச்சியின்மை, (7) ஏமாற்றத்தைத் தாங்கும் தன்மையின்மை, (8) ஒதுக்கப்படுகிறோம் என்ற எண்ணம், மற்றும் (9) குற்ற உணர்வு.

குடிப்பழக்கத்திற்கான பொதுவான காரணங்களாக மதன் (Madan) கீழ்க்கண்டவற்றை விவரிக்கிறார்:

1. அவலநிலை
2. உடல் ஒய்வு
3. இறுக்கமான வீட்டு நிலைமை
4. பொழுதுபோக்கு வசதியின்மை
5. அறியாமை
6. நட்புக்காக
7. நாகரிகம்
8. வியாபார, வர்த்தகக் காரணங்கள்
9. வெற்றியின்மையும், திருப்தியின்மையும்

**1. அவலநிலைக் குடிப்பழக்கம்**

தங்கள் வாழ்வில் ஏற்பட்ட சோகங்களையும், துன்பங்களையும் மறக்கக் குடிக்கின்றனர். தமது துயரம் காரணமாக வாழ்வு மகிழ்ச்சி தரக் கூடியதாக இல்லை என நிரந்தரமான நிவர்த்தி தரக்கூடிய மருந்தாகக் குடியைக் கருதுகிறார்கள். மனம் நிம்மதியிழந்துள்ளபோது, கவலைகளை மறப்பதற்காக மதுவை நாடுகின்றனர். பின்பு இப்பழக்கம் தொடர ஆரம்பிக்கிறது.

**2. உடல் ஓய்வெடுப்பதற்காக ஏற்படும் குடிப்பழக்கம்**

தொழில் நிமித்தமாக அலைந்து திரிவதால் அல்லது கடின வேலையால் களைப்படைகின்றனர். அதிகளவு வேலைப் பளுவாலும்,

அதிகளவு சுமைகளை சுமப்பதாலும் உடல் சோர்வடையும் போது களைப்பைப் போக்குவதாகவும், ஓய்வெடுக்க உதவுவதாகவும், மருந்தாகப் பயன்படுவதாகவும் எண்ணி தொடர்ந்து மது அருந்துகின்றனர்.

**3. இறுக்கமான வீட்டு நிலைமை**

வீட்டின் சுற்றுப்புறம், தன்மை, அமைப்பு போன்றவை வசதிக்குறைவாகவும், அமைதியின்றியும், இறுக்கமானதாகவும், சுகாதாரமற்ற அசுத்த நிலையிலும் இருப்பதால் வீட்டில் அவர்கள் நீண்ட நேரம் தங்க முடியாமல் வெளியே திரியும் நிலையில் மதுவை நாடுகின்றனர். அதுவே நிரந்தரப் பழக்கமாகிறது.

**4. பொழுதுபோக்கு வசதியின்மை**

பொழுதுபோக்குவதற்கு விளையாட்டுக்களோ, மற்ற மனதிற்கினிய நிகழ்ச்சிகளுக்கான வாய்ப்புக்களோ குறைவாகவே உள்ள நிலையில் மதுவை நாடுகின்றனர்.

**5. அறியாமை**

அதிகமான உடல் உழைப்பு, நீண்ட நேர வேலை முதலியவற்றை ஈடு செய்ய மது குடிப்பதால் அதிக சக்தியையும், பலத்தையும், புத்துணர்ச்சியையும் மீண்டும் பெறலாம் என்ற தவறான எண்ணமும், உடல் வலிமையை அதிகரிக்கச் செய்யும் என அறியாமையால் கொண்டுள்ள நம்பிக்கையும் குடிப்பழக்கத்தை ஏற்படுத்தித் தொடரச் செய்கிறது.

**6. நட்புக்காக**

நண்பர்களுடன் சேர்ந்து குடிப்பது மகிழ்ச்சிக்குரிய விஷயமாகக் கருதி நட்புக்காக குடிக்கத் துவங்குகின்றனர். நாளடைவில் மதுப்பழக்கமாகத் தொடர்வதற்கு இது அடித்தளமாகிறது.

**7. நாகரிகம்**

நகர நாகரிகத்தாலும், நவநாகரிக மோகத்தாலும் மற்றவர்களுடன் சேர்ந்து மது அருந்துவதன் மூலம் தாமும் அவர்களைப் போலவே நாகரிகமானவர்களாகலாம் என எண்ணி தொடர்ந்து மது அருந்துகின்றனர்.

**8. வியாபார, வர்த்தகக் காரணங்கள்**

வியாபாரக் காரணங்களுக்காக பார்ட்டி மற்றும் விருந்து ஏற்பாடு செய்து குடிக்கின்றனர். வியாபாரிகள் முக்கிய வாடிக்கையாளரைத் திருப்திப்படுத்தவும், வாடிக்கையாளர்கள் வியாபாரிகளுடன் நெருக்கத்தை ஏற்படுத்திக் கொள்ளவும் சேர்ந்து குடிக்க ஆரம்பித்து பின்பு அதுவே குடிப்பழக்கத்திற்குக் காரணமாகிறது.

**9. வெற்றியின்மையும், திருப்தியின்மையும்**

சமுதாயத்தில் திருப்தியடையாமலும், சமுதாய உறவுகளில் புகழ் ஈட்டாத தாழ்வுமனப்பான்மையும், இயலாமையும் மதுப்பழக்கத்திற்கு இட்டுச் சென்று பின்னர் ஒரு வழக்கமாக அவர்களிடம் பெற்றுவிடுகிறது. மகிழ்ச்சியற்ற இவர்கள் நம்பிக்கையிழந்த குடிகாரர்களாகிறார்கள். ஆரம்பத்தில் ஒருவர் தன் பிரச்சனைகளுக்கு புகலிடம் தேடி தற்காலிகமாக விடுதலை பெறக் குடிக்கிறார். குடிப்பதால் தன்னுடைய பயம், கவலை மற்றும் பதற்றம் குறைகிறது என நம்புகிறார். படிப்படியாகக் குடிக்கும் அளவையும், எண்ணிக்கையும் அதிகரித்து அதற்கு அடிமைப்படுகிறார். சுற்றுப்புறத் தாக்கம், இணைக்குழுவின் தாக்கம், குடிப்பழக்கமுள்ள நண்பர்கள், தீயவர்களின் நட்பு, முறையற்ற வளர்ப்பு முறை எனப் பல்வேறு காரணிகள் மது அருந்தும் பழக்கத்திற்கும், மதுவுக்கு அடிமையாகும் போக்குக்கும் காரணமாகின்றன.

நம் நாட்டின் சமீப கால சமூக, பொருளாதார மாற்றங்களுக்கு இணையாக 'மது பயன்பாட்டில்' குறிப்பிடத் தகுந்த அளவு மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. மது உற்பத்தியும் பயன்பாடும் அதிகரித்துப் பெருகி வரும் வாழ்க்கை வசதிகளுடன் தொடர்பு கொண்டதாகவும், அதிவிரைவாக ஏற்பட்டு வரும் பொருளாதார மாற்றங்கள் மற்றும் அதிகரித்து வரும் நுகர்வுடன் பெருமளவு இணைந்ததாகவும் உள்ளது. எப்போதாவது குடிப்பது, திருவிழாக்களில் குடித்து மகிழ்வது, நண்பர்களுடன் மகிழ்ச்சியாக இருக்கக் குடிப்பது என்ற நிலைகளைத் தாண்டி இப்போது அங்கீகரிக்கப்பட்ட பொழுதுபோக்கு அம்சமாகக் குடிப்பழக்கம் மாறியுள்ளது. பல்வேறு கல்வி, சமூக, பொருளாதாரப் பின்னணி கொண்டவர்களும் மதுப்பழக்கத்திற்கு ஆட்பட்டுள்ளதாக சமீபத்திய புள்ளி விவரம் தெரிவிக்கிறது.

## மது போதைக்கு அடிமையாகும் முறை

உலகின் அனைத்துப் பகுதிகளிலும், அனைத்து இன மக்களிடமும், எல்லா காலங்களிலும் மது புழக்கத்தில் இருந்து வந்திருக்கிறது; மகிழ்ச்சியை அளித்திருக்கிறது. ஏழை பணக்காரர், வெற்றி பெற்றோர் தோல்வி அடைந்தோர், அறிவில் சிறந்தோர் குறைந்தோர் என அனைத்துப் பிரிவினரையும் மது ஈர்த்து வந்துள்ளது. மது அருந்துபவர்களில் மிகப் பெரும்பாலானோர் அதன் சுவையை வெறுத்தபோதிலும் அல்லது விரும்பாத நிலையிலும் அதுதரும் போதைக்காக குடிக்கின்றனர். குடிபோதை நரம்பு மண்டலத்தைத் தாக்கி, அதன் செயலூக்கத்தை தற்காலிகமாக நிறுத்துகிறது. மூளை செயலாற்றலுக்கும் நனஉணர்வுக்கும் இருப்பிடமான நரம்பு மண்டலத்தில் போதை ஏற்படுத்தும் தாக்கம் மன இறுக்கத்தைத் தளர்த்தி, நினைவலைகளை அதன் போக்கிற்கே திருப்பி, காரண காரியங்களை புறக்கணிக்கச் செய்து, மனதை இலகுவாக்கி, சுதந்திரமான உணர்வுகளை நுகரச் செய்கிறது. எதார்த்தமான உலகாயுத வாழ்வைச் சூழ்ந்துள்ள பிரச்சனைகள், கவலைகள், பொறுப்புகள், தடைகள், சிரமங்கள் போன்றவற்றைத் தற்காலிகமாக மறப்பதற்கும், மறுதலிப்பதற்கும் வழி ஏற்படுத்துகிறது. அறிவையும் நிதானத்தையும் இழக்கச் செய்து, மனிதனின் சமூக முகமூடியை அகற்றி தனது ஆழ்ந்த உணர்வுகளையும், உணர்ச்சிகளையும், உள்ளார்ந்த ஆளுமையையும் வெளிக் கொணர்கிறது. சுருங்கக்கூறின், ஒருவன் 'தான்' என்பதிலிருந்து தப்பிக்கும் உபாயமாக மதுவைப் பயன்படுத்துகிறான்.

மது அருந்துபவர் ஏழு நிலைகளைக் கடந்து 'மது போதைக்கு அடிமை' என்ற நிலையை அடைகிறார்: (1) தடங்கல் தவிர்க்க – தனிமனிதன் தன் பிரச்சனைகளுக்குத் தீர்வு காண மது அருந்தும் நிலை, (2) ரகசியமாய் மது அருந்துபவர் – பிறர் பார்வையில் படாமல் மது அருந்தும் நிலை, (3) அதிகரித்தாலும் தாக்குப்பிடிக்கும் அளவு – மது அருந்துவதின் அளவு படிப்படியாக அதிகரித்தாலும் அதன் தாக்கத்தை உள்வாங்கி பொறுத்துக் கொள்ளும் நிலை, (4) கட்டுப்பாடற்ற நிலை – மது அருந்தக்கூடாது என்ற எண்ணத்தைச் செயல்படுத்த முடியாமல் மது அருந்துதல், (5) தன் சமூகக் கடமைகளைப் படிப்படியாக கவனிக்காமல் போதல், (6) தொடர்ந்து மது அருந்தியவாறே நாட்களைக் கடத்துதல், (7) முதிர்ந்த குடிகார நிலை – தினசரி, நாள்முழுவதும் மது அருந்துவது.

மது அருந்துபவனின் இரத்தத்தில் எத்தனை விழுக்காடுகள் எரிசாராயம் கலந்து இருக்கிறது என்பதைக் கொண்டு "மது அளவு"

கணக்கிடப்படுகிறது. ஒருவன் 0.25 விழுக்காடை அடைந்தால் போதையில் திளைப்பதாகவும், 0.3–0.4 விழுக்காடு அடைந்தால் அதிக போதை மயக்கத்தில் இருப்பதாகவும், 0.5 முதல் 0.8 விழுக்காடு வரை உயரும் போது சுவாசிக்க சிரமமும் இதயத்தின் செயல்பாட்டு குறைவும் ஏற்பட்டு மரணம் நிகழவும் வாய்ப்பாக அமைகிறது. எரிசாராயநிலை 0.1 விழுக்காடை எட்டும்போது பார்வை, தசை இயக்கம் மற்றும் சிந்தனை தடைபடுகிறது.

## குடிப்பழக்கத்தின் தீமைகள்

### 1. திறமை குறைதல்

மதுப்பழக்கத்தால் உடல் நலம் குன்றி, அறிவுத் திறனும் குறைவதால் மொத்தச் செயல் திறமையும் குறைகிறது.

### 2. தேசிய வருமானம் குறைதல்

மதுப்பழக்கத்தால் நாட்டின் மொத்த வருமானமும் மக்களின் வாங்கும் சக்தியும் குறைகிறது.

### 3. வறுமை மிகுதல்

குடிப்பழக்கத்தால் குடும்பத்தின் வறுமை நிலை மேலும் அதிகரிக்கிறது. அதிகரிக்கும் குடும்ப வறுமை பல்வேறு தொடர் சமூகப் பிரச்சனைகளுக்கும் வழி வகுக்கிறது.

### 4. உடல் நலம் குறைதல்

குடிப்பழக்கத்திற்கு ஆளாவதால் உடல் நலமும் மன நலமும் வெகுவாகப் பாதிக்கப்படுகிறது. பல்வேறு உடல் உறுப்புக்கள் பாதிக்கப்படுகின்றன. குறிப்பாகக் கண்பார்வை இழத்தல், இதயமும் கல்லீரலும் சிறுநீரகமும் செயல் இழத்தல், இரப்பை மற்றும் குடல் ஆகியவற்றில் குழிப்புண்கள் தோன்றுதல், நரம்புத் தளர்ச்சி போன்ற பாதிப்புகள் ஏற்படுகின்றன. இதனால் மருத்துவச் செலவும் மிகுதியாகிறது. மன உளைச்சல், மன அழுத்தம், கூர்நோக்கு சக்தியை இழத்தல், மறதி, தற்கொலை எண்ணம் போன்ற நிலைமைகள் குடிப்பழக்கத்தினால் ஏற்படுகின்றன.

### 5. தனிமனிதக் கட்டுப்பாடு இழத்தல்

நம் பண்பாட்டில் மது அருந்துவது மரியாதைக்குரிய செயலாக போற்றப்படுவதில்லை; தொடர்ந்து குடிப்பதைச் சமூகம் பழிக்கிறது. மதுவின் அளவும், அருந்தும் தடவைகளின் எண்ணிக்கையும் அதிகரிக்க அதிகரிக்க குடிகாரனின் குற்ற உணர்வு தலைதூக்குகிறது. குடிப்பழக்கத்தால் தனிமனிதக் கட்டுப்பாட்டை வெகு விரைவாக இழக்கிறான்.

### 6. குடும்பம் சீர்குலைதல்

குடிப்பழக்கத்தால் குடும்ப அமைதி குலைகிறது, குடும்ப நெறி சீரழிகிறது. குடும்பத் தலைவன் குடிகாரனாக இருந்தால் அக்குடும்பத்தில் பதட்டநிலை எப்பொழுதும் நீடிக்கிறது. இதனால் குடும்பம் சீர்குலைகிறது.

### 7. குற்றங்கள் அதிகரித்தல்

மனிதன் குடிபோதையில் சுய நினைவிழந்து சமுதாயம் ஏற்றுக் கொள்ளாத செயல்களில் ஈடுபடுகிறான். திருட்டு, கொள்ளை, கொலை மற்றும் பாலியல் வன்முறை போன்ற தீய செயல்களைச் செய்யத் தூண்டுவதில் குடிப்பழக்கம் முக்கிய இடம் வகிக்கிறது. குடிப்பழக்கம் தன்னோடு விபச்சாரம், சூதாட்டம் போன்ற கெட்ட பழக்கங்களையும் கூட்டி வரும். மதுவுக்கும், குற்றச் செயல்களுக்குமான நெருங்கிய உறவு பல்வேறு சமூக விரோதச் செயல்களுக்கும் ஊக்கமளிக்கிறது.

குடிப்பவர்கள் ஆபத்தை நோக்கிச் செல்கிறார்கள் என்பதை அவர்கள் மேலும் மேலும் அதிகமாகக் குடிப்பது அறிவிக்கிறது. குடிக்காமல் இருக்கவே முடியாது என்ற நிலைக்குத் தள்ளப்பட்டுள்ள குடிக்கு அடிமையானவன், நோய் எதிர்ப்பு சக்தி முற்றிலும் குறைந்தவனாக எளிதில் நோய்வாய்ப்படுகிறான். தன் வீடு, குடும்பம், வேலை, வியாபாரம் அனைத்தையும் மறந்து மோசமான விதத்தில் நடந்து கொள்கிறான். அவனது நல்ல குணநலன்கள் முற்றிலும் சீர்குலைந்து போகின்றன. குடிப்பழக்கம் ஏராளமான நோய்களுக்குக் காரணமாகவும், பிறப்பிடமாகவும், நலத்தைப் பாதிக்கும் முக்கியக் காரணியாகவும் திகழ்கிறது.

மது, விபத்துகளையும், தற்கொலைகளையும் அதிகரிக்கிறது. குடிபோதையால் சாலை விபத்தில் பல்லாயிரக்கணக்கானவர்கள் உயிரிழக்கின்றனர். குடிப்பழக்கத்தால் ஏற்படும் மருத்துவச் செலவுகளும்,

மரணங்களும், வேலை இழப்பு மற்றும் தொழிலில் ஏற்படும் பிரச்சனைகளும், குடும்ப வன்முறை, குடும்பத்தை உதறித்தள்ளுதல், திருமண மற்றும் சமூக வாழ்க்கை நெருக்கடிகளும், கடன் தொல்லைகள், பொருளாதார உற்பத்திக் குறைவு, வருமான இழப்பு, ஆற்றலைப்பயன்படுத்த இயலாமல் போவது என இதன் பாதிப்புப் பட்டியல் நீள்கிறது. குடிப்பவர்கள் மட்டுமல்லாமல் மனைவி, மக்கள், பெற்றோர், உடன் பிறந்தோர், நெருங்கிய நண்பர்கள் மற்றும் சக தொழிலாளர்கள் எனப் பலரும் பாதிக்கப்படுகின்றனர். குடியால் ஏற்படும் பல்வேறு பாதிப்புகள் சாதாரண மற்றும் நடுத்தரக் குடும்பங்களை நிலை குலையச் செய்கின்றன.

மது உற்பத்தி அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் உள்ள நிறுவனங்களால் தயாரிக்கப்பட்ட போதும் சட்டத்திற்குப் புறம்பான வழியில் கள்ள மது உற்பத்தியும், விற்பனையும் ஒரு குடிசைத் தொழிலாக சில பகுதிகளில் செயல்பட்டு வருவதை, அவ்வப்போது ஏற்படும் மரணங்களும், கண் பார்வை இழப்பும் பறை சாற்றுகின்றன.

மதுவின் உற்பத்தியிலிருந்தும், விற்பனையிலிருந்தும் அரசுக்குப் பெருமளவு வருமானம் வரிகள் மூலமாகக் கிடைக்கிறது. இந்தியாவில் சில மாநிலங்களின் வருமானத்தில் ஏறத்தாழ நான்கில் ஒரு பங்கு இதன் மூலமாகக் கிடைப்பதால் மதுவைத் தாராளமாகப் புழங்கச் செய்துள்ளனர். இந்தியாவில் குஜராத் மாநிலத்தில் மட்டுமே மது உற்பத்தியும், விற்பனையும் முற்றிலுமாகத் தடை செய்யப்பட்டுள்ளது என்பதிலிருந்தே மாநில அரசுகள் அள்ளித்தரும் மதுபான வருவாயை இழக்கத் தயாராக இல்லை என்பது விளங்குகிறது. "மது அரக்கனைக் கட்டுப்படுத்தி ஒழிப்போம்" என அவ்வப்போது பெண்களைக் கவரும் வகையில் தரப்படும் வாக்குறுதி தேர்தல் முடிந்தவுடன் பொய்யாகிப் போகின்றன.

### சிகிச்சை முறை

குடிப்பழக்கம் குணப்படுத்தக்கூடியதேயாயினும் மதுவுக்கு அடிமையானவரை மீட்க மேற்கொள்ளப்படும் சிகிச்சை எளிதல்ல. மதுவுக்கு அடிமையானவர்கள் ஒருவித பிரமையுடனும் விட்டேத்தியான போக்குக்குடனும் காணப்படுவர். குடிப்பழக்கத்துக்கு அடிமையாகி, நோயாளியானவர்களின் மனதையும் உடலையும் நல்ல நிலைக்குக் கொண்டு வருவது அவசியம். மது ஏற்படுத்தியுள்ள பாதிப்புகளையும், அதன் பக்க விளைவுகளையும் குணப்படுத்துவது மருத்துவ சிகிச்சையின் முக்கிய நோக்கம். மதுப்பழக்கத்தில் இருந்து விடுவிக்கவும், மீண்டும் மது

அருந்தாமல் இருக்கவும் தொடர் சிகிச்சை மேற்கொள்ளப்படுவது அவசியம். மருத்துவ சிகிச்சையைத் தவிர உளவியல் ரீதியிலான ஆலோசனை, ஆற்றுப்படுத்துதல், வழிகாட்டுதல், ஊக்குவித்தல், சமாதானப்படுத்துதல், மறக்க வைத்தல் போன்ற முறைகளும் பயன்படுத்தப்படுகின்றன. மதுவை வெறுக்கச் செய்து, மது அருந்தும் விருப்பத்தை அறவே நீக்கி, மதுவைத் தவிர்க்கும் வழிமுறைகளை 'உளவியல் சிகிச்சை' நோக்கமாகக் கொண்டுள்ளது.

உளவியல் முறை, நடத்தை முறை மற்றும் மருந்துகள் மூலம் சிகிச்சை முறைகள் பல்வேறு நிலைகளில் உள்ள குடிகாரர்களுக்கும் பயன்படுத்தப்படுகின்றன. குடிப்பழக்கத்திலிருந்து மீள மருத்துவமனையில் சேர்க்கப்படுபவருக்கு அண்டாபோஸ் என்ற மருந்தை தந்த பின் மதுவைக் குடிக்கக் கொடுப்பர். மது குடித்ததும் வன்மையான இம்சை தரும் விளைவுகள் உடனடியாக ஏற்படும். பல உடல் ரீதியான தொல்லைகள் உண்டாவதால் மதுவின் மேல் வெறுப்பு உண்டாகிறது. அத்துடன் உளவியல் ஆலோசனையின் மூலமாகவும், புறச்சூழ்நிலையில் மாற்றத்தை ஏற்படுத்தியும் அவருடைய பயம் மற்றும் குறைகளைப் நோக்கி, நம்பிக்கையும் சுய நம்பகமும் நிலைநிறுத்தப்படுகிறது. குடிப்பழக்கத்திலிருந்து மீட்க அதன் உந்துதலையும், குணநலனையும் அடிப்படையாகக் கொண்டு அணுகுகிறார்கள். குடிக்கு அடிமையானவரை சீர்திருத்துவதில் குடும்பத்தையும் ஈடுபடுத்துவதால் தம்மை கைவிடமாட்டார்கள் என்ற நம்பகத்தன்மை அவரிடம் அதிகரிக்கிறது.

சமீப காலமாக 'ஆல்ககாலிக்ஸ் அனானிமஸ்' (Alcoholics Anonymous) என்ற அமைப்பு குடிப்பழக்கத்தில் இருந்து மீட்டெடுக்கும் பணியைச் செய்து வருகிறது. குடிகாரர்களாக இருந்து மனம் திருந்தி குடிப்பழக்கத்தை விட்டொழித்தவர்களைக் கொண்டுள்ள இந்த அமைப்பு குடிப்பழக்கத்தில் இருந்து விடுபட விரும்புவர்களுக்கு உதவி செய்கிறது. வாராந்திர மற்றும் மாதக் கூட்டங்கள் நடத்தி குடிப்பழக்கத்தினால் தாங்கள் சந்தித்த பிரச்சனைகளையும் அடைந்த அவமானங்களையும் துயரங்களையும், இப்பழக்கத்தில் இருந்து மீண்டதற்குப் பின்னர் தங்களது வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள மாற்றங்களையும், மகிழ்ச்சியையும் பகிர்ந்து கொள்வதுடன் குடிப்பழக்கத்தில் இருந்து மீள மனவலிமையை உருவாக்கி பக்கபலமாகவும் செயலாற்றுகிறது. குடிப்பழக்கத்தில் இருந்து மீள முடியும் என்ற நம்பிக்கையை உருவாக்கி வளர்க்கத் தாங்களே சாட்சியாக, முன் மாதிரியாக இருந்து ஊக்குவிக்கிறார்கள். தாம் மது அருந்துவதற்கான

காரணங்களைத் தெரிந்து கொள்ளவும், அவற்றைக் களையவும் உற்சாகப் படுத்தப்படுகிறார்கள்.

## எடுக்க வேண்டிய நடவடிக்கைகள்

1. மதுவின் தீய விளைவுகளைப் பற்றிய பிரச்சாரம் ஒருபுறம் நடைபெற்று வந்த போதிலும், பலரது வாழ்க்கையில் மது முக்கிய இடம் பெற்றுள்ளது. எங்கெல்லாம் மது தாராளமாகவும், விலை குறைவாகவும் கிடைக்கிறதோ அங்கு மதுவுக்கு அடிமையானவர்களின் எண்ணிக்கை அதிகமாகிறது. எனவே மது விநியோகம் முறைப்படுத்தப்பட்டு கட்டுப்படுத்தப்பட வேண்டும்.

2. குடிபோதையில் வாகனங்கள் ஓட்டுவதைக் கவனமாகக் கண்காணித்து கடுமையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். அபராதம் விதிப்பது, ஓட்டுநர் உரிமத்தை ரத்து செய்வது, இழப்பீட்டுத் தொகையை அவ்வாறான ஓட்டுநரிடம் இருந்து வசூலிப்பது போன்றவை பயனளிக்கும்.

3. மது அருந்துவதைத் தடுக்கத் தண்டனை வழங்குவதை நடைமுறைப்படுத் தலாம்.

4. குடிப்பழக்கத்திற்கு எதிரான விழிப்புணர்வை பொது மக்களிடையே ஏற்படுத்த பல்வேறு ஊடகங்களையும், யுக்திகளையும் பயன்படுத்த அரசு அதிகப்படியான நிதியை ஒதுக்க வேண்டும்.

5. குடிப்பழக்கத்திலிருந்து மீளவும், மீண்டும் தொடராமலிருக்கவும் ஆலோசனை மையங்களும், ஆதரவு அமைப்புகளும் அதிகம் ஏற்படுத்தப்பட வேண்டும்.

6. பொதுநலத்தில் அக்கறையுள்ள தன்னார்வத் தொண்டு நிறுவனங்களுடன் இணைந்து சமுதாய அடிப்படையிலான கருத் தொற்றுமையை உருவாக்கி குடிப்பழக்கத்தின் சமூக அங்கீகாரத்தை இழக்கச் செய்ய வேண்டும்.

**References**

Clinebell, Howard J. Understanding and Counselling the Alcoholic. (New York; Abingdon Press, 1956).

Waskin Richard (ed.) Social Problems. (New York: McGraw Hill&Co., 1964).

# போதைப் பொருள் உபயோகித்தல்

போதை தரவல்ல தாவரங்களைக் கண்டுபிடித்ததிலிருந்து இப்பழக்கம் நிலவி வருகிறது. ஆரம்பத்தில் சில வகையான தாவர போதை மருந்துகள் மனநிலை சரியில்லாதவர்களுக்கும், வலி நிவாரணியாகவும், குறிப்பிட்ட சிலவகை நோய்களுக்கும் மருந்தாகப் பயன்படுத்தப்பட்டது. தற்காலிக இன்பத்திற்காகப் போதைப் பொருளை நாடுபவன் நாளடைவில் மீளவே முடியாத போதைப் பழக்கத்திற்கு அடிமையாகிறான். மேலை நாடுகளில் வெகுவாகப் பரவியுள்ள போதை மருந்துப் பழக்கம் நம்நாட்டிலும் இப்போது அதிவேகமாகப் பரவி வருகிறது.

போதை மருந்து, பயன்படுத்துபவரை மயக்கத்தில் ஆழ்த்தி, உடல் வலிமையைக் குறைத்து, மனநிலையில் பாதிப்பை உண்டாக்குகிறது. உற்சாகமும் கிளர்ச்சியும் பெறுவதற்காகவும், சோர்வடைந்து களைப்பு அடையும் போது வலி நிவாரணியாகவும், வாழ்க்கையின் ஏமாற்றங்களை மறப்பதற்காகவும் கவலையிலிருந்து விடுபடுவதற்காகவும், வாழ்க்கையில் எதிர்நீச்சல் போடத் துணியாதவர்களும், சவால்களை ஏற்கத் துணியாதவர்களும், துன்பப்படுபவர்கள் துன்பத்தை மறப்பதற்கும், ஆனந்தத்தில் இருப்பவர்கள் சுகமான இன்பத்தை அடைவதற்கும், களியாட்டங்களில் ஈடுபடவும் போதைப் பொருட்களை நாடுகின்றனர். போதை மருந்து பழக்கமுடையவர்கள் வேலை இழந்து, வருமானம் இழந்து, மனநோயால் பீடிக்கப்படுகிறார்கள். போதைப் பொருட்களின் பயன்பாடு தனிமனிதனையும், பொருளாதார வாழ்க்கையையும், சமுதாயத்தையும் ஒரு சேர பாதிக்கிறது.

இந்தியாவில் போதைப்பொருள் பயன்பாடு கடந்த சில வருடங்களாக படுவேகமாக அதிகரித்து ஒரு முக்கிய சமூகப்பிரச்சனையாக உருவெடுத்திருக்கிறது. வர்த்தக ரீதியில் நல்ல லாபம் தரக்கூடிய தொழிலாக இருப்பதால் போதை மருந்துக் கடத்தலிலும், விற்பனையிலும் சர்வதேச கும்பல்கள் ஈடுபட்டு வருகின்றன. போதை மருந்துக் கடத்தலுக்கு ஒரு முக்கிய மையமாக இந்தியா ஆக்கப்பட்டுள்ளது. நம் நாட்டில் போதை மருந்து பறிமுதல் கடந்த 10 ஆண்டுகளில் 1000 மடங்கு அதிகரித்துள்ளது. போதை மருந்து/மாத்திரை உட்கொள்ளும் பழக்கம் ஏழை எளிய, நடுத்தர மற்றும் மேட்டுக்குடி மக்களிடமும் அதிகரித்து வருகிறது.

"போதை மருந்துப் பழக்கம்" சட்டத்திற்குப் புறம்பான மருந்து/மாத்திரை உபயோகம் அல்லது மருந்து/மாத்திரையை தவறாகப்

பயன்படுத்துவதால் உடலுக்கோ, உள்ளத்திற்கோ தீங்கு விளைவிப்பதைக் குறிக்கிறது. போதை மருந்து உடல் ரீதியான மற்றும் உள்ளரீதியான பாதிப்பை உண்டாக்கும் வேதிப் பொருளாகும். நேரடியாக மூளை, நரம்பு மண்டலத்தைப் பாதித்து நரம்புத் தளர்ச்சியை ஏற்படுத்துவதுடன் போதைப்பழக்கத்திற்கு அடிமையாகும் நிலையையும் உண்டாக்குகிறது. மனிதனின் இயற்கையான இயக்கத்தையும் செயல்பாட்டையும் அது மாற்றுகிறது. சமூகத்தோடு இணைந்து செயல்பட முடியாமையை ஏற்படுத்தி சமூகத்திற்கும் கேடுவிளைவிக்கிறது.

"எந்த ஒரு இரசாயனப் பொருள் உடல் செயல்பாடுகளை, மனநிலையை, உளக்காட்சி அல்லது உணர்வை பாதித்தும், தவறுதலாக உபயோகிக்க வாய்ப்பு உடையதாகவும் அதனால் சமூகத்திற்கோ, தனிநபருக்கோ பாதிப்பை ஏற்படுத்துவதாகவும் உள்ளதோ அதை போதை மருந்து" என ஜோசப் ஜூலியன் (Joseph Julian, 1977) வரையறுக்கிறார்.

## போதைப் பொருளின் வகைகள்

ஓபியம், மரிஜுவானா, ஹெராயின், மார்பின், பெத்தடின், கொகைன், எல்.எஸ்.டி, கணபிஸ், சரஸ், கஞ்சா, அபின், டவ் போன்றவை இதில் அடங்கும்.

ஹெராயின் மார்பினிலிருந்து தயாரிக்கப்படும் வெள்ளை நிறப் பொடியாகும். கொக்கோ செடி இலையிலிருந்து கொகைன் தயாரிக்கப்படுகிறது. ஹெம்ப் என்னும் தாவரத்திலிருந்து சரஸ், கஞ்சா, அபின், டவ் போன்றவை தயாரிக்கப்படுகின்றன.

ஓபியமும், மரிஜுவானாவும் மூக்குப் பொடியாகவும், புகைக்கவும் பயன்படுத்தப்படுகின்றன. கணபிஸ், மரிஜுவானா போன்றவை பொடியாக மூச்சிழுத்தும், திரவமாக ஊசி மூலம் இரத்தத்தில் செலுத்தியும் உபயோகப்படுத்தப்படுகின்றன. மாத்திரையாகவோ, பொடியாகவோ அல்லது திரவ வடிவிலான ஊசி மருந்தாகவோ கிடைக்கும் இத்தகைய போதை மருந்துகள் 8 முதல் 10 மணி நேரம் வரை தாக்கத்தை ஏற்படுத்தவல்லன.

## போதை மருந்து பழக்கத்தின் தன்மை

1. உளவியல் மற்றும் உடல் ரீதியாக போதை மருந்தின் சுகமான தாக்கத்தை சார்ந்திருக்கும் தன்மை.

2. போதை மருந்து பழக்கத்திற்கு அடிமையானவர் கட்டுப்படுத்த முடியாத ஆர்வம் மற்றும் கட்டாயத் தேவை காரணமாக எந்த வழியிலாவது, எப்பாடுபட்டாவது போதை மருந்தைப் பெற்று பயன்படுத்த விழைதல்.

3. போதை மருந்துகளின் பயன்பாட்டு அளவை படிப்படியாக அதிகரித்துக் கொண்டே செல்லுதல்.

4. உடல்நிலை மற்றும் மனநிலைக்கேற்ப வீரியமிக்க போதைப் பொருள்களைப் பயன்படுத்துதல்.

5. போதை மருந்துக்கு அடிமைப்பட்டவர்கள் தம் ஒழுக்கநிலை மறந்து, உடல் நிலையையும் உதாசீனப்படுத்துதல்.

6. தனிநபருக்கும் சமூகத்திற்கும் பாதிப்பை உண்டாக்கும் விளைவுகள்.

போதை மருந்து பழக்கமுள்ளவர், அதன் அளவைப் படிப்படியாக அதிகரித்து வந்தால்தான் ஆரம்ப நிலையில் பெற்ற போதை அளவைப் பெறமுடியும். போதை மருந்துக்கு அடிமையாதல் உடல் ரீதியாகவும், உள ரீதியாகவும் நிகழ்கிறது. திரும்பதிரும்பப் பயன்படுத்துவதன் மூலம் போதை மருந்துக்கு உடல் தம்மை ஆட்படுத்திக்கொண்டு, அது உடலுக்குள் செல்லாத போது வலி, உடல்நலக் குறைவு உணர்வு மற்றும் சமமற்ற மனநிலையை ஏற்படுத்துகிறது.

போதையை ஏற்படுத்தும் மருந்துகள் மைய நரம்புமண்டலத்தைப் பாதித்து மகிழ்ச்சி, வலிமை மற்றும் அதீத எண்ணங்களை உணர்வில் தோற்றுவித்து, பலத்தையும் கூச்சத்தையும் குறைத்து தூண்டினியாக செயல்படுகின்றன. போதை மருந்துக்கு பழக்கப்பட்டவர்கள் உடனடியாக நிறுத்தினால் பதற்றம், மன அழுத்தம், மனச்சிதைவு போன்றவற்றை எதிர்கொள்ள நேரிடுகிறது. எட்டு முதல் பன்னிரண்டு மணி நேரத்தில் உடல் நடுக்கம் ஏற்பட்டு, அதிகப்படியான வியர்வை சுரந்து உடம்பு குளிர்ந்து போய், அடி வயிற்றுவலியும் மனவெறுப்பும் ஏற்படுகிறது. இந்த நிலை படிப்படியாக அதிகரித்து 36 முதல் 72 மணி வரை மிகவும் அதிகரித்து பிறகு படிப்படியாக

5 முதல் 10 நாட்களில் குறைந்து விடும். சோர்வும், துக்கமின்மையும், படபடப்பும், உடல் வலியும் பல வாரங்களுக்குத் தொடரும். உளக்காட்சியில் மாறுபட்ட கனவு உருவங்களை உண்டாக்கும் எல்.எஸ்.டி போன்ற போதை மாத்திரைகள் கடுமையான உளவியல் பாதிப்பை ஏற்படுத்தவல்லது.

இடைவிடாமல் குறிப்பிட்ட போதை மருந்து உட்கொள்ள வேண்டும் என்ற நிலை "போதை மருந்துக்கு அடிமையாதலை" குறிக்கும்.

போதை மருந்துகள் என்ற வகையினத்தில் மயக்க நிலைக்குத் தள்ளும் மாத்திரைகள், தூண்டும் மாத்திரைகள், போதை மற்றும் பிரமை பிடிக்கச் செய்யும் மாத்திரைகள் உள்ளடங்கியுள்ளன. தூண்டும் மாத்திரைகளான அம்படமின், காபின், கொகைகன் போன்றவை மைய நரம்பு மண்டலத்தைச் சுறுசுறுப்பாகச் செயல்பட வைத்து, சோர்வைக் குறைத்து, ஆற்றலுடன் வேலை செய்ய ஊக்குவிப்பானாக பயன்படுத்தப்படுகின்றன. மயக்கம் தரும் போதை மாத்திரைகள் நரம்பு மண்டலத்தைக் கட்டுப்படுத்தவும், பதற்றத்தையும் ஆத்திரத்தையும் குறைக்கவும் பயன்படுத்தப்படுகின்றன. பிரமை பிடிக்கச் செய்யும் மாத்திரைகள் முடிவெடுக்கும் சக்தியை மட்டுப்படுத்திக் குழப்பத்தை உண்டாக்குகிறது. மயக்குவிக்கும் மற்றும் தளர்வை ஏற்படுத்தும் மாத்திரைகள் தூக்கத்தைத் தருவித்து அமைதிப்படுத்தி மைய நரம்புக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தி இதயத்துடிப்பைக் குறைத்தும், சுவாசத்தை மட்டுப்படுத்தியும் சாந்தப்படுத்துகிறது.

போதை மாத்திரைகளை அதிகளவு உட்கொள்ளும் போது நரம்புத் தளர்ச்சி, எரிச்சல், தலைவலி, வேர்வை, பேதி மற்றும் தெளிவற்ற பேச்சு போன்ற விளைவுகளை ஏற்படுத்துகிறது. பீடி, சிகரெட், பொடி மற்றும் புகையிலையில் உள்ள நிகோட்டின் என்ற மற்றொரு தூண்டுனி மைய நரம்பு மண்டலத்தைத் தூண்டி, சோம்பலைக் குறைத்து, விழிப்புணர்வை அதிகரிக்கிறது. அதிக அளவு உபயோகம் இதய நோய், நுரையீரலில் புற்றுநோய் மற்றும் மலட்டுத்தன்மையை உண்டாக்கவல்லது.

## போதை மருந்து பழக்கத்திற்கான காரணங்கள்

1. உளவியல் காரணங்கள்: பய உணர்வைக் குறைக்க, மனத்தளர்ச்சியைப் போக்க, ஆர்வத்தைத் தூண்ட, திருப்திப்படுத்த, சோம்பலைப் போக்க, போதை உணர்வு பெற மற்றும் மனக்கண் தோற்றத்தை தீவிரமாக்க.

2. சமூகக் காரணிகள்: புது அனுபவங்களைப் பெற, நண்பர்களால் ஏற்றுக்கொள்ளப்பட, சமூக விழுமியங்களை எதிர்த்து நிற்பதற்கான மனவலிமை பெற.

3. உடற்கூறு காரணிகள்: தூங்காமல் விழித்திருக்க, பாலுணர்வை அதிகரிக்க, வலியைப் போக்க மற்றும் தூக்கம் வரவழைக்க.

4. பிற காரணிகள்: மன உணர்வுகளைக் கூர்மைப்படுத்த, புரிந்து கொள்ளும் தன்மையை அதிகரிக்க, பிரச்சனைகளைத் தீர்க்க முடிவெடுக்கவும் செயல்படுத்தவும்.

குடும்பச் சூழ்நிலை, மனஅழுத்தம், அதிகாரக் கட்டமைப்பு முறை, ஆளுமைக் காரணிகள், கேளிக்கையையும் வேடிக்கையையும் தேடிச் செல்லும் போக்கு போன்றவை பிற முக்கியக் காரணிகளாகும். இளம் பருவத்தில் போதை மருந்துகளைப் பயன்படுத்தத் தொடங்குவதற்கு பெற்றோரின் புறக்கணிப்பும், கண்காணிப்பின்மையும் முக்கியக் காரணங்களாகும்.

போதை மருந்துப் பழக்கம் தோழமைக் குழுக்கள் மூலமாகவோ, பழக்கப்பட்டவர்களின் தொடர்பு மூலமாகவோ கற்றுப் பழகிய நடத்தையாகும். இது பிறர் தூண்டுதலால், எதிர்வினைச் சிந்தனையால் மற்றும் சுய உணர்வற்ற அனிச்சைப் பின்பற்றுதலால் நிகழ்கிறது. தோழமைக் குழுவின் தாக்கம் போதை மருந்துப் பயன்பாட்டில் முக்கியக் காரணியாக விளங்குகிறது என்பது போதை மருந்து உபயோகிப்பவர்களின் நண்பர்களில் 81% போதை மருந்து பயன் படுத்துபவர்களாகவும், 31% பேர் நண்பர்கள் மூலமே போதை மருந்துப் பழக்கம் பெற்றவர்கள் என்ற புள்ளி விபரம் மூலம் தெரியவருகிறது.

## போதை மருந்து கட்டுப்பாடுச் சட்டம்

போதை மருந்துப் பழக்கத்தைத் தடுப்பதற்காக 1985–ம் ஆண்டு "நர்காட்டிக் மருந்துகள் மற்றும் உளத்தூண்டும் பொருள்கள்" சட்டம் கொண்டு வரப்பட்டது. இச்சட்டத்தின்படி போதைப்பொருள் கடத்தலுக்கு குறைந்தபட்ச தண்டனையாக 10 ஆண்டு சிறைவாசமும் ஒரு லட்சம் ரூபாய் அபராதமும், அதிக பட்சமாக 20 ஆண்டுச் சிறைத் தண்டனையும், இரண்டு லட்சம் ரூபாய் அபராதமும் விதிக்க வகை செய்யப்பட்டுள்ளது. திரும்பதிரும்ப அதே குற்றத்தைச் செய்பவர்களுக்குக் குறைந்தபட்ச

தண்டனையாக 15 ஆண்டு சிறை வாசமும் அதிக பட்ச தண்டனையாக 30 ஆண்டுகளும், ரூபாய் ஒரு லட்சம் முதல் மூன்று லட்சம் வரையும் அபராதம் விதிக்க இச்சட்டத்தில் வகை செய்யப்பட்டுள்ளது. இதற்கு மேலும் அபராதம் விதித்து தீர்ப்பு வழங்க நீதிமன்றங்களுக்கு அதிகாரம் தரப்பட்டுள்ளது. சிறிதளவு போதைப் பொருளைத் தனிநபர் உபயோகத்திற்கு என வைத்திருந்தாலும் இச்சட்டப்படி நடவடிக்கை எடுக்கலாம்.

## போதை மருந்து பழக்கத்தினால் ஏற்படும் விளைவுகள்

போதைப் பொருள் பழக்கம் தனி மனிதனுக்கு மட்டுமன்றி நாட்டின் வளர்ச்சிக்கும் தடைக்கல்லாக உள்ளது; தேசிய வருமானத்தை பாதிக்கிறது. மக்களின் வாங்கும் சக்தியை குறைக்கிறது. போதைப் பழக்கத்தால் வேலை இழப்பும், வருமான இழப்பும் ஏற்பட்டு குடும்பம் வறுமையில் தத்தளிக்கிறது. போதைப்பொருள் பழக்கத்தால் பார்வை குறைவு, கேட்கும் திறன் குறைவு ஆகியவற்றுடன் ஈரல், இதயம், மூளை உள்ளிட்ட உடலுறுப்புக்களும் பாதிக்கப்படுகின்றன. தனிமனிதனின் அனைத்துத் திறமைகளையும் திசைதிருப்பி சமூக விரோதப் போக்குகளில் ஈடுபடத் தூண்டுகிறது. சிந்தனைத் தடுமாற்றம், உடல் வலிமை இழப்பு போன்றவற்றையும் ஏற்படுத்துகிறது.

போதைப் பொருட்களை பயன்படுத்துவோர் தமது வருமானம் அனைத்தையும் அதற்கே செலவழிப்பதால் அவர்களின் குடும்ப வறுமை நாளுக்கு நாள் அதிகரிக்கவே செய்கிறது.

போதை மருந்துப் பழக்கம் பாலியல் வன்முறை, விபச்சாரம், சூதாட்டம், திருட்டு போன்ற சமூகவிரோதப் போக்குகளுக்கு வழிவகுக்கின்றன. போதைப் பொருட்களின் புழக்கத்தினால் குற்ற நடவடிக்கைகள் பெருகுகின்றன.

போதைப் பொருட்களினால் பல்வேறு சமூக விரோத நடவடிக்கைகள் தூண்டப்படுவதால் அதனைத் தடை செய்ய வேண்டியது அவசியமாகிறது. கடுமையான சட்டங்கள் மூலம் போதைப் பொருள் பழக்கத்திலிருந்து மக்களை மீட்பது அவர்களுக்கும், நாட்டுக்கும் நன்மை பயக்கும்.

## போதை மருந்துப் பழக்கத்தைக் கட்டுப்படுத்தச் செயல்முறைகள்

போதை மருந்துகள் நாட்டில் புழங்குவதை அடியோடு வேரறுக்க வேண்டும். வெளி நாட்டிலிருந்து வரும் போதைப் பொருட்களை முற்றிலுமாகத் தடுத்து நிறுத்த வேண்டும். போதை மருந்து விற்பவர்கள் மிகவும் கடுமையாகத் தண்டிக்கப்பட வேண்டும். போதை மருந்து தயாரிப்பு மற்றும் விற்பனையைக் கண்காணிக்கவும், கட்டுப்படுத்தவும் போதுமான முறையான சட்டங்கள் வேண்டும்.

காவல்துறை மற்றும் சட்டத்தைச் செயல்படுத்துபவர்கள் போதை மருந்து கடத்துபவர்களுக்குத் துணைபோனால் அவர்களுக்குக் கடுமையான தண்டனை அளிப்பதுடன் பணியில் இருந்தும் நீக்குதல்.

அளவுக்கு அதிகமாக போதை மருந்து/மாத்திரைகளைப் பரிந்துரைக்கும் மருத்துவர்களைத் தொடர்ந்து கண்காணித்தல் மூலம் தகாத மாத்திரைகளின் பயன்பாட்டு அளவைக் கட்டுப்படுத்துதல்.

போதை மருந்து/மாத்திரையின் தன்மை, செயல்பாடு, ஏற்படும் விளைவுகள் பற்றிய விழிப்புணர்வு வானொலி, தொலைக்காட்சி, செய்தித்தாள் மூலம் மக்களுக்குச் சென்றடையுமாறு செய்ய வேண்டும். விடுதிகளிலோ வேறு இடங்களிலோ பெற்றோரின் கட்டுப்பாட்டிலிருந்து விலகியிருக்கும் மாணவர்கள், இளைஞர்கள், குடிசைப் பகுதியில் வாழும் மக்கள், தொழிற்சாலைகளில் பணிபுரியும் தொழிலாளர்கள், கனரக வாகன ஓட்டுனர்கள் மற்றும் ரிக்க்ஷா ஓட்டுனர்கள் ஆகியோரை மையப்படுத்திய இத்தகைய விழிப்புணர்வுக் கல்வி மிக மிக அவசியம்.

தம் குழந்தைகளின் போதை மருந்துப் பழக்கத்தை தடுக்கவும், குறைக்கவும் பெற்றோர் முக்கிய பங்காற்ற வேண்டும். போதைக்கு அடிமையாகும் நிலை ஒரே நாளில் ஏற்படுவதல்ல. படிப்படியாக வளரும் இப்போக்குகளை அதன் அறிகுறிகளான படிப்பில் அதிகக் கவனமின்றி இருத்தல், பழக்கங்கள் மற்றும் செயல்களில் மாற்றம், பொறுப்பற்ற நடத்தைகளில் ஈடுபடுதல், பேயறைந்தது போல் எப்பொழுதும் காணப்படுதல் போன்றவற்றை பெற்றோரால் எளிதில் கண்டறிய முடியும். போதை மருந்துப் பழக்கத்திலிருந்து குழந்தைகளை விடுபடச் செய்யத் தகுந்த நடவடிக்கைகளை பெற்றோர் மேற்கொள்ள வேண்டும்.

போதை மருந்துகளுக்கு அடிமையானவர்களை வகைப்படுத்தி மருத்துவம் செய்ய வேண்டும். சிலர் போதை மருந்துகளுக்கு அடிமையானதுடன் சமூக விரோதிகளாகவும், மன பாதிப்புக்குள்ளானவர்களாகவும் இருப்பர். ஒவ்வொருவரின் வாழ்க்கையினை அலசி ஆராய்ந்து அதற்கேற்ப சிகிச்சையினைத் தொடங்க வேண்டும். அவர்களை தரம் பிரித்து தனித் தனியாக வைத்து அவர்களுக்கு ஏற்ற சிகிச்சையினைத் தர வேண்டும். போதைப்பழக்கத்தினால் அடிமையானவர்களைத் தனியாகவும், குற்றவாளிகளைத் தனியாகவும், மனநலம் குன்றியவர்களைத் தனியாகவும் வைத்து சிகிச்சை அளிக்க வேண்டும். அவர்கள் எதன் காரணமாக இப்பழக்கத்திற்கு அடிமை ஆனார்கள் என்பதை ஆராய்ந்து அதனைத் தீர்க்க சிகிச்சையினை வழங்க வேண்டும். சிகிச்சைக்குப் பின்னரும் அவர்களைக் கண்ணும் கருத்துமாக பேணி காப்பது மிகவும் முக்கியம். நோயாளிகளே தாங்கள் இக்கெட்ட பழக்கத்திலிருந்து விடுபட வேண்டும் என்று மனதார விரும்பச் செய்ய வேண்டும்.

போதை மருந்து மீட்பு சிகிச்சையில் தேர்ச்சி பெற்ற மருத்துவர் உதவியுடன் உளவியல் ரீதியாகவும், சமுதாய ரீதியாகவும் பாதிக்கப்பட்டவரை மீட்க வேண்டும். மருத்துவ சிகிச்சையின்போதும், அதன் பின்னரும் அவர்களின் ஒவ்வொரு அசைவையும் கண்காணித்து கட்டுப்பாட்டிற்குள் வைக்க வேண்டும். சிகிச்சையில் இவர்களது குடும்பத்தினர், உறவினர் மற்றும் நண்பர்களின் உதவி முக்கியம்.

தகுந்த நிறுவனங்களை உருவாக்கி அதன் மூலம் ஆலோசனை, கல்வி போதனை, கண்காணிப்புக் காப்பகங்கள், புனர்வாழ்வு மையங்கள் மற்றும் போதைக்கு அடிமையானவர்களை சமூகத்தில் மறுபடியும் இணைந்து வாழ வைக்கும் மறு ஒருங்கிணைப்பு முறைகள் கொண்டுவர அரசாங்கம் ஆவன செய்ய வேண்டும்.

## References

Julian, Joseph. Social Problems. Prentice Hall, Englewood Cliffs, New Jersey, 1977.

# புகையிலை பயன்படுத்துதல்

## புகைக்கும் வழக்கம்

பதினேழாம் நூற்றாண்டின் தொடக்க காலத்தில் போர்ச்சுக்கீசியர்கள் அமெரிக்கா கண்டத்தில் இருந்து புகையிலையை இந்தியாவுக்கு கொண்டு வந்தனர் என்று நம்பப்படுகிறது. புகையிலைச் செடியை இங்குப் பயிரிட ஆரம்பித்தது முதல் புகையிலையின் பயன்பாடும் அதிகரிக்கத் தொடங்கியது. புகையிலையைச் சுருட்டு, சிகரெட், பீடி, குழாய்களில் அடைத்துப் புகைத்தல், மெல்லுதல், தின்றுதல், நக்குதல் மற்றும் பொடியை உறிஞ்சுதல் போன்ற வகைகளின் மூலம் மக்கள் பயன்படுத்தி வருகின்றனர். இப்பழக்கங்கள் தனி மனிதனுக்குத் தீமையை அளிப்பதோடு அவனின் சமூக உறவுகளையும் பாதிக்கிறது; சமூகத்தில் குடும்பத்தின் தரத்தையும், மதிப்பையும் அழிக்கின்றன.

இந்திய மொத்த மக்கள் தொகையில் சுமார் 28 சதவீதத்தினரும், பெண்களில் 11 சதவீதத்தினரும் புகையிலைப் பொருட்களைப் பயன்படுத்துகின்றனர்.

புகை பிடிப்பதினால் உடலுக்கு ஊக்கம் கிடைக்கிறது என்றும், புத்துணர்ச்சி பெறுவதற்கும், திறமைகள் வெளிப்படவும், புதுப் புது எண்ணங்கள் தோன்றுவதற்கும் இந்தப் பழக்கம் உதவுகிறது என்றும் தவறாகக் கருதுகிறார்கள். புகை பிடிப்பதினால் உயிரியல் பாதிப்புகள், பொருளாதார மற்றும் சமூகப் பாதிப்புகள் ஏற்படுகின்றன. புற்றுநோய் ஏற்பட முக்கியமான காரணமாக புகை பிடிக்கும் பழக்கம் உள்ளதாக உயிரியல் ஆய்வுகள் தெரிவிக்கின்றன. புகைப்பிடிப்பதினால் இருதய நோய், மாரடைப்பு, ரத்த ஓட்டம் தடைபடுதல், நுரையீரல் புற்றுநோய், நரம்புத்தளர்ச்சி, அஜீரணம், மூச்சு விடுதலில் சிரமம், தொண்டை எரிச்சல் மற்றும் மலட்டுத்தன்மை போன்ற தீமைகள் ஏற்படுகின்றன என்பதை ஆய்வு முடிவுகள் நிரூபித்துள்ளன.

புகை பிடித்தலினால் பொருளாதார ரீதியாகக் குடும்பத்திற்கும், புகைப்பவருக்கும் பெருத்த பொருள் நட்டம் ஏற்படுகிறது. புகைப்பதால் ஒருவருடைய வேலையிலும் பாதிப்பு ஏற்பட்டு நேரமும் வீணாகிறது. சூதாடுதல், குடிப்பழக்கம் மற்றும் தீமையான பாதைகளுக்குப் புகைபிடித்தல் பழக்கம் வழிவகுக்கிறது. புகைத்தலும், புகையிலை மெல்லுவதும் குடிக்கும்

ஆர்வத்தைத் தூண்டும் என்று பென்சமின் (Benjamin) கூறுகிறார். புகைப்பவர்களிடையே குடிப்பழக்கம் அதிகமாகக் காணப்படுவதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. புகையிலை நஞ்சு பல உளவியல் மாற்றங்களை ஏற்படுத்துகிறது. தந்தையின் புகைக்கும் பழக்கம் மகன்களும் எளிதில் புகைக்கக் கற்றுக் கொள்ளத் தூண்டுகிறது. புகைக்கும் பழக்கத்திற்கு அடிமையாகிவிட்டால் அதிலிருந்து மீள்வது கடினமாகிறது. புகையிலைப் பொருட்களை ஒட்டுமொத்தமாக ஒழித்துக் கட்டுவதும், அதற்கு அடிமையாகாமல் தடுப்பதும் உடனடித் தேவையாகும். இந்தியாவில் எற்கெனவே உருவாக்கப்பட்டுள்ள புகையிலைக் கட்டுப்பாடு சட்டமும், விதிகளும் முழுமையாக நடைமுறைப்படுத்தப்பட வேண்டும்.

இந்தியாவில் பீடி மீது 9 சதவீத வரி, சிகரெட் மீது 38 சதவீத வரி விதிக்கப்படுகிறது. உலக சுகாதார அமைப்பும், உலக வங்கியும் புகையிலைப் பொருட்கள் மீது பரிந்துரைக்கும் 65 முதல் 85 சதவீத வரி விதிப்புக்கு மிகவும் குறைவாக இது உள்ளது. புகையிலைப் பொருட்கள் மீது அரசு அதிக அளவில் வரி விதிக்க வேண்டும்.

ஒருங்கிணைந்த நடவடிக்கைகள் மூலம் புகையிலை பேராபத்திலிருந்து எதிர்காலத் தலைமுறையினரைக் காப்பாற்ற வேண்டும்.

## References

Aggrawal, Anil. Narcotic Drugs. (New Delhi: National Book Trust, India, 1995).

Bachman, Jerald. Smoking, Drinking and Drug Use in Young Adulthood. (NewYork:Erlbaum, 1996).

# பிறழ்வு பாலியல் நடத்தை

அனைத்து மனிதர்களிடமும் உடலுறவு வேட்கை இயற்கையாகவே படைக்கப்பட்டுள்ளது. முயற்சி மேற்கொள்வதன் மூலம் இதை முறையாகக் கட்டுப்படுத்தலாம் எனினும் அனைவராலும் இது சாத்தியமாவதில்லை. பிறழ்வு பாலியல் நடத்தைக்கான காரணங்களில் உயிரியல், உளவியல், சமூக, பொருளாதார காரணங்கள் முக்கியமானவை.

## பிறழ்வு பாலியல் நடத்தைக்கான காரணங்கள்

திருமணமாகாதவர்கள், திருமணமானவர்கள், கணவரை /மனைவியை இழந்தவர்கள்/பிரிந்தவர்கள் என்ற இம்மூன்று வகையினரும் வெவ்வேறு காரணங்களுக்காகப் பிறழ்வு பாலியல் நடத்தையில் ஈடுபடுகின்றனர். பிறழ்வு பாலியல் நடத்தையில் முதன்மையானது வரன் முறைக்கு உட்படாத பாலுறவு.

திருமணம் ஆகாதவர்கள் தமது பாலுணர்வு ஆர்வத்தின் காரணமாகவும், ஆபாசமான புகைப்படங்கள், திரைப்படங்கள், நடன அசைவுகள் பார்ப்பது, கிளர்ச்சியூட்டும் புத்தகங்கள் படிப்பது, ஆபாசப் பேச்சுக்கள் ஆகியவற்றால் ஏற்படும் ஆசைகள், மற்றும் மது அருந்துதல், ஒழுக்கத்தை வலியுறுத்தும் கல்வி இல்லாமை, உடலுறவு அனுபவம் பெறத்துடிக்கும் ஆர்வம், நண்பர்களின் தூண்டுதல் காரணமாகவும் தனது உடல் இச்சைகளைத் தணித்துக் கொள்ள பிறழ்வு பாலியல் நடத்தையில் ஈடுபடுகின்றனர். திருமணமாகாத ஆண்கள் தங்களுடைய உடலுறவு விருப்பத்தை சமூகத் தடைகள் காரணமாக பாலியல் தொழிலாளர்களிடம் நிறைவேற்றிக் கொள்கிறார்கள். பொருளாதார நெருக்கடி காரணமாகத் திருமணத்தைத் தள்ளிப்போட வேண்டிய நிலையில் திருமணமாகாத ஆண்களை பாலியல் தொழிலாளர்களிடம் தள்ளுகிறது.

திருமணமானவர்கள் தமது துணையுடனான உடலுறவில் குறைபாடு, திருப்தியற்ற உடலுறவு, திருப்தியடையாத தாம்பத்திய வாழ்க்கை, சலிப்பை ஏற்படுத்தும் திருமண உறவு, உடலுறவில் நாட்டம் குறைதல், கருத்து மாறுபாடுகள், வாழ்க்கைத் துணையின் மூலம் அடைய முடியாத உடல் இன்பத்தை பிறர் மூலம் அடையத் துணிவது, உடலுறவில் புதுப்புது அனுபவம் பெற விழைவது, மணமுறிவு பெற்ற அல்லது துணையை விலகியிருக்கும்/ பிரிந்த/இழந்தவர் தம் பாலுணர்வைத் தணித்துக்

கொள்ளவும், தனிமை வாழ்க்கையில் சலிப்புற்றுத் துணையை நாடியும் பிறழ்வு பாலியல் நடத்தையில் ஈடுபடுகின்றனர்.

ஆணாதிக்க இந்திய சமூகத்தில் திருமணமாகாத பெண்கள் உடலுறவு கொள்வதைக் களங்கமாகப் பார்க்கும் சமூகப் பார்வையின் உக்கிரம் திருமணமாகாத ஆண்கள் உடலுறவு கொள்ளும் விஷயத்தில் சற்றுத் தளர்ந்ததாகவே இருக்கிறது. ஆண்களுக்கும் பெண்களுக்கும் என வெவ்வேறாக இருக்கும் ஒழுக்கம் பற்றிய மதிப்பீடுகள் ஆண்களைப் பாலியல் தொழிலாளர்களிடம் செல்ல ஊக்குவிக்கிறது.

## பிறழ்வு பாலியல் நடத்தையின் பாதிப்புகள்

பிறழ்வு பாலியல் நடத்தை, தனிப்பட்ட ஆண்கள் மற்றும் பெண்களின் ஆளுமையை மட்டுமல்லாது அவர்களின் குடும்பத்தையும் பாதிக்கிறது. குடும்பத்தில் பிரச்சனைகளையும், மோதல்களையும் உருவாக்கி அமைதியைக் குலைக்கிறது. கணவன்–மனைவி தாம்பத்ய உறவு பாதிக்கப்பட்டு, மணமுறிவு ஏற்படுகிறது. பிறழ்வு பாலுறவு மூலமாகப் பெற்ற பால்வினை நோய்த்தொற்று சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து கணவனுக்கும், மனைவிக்கும், குழந்தைகளுக்கும் பரவிப் பாதிக்கிறது. பிறழ்வு பாலியல் நடத்தைகளை வெறுத்து ஒதுக்கும் சமூகப் பார்வையினால் மனமொடிந்து வாழ்வதும், திருமண உறவுகள் பாதிக்கப்பட்டு குடும்பம் சீர்குலைவதும், நோய்த்தொற்று பரவுவதும் அதில் ஈடுபடுபவரின் வாழ்க்கையை மட்டுமல்லாது சமுதாயத்தின் ஒழுங்கு குலைவுக்கும் காரணமாக அமைந்து பல்வேறு பிரச்சனைகளையும் தோற்றுவிக்கிறது.

## பிறழ்வு பாலியல் நடத்தையும், பாலியல் தொழிலும்

பிறழ்வு பாலியல் நடத்தையில் ஈடுபடுபவர்கள் திருமணமாகாத போதும், மனைவியை நீண்ட காலம் பிரிந்திருக்கும் போதும், மனைவியிடம் எதிர்பார்க்க முடியாத, அனுபவிக்க முடியாத பாலியல் சுகங்களை சிக்கலற்ற, கட்டுப்பாடற்ற, எளிதில் கிடைக்கக்கூடிய விதத்தில் பெற இயலும் என்பது குறிப்பிடத்தக்கது. பிறழ்வு பாலியல் நடத்தையாலும், அதற்கு அடிப்படையான பாலியல் தொழிலாலும் எவரது உயிருக்கோ உடமைக்கோ எவ்விதமான சேதாரமோ, பாதிப்போ ஏற்படுவதில்லை என்ற அடிப்படையில் அது ''பாதிக்கப்படுவர் இல்லாத குற்ற நடத்தையாக'' கருதப்படுகிறது.

குடும்பப் பொறுப்புகளாலும், சமுதாயச் சூழல்களாலும் திருமணம் செய்யாமல் இருப்பவர்களுக்கும், திருமணம் மற்றும் குடும்ப வாழ்வைச் சுமை என்று கருதுபவர்களுக்கும் "பாலியல் தொழில் சேவை" அவசியம் என்றும், இச்சேவையை வரன்முறைப்படுத்தி அங்கீகரிக்கச் சட்டம் கொண்டுவர வேண்டும் என்றும் ஒரு சிலர் வலியுறுத்தி வருகின்றனர். மாறாக, பாலியல் தொழிலுக்குச் சட்ட அங்கீகாரம் கிடைத்துவிட்டால் குடும்பச்சூழல் காரணமாகவும், வயிற்றுப் பசியைப் போக்கிக் கொள்ளவும் வாழ்க்கையோடு ஒவ்வொரு நாளும் போராடிக் கொண்டிருக்கும் பெண்கள் பலர் இத்தொழிலுக்குள்ளே இழுத்துவரப்படும் மிக மோசமான நிலை ஏற்படும் என்றும், பாலியல் தொழிலுக்கு சட்ட அங்கீகாரம் பெற்றுத்தர முயற்சிப்பது இந்தியாவின் பண்பாடு மற்றும் கலாசாரத்தை உலக வரலாற்றின் பக்கங்களிலிருந்து அகற்ற முயல்வதற்குச் சமமாகும் என்றும் சிலர் எதிர்ப்புத் தெரிவித்து வருகின்றனர். சேவையோ, தொழிலோ பாலியல் தொழிலைக் கட்டுப்படுத்த எடுக்கப்படும் உறுதியான நடவடிக்கைகள் மூலம் பிறழ்வு பாலியல் நடத்தையைப் பெருமளவில் கட்டுப்படுத்தலாம் எனவும், திருமண வாழ்வின் மீதிருக்கும் பயத்தைப் போக்க முறையான பாலியல் கல்வி, குடும்ப வாழ்வைச் சுமையாகக் கருதுபவர்களுக்கு கவுன்சிலிங் போன்றவை பாலியல் தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் கட்டுப்படுத்த உதவும் எனவும் கருத்து தெரிவிக்கப்படுகிறது.

பாலியல் தொழில் உலகின் பழமையான "தொழில்" எனவும், சமூகத்திற்கு அவசியமான "பாவச் செயல்" எனவும் வர்ணிக்கப்பட்டாலும் கூட, இதை ஒரு நிறுவன அமைப்பாக சமூகம் ஒருபோதும் ஏற்றுக் கொண்டதில்லை. தனிமனித ஒழுங்கு குலைவு, குடும்ப அமைப்பு குலைவு மற்றும் சமூக அமைப்பு குலைவு ஆகியவற்றிற்கு இத்தொழில் காரணமாகிறது என்பதால் சமூக அங்கீகாரம் வழங்கப்படவில்லை. எனினும் பாலியல் தொழில் நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக செழித்து வருகிறது. விபச்சாரம் "பாலியல் தொழிலாக"வும், விபச்சாரிகள் 'பாலியல் தொழிலாளர்களாக'வும் இன்று பெயர் மாற்றம் பெற்றுள்ளனர்.

இந்தியாவில் 28 லட்சம் பாலியல் தொழிலாளர்கள் இருப்பதாகவும், இதில் 35 சதவிகிதத்தினர் குழந்தைத் தொழிலாளர்கள் என்பதும் அண்மையில் மக்களவையில் தெரிவிக்கப்பட்டது. இந்த எண்ணிக்கை ஒவ்வொரு நாளும் அதிகரித்துக் கொண்டிருப்பதும், இத்தொழிலுக்குப் புதிதாக நேபாளம் மற்றும் வங்கதேசத்திலிருந்து அதிகமான பெண்கள் மற்றும் குழந்தைகள் இந்தியாவுக்கு வருவதும், வீட்டு வேலை என்ற பெயரில் மத்திய கிழக்கு நாடுகளுக்கு இந்தியாவிலிருந்து பெண்கள்

அனுப்பப்படுவதும் தொடர்ந்து நிகழ்ந்து கொண்டிருக்கிறது. வீட்டு வேலைக்கு அனுப்பப்படும் பெண்களில் பெரும்பான்மையோர், அறியாமலேயே பாலியல் தொழிலுக்குத் தள்ளிவிடப்படுகின்றனர். மகிழ்ச்சியற்ற திருமணவாழ்வு, பெற்றோர்களின் பிரிவினை, போதிய பாலியல் கல்வி அறிவின்மை, விழிப்புணர்வின்மை, ஊடகங்கள், காதல், சமுதாயத் தொடர்பு போன்றவற்றால் பாலியல் தொழிலில் நுழைபவர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

''பொருளுக்காகவோ அல்லது பொருள் சாரா ஆதாயத்திற்காகவோ உடலுறவு கொள்வது அல்லது உடலுறவு கொள்ள அனுமதிப்பது பாலியல் தொழில்'' என ஜி.ஆர்.ஸ்காட் (G.R.Scott) வரையறுக்கிறார். அதாவது, ஒரு பெண் அல்லது ஆண் தன் உடலை பணத்தின் பொருட்டோ அல்லது வேறுவித ஆதாயத்திற்காகவோ, உடலுறவு தேவைக்காக அல்லது சேவைக்காக அளிப்பது. இதில் பாசமோ, அன்போ, காதலோ கிடையாது; காமம் ஒன்று மட்டுமே பிரதானமாக இருக்கும்.

பாலியல் தொழிலை “தொடர் பழக்கமாகவோ அல்லது அவ்வப்போதோ உடலுறவில் ஈடுபட்டு அதற்காக பணம், பொருளை கைமாறாகப் பெறுவது'' என ஜெஃப்ரி (Jeffrey) வரையறுக்கிறார்.

பாலியல் தொழில் என்பது “ஒரு பெண் தன் உடலைக் கள்ளத்தனமான பாலியல் உறவுக்காக வாடகைக்கு விடும் செயல்'' என "பெண்களையும், சிறுமிகளையும் ஒழுக்கக்கேடாக நடத்துதலை நசுக்கும் சட்டம் (1956)" வரையறை செய்தது. 1987 ஜனவரி முதல் நடைமுறைப்படுத்தப்பட்டுள்ள “ஒழுக்கக்கேடாக நடத்துதலைத் தடுக்கும் சட்டம்'' பாலியல் தொழில் என்பதற்கான வரையறையை “வணிக நோக்கத்திற்கான பாலியல் சுரண்டல் அல்லது நபர்கள் மீதான பாலியல் கொடுமை'' என மாற்றம் செய்து விரிவுப்படுத்தியுள்ளது. இவ்விரு சட்டங்களுமே "பாலியல் தொழிலை" சட்டத்திற்குப் புறம்பான செயலாகக் கருதாமல், "பாலியல் தொழில் சுரண்டலை"யே சட்டத்திற்குப் புறம்பான, குற்றச் செயலாகக் கருதுகின்றன.

பாலியல் தொழில் பல்வேறு விதமாகப் பலரால் வரையறுக்கப்பட்டாலும், அனைத்து வரையறைகளும் “பாசமில்லாத, உணர்வுபூர்வமற்ற, கள்ளத்தனமான, தராதரமற்ற உடலுறவில் பணம், பொருள் ஆகியவற்றை கைமாறாகப் பெற்றுக் கொண்டு ஈடுபடும் தொழில்'' எனக் குறிப்பிடுகின்றன. ஆக, பாலியல் தொழில் என்பது தராதரமற்ற

கள்ளத்தனமான பாலுறவுக்கு பணமோ அல்லது பொருளோ அல்லது இவை இரண்டுமே பெற்றுக் கொண்டு உடல் சேவை செய்வதாகும். இவ்வாறு பலருடன் பொருளியல் ஆதாயத்திற்காக, உணர்ச்சி நிலை சேர்க்கையின்றி கொள்ளும் பாலுறவின் முக்கிய குணநலன்கள்: (அ) கள்ளத்தனமான, தராதரமற்ற உடலுறவு, (ஆ) பணம், பொருள் ஆகியவற்றை ஈடாகப் பெறுவது, (இ) பாசமோ அல்லது சுய ஆர்வமோ அற்றது. இவ்வியல்பு, பாலியல் தொழிலைக் காதலர்கள் கள்ளத்தனமாக உடலுறவு கொள்வதிலிருந்தும் நிரந்தரமாக ஆசைநாயகியை வைத்துக் கொண்டிருப்பதிலிருந்தும் வேறுபடுத்துகிறது.

## பாலியல் தொழிலுக்கான காரணங்கள்

பாலியல் தொழிலுக்கான காரணங்களை நீலேண்ட் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்துகிறார்:

1. குடும்ப வாழ்க்கைப் பிரச்சனைகள் மற்றும் குடும்பச் சூழ்நிலைகளுடன் தொடர்புடையவை.

2. திருமண வாழ்வுடன் தொடர்புடையவை.

3. பொருளாதார காரணங்கள்.

பாலியல் தொழிலில் பெண்கள் ஈடுபடுவதற்கு புனேகர் மற்றும் ராவ் 6 காரணங்களை வகைப்படுத்தியிருக்கிறார்கள்:

1. கணவர் அல்லது பெற்றோரின் மரணம்

2. வறுமை, கணவனைப் பிரிந்து வாழ்தல்

3. பெற்றோர், கணவர் குடும்பத்தினரால் புறக்கணிக்கப்படுதல், அவமானப்படுத்தப்படுதல்.

4. கடத்தல், ஏமாறுதல், கூடா நட்பு.

5. உடலுறவில் அதீத நாட்டம், தவறான உறவால் கர்ப்பமடைதல்.

6. அறியாமை, எளிதாக சம்பாதித்து வசதியாக வாழ விரும்புதல், நல்லொழுக்கக் குறைவு.

பெரும்பாலும் ஒன்றுக்கு மேற்பட்ட காரணங்கள் பாலியல் தொழிலில் ஈடுபட அடிப்படையாகின்றன.

**பொருளாதாரக் காரணங்கள்**

வறுமையை சமாளிக்கவும், வசதியாகவும் ஆடம்பரமாகவும் வாழவும் பாலியல் தொழிலில் ஈடுபடுகிறார்கள். பெரும்பாலான பாலியல் தொழிலாளர்கள் வறுமைக் கோட்டுக்குக் கீழே வாழும் குடும்பத்திலிருந்து உருவாகிறார்கள். பொருளாதார ஆதரவற்ற, குறைவான வருமானம், குடும்ப வருமானத்திற்கு வேறு வழி இல்லாத நிலையில் தன்னையும் தனது குழந்தைகளையும் காப்பாற்றப் பாலியல் தொழிலில் ஈடுபடுவது, அதிக எண்ணிகையிலான குழந்தைகளை வளர்க்கும் பொறுப்பு, பொருளாதார நிலையை உயர்த்திக் கொள்ளும் ஆவல், நிரந்தர வேலையின்மை, இளம் வயதிலேயே வேலைக்குச் செல்வது போன்றவை தராதரமற்ற உடலுறவுக்கு காரணமாகிறது.

**சமூகக் காரணங்கள்**

விதவையான/கணவரைப் பிரிந்து வாழும்/கைவிடப்பட்ட/ ஆதரவற்ற பெண்கள், குடும்பத்தின் கட்டுப்பாடும் சமூகக் கட்டுப்பாடும் குறைவாக இருத்தல், நல்லொழுக்க நெறிகள் பின்பற்றப்படாமை, காலதாமதமாக நடைபெறும் திருமணங்கள், பெற்றோர் மரணம், துன்பமான/ கண்காணிப்பற்ற குடும்பச் சூழ்நிலை, கல்வியறிவின்மை, பாலியல் அறியாமை, வரதட்சணைக் கொடுமை, கணவனின் ஒழுக்கக்கேடு, கணவனே வற்புறுத்தி இத்தொழிலில் இறக்கி விடுதல், விதவை மறுமண வாய்ப்பு மறுத்தல், சமயச் சடங்குகளோடு "பொட்டுக்கட்டி" நேர்ந்துவிடப்பட்டு இளமைப் பருவத்தில் பணக்காரர்களுக்கு ஆசைநாயகியாக இருந்து காலப்போக்கில் பொலிவிழந்து வாய்ப்புகளற்ற நிலையில் பாலியல் தொழிலுக்கு வந்து சேரும் 'தேவதாசி' முறை ஆகியன முக்கியக் காரணங்கள். பாலியல் வன்முறையால் கற்பை இழக்க நேரிட்டுவிட்டால் அதையே குற்றச்சாட்டாக்கி, குற்றமிழைத்த மனநிலைக்குச் சமூகம் அவளை ஆளாக்குவதால் வெறுப்புற்று பாலியல் தொழிலில் ஈடுபடுகிறாள். அத்தகைய பெண்கள் இழந்த மரியாதையை மீட்கக் கற்புத் தொடர்பான சமூக விழுமியங்கள் தடையாக இருப்பதுடன், தொடந்து புறக்கணிக்கப்படுவதற்கும் காரணமாக அமைகின்றன.

**உளவியல் காரணங்கள்**

விருப்பமில்லா திருமணம், மகிழ்வில்லாத திருமண வாழ்க்கை, திருப்தியில்லாத கணவன்–மனைவி தாம்பத்திய உறவு, கட்டுப்பாடற்ற உடல் சுக விருப்பங்கள், பலருடனான பாலியல் உறவில் விருப்பம், கூடா நட்பு, ஆடம்பர வாழ்க்கையில் விருப்பம், வரைமுறையற்ற உடலுறவு விருப்பம் தராதரமற்ற சமூகத் தொடர்புகளிலும் உடலுறவிலும் புது அனுபவம் தேடுவதில் தொடங்கிப் பாலியல் தொழிலில் முடிகிறது. கணவனின் நெறிகெட்ட ஒழுக்கநடத்தை, வக்கிரமான வன்புணர்வு செயல்கள் போன்றவைகளும் காரணங்களாகின்றன.

பாலுறவு ஆசை

சிறுவயதில் அத்துமீறிய பாலியல் நடவடிக்கைகளில் ஈடுபடுத்தப்பட்டதால் வயது வந்ததும் பாலுறவில் அதீத ஆர்வம் ஏற்பட்டு இன்பம் காண விழைதல், அதீத பாலுணர்வு வேட்கையாலும் பலரோடும் பாலுறவு வைத்துக்கொள்ள ஏற்படும் ஆசையாலும் உந்தப்பட்டுப் பிறருடன் இன்பம் காண விழைதல்.

*வன்புணர்வு*

வன்புணர்வுக்கு உள்ளாகும் பெண்கள் கீழ்த்தரமானவளாக அடையாளப்படுத்தப்பட்டு சமூகத்தினரின் கண்டனத்தினால், குடும்பத்தில் இருந்து வெளியேற்றப்படுவதும் அவ்வாறானவர்கள் வேறு ஆதரவின்றி பாலியல் தொழிலில் அடைக்கலமாவதும் ஆயிரக்கணக்கானோர் இத்தொழிலில் ஈடுபடக் காரணமாகிறது. குடும்பத்தினர், உறவினர்கள், நண்பர்கள், அண்டை அயலார் ஆகியோரால் பாலியல் வன்முறைக்குள்ளாகும் சிறுமிகள் மானம், அவமானத்திற்குப் பயந்து வீட்டைவிட்டு ஓடியோ அல்லது விரட்டப்பட்டோ வரும் சூழலில் பாலியல் தொழிலில் தள்ளப்படுகின்றனர்.

நகரமயமாதலும், தொழிமயமாதலும்

நகரமயமாதலும் அத்தோடு இணைந்த தொழில்மயமாதலும், நவீனமயமாதலும் முக்கியக் காரணங்களாக அமைந்துள்ளன. நகர மக்கள் தொகையில் ஆண்கள் எண்ணிக்கை அதிகமாகவும் பெண்களின் எண்ணிக்கை குறைவாகவும் இருப்பது, மக்கள் தொகை நெருக்கம், நகரங்களில் நிலவும் அதிகளவு வாழ்க்கைச் செலவினங்கள், கிராமங்களில்

இருந்து நகரங்களுக்கு இடம் பெயர்தல், சமூக மற்றும் குடும்பத்தின் கட்டுப்பாடு குறைந்த நிலை, தனிமனிதனின் மாறி வரும் உளவியல் பாங்கு, பணியிடங்களில் ஆண் – பெண் இடையேயான தொடர்புகள் அதிகரித்தல், கலாச்சார சீரழிவு, பொழுதுபோக்குச் சாதனங்களின் தாக்கம், சமூக விரோதிகளின் ஊக்கம் போன்ற காரணிகளும் இத்தொழிலுக்கு சாதகமான சூழ்நிலையாகத் திகழ்கின்றன.

குறைந்த வயதிலேயே பெண்கள் வேலைக்குச் செல்லும் நிலையில் நெறி தவற ஊக்குவிப்பவர்களோடு தொடர்பு கொள்ள ஏற்படும் வாய்ப்பு மனக்கட்டுப்பாட்டையும் நல்லொழுக்க நெறியையும் பாதிக்கப்படுகிறது. பிற ஆண்களோடு தகாத பாலுறவு கொள்ள நேரிட்ட சந்தர்ப்பத்திலிருந்து நுட்பமும், அனுபவமும் பெற்று அதையே தொடர்ந்து திரைமறைவில் செய்ய ஊக்கம் பெறுகின்றனர். பாலின நடத்தையை அடிமட்ட ஏழ்மையும், பிறரோடு ஒப்பு நோக்கின் விளையும் ஏழ்மையும் பாதிக்கின்றன.

**கற்புநெறி பற்றிய சமூக விழுமங்கள்**

கற்புநெறி பற்றிய சமூக விழுமங்கள் ஒருமுறை தவறிய பெண் தன் சமூகத் தகுநிலையை மீண்டும் பெற்று நெறிபிறழாமல் சமூகம் ஏற்றுக் கொள்ளும் வகையில் வாழ்வது கடினம் என இறுக்கமானதாக இருக்கிறது. அவள் மன்னிக்க முடியாத பாவம் செய்த விட்டவளாகவும் திரும்பவும் ஏற்றுக்கொள்ளத்தகாதவளாகவும் கருதப்படுகிறாள். இதைப் போலவே விதவைகள் மறுமணத்திற்கு இருக்கும் கட்டுப்பாடுகள் காரணமாக பல விதவைப் பெண்கள் தங்களையும் தம் குழந்தைகளையும் வாழ வைப்பதற்கு வேறுவழியின்றி இத்தொழிலில் ஈடுபடுகின்றனர்.

**அறியாமை**

விவரம் அறியாத சிறுமிகளையும், இளம் பெண்களையும் அவர்களின் அறியாமையைப் பயன்படுத்தி, ஆசை வார்த்தைகளால் வேலைக்குச் சேர்த்து விடுவதாகவும், கை நிறைய ஊதியம் பெற்றுத் தருவதாகவும், திரைப்பட வாய்ப்பு காத்திருப்பதாகவும், திருமணம் செய்து கொள்வதாகவும், இன்ன பிற ஆசை காட்டியும் பொய் சொல்லிப் பிறந்த இடத்தில் இருந்து வஞ்சகமாக அழைத்து வந்து பாலியல் தொழிலில் திணிக்கப்படுகின்றனர். சமூக விரோதிகளின் இத்தகைய ஈனச்செயலால் ஏராளமானோர் பாலியல் தொழிலில் சிக்கிச் சீரழிகிறார்கள்.

## பாலியல் தொழில் அமைப்பு

இன்று பாலியல் தொழில் வேரூன்றி வளர்ந்து, பெரும் வியாபாரமாக மாறியுள்ளது. லாப நோக்கத்திற்காக பாலியல் தொழிலில் புதுபுது பெண்கள் தேவைப்படுவதால் ஏமாற்றுபவர்களும், எத்தர்களும் கழுகுகளைப் போல் தேடி நிர்கதியிலிருக்கும் பெண்களை சுற்றி வலைவீசி சமூகப் பாதுகாப்பும், அரவணைப்பும் கிடைக்காத பெண்களை ஏமாற்றியும், கடத்தியும், கட்டாயப்படுத்தியும் கொண்டு வருவதற்கான விரிவான அமைப்பு செயல்படுகிறது. பெண்களை அழைத்து வருபவர்கள், வாடிக்கையாளர்களை அழைத்து வருபவர்கள், பெண்களை ஒரு இடத்தில் வைத்து பாலியல் தொழில் செய்பவர்கள் ஆகியோரைக் கொண்ட வலைப்பின்னலாக பாலியல் தொழில் திகழ்கிறது. நகரங்களில் தனிக்குடியிருப்புப் பகுதிகளில் பாலியல் தொழில் நடைபெற்று வருகிறது. பாலியல் தொழிலாளர்களின் உழைப்பின் மூலம் கொழுத்த லாபம் அடையும் இவ்வலைப்பின்னல் காவல்துறையினருக்கு கையூட்டு வழங்குவதன் மூலமாக பாதுகாப்பு பெறுவது, குற்ற நடத்தை உள்ளவர்களுடன் தொடர்பும், நட்பும் ஏற்படுத்திக் கொள்வது, குற்றவாளிகளுக்கும் குற்ற நடத்தைகளுக்கும் உதவுவது போன்ற செயல்களில் ஈடுபடுகின்றன.

தன் விருப்பமின்றி கட்டாயத்தின் காரணமாகவும், அபரிமிதமான பணம் காரணமாகவும் பாலியல் தொழிலில் பெண்கள் ஈடுபடுகின்றனர். பணம் பாலியல் தொழிலின் முக்கிய நோக்கமாக இருப்பதால் புதுப்புது இளம் பெண்களை ஏமாற்றுதல், கடத்தல், மிரட்டல் மற்றும் வலுக்கட்டாயம் மூலமாக இத்தொழிலுக்குக் கொண்டு வருவதற்கான விரிவான அமைப்பு செயல்படுகிறது. திரைமறைவாக நடைபெறும் இத்தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களைப் பற்றிய துல்லியமான எண்ணிக்கையும், பதிவுகளும் கிடைப்பதில்லை. அரசுகளும், பிற சமூக அமைப்புகளும் அவ்வப்போது மேற்கொள்ளும் சுற்றாய்வின் மூலம் பெறப்படும் மதிப்பீடுகளும் சரியான எண்ணிக்கையை அளிப்பதாக இல்லை. எனவே நம் நாட்டில் பாலியல் தொழிலில் ஈடுபட்டிருப்பவர் எண்ணிக்கையும், முழு விபரங்களும் தெரியவில்லை.

பாலியல் தொழிலாளர்கள் அமைப்பு ரீதியான, ஒழுங்கமைந்த ஒத்த குழுவினர் அல்ல. ஒரே தொழிலை செய்தாலும் அவர்களுக்குள் எந்த விதமான உறவும் ஒட்டுதலும் இல்லை. வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமான வாடிக்கையாளர்களைக் கொண்டவர்களாக உள்ளனர். அவர்களின் தகுதிநிலையும் ஒத்ததாக இருப்பதில்லை. உடலமைப்பு, அழகு,

அனுபவம், பழகும் முறை, நடை, உடை, பாவனை, பின்புலம் ஆகியவற்றுடன் அவர்கள் எங்கிருந்து தொழில் செய்கிறார்கள், எவ்வித வாடிக்கையாளர்களுக்கு பாலியல் சேவையாற்றுகிறார்கள், வாடிக்கையாளர்களை எவ்விதம் பெறுகிறார்கள், எவ்வளவு சேவைக் கட்டணம் பெறுகிறார்கள் போன்றவை அவர்களிடையே தகுதிநிலை வேறுபாடுகளை உருவாக்குகின்றன. வெளிஉலகுக்கு வெளிப்படையாகத் தெரிந்து விலைமாதர் மூலமாக பாலியல் தொழில் செய்பவர்கள்; குறிப்பிட்ட வட்டத்திற்குள், முழு நேரத் தொழிலாக அல்லாமல் அவ்வப்போது தேர்ந்தெடுத்த சிலருடன் மட்டும் தொழில் செய்பவர்கள்; குறிப்பிட்ட ஒருவருக்கு குறிப்பிட்ட காலம் வரை ஆசைநாயகியாக இருப்பவர் போன்ற வகையினராக உள்ளனர்.

பாலியல் தொழிலாளர்களின் சமூக இடப்பெயர்வு கீழ் நோக்கியதாக இருக்கிறது. அழைப்புப் பெண்களும், ஆசைநாயகியாக இருந்தவர்களும் தங்களுடைய கவர்ச்சியை இழக்கும் போது வாடிக்கையாளர்களின் வாய்ப்புகளைக் குறைவாகவே பெறுகிறார்கள். அதன் காரணமாக நேரடியாக களத்தில் இறங்கி வாடிக்கையாளர்களை வருந்தி அழைக்கும் நிலைக்கு ஆளாகிறார்கள். அதைப்போல பாலியல் விடுதிகளில் தங்கியிருந்து தொழில் செய்தவர்கள் தெருவுக்கு வந்து வாடிக்கையாளர்களைக் கவரும் நிலைக்குக் கீழிறங்குகிறார்கள். அதற்கேற்ற மாதிரி இவர்களின் வருமானமும் குறைகிறது; மாறாகத் துயரங்கள் அதிகரிக்கின்றன.

பாலியல் தொழிலில் பாலியல் தொழிலாளர்களைத் தவிர அப்பெண்களை சப்ளை செய்பவர், ஆண்களை அழைத்து வருபவர், பெண்களை வீட்டில் வைத்து தொழில் செய்பவர், ஆகியோரும் முக்கிய இடம் பெறுகிறார்கள். வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட சதவீகித அளவை இவர்கள் கைமாறாகப் பெறுகின்றனர். பெரும்பாலும் பாலியல் தொழிலில் வயது காரணமாக அல்லது உடல்நலக்குறைவால் வாய்ப்பு குறைந்தவர்கள் இந்த வேலையை செய்பவர்களாய் இருக்கிறார்கள். இவர்களுடன் வாடகைக் கார், ஆட்டோ ஓட்டுநர்கள், தங்கும் விடுதியில் பணியாற்றுவோர் ஆகியோரும் ஈடுபடுகின்றனர்.

பாலியல் தொழிலில் வியாபாரத் தொடர்பை ஏற்படுத்தி பாலியல் தொழிலாளருக்கு நண்பனாகவும், வழிகாட்டியாகவும், ஆசானாகவும் செயல்படுபவர் 'துணையாளர்' அல்லது 'உதவுபவர்' என அழைக்கப்படுகிறார். வாடிக்கையாளர்களின் விருப்பம் அறிந்து அதற்கேற்ப

பாலியல் தொழில் இல்லங்களுக்கு அழைத்து வருபவர் 'பிம்ப்' (Pimp) என அழைக்கப்படுகிறார். இத்தகையோர் வயது முதிர்ந்த முன்னாள் பாலியல் தொழிலாளராகவோ, கைவண்டி, சிற்றுந்து அல்லது வாடகைக் கார் ஒட்டுநராகவோ, அல்லது இதற்காகவே பிரத்தியேகமாகத் திரியும் ஏஜெண்டாகவோ இருக்கலாம். பாலியல் தொழிலை நடத்தும் 'இல்லக் காப்பாளர்' பாலியல் தொழிலாளர்களுக்கு உறைவிடம் கொடுத்து, அவர்களின் தேவைகளைக் கவனித்து வருமானத்தில் ஒரு குறிப்பிட்ட தொகையை எடுத்துக் கொள்வார். பாலியல் தொழிலாளியை தனது முழு கட்டுப்பாட்டின் கீழ் வைத்துக் கொண்டு, அவளுக்கு வாடிக்கையாளர்களை ஈர்த்து அழைத்து வருவதுடன் அவளது நிர்வாகியாக, பாதுகாவலராக, வெளியே செல்லும் போது துணையாக வருபவராக, நலன் விரும்பியாக, காதலனாகச் செயல்படுபட்டு அவளின் வருமானத்தில் சுகமாக வாழ்பவன்.

**பாலியல் தொழிலாளர்கள் வகை**

**பிராத்தல் தொழிலாளர்கள்** (Brothel-based workers)

இவர்களுக்கு அடுத்த தகுதி நிலையில் இருப்பவர்கள் 'பிராத்தல்' எனப்படும் பாலியல் தொழில் நடைபெறும் குறிப்பிட்ட வீட்டில் பலருடன் சேர்ந்து தங்கியிருந்து பாலியல் சேவையை அளிப்பவர்கள். இடைத்தரகர்கள் மூலமாக இக்குறிப்பிட்ட இடத்திற்கு அழைத்து வரப்படும் இவர்கள் "பிராத்தல் கீப்பர்", "மேடம்" என்றழைக்கப்படும் இல்லக் காவலரின் பாதுகாப்பிலும், கண்காணிப்பிலும் வீட்டிற்கு வரும் அல்லது அழைத்துவரப்படும் வாடிக்கையாளர்களுக்கு சேவைபுரிகிறார்கள். புதிதாக தொழிலுக்கு வந்து சேருபவர்களுக்கு தொழிலின் நௌிவு சுழிவுகளையும், வாடிக்கையாளர்களிடம் நடந்து கொள்ள வேண்டிய விதம் குறித்த பயிற்சிகளையும் 'மேடம்' அளிக்கிறார். இவர்களது வருமானத்தின் பெரும்பகுதி 'மேடத்திற்கு', கிடைக்கிறது. இவர்களின் உணவு, உடை, மருத்துவச் செலவு போன்றவற்றை அதற்கென தனியாக பணம் பெற்றுக் கொண்டு 'மேடம்' ஏற்பாடு செய்கிறார். தேவையைப் பொறுத்து, ஒரு நாளில் பலருடனும் உடலுறவு கொள்ள வேண்டிய கட்டாய நிலையில் இவர்கள் இருக்கிறார்கள்.

**பொது இடங்களில் நடமாடுவோர்** (Street Walkers)

பாலியல் தொழிலில் கீழான நிலையில் இருக்கும் இவ்வகையினர் அன்றாடம் தெருக்கள், கடைப்பகுதிகள், திரையரங்கம், பேருந்து மற்றும்

தொடர்வண்டி நிலையங்கள் போன்ற பொது இடங்களில் நடமாடி, வாடிக்கையாளர்களைக் கவரும் பெண்களாவர். மிகக் குறைந்த கட்டணமே இவர்களால் வசூலிக்கப்பட முடிவதால், குறைவான வருவாய் ஈட்டுபவர்களாகவும், காவல்துறையினர் மற்றும் சமூகவிரோத கும்பல்களிடம் அடிக்கடி சிக்கி அவதியுறுகிறவர்களாகவும் உள்ளனர்.

**அழைப்புப் பெண்கள்** (Call Girls)

தொழிலில் அதிக மதிப்புடனும், அதிக வருமானத்துடனும் இருக்கும் இப்பெண்கள் பெரும்பாலும் படித்தவர்களாகவும், நன்றாக உடையணிந்து நாகரிகத் தோற்றத்தில் இருப்பவர்களாகவும், ஓரளவேனும் வசதியான குடும்பப் பின்னணி கொண்டவர்களாகவும், வெளி உலகத்திற்கு வெளிப்படையாகத் தெரியாதவர்களாகவும், மிகச் சிலருக்கு மட்டுமே தெரிந்த தொடர்புகள் வாயிலாக அறிமுகமாகக் கூடியவர்களாகவும், தேர்ந்தெடுத்த ஒரு சிலருடன் மட்டுமே உடலுறவு கொள்பவர்களாகவும், அதிகக் கட்டணம் பெறுபவர்களாகவும் இருக்கிறார்கள். முன்பின் தெரியாதவர்களையும், தெரிந்த வாடிக்கையாளர் மூலமாக அறிமுகமாகாதவர்களையும் இவர்கள் அனுமதிப்பதில்லை. நேரடித் தொடர்பில் இல்லாமல் தொலைபேசி, அலைபேசி வழியாக மட்டுமே தொடர்பில் இருக்கிறார்கள் என்பதால் காவல் துறையினரிடம் எளிதில் சிக்குவதில்லை. எளிதாக, விரைவிலேயே மிக அதிகமாக சம்பாதிக்கமுடியும் என்பதால் திருமணமாகாத மற்றும் திருமணமான பெண்கள் குடும்பத்தினருக்குச் சந்தேகம் ஏற்படாதவாறு பகலில் மட்டும் குறிப்பிட்ட வட்டத்திற்குள் இத்தொழிலைச் செய்கிறார்கள். தொடர்ச்சியாக இல்லாமல் எப்பொழுதாவது மட்டுமே இத்தொழிலில் ஈடுபடுபவர்களில் தமது குறைந்த வருமானத்தை அதிகப்படுத்திக் கொள்ளும் பொருட்டு ஈடுபடுபவர்களும், பாலுறவு ஆர்வத்தால் ஈடுபடுபவர்களும் உள்ளனர்.

**ஆசைநாயகிகள்** (Concubinage)

குறிப்பிட்ட நபரிடம் குறிப்பிட்ட காலம் மனைவிபோல் செயல்படும் ஆசைநாயகிகள்.

**பாலியல் தொழிலும், ஒழுங்கு குலைவும்**

உடலுறவு குறித்த சமூக விழுமியங்களும், மதிப்பீடுகளும் ஆண்–பெண் சார்புத் தன்மையுடன் உள்ளன. கற்பு, ஒழுக்கம் ஆகியவை

பெண்களுக்கான அதிமுக்கியமான, புனிதமான குணநலன்களாகவும், இதுவே ஆண்களுக்கு அவ்வளவு முக்கியமானதாக இல்லாமலும் இருக்கின்றன. ஆண்களுக்கு சமூகம் காட்டும் இத்தகைய சலுகையின் விளைவாக பாலியல் தொழிலும், தொழிலாளர்களும் அவர்களைச் சார்ந்து வாழ்கிறார்கள். பாலியல் இரட்டைப் போக்குகள் ஆண்களை விட பெண்களைத் தாழ்வுறச் செய்கிறது. "பாலியல் தொழிலில் உள்ள பெண்களின் ஆளுமை நிலைகுலைவு இரட்டை வேடம் மற்றும் ஒழுங்கீனமானவள் என்ற இரண்டு கட்டங்களாகப் பரிணமிக்கின்றன" என்கிறார் ரெக்லெஸ்(Reckless). அவர்களின் இரட்டை வேடம் முரண்பாடான மனம், உடல் ரீதியிலான துன்பம் ஆகியவற்றை உருவாக்குகிறது. ஒழுங்கீனமானவள் என்ற மன உறுத்தல் ஆழமான, நிரந்தர வடுவை உருவாக்குகிறது. சமூக அந்தஸ்தை இழப்பதோடு, சமுதாயத்தில் கடைநிலை வாழ்வில் தங்களைப் புதைத்துக் கொள்கிறார்கள். சமூகத்தின் மீதும், சமூக விழுமியங்களின் மீதும் கொண்டுள்ள வெறுப்பு அவர்களை முற்றிலும் நிலைகுலையச் செய்கின்றன. அடிக்கடி கர்ப்பமாதல், தொழிலில் ஈடுபடும் போது கையும் களவுமாகப் பிடிபட்டு கைதாகி வெளிஉலகத்திற்குத் தெரிய வருதல், பாலியல் வன்முறை, பால்வினை நோய்த் தொற்று, காவல்துறையினரின் சித்ரவதை ஆகியவற்றின் பாதிப்புகளால் வாழ்க்கை அவலமாகிறது.

பாலியல் தொழில் தனிப்பட்ட பெண்களின் ஆளுமை மட்டுமல்லாது அவர்களின் குடும்பத்தையும் பாதிக்கிறது. தகாத உடலுறவின் மூலமாகப் பெற்ற பால்வினை நோய்த்தொற்று சம்பந்தப்பட்டவர்களிடமிருந்து கணவனுக்கும், மனைவிக்கும், குழந்தைகளுக்கும் பரவி பாதிக்கிறது. பலகுழந்தைகள் பல்வேறு உடல் குறைகளுடன் பிறந்து, வளர்கிறார்கள்.

பாலியல் தொழில், அதில் ஈடுபடுபவரின் வாழ்க்கையை சீரழிப்பது மட்டுமல்லாது சமுதாயத்தின் ஒழுங்குக் குலைவுக்கும் காரணமாக அமைகிறது. பாலியல் தொழிலின் வணிகத் தன்மையும், ஈடுபடுவோரின் நோய்த் தொற்றுப் பாதிப்புகளும் சமுதாயத்தின் அமைப்பில் பிரதிபலிக்கின்றன. வணிகமயமாக்கப்படும் பாலியல் தொழில் நாளடைவில் ஒரு நிறுவனமாக விரிவடைந்து அத்தொழில் நடைபெறும் பகுதிகளில் அழுத்தமான பன்முகப் பாதிப்புக்களை ஏற்படுத்துகின்றன. வாடிக்கையாளர்களை அதிக அளவு கவர்வதற்காகப் பாலியல் தொழிலுடன் இணைந்த உபரி தொழில்களும் விரிவாக்கம் பெறுகின்றன. தங்கும் விடுதிகள், உணவுக்கூடங்கள், நடன அரங்கங்கள், மதுபானக் கடைகள், சுகமளிக்கும் பெண்களை மேலும் மேலும் அழைத்து வந்து சேர்க்கும்

இடைத்தரகர்கள், புதிது புதிதாக முளைக்கும் பாலியல் தொழில், கூடங்கள் என விரிவடைகின்றன. பாலியல் தொழில் குற்றங்கள் உட்பட பல்வேறு சமூகப் பிரச்சனைகளையும் தோற்றுவிக்கிறது.

பாலியல் தொழிலாளர்களை வெறுத்து ஒதுக்கும் சமூகப் பார்வையினால் மனமொடிந்து வாழ்வதும், திருமண உறவுகள் பாதிக்கப்பட்டுக் குடும்பம் சீர்குலைவதும், நோய்த் தொற்றுப் பெருமளவில் பரவுவதும் சமூக அமைப்பின் ஒழுங்குக் குலைவுக்கு முக்கிய காரணங்களாகின்றன.

## சட்டமும் பாலியல் தொழிலும்

பாலியல் குற்றங்களைத் தண்டிக்கவும், கட்டுப்படுத்தவும் கிழக்கிந்தியக் கம்பெனி ஆட்சிக் காலத்திலேயே சட்டங்கள் இயற்றப்பட்டன. இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலும் நடைமுறையில் இருந்த தனித்தனியான சட்டங்கள் பின்னர் இந்தியத் தண்டனைச் சட்டத்தின் கீழ் சேர்க்கப்பட்டு, அத்துடன் பெண்மையைக் காப்பாற்றவும், தகாத உடலுறவுக்குக் கட்டாயப்படுத்துவதைத் தடுக்கவும் ஷரத்துக்கள் கூடுதலாக சேர்க்கப்பட்டன. இந்திய தண்டனைச் சட்டம் பாலியல் தொழிலையோ, பாலியல் தொழில் செய்வதையோ சட்டத்திற்குப் புறம்பான செயல்களாகக் கருதவில்லை; பாலியல் தொழிலுக்காகப் பெண்களைக் கடத்துவது, ஏமாற்றுவது, கட்டாயப்படுத்துவது ஆகியவற்றையே குற்றச் செயல்களாகக் கருதுகிறது.

**1956**–ஆம் ஆண்டு முதல் நடைமுறைப்படுத்தப்பட்டு வரும் 'விபச்சாரத் தடைச் சட்டம்' பாலியல் தொழிலை சட்டத்திற்குப் புறம்பானது என அறிவிக்கவில்லை எனினும் மாநில அரசுகள் முறையாக செயல்பட்டுத் தடுக்க வேண்டும் என வலியுறுத்துகிறது. பெண்மையைக் காக்கவும், அவர்களிடம் பலாத்காரத்தில் ஈடுபட்டு பாலுறவு கொள்ளக்கூடாது என்றும் வலியுறுத்தப்பட்டுள்ள இச்சட்டத்தின்படி பெண்ணை மானபங்கப்படுத்துதல், அவளது விருப்பத்திற்கு மாறாக கட்டாயமாகப் புணர முயற்சிப்பது, 18 வயதுக்குட்பட்ட பெண்ணை விற்பது, வாங்குவது, வாடகைக்கு ஏற்பது, கட்டாயப்படுத்தி முறைகேடான செயல்களுக்காக அடைத்து வைத்திருப்பது, 16 வயதுக்குட்பட்ட பெண்ணுடன் அவள் விருப்பத்துடனோ இல்லாமலோ பாலுறவு கொள்வது போன்றவை குற்றமாகும்.

வக்கிரமான ஆபாசமான சைகைகள், சாதனங்களைக் காட்டினாலும், அத்தகைய வார்த்தைகள், சத்தங்கள், ஒலி ஆகியவற்றை எழுப்பினாலும் பெண்ணின் தனிமையை இடையூறு செய்தாலும் ஒரு வருட சிறைத் தண்டனை அல்லது அபராதம் அல்லது தண்டனையும் அபராதமும் சேர்த்து விதிக்க, இச்சட்டம் வகை செய்கிறது. பெண்ணை மானபங்கப்படுத்த முயற்சித்தாலோ, மானபங்கப்படுத்தினாலோ இரண்டு ஆண்டுகள் வரையிலான சிறைத் தண்டனை அல்லது அபராதம் அல்லது தண்டனையும், அபராதமும் சேர்த்து விதிக்கவும் இச்சட்டத்தின் பிரிவு 354 ஆவன செய்கிறது. 18 வயது நிறைவடையாத பெண்ணை அவளது விருப்பத்திற்கு மாறாகத் திருமணம் செய்துவைக்கவோ அல்லது உடலுறவுக்காக அவளைக் கடத்துவது மற்றும் ஏமாற்றி அழைத்துச் செல்வது, கட்டாயப்படுத்தியோ அல்லது ஏமாற்றியோ உடலுறவு கொள்வது ஆகிய குற்றங்களுக்குப் பிரிவு 366 அதிகபட்சமாக 10 ஆண்டுகள் வரை சிறைத் தண்டனையோ அல்லது அபராதமோ அல்லது இவை இரண்டும் சேர்த்தோ வழங்க வழிசெய்கிறது.

18 வயதுக்குட்பட்ட பெண்ணை விற்பது, வாங்குவது, வாடகைக்கு விடுவதற்காக வாங்குவது, உடலுறவுக்காகவோ அல்லது சட்டத்திற்குப் புறம்பான வேறு செய்ல்களுக்காகவோ பயன்படுத்துவது, அடைத்து வைத்திருப்பது போன்றவற்றை பிரிவு 372 கடும் தண்டனைக்குள்ளாக்குகிறது.

16 வயதுக்குட்பட்ட பெண்ணுடன் அவளது விருப்பத்தின் பேரிலேயே உடலுறவு கொண்டாலும் கூட அது கற்பழிப்பாகவே கருதப்பட்டு அதற்காக 10ஆண்டுகள் வரையிலான சிறைத் தண்டனை வழங்க பிரிவு 375 வகை செய்கிறது. திருமணமான பெண்ணுடன் அவள் கணவனின் ஒப்புதல் இல்லாமல் உடலுறவு கொள்பவருக்கு 5 ஆண்டுகள் வரையிலான சிறைத் தண்டனை அல்லது அபராதம் அல்லது இவை இரண்டுமாகச் சேர்த்துப் பிரிவு 497 வழங்குகிறது.

திருமணமான பெண்ணை உடலுறவுக்காகத் தூண்டுவதும், அல்லது அத்தகைய தீய நோக்கத்திற்காக மறைத்து வைத்திருப்பதும் பிரிவு 498ன் படி 2 ஆண்டுகள் சிறைத் தண்டனை அல்லது அபராதம் அல்லது இவை இரண்டும் சேர்த்தோ வழங்கக் கூடிய குற்றங்கள்.

பாலியல் தொழிலில் பாதிப்புக்கும், தண்டனைக்கும் உள்ளாக்கப்படுபவர்கள் பெண்களே. பாலியல் தொழில் பெண்களைத்

தேடிச் செல்லும் ஆண்கள் தண்டிக்கப்படுவதில்லை. பாலியல் தொழிலாளர்களை வைத்து தொழில் செய்பவர்களும் பொறுப்பாக்கப்பட்டு தண்டனைக்குள்ளாக்கப்படுவதில்லை.

முறையாகக் கண்காணிக்கப்பட்டு, நடைமுறைப்படுத்தப்பட இயலாததால் விபச்சாரத் தடைச் சட்டத்தால் இத்தொழிலைக் கட்டுப்படுத்த முடியவில்லை. சிறப்பு நீதிமன்றங்கள் இல்லாததும், தனிக் காவல்துறைப் பிரிவு அனைத்துப் பகுதிகளிலும் ஏற்படுத்தப்படாததும், காவல்துறையினரிடையே ஊழல் மலிந்திருப்பதும் இத்தொழிலைக் கட்டுப்படுத்த இயலாமைக்கு பிற காரணங்கள். பாலியல் தொழிலில் பெண்களை ஈடுபடுத்துவதைத் தடுக்கும் சட்டத்தில் இருக்கும் ஓட்டைகளும், அதை நடைமுறைப்படுத்துவதில் மாநிலத்திற்கு மாநிலம் வேறுபட்டிருப்பதும் சட்டத்தை மேலும் வலுவிழக்கச் செய்கின்றன. அரசின் நோக்கமும் இத்தொழிலை ஒழிப்பது என்பதை விட, பொது இடங்களில் நடைபெறாது கண்காணிப்பது என்பதாகவே உள்ளது.

**விபச்சாரத்தின் விளைவுகள்**

எய்ட்ஸின் மூலக் காரணியான எச்.ஐ.வி கிருமி, பாலுறவின் மூலமாகவே பெருமளவு தொற்றுகிறது. ஓரினச் சேர்க்கையின் மூலமும் எச்.ஐ.வி. தொற்றுகிறது என்ற போதிலும் 80 சதவிகிதத்திற்கு மேல் ஆண்–பெண் பாதுகாப்பில்லாத உடலுறவு கொள்ளும் நிலையில், அதாவது எச்.ஐ.வி. தொற்றுடைய ஆண், ஆணுறையின்றி பெண்ணுடன் உறவு கொள்ளும் பொழுது அல்லது எச்.ஐ.வி தொற்றுடைய பெண் ஆணுறை அணியாத ஆணிடம் உறவு கொள்ளும் பொழுது எச்.ஐ.வி தொற்று ஏற்படுகிறது. எச்.ஐ.வி/எய்ட்ஸ் நோய்த் தொற்றுகளால் ஏராளமான மனித உயிர்கள் பலியாகின்றன.

பால்வினை நோய்த் தொற்றுகள் பாலியல் தொழிலாளர்களுக்கும், வாடிக்கையாளர்களுக்கும், பிறக்கும் குழந்தைகளுக்கும் கேட்கும் திறன் குறைந்த, பார்வை குறைந்த, உடலியக்கம் குறைந்த பிரச்சனைகளை உருவாக்குகின்றன. அடிக்கடி கர்ப்பம் அடைவதும், உயிருக்கு ஆபத்தான கருச் சிதைவுகளும் உடல்நிலையை பாதிக்கின்றன.

சுய மதிப்பிழத்தல், சமூக இழுக்குக்கு ஆளாதல், தனிமைபடுத்தப்படுதல், தற்கொலைச் சிந்தனைகள் ஏற்படுதல், போதைக்கு அடிமையாதல், மருத்துவச் செலவு, மன அமைதி குலைவு, மன அழுத்தம்,

வேலை செய்ய இயலாமை, வேலையிழத்தல், வறுமை ஆகியவற்றுடன் குடும்பத்தில் அமைதி, நல்லிணக்கம், குழந்தைகளின் வளர்ச்சி, குடும்ப நலன் பாதிக்கப்படுகின்றன.

பால்வினை நோய்த் தொற்றுகளைத் தடுப்பதற்காகவும், குணப்படுத்துவதற்காகவும் அரசாங்கம் மிகுந்த பொருட்செலவு செய்ய வேண்டியதுள்ளது. எச்.ஐ.வி தொற்று பற்றி மக்களிடையே விழிப்புணர்வு ஊட்ட, விளம்பரப்படுத்தப்பட்டு வந்தாலும் இன்னும் மக்களிடையே போதிய விழிப்புணர்வு ஏற்படவில்லை என்பதை எய்ட்ஸ் நோயாளிகள் மேலும் மேலும் உருவாகிக் கொண்டிருப்பதிலிருந்தே அறியலாம்.

**பாலியல் தொழிலைத் தடுக்கும் நடவடிக்கைகள்**

1. இத்தொழிலைக் கட்டுப்படுத்துவதற்காக இயற்றப்பட்டுள்ள விபச்சாரத் தடுப்புச் சட்டத்தை கடுமையாக்கி, தீவிரமாகவும் தொடர்ச்சியாகவும் நடைமுறைப்படுத்துதல் மூலம் வெகுவாகக் கட்டுப்படுத்தலாம். தீவிரப் பிரச்சாரத்தின் மூலமாகவும், நோய்த் தடுப்பு நடவடிக்கைகள் மூலமாகவும் பால்வினை மற்றும் எய்ட்ஸ் போன்ற நோய்த் தொற்றுக்களைத் தடுப்பது மூலமாகவும் நாளடைவில் விபச்சாரத்தையும் பெருமளவு கட்டுப்படுத்தலாம்.

2. இப்பிரச்சனையின் முதல் தடுப்பு நடவடிக்கை பொருளாதார முன்னேற்றமே. மக்களின் பொதுவான வாழ்க்கைத் தரம் உயரும் போது பிறழ்வு நடத்தைகள் குறையும். எனவே தொழில் உற்பத்தி, கல்வி, வேலை வாய்ப்புக்கள் போன்றவைகளை உருவாக்க மேற்கொள்ளும் முயற்சிகள் பாலியல் தொழிலையும் அதனால் ஏற்படுகின்ற மற்றும் அதையொட்டிய பிரச்சனைகளையும் வெகுவாகக் குறைக்கும்.

3. பாலியல் தொழிலாளர்களை மீட்டு அவர்களின் மறு வாழ்வுக்கும், மாற்றுத் தொழிலுக்கும் வேலைவாய்ப்புகள், கடனுதவி மற்றும் மானியம் வழங்கலாம்.

4. சமூகப் பழக்க வழக்கங்களில் – விதவைத் திருமணம், வரதட்சணை, தேவதாசி முறை – மாற்றம் ஏற்படுத்துதல் இத்தொழிலில் புதியவர்கள் நுழையாமல் தடுக்கும்.

5. இரட்டை வேடம் கொண்டுள்ள சமூகப் பாலியல் கண்ணோட்டம் மாற்றப்படுதல்.

6. பாலியல் குறித்த அடிப்படை அறிவு, பால்வினைத் தொற்று பற்றிய விழிப்புணர்வைக் குடும்பத்திலும், பள்ளி, கல்லூரிகளிலும் போதித்தல்.

7. ஆபாச புத்தகங்கள், படங்கள், திரைப்படங்களை முற்றிலும் தடை செய்தல்.

## குழந்தை பாலியல் தொழிலாளர்கள்

உலகெங்கும் 2 மில்லியன் குழந்தைகள் பாலியல் தொழிலில் ஈடுபடுத்தப்படுவதாக மதிப்பிடப்பட்டுள்ளது. "குழந்தை உரிமைகள் மீதான ஐ.நா உடன்படிக்கை"யில் 18 வயதிற்கு கீழ் உள்ள குழந்தைகளைப் பணமோ, பொருளோ வேறு சலுகைகளோ கொடுத்துப் பாலியல் இச்சைகளுக்குப் பயன்படுத்தும் செயல், மனித மாண்பிற்கே களங்கம் கற்பித்து கேவலப்படுத்தும் ஒரு இழிசெயல் என குறிப்பிடப்பட்டுள்ளது. குழந்தைகளைப் பயன்படுத்தி காமத்தைத் தணித்துக் கொள்ளும் ஈனத்தனமான மனிதாபிமானமற்ற இத்தகைய வன்கொடுமைகளுக்கு உள்ளாகும் குழந்தைகள் வெளியில் செல்ல முடியாத அவலநிலையில் உள்ளனர்.

பாலியல் தொழிலாளர்களின் பெரும்பாலான பெண் குழந்தைகளும் சூழ்நிலை சந்தர்ப்பங்களினால் பாலியல் தொழிலிலேயே ஈடுபட நேரிடுகிறது. பாலியல் தொழிலாளர்களுக்கு தொழிலில் வாய்ப்புகள் குறைந்து, வருமானமும் குறைந்து வறுமை அதிகரிக்கும் போது அவர்களின் குடும்பத்தில் உள்ள பெண் குழந்தைகள் பலியாக்கப்படுகிறார்கள். தாயின் பாலியல் தொழில் சார்ந்த சூழலில் வளரும் மகள் தன் எதிர்காலக்கனவுகள் கருகி, தாயின் தொழிலையே செய்ய வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாக்கப்படுகிறாள். புதைகுழியில் இருந்து மீள்வதற்கு முயற்சி செய்யச் செய்ய மேலும் மேலும் குழிக்குள்ளேயே அமிழ்ந்து விடுவதைப் போன்றதொரு வாழ்க்கைச் சூழல், பாலியல் தொழிலாளர்களின் குழந்தைகளுக்கு ஏற்படுகிறது.

பெற்றோர்களிடமிருந்து குழந்தைகளை விலைக்கு வாங்கி பாலியல் தொழிலில் விலைமாதர்களாக பெருநகர விபச்சார விடுதிகளுக்கு அனுப்ப இடைத்தரகர்கள் கணிசமாக உள்ளனர். குழந்தைகளைப் பாலியல் தொழிலில் ஈடுபடுத்துவது நகரங்களிலும் சுற்றுலாத் தலங்களிலும் இன்று பெருகி வருகிறது.இவர்களில் கணிசமான அளவினர் இந்தியாவில்

மாநிலங்களுக்கு இடையேயும், இந்தியாவை ஒட்டியுள்ள நேபாளம், வங்காளதேசம், மியன்மர் போன்ற நாடுகளிலிருந்தும் கடத்தி வரப்பட்டவர்களாவர். இவர்களில் 10 முதல் 15 சதவீதத்தினர் 18 வயதுக்குட்பட்டவர்கள் என மதிப்பிடப்பட்டுள்ளது. தங்கள் பூர்வீகத்தொழில் மற்றும் நிலங்களில் இருந்து அந்நியப்படுத்தப்பட்டு வருமானத்திற்கு வேறு வழியின்றி பல பெற்றோர்களே குழந்தைகளைப் பாலியல் தொழிலில் ஈடுபடுத்துகின்றனர். பல பாலியல் சுற்றுலாத்தலங்களில் முளைத்திருக்கின்ற 'மசாஜ் பார்லர்களில்' மசாஜ் என்ற பெயரில் குழந்தைகளைப் பயன்படுத்தி பாலியல் தொழில் நடைபெறுகிறது.

குழந்தைகளிடம் உடலுறவு கொள்வதால் பால்வினை நோய்த்தொற்று, எயிட்ஸ் போன்ற உயிர்கொல்லி நோய்த்தொற்று ஏற்படாது என்ற நம்பிக்கையில் சுற்றுலாப் பயணிகள் இவர்களை நாடுகின்றனர். உடலுறவில் குழந்தைகளைப் பயன்படுத்துவதற்கு எதிரான சட்டங்கள் தெளிவாகவும், கடுமையானதாகவும் இல்லாததினால் குற்றவாளிகள் மிக எளிதில் தப்பித்துவிடுகின்றனர். மேலும் இத்தகைய குழந்தைகளை அடையாளம் காண்பதும், பாதுகாப்பதும் நடைமுறையில் பல்வேறு சிக்கல்கள் கொண்டதாக உள்ளன.

18 வயதுக்குட்பட்ட பெண் பாலியல் தொழிலாளர்களுடன் பிடிபடும் ஆண்கள் மீது கற்பழிப்பு அல்லது கற்பழிப்பு முயற்சி என வழக்குப் பதிவு செய்யப்பட வேண்டும். இதுபோன்று சட்டங்கள் கடுமையாக்கப்படும் பட்சத்தில் பாலியல் தொழிலில் குழந்தைத் தொழிலாளர்களின் வருகையை முற்றிலுமாகத் தடுக்க முடியும்.

**References**

Barua Sinha, History of Prostituion of India. (2003).

Deepa Das, Prostitutes & Prostituion in India. (2005).

Lakshmi Raghuramaiah, K. Night Birds – Indian Prostitutes from Devadasis to Call Girls. (1991).

Moni Nag, Sex Workers of India: Driverity in Practice of Prostitution and Ways of Life. (2006).

Mukherji, Santhosh Kumar, Prostitution in India. (New Delhi: Inter – India Publications, 1986).

# அலகு – 5 வன்முறை

## பெண்களுக்கு எதிரான வன்முறை

"ஒருவரை உடல் ரீதியாக துன்புறுத்துவது அல்லது காயம் ஏற்படுத்துவது என்ற நோக்கத்திற்காக நிகழ்த்தப்படுவது வன்முறை" என கில்லஸ் (Gelles,1974) வரையறுக்கிறார். ஸ்டார்ஸ் (Stars,1980), மிகார்கி (Migargi,1982) மற்றும் கெம்ப்பி (Kempi) ஆகியோரும் வன்முறையை உடல்ரீதியான துன்புறுத்தல் எனக் கருத்துரைக்கின்றனர்.

பெண்களுக்கு எதிரான வன்முறைகள் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்தப்படுகின்றன:

1. குற்றம் சார்ந்த வன்முறை – வன்புணர்ச்சி, கடத்தல், கொலை போன்றவை.
2. குடும்ப வன்முறை – வரதட்சணைச் சாவு, மனைவியை அடித்து உதைத்தல், பாலியல் கொடுமை, விதவைகளையும் வயதானவர்களையும் கவனிக்காமல் புறக்கணித்தல்.
3. சமூக வன்முறை – பெண் சிசுக் கொலை, பெண்களைச் சீண்டுதல், குடும்ப சொத்தில் பங்கு தர மறுத்தல், உடன்கட்டை ஏறத் தூண்டுதல், அதிக வரதட்சணை கொண்டு வர மருமகளை கொடுமைப்படுத்துதல் போன்றவை.

பெண்களுக்கு எதிரான வன்முறைகளை ஆறு வகைகளாக ராம் அஹுஜா (Ram Ajuja, 1997:252) பிரிக்கிறார்:

1. பணம் தொடர்பானவை.
2. நலிந்த நிலையில் உள்ளோரின் மீது ஆதிக்கம் செலுத்த விளைவது தொடர்பானவை.
3. தமது மகிழ்ச்சிக்காக ஏவும் வன்முறை.

4. வன்முறை நிகழ்த்துபவரின் மனநிலைக் குறைபாடு.

5. இறுக்கமான குடும்ப சூழல் விளைவாக நிகழ்த்தப்படும் வன்முறை.

6. வன்முறைக்கு இலக்காகுமளவு தூண்டப்படும் செயல்முறைகள் காரணமாக நிகழ்த்தப்படும் வன்முறை.

பெண்களுக்கு எதிரான வன்முறை கீழ்க்காணும் நான்கு விதங்களில் நிகழ்த்தப்படுகிறது:

1. உடல் ரீதியாகத் துன்புறுத்துவது – அறைதல், தாக்குதல், அடி, உதை.

2. வன்புணர்வுக்காகத் துன்புறுத்துவது, கட்டாயப்படுத்தி உடலுறவு கொள்ளுதல், வரன்முறையற்ற உடலுறவுக்குக் கட்டாயப்படுத்துதல்.

3. சொற்களால் வசைபாடுதல் – சத்தமிடுதல், ஆபாசமான, அருவருப்பான வார்த்தைகளைப் பயன்படுத்துதல்.

4. உணர்ச்சியை மழுங்கடித்தல் – உதாசீனப்படுத்துதல், கேவலப்படுத்துதல், பயமுறுத்துதல், முட்டாளாக்குதல்.

மத்திய அரசின் தேசியக் குற்றப் பதிவேடுகள் மையம் பெண்கள் மீது இழைக்கப்படுகின்ற வன்முறையை "பெண்களுக்கு எதிரான குற்றங்கள்" எனக் குறிப்பிட்டு பட்டியலிட்டுக் காட்டுகிறது. பெண்கள் மீது இழைக்கப்படும் வன்முறைக் குற்றங்களை டெல்லியில் உள்ள காவல்துறை ஆய்வு மையம் இரண்டு பிரிவுகளாக வகைப்படுத்துகிறது:

- ❖ இந்திய தண்டனைச் சட்டத்தின் கீழ் வரும் குற்றங்கள்;
- ❖ சிறப்புச் சட்டங்களின் கீழும், வட்டார சட்டங்களின் கீழும் வருகின்ற குற்றங்கள்.

இந்திய தண்டனைச் சட்டத்தின் கீழ் வருகின்ற குற்றங்களாக வன்புணர்ச்சி (கற்பழிப்பு), திருட்டுக் கடத்தலும், பலவந்தக் கடத்தலும், வரதட்சணைக் கொலையும், வரதட்சணை சாவும், உடல் ரீதியாகவும் மனரீதியாகவும் இழைக்கப்படும் சித்திரவதை, மானபங்கப்படுத்துதல்,

பாலியல் துன்புறுத்தல், 21 வயதுக்குட்பட்ட பெண்களை இறக்குமதி செய்தல் போன்ற ஏழு வகைக் குற்றங்களும், சிறப்புச் சட்டங்களின் கீழும், வட்டார சட்டங்களின் கீழும் பதிவாகும் குற்றங்கள் – குடும்ப நீதிமன்றங்கள் சட்டம் 1954, சிறப்புத் திருமணச் சட்டம் 1954, இந்து திருமணச் சட்டம் 1955, இந்து வாரிசுரிமை சட்டம் 1956, ஒழுக்கக்கேடான வாணிகம் (தடுப்பு) சட்டம் 1956, வரதட்சணை தடைச் சட்டம் 1961, குழந்தைத் திருமணக் கட்டுப்பாடு (திருத்தம்) சட்டம் 1979, குற்றவியல் (திருத்தம்) சட்டம், 1987, பெண்களை ஆபாசமாகச் சித்திரித்தல் (தடை) சட்டம் 1986, உடன்கட்டை ஏறுதல் (தடுப்பு) சட்டம் 1987, போன்றவைகளை – உள்ளடக்கியதாகவும் உள்ளன. மேற்கண்ட இரண்டு வகைக் குற்றங்களும் ஆண்டுதோறும் அதிகரித்து வருவதை தேசியக் குற்றப் பதிவேடுகள் மையம் உறுதிப்படுத்துகின்றன.

பெண்களுக்கு எதிரான பல குற்றங்கள் வெளிப்படு–வதில்லையாதலால் குற்றங்களின் எண்ணிக்கை முழுவதுமாகத் தெரிவதில்லை. பாதிக்கப்பட்ட பெண்கள் தங்களுக்கு நேர்ந்த இழிவையும் கொடுமையையும் வெளிப்படையாகத் தெரிவித்தால் தங்களுடைய பெயர் மேலும் கெடக்கூடும், பிரச்சனை அதிகரிக்கக் கூடும், தொந்தரவுகள், சிக்கல்கள் எழக்கூடும் என்ற அச்சத்தாலும், அவமானத்தாலும் வெளியே சொல்லப் பலரும் தயங்குகின்றனர்.

தங்களுக்கு இழைக்கப்பட்ட கொடுமையைப் பெண்கள் வெளியே சொல்லாமல் போனாலும், அவர்களுக்கு ஏற்படுகிற கொடுமைகள், துன்பங்கள் எண்ணற்றவை. மத்திய அரசின் மகளிர் மற்றும் குழந்தை மேம்பாட்டு அமைச்சகம் திரட்டிய தகவல்களின் அடிப்படையில் இவ்வறிக்கை தயாரிக்கப்பட்ட தேசிய மகளிர் ஆணையத்தின் 2000–ஆம் ஆண்டு அறிக்கையின்படி இந்தியாவில் ஒவ்வொரு 26 நிமிடங்களுக்கு ஒரு பெண் மானபங்கப்படுத்தப் படுகிறாள்; ஒவ்வொரு 54 நிமிடங்களுக்கு ஒரு பெண் கற்பழிக்கப்படுகிறாள்; ஒவ்வொரு 48 நிமிடங்களுக்கு ஒரு பெண் பாலியல் துன்புறுத்தலுக்கு ஆளாகிறாள்; ஒவ்வொரு 4 நிமிடங்களுக்கு ஒரு பெண் கடத்தப்படுகிறாள்; ஒவ்வொரு 10 நிமிடங்களுக்கு ஒரு பெண் வரதட்சணைக்காக எரித்துக் கொல்லப்படுகிறாள்; ஒவ்வொரு 33 நிமிடங்களுக்கு ஒரு வன்கொடுமையும், ஒவ்வொரு 7 நிமிடங்களுக்கு ஒரு குற்றமும் பெண்களுக்கு எதிராக இழைக்கப்படுவதாகத் தெரிவிக்கிறது. தேசியக் குற்றப் பதிவேடுகள் மையம், சராசரியாக ஒவ்வொரு நாளும் பெண்களுக்கு எதிரான குற்றங்கள் 480 என்ற எண்ணிக்கையில் பதிவாகின்றன எனத் தெரிவிக்கிறது.

பெண்களுக்கு எதிரான குற்றங்கள் தொடர்பான இப்புள்ளி விபரங்களில் கணவன் மனைவியை அடித்தல், குடும்ப உறுப்பினர்களும் தெரிந்தவர்களும் பெண்களைக் கட்டாயப்படுத்தி அல்லது மிரட்டி பாலியல் உறவு கொள்ளுதல் போன்ற மனையக வன்முறைகள் இடம் பெறவில்லை என்பது கவனிக்கத்தக்கது. ஆயினும், இத்தகைய மனையக வன்முறைகள் பெண்களுக்கு எதிரான வன்முறைகளில் அதிகளவு இடம் பெறுகின்றன என்பதைப் பல்வேறு ஆய்வுகள் உறுதிப்படுத்துகின்றன. டெல்லியில் இயங்கி வரும் "சாக்ஷி" என்ற அரசு சாரா நிறுவனம் நடத்திய ஆய்வின்படி, பெண்களுக்கு எதிரான கொடுமைகளில் 87.4 சதவிகிதம் மனையக வன்முறைகள் எனவும், ஆனால் அவற்றை வெளியில் சொன்னால் தங்களுடைய பெயரும் குடும்பத்தின் மரியாதையும் கெட்டு, அசிங்கப்பட்டு மானமிழப்பதுடன் மேற்கொண்டு பிரச்சினைகள் வளரும் என அஞ்சி பெண்கள் தங்களுக்கு நேர்கிற மனையக வன்முறைகளையும், அவமானங்களையும் வெளியே சொல்ல முன் வராமல் அமைதி காத்து மௌனிகளாகி விடுகிறார்கள் எனவும் ஒரு சிலர் மட்டுமே துணிச்சலாக புகார் அளிக்கிறார்கள் எனவும் தெரியவந்துள்ளது.

புகார் செய்யப்படுகிற, பதிவாகிற நிகழ்வினங்களைக் கொண்டு பெண்கள் மீது இழைக்கப்படுகின்ற வன்முறையின் தன்மையையும், அளவையும், எவ்விதமான தாக்குதல்களுக்கு ஆளாகிறார்கள் என்பதையும் புரிந்து கொள்ளலாம். பெண்களுக்கு எதிரான குற்றங்களில் சித்திரவதை, மானபங்கப்படுத்துதல், வன்புணர்ச்சி, திருட்டுக் கடத்தலும் வல்லந்தக் கடத்தலும், பாலியல் துன்புறுத்தல், ஒழுக்கக்கேடான வாணிகத்தில் ஈடுபடுத்தல், வரதட்சணைச் சாவுகள், வரதட்சணை தொடர்பான துன்புறுத்தல் போன்றவை முக்கியமானவை.

### சமூகச் சூழலும் பெண்களின் நிலையும்

இந்திய சமூகத்தில் பெண்களின் நிலைமை பற்றியும், அந்தஸ்து பற்றியும் தெளிவற்ற கண்ணோட்டமே நிலவுகிறது. பழமையான மரபுகள் பெண்ணுக்கு உன்னதமான மதிப்புக் கொடுத்து, "எங்கே பெண்கள் வழிபடப்படுகின்றனரோ அங்கே கடவுளர்கள் உறைகின்றனர்" என்று போற்றுகின்றன. பெண் தெய்வம் வெவ்வேறு பகுதிகளில் வெவ்வேறு பெயர்களைக் கொண்டு, வெவ்வேறு அவதார உருவம் தரித்தவளாக சக்தியின் மொத்தப் பிரதிநிதியாகக் காட்டப்படும் அதே வேளையில், பெண் நிலையற்ற மனமுடையவள், வலுவற்றவள், புலன் இன்பங்களில் விருப்பமுடையவள், ஆசைகாட்டி மோசம் செய்பவள், நிறையப் பொய்

பேசுபவள், சிந்திக்காமல் அவசரப்பட்டு செயல்படுபவள் என்றெல்லாம் தூற்றப்படுகிறாள். அவள் உறுதியற்ற மனமுடையவள் என்ற கருத்துப் புனைவால் எப்பொழுதும் கடுமையான கட்டுப்பாட்டில் அவளை வைத்திருக்க வேண்டும் என்ற மனநிலை ஏற்பட்டுவிட்டது. அவளுக்குத் தனது வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டத்திலும் யாராவது ஆணுடைய பாதுகாப்பு தேவைப்படுபவளாக – குழந்தைப் பருவத்தில் தந்தை, வயது வந்தபின் கணவன், வயோதிகத்தில் மகன்கள் என்று பிறரை அண்டி வாழ வேண்டியவளாக – ஆக்கப்பட்டிருக்கிறாள்.

ஆணாதிக்க இந்தியச் சமூகத்தில் 'ஆண்கள் பெண்களைக் கட்டுப்படுத்துபவர்கள்' என்ற சமூகப் பொதுப் புத்தியின் வார்ப்பில் சிறுவயதிலிருந்தே வளரும் ஆண், தனக்கு இயற்கையாகவே அமைந்துள்ள உடல் பலத்தைப் பயன்படுத்தி தனது அதிகாரத்தை ஏற்காத, உதாசீனப்படுத்தும் மனைவியைத் தாக்குவது எளிதாகிறது. 'கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன்' என்ற பொதுப்புத்தியை சார்ந்து புகுந்த வீட்டில் ஒரு பெண் தனக்கு எப்படிப்பட்ட கொடுமைகள் இழைக்கப்பட்டாலும் அதனை எதிர்த்துக் குரல் கொடுக்காமல், அமைதியாக சகித்துக் கொண்டு வாழ வேண்டும் என்று வளர்க்கப்படுகிறாள்.

இவ்வாறு ஆணுக்குப் பெண் தாழ்ந்தவள் என்ற கோட்பாடு படர்ந்து பரவி இந்தியச் சமுதாயத்தின் கண்ணோட்டத்தையும் வாழ்க்கைப் பண்புகளையும் பாதித்திருக்கிறது. பெண்கள் பல உரிமைகளையும், சலுகைகளையும் இழக்க நேர்ந்துள்ளது. 'பெண்கள் தூய்மை கெட்டு கறைபடின் பிறந்தகத்திற்கும் புகுந்தகத்திற்கும் அவமானம்; பெண்ணின் புனிதம் காப்பாற்றப்பட வேண்டும்' என்ற சமுதாயக் கண்ணோட்டத்தின்படி அவர்களது பாலுணர்வு வெளிப்பாடு, ஆண்களை விட அதிகமான கட்டுப்பாட்டின்கீழ் வைக்கப்பட்டுள்ளது. பெண்கள் வெளியே சென்று வருவது, பிறருடன் பழகுவது குறித்தும் தடைவரம்புகள் உள்ளன. சமுதாயத்தில் கீழ்நிலைகளிலுள்ள பெண்கள் குடும்பத்திற்கு வெளியே சென்று வேலை பார்க்கவேண்டிய அவசியம் காரணமாக இத்தடைகள் மாறிவருகின்றன. இத்தகைய கட்டுப்பாடுகள் பெரும்பாலும் மேல்தட்டுக் குடும்பங்களிலும், நடுத்தர வர்க்க குடும்பங்களிலும் அதிகம் உள்ளது. இம் மக்களிடையே மானம்–அவமானம் உணர்ச்சிகள் அதிகமாகவும் வலுவாகவும் உணரப்படுகின்றன. குடும்ப ரகசியங்கள் வெளியுலகிற்குத் தெரிந்துவிடாமலிருப்பதற்காக அவர்கள் பிரத்யேக முயற்சி மேற்கொண்டு குடும்பத்திலுள்ள பெரியவர்கள், பெண்ணின் பெற்றோர், அவளுடைய உறவு முறையில் முக்கியமானவர்கள் போன்றோர் நடுவர்களாயிருந்து இணக்கம்

ஏற்படுத்துகின்றனர். சமூகத்தின் கீழ்நிலையில் உள்ளவர்களும் மான–அவமான உணர்வுகளால் மிகவும் பாதிக்கப்படுவர்கள்தான் என்ற போதிலும் அத்தகைய நிலைமைகளில் அவர்களால் தனிக்கவனம் செலுத்த முடிவதில்லை. மனைவியை அடித்து உதைத்தோ, தீங்கிழைத்தவர்களைத் தாக்கியோ அவர்கள் குடும்பக் கௌரவத்தைக் காத்துக் கொள்கிறார்கள்.

பெண்களிடமுள்ள வள ஆதாரங்கள் நெறிப்படுத்தப்பட்டு கட்டுப்படுத்தப்பட வேண்டியது அவசியமென நம்பப்படுகிறது. மேல்வகுப்புப் பெண்களும், நடத்தர வர்க்கப் பெண்களும் சீதனம் (ஸ்த்ரீ தனம்) என்ற பெயரில் புகுந்த வீட்டிற்குக் கொண்டுவரும் பணம்–நகை–பொருள் போன்றவை சட்டப்படி அப்பெண்களின் சொத்தென்றே கருதப்பட்டாலும் அவர்கள் விருப்பப்படி எதுவும் செய்யமுடிவதில்லை. கணவனின் குடும்பத்தினரின் தேவைக்காகத் தங்கள் சீதனத்தை ஒப்படைக்குமாறு பெண்கள் கட்டாயப்படுத்தப்படுகின்ற நிலையே நடைமுறை இயல்பாகிவிட்டது.

குடும்ப நிர்வாக முறையில் ஆண் மேலாதிக்கமும், பெண் அடங்கிப் போகும் நிலையும் ஏற்கப்பட்டுள்ளன. திருமணம் ஆனதும் மணப்பெண் பிறந்தகத்திலிருந்து விடுவிக்கப்பட்டு கணவரது குடும்பத்தில் உறுப்பினராகிறாள். திருமணமாகிக் கணவன் வீட்டிற்குச் செல்லும் பெண் அக்குடும்பத்திற்கேற்றபடி தன்னை மாற்றிக் கொள்ள வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறாள். அவள் தனது தனித்தன்மையை கணவனது தனித்தன்மையில் கலந்து கரைத்து விட வேண்டும். அவள் கணவனின் நிழல் போல் நடந்து கொள்ள வேண்டும். வாழ்க்கை முழுவதும் கணவனையே பின்பற்ற வேண்டும். அவளுக்குப் பிறக்கும் குழந்தைகள் கணவனுடைய பரம்பரையைச் சேர்ந்தவையாகிவிடுகின்றன. குடும்பத்தின் அதிகாரமும் ஆண்கள் வசமேயிருக்கும். பெரும்பாலும் குடும்பத்தில் மூத்த ஆண் தான் முக்கியமான முடிவெடுப்பவராக விளங்குகிறார். இம்முடிவுகளில் அவ்வீட்டுப் பெண்களின் பங்கு எவ்வளவு என்பது வெளிப்படையாகத் தெரிவதில்லை. சில குடும்பங்களில் அனுபவம் வாய்ந்த, மனத்திடமும் மனப்பக்குவமும் பெற்றுள்ள பெண்கள் தங்கள் அதிகாரத்தை பெரும்பாலும் பின்னாலிருந்து வெளிப்படுத்துவதுண்டு. பல சூழ்நிலைகளில் பெண்களும் ஆண்களை ஆட்டுவிக்கின்றனர். எனினும் ஆண்களின் மேலாதிக்கத்தை எதிர்த்து பெண்கள் கேள்வி எழுப்பும் போது குடும்பம் சிதறக்கூடிய சூழ்நிலை ஏற்பட்டுவிடுகிறது.

குடும்பப் பணிப் பங்கீட்டில் ஆணுடைய வேலை, பெண்ணுடைய வேலை என்று பிரித்துக்காட்டப்படுகின்றன. தண்ணீர் கொண்டுவருதல், சமையல், வீட்டைப் பெருக்குதல், குடும்பத்தினரின் துணிகளைத் துவைத்தல், குழந்தை வளர்ப்பு போன்ற பலவிதமான பணிகளை பெண்கள் செய்ய நேரிடுகிறது. குடும்பத்தை கவனிக்க வேண்டியது பெண் என்ற கருத்து ஆழமாக வேரூன்றிவிட்டதால், வெளியில் முழுநேரப் பணிகளில் ஈடுபட்டுள்ள பெண்கள் கூட அந்த வேலையுடன் குடும்ப நிர்வாகத்தையும் சேர்த்து கவனிக்க வேண்டுமென்று எதிர்பார்க்கப்படுகிறார்கள். பெண்களும் தங்களுடைய குடும்பக் கடமைகளை கவனிக்க முடியாமல் போனால் குற்றவாளிகள் போல் உணருகிறார்கள்.

ஆண்களும் பெண்களும் இணையானவர்கள்; ஒருவரை ஒருவர் சார்ந்து வாழவேண்டுமென்று இயற்கையிலேயே படைக்கப்பட்டவர்கள். ஒரு சாரார் இன்றி மற்றவர் தனித்து வாழ இயலாது. ஆயினும் ஆண்களுக்கும் பெண்களுக்கும் தனித்தனியான வெவ்வேறு நடத்தைமுறைகள், வெவ்வேறு சமூக நிலைகள், வெவ்வேறுபட்ட சிந்தனை முறைகள் வகுக்கப்பட்டு வளர்த்தெடுக்கப்படுகின்றன. இத்தகைய வேறுபாடுகள் ஆணாதிக்கச் சமூகக் கட்டமைப்பு தொடர்ந்து நிலை நிறுத்தப்பட்டு வருவதற்கு காரணமாகின்றன. ஆண்களுக்கும், பெண்களுக்கும் இடையில் கற்பிக்கப்பட்ட ஏற்றத்தாழ்வுகளும், பெண்களைப் பற்றிய தாழ்வான சமூக மதிப்பீடுகளும் மாறாமல் நிலை பெற்று அவர்களைச் சுரண்டுவதற்கும், கொடுமைப் படுத்துவதற்கும் அங்கீகாரமளிக்கின்றன. பெண் என்பவள் சுயம் அற்றவளாகவும், ஆணுடன் சார்ந்த அடையாளம் கொண்டவளாகவும் தாழ்த்தப்பட்டுள்ள நிலையினால் அவமதிக்கப்படுவது, வாய்ப்பு மறுக்கப்படுவது, கொடுமைப்படுத்தப்படுவது ஆகியவை தொடர்ந்து வருகின்றன.

இவ்வாறான பாலுணர்வுக் கட்டுப்பாடு, நடமாட்டக் கட்டுப்பாடு, பொருளாதாரக் கட்டுப்பாடு ஆகியவை செயல்படுத்தப்படும் விதமானது சமுதாய அமைப்பு, சமுதாயத்தில் பெண்ணிற்கு ஒதுக்கப்பட்டுள்ள பணி, அந்தஸ்து, பண்புகள் விளக்கப்படும் விதம், கட்டுப்பாட்டின் கண்டிப்பான அல்லது நெகிழ்ச்சியான தன்மை ஆகியவற்றைப் பொறுத்து ஆண்–பெண் சமன்பாட்டை உருவாக்குவதிலும், மாற்றி அமைப்பதிலும் முக்கியப் பங்கு வகித்து வருகின்றன. மாறிவரும் வாழ்க்கைப் பண்புகள் ஆண் மட்டும் தான் குடும்பத்தின் தலைவன் என்ற கருத்திற்கு ஆதரவாக இல்லை எனினும், கடந்த காலத்தில் பின்பற்றப்பட்ட ஆணாதிக்கக் கண்ணோட்டம் இன்னும் மிஞ்சியுள்ளது. அது எளிதில் நீங்குவதாக இல்லை.

ஒரு பெண் சுதந்திரமாக தனது வாழ்க்கைத் துணையை தேர்வு செய்வது நம் சமூகத்தில் கொடூரக் குற்றமாக இன்றும் கருதப்படுகிறது. சாதி மறுப்புத் திருமணம் செய்து கொண்ட பெண்களில் பலரும் நம் நாட்டின் பல பகுதிகளில் வன்முறைக்கு உள்ளாக்கப்படுகின்றனர். காதல் வயப்படுவது ஒழுக்கக்கேட்டின் ஒரு வடிவம் என்ற கருத்து நிலவுகிறது. திரைப்படங்களில் நிழலாய்க் காதல் பேசப்படும்போது ரசிக்க எண்ணும் மனநிலை, தன் குடும்பத்தில் எவரேனும் காதல் வயப்படும்போது கொடூரமானதாகிவிடுகிறது. "வயது வந்த ஆணும், பெண்ணும் அவர்கள் சார்ந்த இனம், தேசியம், மதம் போன்ற வேறுபாடுகளைக் கடந்து தாங்கள் விரும்பியவரைத் திருமணம் செய்து கொள்ளலாம்" என்ற உலகளாவிய மனித உரிமைப் பிரகடன விதி – 16 காற்றில் பறக்கவிடப்படுகிறது.

இன்று பெண்கள் கல்வி பெறுவதற்கான வாய்ப்புகள் விசாலமடைந்துள்ளன. கல்வி கற்க முன்வரும் பெண்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. இதுவரை பங்கேற்காத துறைகளிலும் பெண்கள் இப்போது அதிகம் நுழைந்துள்ளனர். சட்டங்கள், கல்வி வளர்ச்சி, புதிய பொருளாதாரக் கோட்பாடுகள், புதிய அரசியல் வாய்ப்புகள் ஆகியவை பெண்களின் நிலையை மேம்படுத்தியிருக்கின்றன. சொத்துரிமைக்கான வாரிசுச் சட்டங்கள் பெண்களுக்குச் சாதகமாக மாற்றியமைக்கப் பட்டுள்ளன. தங்கள் உரிமைகளைத் தட்டிக் கேட்பவர்களாகவும் மாறிவருகின்றனர். ஆயினும் ஆண்–பெண் இருபாலாரிடையே முழுமையான சமத்துவம் ஏற்படவில்லை. குடும்பத்தில் பெண்கள் சம உரிமை பெறமுடிவதில்லை; சொத்திலும் உரிமை பெறமுடிவதில்லை. திருமணத்திற்குப் பிறகு எங்கு வசிப்பது என்று முடிவு செய்யப் பெண்களுக்கு உரிமையில்லை.தற்போதுள்ள சமுதாய அமைப்பும் அரசியல் சூழ்நிலையும் ஆணுக்குப் பெண் சமமில்லை என்ற நிலையே தொடர்ந்திருக்கும்படி செயல்பட்டு வருகின்றன. இதனால் ஆணுக்குப் பெண் சமம் என்ற லட்சியத்தை நோக்கிய பயணம் நெடியதாகவும் அதன் பாதை வளைவு – நெளிவு நிறைந்து சிக்கலானதாக இருப்பதாகவும் தோன்றுகிறது.

படித்த, நடுத்தரவர்க்கத்தைச் சார்ந்த பெண்கள் இன்று தங்கள் உரிமையை வலியுறுத்தவும், இழைக்கப்படும் பாரபட்சங்களுக்கு எதிர்ப்பைத் தெரிவிக்கவும் முன்வருகின்றனர். ஆனால் அமைப்பு ரீதியாகத் திரட்டப்படாத துறைகளில் உழைக்கும் பெண்கள், விவசாயக் கூலிகள் மற்றும் பல்வேறுபட்ட உடல் உழைப்பில் ஈடுபடும் பெண்களின் நிலை படுமோசமானது. இவர்கள் தங்கள் எதிர்ப்பை வெளிக்காட்ட முடியாத,

வெளிக்காட்டினால் வேலை பறிபோகும் நிலையில் இருப்பவர்கள். வேலை பறிபோவதுடன் அவமதிப்புக்கும், அடிதடிக்கும், பாலியல் வன்முறைக்கும் ஆளாகும் நிலையில் உள்ள இருப்பே நிச்சமில்லாதவர்கள்.

ஆணும், பெண்ணும் சமம் என்ற கருத்தை நடைமுறையில் இன்னமும் ஆண்கள் முழுமையாக ஏற்றுக் கொள்ளாத மனப்போக்கினால் குடும்பங்களில் பெண்களுக்கெதிரான கொடுமைகள் குறைந்தபாடில்லை. பெண்கள் எதிர்நோக்கும் பிரச்சனைகளில் முதன்மையானது வன்முறை. வன்முறையின் சுலபமான இலக்காக அமைவது பெண்கள் தான். கண்சிமிட்டும் நேரத்திற்கொரு முறை இந்த நாட்டின் ஏதோ ஒரு பகுதியில் ஒரு பெண் ஏதாவதொரு கொடுமைக்கு ஆளாகிறாள் என்கிறார் ஓர் ஆராய்ச்சியாளர்.

குடும்ப வன்முறை என்பது பெண்களுக்கு எதிரான கடுமையான மனித உரிமை மீறலாகும். உடல் தீங்கு, பாலியல் தீங்கு, பொருளாதாரத் தீங்கு என்று எதுவானாலும், அது வன்முறையே. தகுதிக்குண்டான வாய்ப்புகளும், பொறுப்புகளும், அங்கீகாரங்களும் 'பெண்' என்ற காரணத்தினால் மறுக்கப்படுகிறது. பால் பாகுபாடும், ஓரவஞ்சனையும், அடக்குமுறையும் சடங்குகள், சம்பிரதாயங்கள் என்ற பெயரால் பெண்களை 'வீட்டுக்குள் அடைந்து கிட' எனப் பூட்டி வைப்பதும் வன்முறையே.

வன்முறையற்ற அகிம்சை வழியில் போராடி ஆங்கிலேயர் களிடமிருந்து விடுதலை பெற்ற இந்திய நாட்டில், பெண்களுக்கு எதிரான வன்முறை சமூகப் பொருளாதார நிலையில் கீழான, நடுத்தர, உயர்தர என அனைத்துத் தரப்பட்ட குடும்பங்களிலும் நிகழ்கிறது. இந்தியப் பண்பாட்டின் ஒரு பகுதியாகவே ஆகிவிட்ட பெண்களுக்கு எதிரான வன்முறை அளவிடமுடியாத துயரத்தை அளித்து, தன்மானத்திற்கும் சுயமரியாதைக்கும் பெரும் பாதிப்பை ஏற்படுத்துவதுடன் பல நேரங்களில் விலைமதிப்பற்ற உயிருக்கும், உடலுறுப்புகளுக்கும் உலைவைக்கிறது.

பெண்கள் தங்களை மேம்படுத்திக் கொள்ளப் போதிய வாய்ப்புகள் வழங்கப்படுவதில்லை; அதையும் மீறி அவர்கள் தங்களுடைய திறமையை மேம்படுத்தி வெளிப்படுத்தினாலும், அவர்களுடைய சாதனைகளுக்கு உரிய அங்கீகாரம் தரப்படுவதில்லை. இன்றைக்குக் கல்வியறிவு பெற்று விழிப்புணர்வு கொண்டிருந்தாலும், சட்ட முறைமை பாதுகாப்பாக அமைந்துள்ள போதிலும் அவர்கள் எண்ணற்ற வன்முறைகளுக்கும், கொடுமைகளுக்கும் ஆளாகிறார்கள். கேலி, பாலியல் துன்புறுத்தல்,

பாலியல் வன்கொடுமை, மானபங்கம், அடி உதை, கடத்தல், வன்புணர்ச்சி, உயிரோடு எரிக்கப்படுதல், கொலை என பலவிதமான கொடுமைகளுக்கும் ஆளாகிறார்கள்.

150 ஆண்டுகால தமிழகக் காவல்துறையில் கடந்த 1973–ஆம் ஆண்டு தான் முதன் முறையாக காவலர் பணிக்குப் பெண்கள் தேர்வு செய்யப்பட்டனர். பெண் காவலர்கள், ஆண் காவலர்கள் பணிபுரியும் காவல்நிலையங்களிலேயே பணியாற்றினர். இந்நிலையில் பெண்கள் தொடர்பான வழக்குகளில் காவலரின் அணுகுமுறை மாற வேண்டும், தாயுள்ளத்துடன் செயல்பட்டு பெண்கள் மற்றும் குழந்தைகளின் பிரச்சனைகள் தீர்த்து வைக்கப்பட வேண்டும் என்ற நோக்கில் 1992–ல் முதன் முறையாக மகளிர் காவல் நிலையம் ஏற்படுத்தப்பட்டது. தமிழகத்தில் தற்போது 200–க்கும் மேற்பட்ட மகளிர் காவல் நிலையங்கள் செயல்பட்டு வருகின்றன.

குடும்பத்துக்குள் ஏற்படும் பிரச்சனைகளைத் தீர்த்துவைக்க வேண்டி மகளிர் காவல் நிலையங்களுக்குப் பெண்கள் சென்று புகார் கொடுத்தால் சிறிய பிரச்சனைகளுக்குக்கூட பெரியளவு குற்றம் என்ற தோற்றம் ஏற்படுத்தப்பட்டு, சிறிய பிரச்சனையோடு காவல் நிலையம் செல்பவர்களை குடும்பத்தில் இருந்து நிரந்தரமாகப் பிரித்து வைப்பதும் நிகழ்கிறது. பெண்கள் அனுபவிக்கும் வேதனைகள் களையப்பட வேண்டும் என்ற நோக்கத்தில் ஏற்படுத்தப்பட்ட மகளிர் காவல் நிலையங்களில் பெண் காவலரைப் பார்த்த போது பிரச்சனைகளை சந்திக்கும் பெண்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டது. ஆனால் வழக்குகளை விசாரிக்கும் விதத்திலும் காவல் நிலைய அணுகுமுறைகளிலும் ஆண் காவலர்களுக்கும் பெண் காவலர்களுக்கும் பெரிய அளவில் வித்தியாசம் இல்லை என்ற நிலையில் வன்கொடுமைகளைச் சந்திக்கும் பெண்களில் பெரும்பாலானோர் தங்கள் மீது நிகழ்த்தப்படும் கொடுமைகளுக்கு நீதி வேண்டி காவல் நிலையங்களுக்குச் செல்வதில்லை. மகளிர் காவல் நிலையங்கள் தோற்றுவிக்கப்பட்டதன் உண்மையான நோக்கம் சிதறுகிறது.

### வன்முறையின் வகைகளும், தன்மைகளும்

#### பாலியல் வன்முறை

ரத்தமும் சதையுமாக கண் முன் உலாவும் பெண்களை ஒரு கவர்ச்சியான பாலினமாகப் பார்க்கும் சமூக கண்ணோட்டம் காரணமாக

பாலியல் வன்முறை நிகழ்கின்றன. மன்னிப்பே அற்ற இந்த பெருங்குற்றத்தினைச் செய்யும் பாவிகள், பள்ளி மாணவிக்ளையும் பால் மணம் மாறாத பச்சிளம் சிறுமிகளையும் விட்டுவைப்பதில்லை. பாலியல் வன்முறை பெரும்பாலும் முற்றிலும் பரிச்சயமில்லாத அந்நியர்களிடையே நடைபெறுவது இல்லை; ஓரளவு பரிச்சயம் உடைய நபர்களிடையே தான் நிகழ்கிறது. வன்புணர்ச்சியாளர்கள் பலியாகும் பெண்களுக்கு ஓரளவு பரிச்சயமுள்ள உறவினர்களாக, குடும்ப நண்பர்களாக; சக ஊழியர்களாக, மேலதிகாரிகளாக, ஆசிரியர்களாக, தெரிந்தவர்களாக இருக்கின்றனர்.

தங்களுக்கு நேர்ந்த கொடுமையையும், அவலத்தையும் வெளியே பரப்பி, மேற்கொண்டும் அவமானத்திற்கு ஆளாவதை விரும்பாததாலும், மேற்கொண்டு இதையொட்டிய பிரச்சனைகள் தொடரக்கூடாது என்பதற்காகவும் வெளியே சொல்வதில்லை. குறிப்பாகத் தங்களுடைய நெருங்கிய உறவினரால் பாலியல் பலாத்காரம் செய்யப்பட்ட பெண்கள் மேற்கண்ட காரணங்களுக்காகத் தங்களுக்கு நேர்ந்த அவலத்தை வெளியே சொல்ல முன்வருவதில்லை.

நடைமுறை வழக்கில் 'கற்பழிப்பு' என்று குறிப்பிடப்படுகிற வன்புணர்ச்சியை இந்திய தண்டனைச் சட்டத்தின் 375—ஆவது பிரிவு "ஒரு பெண்ணை அவளுடைய விருப்பத்திற்கு மாறாக உடலுறவுக்கு உட்படுத்தினால்; அல்லது அவளுடைய இணக்கம் இல்லாமல் உடலுறவுக்கு உட்படுத்தினால்; அல்லது அப்படியே அவளுடைய இணக்கத்தின் பேரில் அந்த உடலுறவு நடந்தாலும், அந்த இணக்கம் அவளைக் கொலை செய்வது விடுவதாக மிரட்டி, அச்சுறுத்தி பெறப்பட்டிருந்தால் அல்லது அவள் தன் உயிருக்குப் பயந்து அல்லது அடி உதைக்குப் பயந்து குற்றவாளிக்கு உடன்பட்டிருந்தால்; அல்லது மனநிலை சரியில்லாத நிலையில் இருக்கும் போது அவளுடைய இணக்கத்துடன் உடலுறவு வைத்துக் கொண்டாலும் அல்லது நேரிடையாக அல்லது மறைமுகமாக அவளை நினைவிழக்கச் செய்து அந்த நிலையில் அவளுடைய இணக்கத்துடன் உடலுறவு கொண்டாலும்; அல்லது 16 வயது நிரம்பாத நிலையில் அவளது இணக்கத்துடன் அல்லது இணக்கம் இல்லாமல் உடலுறவு கொண்டாலும் அது வன்புணர்ச்சி" என வரையறுக்கிறது.

வன்புணர்ச்சி என்பது கட்டாய உடலுறவு மட்டுமல்ல; ஒரு பெண்ணின் சுயத்தின் மீது தொடுக்கப்படுகிற தாக்குதல். அவளுடைய சுயத்தை அழிக்கிற கொடுமையான செயல். வன்புணர்ச்சி என்னும் கொடுமையான குற்றம் பெண்களுக்கு எதிரான குற்றங்களின் பட்டியலில் மூன்றாம்

இடத்தில் இருக்கிறது. வன்புணர்ச்சி நிகழ்வுகள் பல காரணங்களுக்காக வெளியே வராமல் அமுக்கப்படுவதால், நிகழ்வுகளின் எண்ணிக்கை குறைவாக தெரியவருகிறது. ஒரு நாளைக்கு 27 வன்புணர்ச்சிக் குற்றங்கள் நிகழ்வதாகக் தேசிய மகளிர் ஆணையமும், ஒரு நாளில் 45 வன்புணர்ச்சி வழக்குகள் இந்தியாவில் பதிவாகின்றன என்று தேசியக் குற்றப் பதிவேடுகள் ஆவண தெரிவிக்கின்றன.

வன்புணர்ச்சிக் குற்றங்களுக்கு அதிகமாக பலியாவது 16–30 வயதுக்குட்பட்ட பெண்களாகவும் (68 சதவிகிதம்), அடுத்து 15 வயதுக்குக் கீழ் உள்ள பெண்கள் (19 சதவிகிதம்), அவர்களுக்கு அடுத்து 31–50 வயதுக்குட்பட்ட பெண்கள் (21 சதவிகிதம்), 50 வயதுக்கு மேற்பட்ட பெண்கள் ஒரு சதவிகிதமாகவும் உள்ளனர்.

பொதுவாகப் பெண்களுக்கு எங்கு பாதுகாப்பு இல்லையோ, அங்கு அவர்கள் பாலியல் வன்முறைக்கும் வன்புணர்ச்சிக்கும் ஆளாகிறார்கள். பெரும்பாலும் ஏழை, நடுத்தர வர்க்கப் பெண்களும் அவர்களிலும் குறிப்பாக, கீழ் நடுத்தர வர்க்கப் பெண்களும் வன்புணர்ச்சிக்கு ஆளாகின்றனர். அவர்கள் தங்கள் குடும்பத்தின் பொருளாதார சுமையைத் தாங்க வேண்டிய நிலையில் இருக்கும் பட்சத்தில் தங்களுக்கு நேர்ந்த அவலத்தை மனதில் புதைத்துக் கொண்டு மௌனமாகிப் போய்விடுகிறார்கள்.

### திருட்டுக் கடத்தலும், பலவந்தக் கடத்தலும்

பதினெட்டு வயது நிரம்பாத 'மைனர்' பெண்ணை ஆசை வார்த்தை காட்டி கடத்திச் செல்லும் அல்லது தூக்கிச் செல்லும் 'திருட்டுக் கடத்தலிலும்', ஒரு பெண்ணை அவளுடைய விருப்பத்திற்கு மாறாக பாலுறவு வைத்துக் கொள்ளும் நோக்கத்துடன் அல்லது திருமணம் முடிக்கும் நோக்கத்துடன் வலுக்கட்டாயப்படுத்தி அல்லது ஏமாற்றி தூக்கிச் செல்லும் 'பலவந்தக் கடத்தலிலும்' சிறுமிகளும், பெண்களும் கடத்தப்படுகிறார்கள். பெரும்பாலான கடத்தல்களுக்குப் பாலின இச்சையும், திருமணமும் முக்கிய நோக்கங்களாக இருக்கின்றன; கடத்தப்படும் பெண் பாலியல் வன்முறைக்கு ஆளாகிறார்.

### வரதட்சணைக் கொலை/வரதட்சணை சாவு

வரதட்சணைக்காக கணவனும், அவரது குடும்பத்தினரும் பெண்களைச் சித்திரவதை செய்வது அன்றாட நிகழ்ச்சியாகிவிட்டது. சில

சமயங்களில் பெண்களைத் தற்கொலைக்குத் தூண்டுகிற அளவிலும், எரித்துக் கொல்கிற அளவுக்கும் சித்திரவதை எல்லை மீறுகிறது. துன்புறுத்துவது, வதம் செய்வது, தற்கொலை செய்து கொள்ளத் தூண்டும் அளவுக்குச் சித்திரவதை செய்வது, கொலை செய்வது போன்ற வடிவங்களில் வரதட்சணைக் கொடுமை நிகழ்கிறது.

"வரதட்சணை தடைச் சட்டம், 1961" வரதட்சணை கேட்பதையும், கொடுப்பதையும் தடைசெய்துள்ள போதிலும், அருகு போல் வேரூன்றி ஆல்போல் தழைத்துள்ளது. வரதட்சணை சகல மட்டங்களிலும், அனைத்துச் சமுதாயங்களிலும் ஊடுருவி நீக்கமற நிறைந்து, இதுவரை அதன் நிழல்படாத சமுதாயங்கள் கூட வரதட்சணை எனும் தீமைக்கு இரையாகத் தொடங்கியிருக்கின்றன.

தானாக முன்வந்து, மனமுவந்து தரப்படுகிற அன்பளிப்பு அல்ல வரதட்சணை; வற்புறுத்திப் பெறுகிற கட்டாய நன்கொடை. ஒத்துக் கொண்ட அளவுக்கு வரதட்சணை தராத நிலையில் பேராசை பிடித்த கணவனும், கணவனின் குடும்பத்தினரும் புதுமணப் பெண்ணைச் சித்திரவதை செய்கின்றனர். சித்திரவதை காரணமாகத் தற்கொலை நிகழ்வதை 'ஈவிரக்கமற்ற படுகொலை' என்கிறார் அனுராதா கவுர். இத்தகைய 'ஈவிரக்கமற்ற படுகொலை' நான்கு சுவர்களுக்குள் நடைபெறுவதாலும், வீட்டில் உள்ளவர்களின் உடன்பாட்டுடன் நடைபெறுவதாலும் போதுமான சாட்சியங்களால் நிரூபிக்கப்பட்டு தண்டிக்க முடியாமல் குற்றவாளிகள் தப்பித்துவிடுகின்றனர். சில சமயங்களில் காவல்துறையினரின் அலட்சியப் போக்கால் போதிய வலுவான சாட்சிகளைத் திரட்ட இயலாமல் போவதால், நீதிமன்றங்கள் குற்றவாளிகளைத் தண்டனையின்றி விடுவிக்க வேண்டியதாகிறது. இத்தகைய காரணங்களால் பதிவு செய்யப்பட்ட வரதட்சணைக் கொலை வழக்குகளில் 2 சதவிகிதத்திற்கும் குறைவாகவே தண்டனை கிடைக்கப்பெறுவதாக ஒரு புள்ளி விவரம் தெரிகிறது.

வரதட்சணை சாவுகள் பற்றி ராம்அஹூஜா (Ram Ahuja) தனது ஆய்வு அறிக்கையில் கீழ்மட்டத்துப் பெண்களை விடவும், மேல்மட்டத்துப் பெண்களை விடவும், நடுத்தர மட்டத்துப் பெண்களே அதிகம் வரதட்சணைக்குப் பலியாகிறார்கள்; பொதுவாக 21–24 வயதுக்குட்பட்ட பெண்களே வரதட்சணைக்குப் பெரிதும் பலியாகின்றனர்; கொலையாவதற்கு முன்பு பெண்கள் பல சித்திரவதைகளுக்கு ஆளாகின்றனர்; கொலை செய்கிற கணவன்மார்கள் கொடூர

மனப்பான்மையும் ஆணவப் போக்கும் கொண்டவர்களாக இருக்கின்றனர் எனத் தெரிவித்துள்ளளார்.

### *மனைவியை அடித்தல்*

கணவன் தன்னை நம்பி வந்த மனைவியை அன்பாகவும், ஆதரவாகவும் பேணிக் காத்திட வேண்டும் என்று சமூகம் எதிர்பார்க்கிறது. ஆனால் நடைமுறை யதார்த்தம் இதற்கு நேர்மாறாக இருக்கிறது. கணவன் தனக்கு நிகரான மனைவியை அலட்சியப்படுத்துவது முதல், அடிப்பதிலிருந்து, கை காலை முறிப்பது வரை கொடுமைப்படுத்துகிறான்.

இத்தகைய 'அநாகரிகம்' படிக்காத ஆண்களிடம் மட்டுமல்லாது படித்த ஆண்களிடமும் காணப்படுவதாக ஆய்வுகள் தெரிவிக்கின்றன. இதே போல, படிக்காத பெண்கள் மட்டும் தான் கணவன்மார்களிடம் அடி, உதை வாங்குகிறார்கள் என்பதையும் புலனிய ஆய்வுகள் மறுக்கின்றன. படிக்காத பெண்கள் கணவன்மார்களிடம் அடிஉதை வாங்குவது சகஜம் என்றாலும், படித்த பெண்களும் கூட கணவன்மார்களிடம் அடி உதை வாங்குகிறார்கள் என்கிறார் அஹூஜா. மனைவியை அடிக்கும் அல்லது உதைக்கும் அநாகரிகம் *மனைவியின் கல்வியறிவு நிலையைச்* சார்ந்து அமைவதில்லை என்கிறார். கீழ்மட்டத்துக் குடும்பங்களில் மட்டும் தான் மனைவியை அடிக்கும் செயலானது பெரிதும் காணப்படும் என்கிற கருத்தையும் மறுத்து, நடுத்தர மற்றும் மேல்தட்டுக் குடும்பங்களிலும் கணிசமான அளவு காணப்படுகிறது என்றும் கூறுகிறார்.

இந்தியப் பெண்கள் தங்கள் கணவன்மார்களிடம் அடி உதைபட்டு அவமானப்பட்டாலும், அதை மவுனமாகச் சகித்துக் கொள்கிறார்கள். மரபார்ந்த பண்பாட்டில் வளர்க்கப்பட்ட அவர்கள் அதில் ஊறிப்போய் இருப்பதால், தங்களுக்கு நேர்கிற சித்திரவதையை, அவமானத்தை பொருட்படுத்துவதில்லை. "கணவன்தானே அடிக்கிறான், அதற்கு அவனுக்கு இல்லாத உரிமையா, அதற்கு ஏன் நோக வேண்டும்" என்பதாக அவர்களுடைய மனப்பான்மை உள்ளது. மனைவியை அடிக்கக் கணவனுக்கு உரிமை உண்டு என்று எண்ணுவதால், கணவர்மார்களிடம் அடிபட்டாலும், உதைபட்டாலும் மவுனமாக சகித்துக் கொள்கிறார்கள். ஏதோ ஒரு வேகம் பிறந்து கோபம் ஏற்பட்டாலும், கணவன்மார்களைப் பற்றிக் காவல்துறையில் புகார் செய்தால் தங்களுடைய எதிர்காலமும், குழந்தைகளின் நலன்களும் பாதிக்கப்பட்டுவிடும் என்று கருதி அடங்கிப் போகிறார்கள்.

அடிபடும் மனைவியர் குறித்து ராம் அஹுஜா (1997) கீழ்க்கண்ட விவரங்களைத் தருகிறார். பெரும்பாலும் நடுத்தர அல்லது வயதான பெண்களை விட இளம் வயது (25 வயதுக்கு கீழ்) பெண்களே அதிகம் அடிபடுகின்றனர்; கணவர்களைவிட ஐந்து வயதுக்கு மேல் இளையவர்களாய் இருக்கிற மனைவிகள் மற்றவர்களை விட அதிகமாய் அடிபடுகின்றனர்; கூட்டுக் குடும்பமாக இருந்தாலும் தனிக் குடும்பமாக இருந்தாலும், குழந்தைகள் இருந்தாலும் இல்லாவிட்டாலும் பெண்கள் கணவன்மார்களிடம் அடிபடுகிறார்கள்; மனைவியை அடிப்பவர்கள் குடிகாரர்களாக இருக்கும் பட்சத்தில் அவர்கள் குடிபோதையில் இருக்கும் போது பெரும்பாலும் மனைவியை அடிப்பதில்லை; நிதானத்தில் இருக்கும் போதுதான் அடிக்கிறார்கள்; பண நெருக்கடி, வேலையில் பிரச்சனை, எரிச்சல் போன்ற மன அழுத்தம் தரும் சூழ்நிலைகளில் கணவன்மார்கள் மனைவியரை அடிக்கிறார்கள்; சிறுவயதில் அடி, உதை என்று வன்முறைக்கு ஆளான கணவனின் பின்புலம் மனைவியை அடிப்பதில் முக்கியமான காரணியாக விளங்குகிறது: மேற்கண்ட வன்முறைகள் மட்டுமல்லாமல் பாலியல் துன்புறுத்தல், அலுவலங்களிலும், பணிமனைகளிலும், பொது இடங்களிலும் கேலிக்கும் கிண்டலுக்கும், அருவருப்பான சைகைகளுக்கும், ஆபாசப் பேச்சுகளுக்கும் பெண்கள் ஆளாகின்றனர்.

## பாலியல் துன்புறுத்தல்

'பாலியல் துன்புறுத்தல்' என்பதற்கு இந்திய உச்ச நீதிமன்றம் ஒரு விரிவான விளக்கத்தைத் தந்திருக்கிறது. அதன்படி பாலியல் துன்புறுத்தல் அல்லது தொந்தரவு என்பது "நேரிடையாக அல்லது பூடகமாக, ஆரோக்கியமற்று, விரசமாக அமைகிற (அ) உடல் அளவிலான தொடுகை அல்லது சைகைகள், (ஆ) பாலின உறவுக்கான சம்மதம் கேட்டு வெளிப்படுத்துகிற வேண்டுகைகள், (இ) செக்ஸ் கலந்த அறிவிப்புகள், (ஈ) ஆபாசப் படம் காட்டுதல், (உ) வரவேற்க முடியாத பாலினத் தன்மை கொண்டு அமையும் உடலளவிலான நடத்தை, வார்த்தைப் பிரயோகம், செய்கை போன்ற பாலியல் ரீதியிலான நடத்தை"யாகும். உச்சநீதிமன்றத்தின் இந்த விளக்கத்தில் பாலியல் ரீதியிலான, ஆரோக்கியமற்ற நடத்தை பாலியல் துன்புறுத்தலுக்கு அடிப்படை அம்சமாக விளங்குகிறது. நடந்து கொள்கிறவரின் நோக்கம் அல்லது உள்தூண்டல் எதுவாக இருப்பினும், அது முக்கியமல்ல; வெளிப்படுகிற நடத்தையின் தன்மை அதற்கு ஆளாகிறவருடைய கருத்தில், பார்வையில் ஆரோக்கியமற்றதாக விளங்குமேயானால் அதுவே பாலியல் துன்புறுத்தலின் அடிப்படையாகக் கொள்ளப்படுகிறது. செய்கையாளருடைய

நோக்கம் பொருட்படுத்தப் படுவதில்லை; அந்தச் செய்கையின் தன்மை தான் முக்கியமாக எடுத்துக் கொள்ளப்படுகிறது. ஒரு பெண்ணை நோக்கிய ஒரு ஆணின் பாலியல் ரீதியிலான நடத்தை ஆரோக்கியமற்று இருந்தால் அது பாலியல் துன்புறுத்தலின் வடிவமாகக் கருதப்படுகிறது.

'ஈவ் டிசிங்' (Eve teasing) என்று அழைக்கப்படுகிற இந்தப் பாலியல் துன்புறுத்தலுக்குப் பெண்கள் அன்றாடம் ஆளாகிறார்கள். கேலி செய்வது, சீண்டுவது, இரட்டை அர்த்த வசனங்களுடன் பேசுவது, ஆபாசமான சைகை காட்டுவது, உடையைப் பிடித்து இழுப்பது, ஆணுறுப்பைக் காட்டுவது என்று பல கேவலமான, இழிவான காரியங்களைச் செய்து பெண்களைத் துன்புறுத்துகிறார்கள். அருவருக்கத்தக்க ஏச்சுக்கும், பேச்சுக்கும், இழிவான வர்ணனைகளுக்கும், எள்ளி நகையாடுவதற்கும், செக்ஸ் ஜோக்குகள் சொல்லி அருவருப்படைய வைப்பதற்கும், ஆபாசமான கெட்ட வார்த்தைகளைப் பேசுவதற்கும், தங்களுடைய தோற்றத்தையும், குணத்தையும் பற்றி மட்டமாக பேசுவதற்கும், 'ஈவ் டீசிங்' துன்புறுத்தல்களுக்கு கடுமையான தண்டனை வழங்கத்தக்க சட்டம் இருப்பது தெரிந்தும் பெண்களைப் பாலியல் துன்புறுத்தலுக்கு ஆளாக்குகிறார்கள்.

பொது இடங்களில் மட்டுமல்லாமல், அலுவலகங்கள், பணிபுரியும் இடங்கள் என்று பல இடங்களிலும் அவர்கள் பாலியல் தொல்லைக்கு ஆளாகிறார்கள். ஆனாலும் அவர்கள் தங்களுக்கு நேர்கிற இன்னலை வெளியே சொல்லாமல். மவுனமாக சகித்துக் கொள்கிறார்கள். படித்த, வேலைக்கு செல்லும் பெண்கள் கூட எதிர்விளைவுகளைக் கருதி ஆண்களின் பாலியல் தொந்தரவுக்கு எதிராகப் புகார் கொடுப்பதில்லை. "பாலியல் தொந்தரவு வேலை பார்க்கும் இடத்தில் சகஜம்தான்" என்று ஏற்றுக் கொள்கிறார்கள். பாலியல் தொந்தரவுக்கு ஆளான பெண்கள் தங்களுக்கு நேர்ந்த இன்னலை வெளியே சொல்லாமலிருப்பதற்குப் பல காரணங்களைத் தெரிவித்துள்ளனர். "தாங்கள் அப்படிச் சொன்னால் சமூகம் அதை ஒப்புக் கொள்ளாது என்பது மட்டுமல்லாமல் அப்படி சொன்னதை வைத்துக் கொண்டு மற்றவர்கள் தம் மீது சேறு வாரிப் பூசுவர், சம்பந்தப்பட்ட குற்றவாளிகள் மேற்கொண்டு பிரச்சனை தருவர்; மேலும் பிரச்சனை வளர்ந்து தங்களுக்கு வேலை பறிபோகக் கூடும்; குற்றவாளிக்கு எதிராகப் புகார் செய்ய கணவன்மார்களும், மற்றைய குடும்ப உறுப்பினர்களும் ஆதரவு கொடுக்கமாட்டார்கள்; வேலை செய்யுமிடத்தில் பாலியல் தொல்லை தவிர்க்க முடியாதது, புகார் தெரிவிப்பதால் எந்தப் பயனும் ஏற்படாது" என்பதும் இக்காரணங்களில் அடங்கும்.

பெண்கள், பெண்கள் என்ற பாலியல் நோக்கில் பார்க்கப்படுவதாலேயே அவர்கள் ஆண்களின் வக்கிரத்திற்குப் பலியாகின்றனர்; தொந்தரவுக்கு தொடர்ந்து ஆளாகின்றனர். பெண்களுக்கு ஆதரவாக சட்டம் இருந்தும் கூட பாலியல் தொந்தரவுக்கு ஆளாகும் பெரும்பாலான பெண்கள் சட்டத்தின் துணையை நாடுவதில்லை. சட்டத்தின் மூலம் என்ன உதவி கிடைக்கும், சட்டப்படி என்ன நடவடிக்கை எடுக்கலாம் என்று தெரிந்திருந்தும், நடைமுறைச் சிக்கல்கள் காரணமாக சட்டத்தின் துணையை நாட தயங்குகிறார்கள். பாலியல் தொல்லைக்கு ஆளானாலும் மவுனமாக சகித்துக் கொள்வதாலும், புகார் செய்வதில்லை என்பதாலும் இக்குற்றம் பற்றி புள்ளி விவரங்கள் குறைவாகவே காட்டுகின்றன.

## பெண்களுக்கு எதிரான வன்முறைக்கான காரணங்கள்

பெண்கள் மீதான வன்முறைக்கான அடிப்படைக் காரணங்கள் பல உள்ளன. அவற்றில் முக்கியமானவை:

### சமத்துவமற்ற அதிகார உறவுகள்

ஆண்களுக்கும், பெண்களுக்கும் இடையேயான சமத்துவமற்ற அதிகார உறவுகள் ஒரு முக்கிய காரணமாகத் திகழ்கின்றன. வரலாற்று ரீதியாகவே ஆண்களுக்கும் பெண்களுக்கும் இடையே சமத்துவமற்ற அதிகார உறவுகள் தொடர்ந்து நிலவிவருகின்றன. ஆண்கள் அதிகாரத்தைக் கைப்பற்றி பெண்களை அதிகார வளையத்திற்குள் வர விடாமல் தடுத்து, தங்கள் ஆதிக்கத்தை நிலைநாட்டுகிறார்கள். சமூகக் கட்டுப்பாட்டின் மூலமாகவும், சமூகமயமாக்கத்தின் மூலமாகவும் பெண்களை அடக்கியும் ஆண்களின் ஆதிக்க நிலையை ஏற்றுக் கொள்ளவும் செய்து தங்களுடைய ஆதிக்க நிலையை, அதிகாரத்தை நிலைநாட்டுகின்றனர். பெண்கள் மீது வன்முறை இழைப்பதன் மூலம் ஆண்கள் தங்களுடைய ஆதிக்கப் போக்கை வெளிப்படுத்துகிறார்கள்.

காலம் காலமாக ஆண்களை மேலானவர்களாகவும், தங்களை கீழானவர்களாகவும் பாவித்து, அடங்கிப்போகும் மனப்பான்மையை பெண்கள் வளர்த்துக் கொண்டுள்ளனர். ஆண்களுக்கு அடங்கிப் போவதை ஒரு வாழ்க்கை முறையாகவே அமைத்துக் கொண்டதால் தங்கள் மீது கொடுமை, வன்முறை இழைக்கப்பட்டாலும் அதை சகித்துக்

கொள்கிறார்கள்; ஏற்றுக் கொள்கிறார்கள். இவற்றின் மூலம் அவர்கள் தம்முடைய அடக்கப்போக்கை வெளிப்படுத்துகிறார்கள்.

**பாலியல் தூய்மை**

பல சமூகங்களிலும் மரபுகளிலும் ஒருவனுடைய அல்லது ஒரு குழுவின் கௌரவம் அவனைச் சார்ந்த அல்லது அக்குழுவைச் சார்ந்த பெண்களின் பாலியல் தூய்மையைச் சார்ந்ததாக அமைக்கப்பட்டுள்ளது. அவர்களுடைய பாலியல் தூய்மைக்குப் பங்கம் ஏற்படாதவாறு இருக்கும் வரையில் ஒருவனுடைய அல்லது ஒரு குழுவின் கௌரவம் காக்கப்படுவதாகவும், பங்கம் நேரிடுகையில் அக்கௌரவம் சிதைகிறது எனவும் இம்மரபுகளில் கருதப்படுகிறது. இச்சூழலில் பாலியல் ஒழுக்கநெறியை மீறி ஒரு பெண் முறைகேடான நடத்தையில் ஈடுபடும் குற்றத்தைப் பொறுத்துக் கொள்ளாத நிலையில் 'கௌரவக் கொலைகள்' நடைபெறுகின்றன.

பெண்ணின் பாலியல் தூய்மை அவள் சார்ந்த குழுவின் கௌரவத்திற்கு ஆதாரமாக இருப்பதால் குழுக்களிடையான மோதல்கள், இனக்கலவரங்கள், மதக் கலவரங்கள், சாதிச் சண்டைகள் நடைபெறும் போது பெண்களின் மானத்திற்கும், கற்புக்கும் சேதம் விளைவிக்கிற வகையில் தாக்குதல்கள் நடைபெறுகின்றன. பெண்களின் மீதான இத்தகைய பாலியல் தாக்குதல்கள் மூலம் ஒரு குழுவின் கௌரவத்தை சிதைக்க எதிரிகள் முனைகின்றனர்.

**பண்பாட்டுக் கருத்தியல்**

பெண்கள் ஆண்களுக்கு அடங்கியவர்கள் என்று நியாயப்படுத்தும் பண்பாட்டுக் கருத்தியலும் பெண்கள் மீதான வன்முறைக்குக் காரணமாக அமைகிறது. பெரும்பாலான சமூகங்களில் – வளர்ச்சியடைந்த சமூகங்கள் மட்டுமல்லாமல், வளர்ச்சியடைந்து வரும் சமூகங்களிலும்–ஆண்கள்தான் மேலானவர்கள், பெண்கள் அவர்களுக்குத் தாழ்ந்தவர்கள் என்னும் கருத்தியல் நிலவுகிறது. தங்களை விட மேலான நிலையில் இருக்கும் ஆண்களுக்கு அடங்கி ஒடுங்கிப் பணிவாக பெண்கள் இருக்க வேண்டும் என்கிற சாரத்தை இக்கருத்தியல் வலியுறுத்துகிறது. ஆண்களை எதிர்த்துப் பேசினால், ஆண்களிடம் அவமரியாதையாக நடந்து கொண்டால் அல்லது அவர்களுடைய விருப்பத்திற்கு விரோதமாக செயல்பட்டால் அத்தகைய பெண்களை ஆண்கள் நெறிப்படுத்தலாம் என்று பண்பாட்டுக் கருத்தியல்

அனுமதிக்கிறது. இக்காரணத்தினால் ஆண்கள் மனைவியரை அடிக்கவும், உதைக்கவும் தயங்குவதில்லை;; பெண்கள் அதை ஏற்றுக் கொள்ளவும் செய்கிறார்கள்.

## குடும்ப வன்முறையிலிருந்து பெண்களைப் பாதுகாக்கும் சட்டம்

சுதந்திரம் பெற்று அறுபது ஆண்டுகள் கடந்துவிட்ட நிலையிலும் மருமகளை எரிப்பது, வரதட்சிணைச் சாவு ஆகிய நிகழ்வுகள் அன்றாடச் செய்திகளாகின்றன. மனைவியை அடிமைபோல் வேலை செய்ய வைத்தல், போதுமான ஓய்வு எடுக்கவிடாமல் தடுத்தல், அவளுடைய உழைப்பிற்கு ஈடான சத்துள்ள உணவு பெற வசதி செய்யாதிருத்தல், அவளது மனதைப் புண்படுத்துதல் ஆகிய கொடுமைகளில் இருந்து உயர்நிலைகளில் உள்ள பெண்களும் கூட தப்பமுடியவில்லை. இந்திய தண்டனைச் சட்டம் பிரிவு – 498 மனைவியை கொடுமைப்படுத்தும் கணவன் அல்லது உறவினர்களை தண்டனைக்குள்ளாக்குகிறது.

2005ஆம் வருடம் கொண்டு வரப்பட்ட குடும்ப வன்முறையிலிருந்து பெண்களைப் பாதுகாக்கும் சட்டம் ஒரு வீட்டில் வசித்து வருகிற பெண்ணை, அந்த வீட்டில் இருக்கும் ஆண் உடல் ரீதியாகவோ, மன ரீதியிலோ கொடுமைப்படுத்தும்போது பாதுகாப்பு அளிக்கிறது. பெண்களை அடிப்பது, உதைப்பது, காயங்களை ஏற்படுத்துவது, சொத்துரிமையைப் பறிப்பது, தான் விரும்பிய ஒருவரைத் திருமணம் செய்து கொள்ள முடியாதபடி தடுப்பது, கட்டாயப்படுத்தி விருப்பமில்லாத ஒருவருக்குத் திருமணம் செய்து வைப்பது, மனைவிக்கும் குழந்தைகளுக்கும் ஜீவனாம்சம், உணவு, உடை, இருப்பிடம் ஆகியவற்றை அளிக்க மறுப்பது போன்றவை குடும்ப வன்முறையில் உள்ளடங்கும். புகுந்த வீட்டில் கணவன், அவனது பெற்றோர், அல்லது இதர உறுப்பினர்கள் மருமகளைக் கொடுமைப்படுத்துவது மட்டுமல்லாமல் அவள் பிறந்த வீட்டில் உள்ள குடும்ப உறுப்பினர்கள் அவளைத் துன்புறுத்தினாலும் கூட குடும்ப வன்முறையிலிருந்து பெண்களைப் பாதுகாக்கும் சட்டம் அவர்கள் மீது பாயும்.

ஒரு பெண் அவளது கணவராலேயோ அல்லது அவரது குடும்பத்தைச் சேர்ந்தவர்களாலேயோ வன்முறைக்குள்ளாக்கப்படும்போது புகார் செய்யலாம். ஆனால் ஏற்கனவே பாதிப்புக்குள்ளாகி இருக்கும் பெண், இது பற்றிப் புகார் கொடுத்தால் இன்னும் பிரச்சனை விபரீதமாகி விடுமோ என்று பயந்து புகார் கொடுக்க முன்வரத் தயங்கக்கூடும் என்பதால் பாதிக்கப்பட்ட

பெண்ணின் பிறந்த வீட்டினரோ, உறவினர்களோ, நண்பர்களோ, அல்லது அவள் பேரில் அக்கறை கொண்ட அண்டை அயலார் உள்ளிட்ட சமூக நோக்கம் கொண்ட யார் புகார் கொடுத்தாலும் இச்சட்டத்தின்படி ஏற்றுக் கொள்ளப்படும்.

இத்தகைய புகார்களைப் பெற்று உரிய விசாரணை நடத்தி மேற்கொண்டு மேலதிக நடவடிக்கை மேற்கொள்ள பாதுகாப்பு அதிகாரிகள் மாவட்டவாரியாக நியமிக்கப்பட்டுள்ளனர். அவர்களைத் தவிர, காவல்துறை அதிகாரியிடமோ, குற்றவியல் நடுவரிடமோ புகார் செய்ய முடியும். அவசியமானால், பாதிக்கப்பட்ட பெண் இலவச சட்ட உதவியைப் பெறுவதற்குச் சட்டத்தில் இடமிருக்கிறது. அவசியமானால், இந்த வழக்கு விசாரணை நீதிமன்றக்கூடத்தில் பொதுமக்கள், பார்வையாளர்கள் எவருமின்றி நீதிபதி, நீதிமன்ற ஊழியர்கள், வாதி, பிரதிவாதிகள், அவர்களுடைய வழக்கறிஞர்கள் போன்றவர்கள் மட்டுமே இருக்க நடைபெறும். தனக்கு ஏற்பட்டுள்ள இழப்புகளுக்காக இறுதித் தீர்ப்பு வருகிறவரை இடைக்கால நிவாரணம் பெறவும் வழி உண்டு. குற்றம் நிரூபிக்கப்படுமானால் வன்முறைக் கொடுமை செய்தவருக்கு ஒரு வருட சிறைத்தண்டனை, இருபதாயிரம் ரூபாய் அபராதம் அல்லது இரண்டும் அளிக்கப்படும்.

### திருமணமும் வன்முறையும்

**1961**–ஆம் ஆண்டு மே மாதம் **20**–ஆம் தேதி முதல் நடைமுறைப்படுத்தப்பட்ட வரதட்சணை ஒழிப்புச்சட்டத்தின்படி வரதட்சணை கொடுப்பதோ வாங்குவதோ குற்றமாகும். அவ்வாறு கொடுப்பவர்களுக்கும், வாங்குபவர்களுக்கும் ஆறுமாதச் சிறை தண்டனையோ, ரூ.5000 அபராதமோ அல்லது இரண்டும் சேர்ந்தோ விதிக்கப்படும். வரதட்சணை, திருமணத்திற்கு முன்போ அல்லது திருமணத்திற்குப் பின்போ மறைமுகமாகவோ அல்லது நேரிடையாகவோ, வாங்கப்பட்டாலோ அல்லது கொடுக்கப்பட்டாலோ குற்றமாகும். முற்காலத்தில் வரதட்சணை கொடுப்பது, மணமகன் மணப்பெண்ணின் குடும்பத்திற்குக் காட்டும் நன்றியின் அடையாளமாகக் கருதப்பட்டது. பெண்ணின் தகுதியைப் பொறுத்து பரிசுப் பொருட்களின் அளவு அமையும். ஆனால் தற்காலத்தில் வரதட்சணை மணப்பெண்ணின் குடும்பத்தினர் மணமகனுக்குத் தரும் விலையாகவும், வரதட்சணை கொண்டு வராத மணப்பெண் புகுந்த வீட்டில் கொடுமைகளை அனுபவிக்கவும் நேருகிறது. கணவன் வீட்டார் அவளை துன்புறுத்துவதும், கொடுமைப்படுத்துவதும்;

சிலர் கொலை செய்யப்படும் அவலமும் நிகழ்கிறது. இக்கொடுமைகளுக்குப் பயந்து பெண்ணைப் பெற்றவர்கள் கடன்பட்டாவது வரதட்சணை கொடுக்கின்றனர். கடன் சுமை தாங்காமல் பல குடும்பங்கள் தலை நிமிர முடியாமலே போகின்றன.

இந்தியச் சமுதாயத்தில் திருமணம் ஒரு சமூக ஒப்பந்தமாக மட்டுமல்லாது ஒரு புனிதமான சடங்காகவும், நிகழ்வாகவும் கருதப்பட்டு மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த சமூக நிறுவனமாகத் தொடர்ந்து இருந்து வருகிறது. கணவன் மனைவிக்குத் தெய்வம், போற்றித் தொழ வேண்டிய அவதார புருஷன்; ஆகையால் எந்த சூழ்நிலையிலும் கணவனும் மனைவியும் பிரியக் கூடாது என வலியுறுத்தப்படுகிறது. 1955ஆம் ஆண்டு "இந்து திருமணச்சட்டம்" கொண்டு வரப்படுவதற்கு முன்னர் மணவிலக்கு பெறுவது ஆண்களுக்கு மட்டும் உரித்தான சலுகையாக இருந்தது. தன் கணவன் எவ்வளவுதான் கெட்டவனாக இருந்தாலும், கொடுமைகள் செய்தாலும் அவனிடமிருந்து மணவிலக்குப் பெற்று பிரிந்து செல்ல மனைவிக்கு வழியில்லை. முனைவி, மணவிலக்குக் கோர முடியாத நிலையில் அவனுடனே தொடர்ந்து வாழ வேண்டிய சமூக நிர்ப்பந்தம் காரணமாக சகித்துக் கொள்வதைத் தவிர வேறு மார்க்கம் இல்லாமல் இருந்தது. இந்தச் சூழலில் முதன் முதலாக இந்து திருமணச் சட்டம் (1955) மனைவியும் சட்டப்படி கணவனிடமிருந்து மணவிலக்கு கோரிப் பெறலாம் என்ற உரிமையைக் கொடுத்தது.

தற்போது நடைமுறையில் உள்ள இந்து திருமணச்சட்டம், 1955 மற்றும் திருமண சிறப்புச் சட்டம், 1954 ஆகியவற்றின் அடிப்படையில் விவாகரத்து வழக்குகள் மேற்கொள்ளப்பட்டு வருகின்றன. திருமணச்சட்டம் 13 (பி) பிரிவின் கீழ் இரு தரப்புக்கும் ஒத்துப் போகாமல், பரஸ்பரம் விவாகரத்து கோரி தம்பதி இருவரும் ஒருமனதாக மனு செய்யும் போது, அந்த மனு 6 மாதத்திற்குள் திரும்பப் பெறப்படாவிட்டால் அதன் அடிப்படையில் 18 மாதங்கள் வரை தம்பதிகளுக்குக் கால அவகாசம் அளிக்கப்பட்டு நீதிமன்றம் விசாரித்து விவாகரத்து வழங்கும். தம்பதியர் இருவரும் ஒருமித்து விவாகரத்துப் பெறும் இந்து திருமணச்சட்டப் பிரிவு 13–பி, சிறப்புத் திருமணச்சட்டம் பிரிவு 28 ஆகியவற்றிலும் சிறு திருத்தம் கொண்டு வரப்பட்டுள்ளது. இருவருமே விவாகரத்து கோரும் போது விரைவில் விவாகரத்து பெறவும், கொடுமைக்கு உள்ளாகும் பெண்களின் நலனை கருத்தில் கொண்டும் இந்த சட்டத் திருத்தம் கொண்டு வரப்படுகிறது. விவாகரத்து கேட்டு விண்ணப்பித்து இருதரப்பும் இனி இணையவே முடியாது/சேர்ந்து வாழவே முடியாது என்ற நிலை உருவாகும்

பட்சத்திலும், விவாகரத்து கேட்டு விண்ணப்பித்தவர்களில் யாராவது ஒருவர் காணாமல் போய்விடுவது, கொடுமைப்படுத்துவது, கோர்ட்டுக்கு வராமலேயே இழுத்தடித்துக் கொண்டிருப்பது ஆகிய பிரச்சனைகளுக்கு சம்பந்தப்பட்ட நீதிபதியே முடிவு செய்து எளிதாகவும், விரைவாகவும் விவாகரத்தை வழங்கிட இந்தப் புதிய சட்டத்திருத்தம் வழிவகை செய்கிறது.

மனைவி இருக்கும் போதே மற்றொரு பெண்ணுடன் தகாத உறவு வைத்தல், கொடுமைப்படுத்துவது, வேற்று மதத்திற்கு மாற்றம் செய்ய வற்புறுத்துவது, மனநலம் பாதிக்கப்பட்டு புத்தி சுவாதீனமாக இருத்தல், பால்வினை நோய்கள் தாக்கப்பட்டிருப்பது, தொழுநோய் பாதிப்பு, கணவனோ மனைவியோ இருவரில் ஒருவர் காணாமல் போய் ஏழு ஆண்டுகள் ஆகியிருப்பது உள்ளிட்ட ஏழு காரணங்களுக்காக இந்து திருமணச் சட்டம் 13ன் கீழ் விவாகரத்து வழங்கப்பட்டு வருகின்றன. இவற்றுடன் விவாகரத்துப் பெற, புதிய காரணங்களாக பாலின பேதம், கொடூரமாக நடந்து கொள்வது, வேறு மதத்திற்கு மாறுவது, சராசரி மனிதராகச் செயல்படாதது, குணப்படுத்த முடியாத பால்வினை நோய் போன்றவை சேர்த்துக் கொள்ளப்பட்டுள்ளன.

கணவனிடமிருந்து மணவிலக்கு பெறுவது தற்போது மனைவிக்கு எளிதான ஒன்றாக இருந்தாலும் விவாகரத்து பெற்ற அவளைச் சமூகம் சற்றுக் குறைவாகவே மதிக்கிறது. அவளது மணமுறிவுக்கு அவள் தான் காரணம், அவளின் அடக்கமற்ற நடவடிக்கை தான் காரணம் என கருதுகிறது. மணவிலக்கு பெற்ற பெண்ணின் தனிமையைப் பயன்படுத்த பலர் முயல்கின்றனர். பல்வேறு அவதூறுகளுக்கும், மனநிலை பாதிப்புக்கும் உள்ளாகிறாள். சிலர் ஜீவனாம்சம் பெறுவதிலிருந்து வஞ்சிக்கப்படுகின்றனர். பொருளாதார நிலைமை சீர்கேடு அடைவதால் அவள் தவறான பாதையில் செல்லக்கூடிய சாத்தியக் கூறுகளும் ஏற்படுகின்றன.

நட்புத்தன்மை, தோழமை, ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்து வாழ்வதற்கு மாறாக கணவன் மனைவியை ஆதிக்கம் செலுத்தி, கட்டுப்படுத்தி, அடிமையாக்க விரும்பும்போது திருமணம் பிரச்சனைக்குள்ளாகிறது. கணவன், மனைவியிடையே நெருக்கடிகள் உண்டாகி, அவர்களை இயல்பில் பொருத்தமில்லாதவர்களாகச் செய்கிறது. வாழ்க்கைத் தத்துவம், சுயநடத்தைகள் பற்றிய மதிப்பீடுகள் போன்ற பண்பாட்டு வேறுபாடுகளுடன், சமூகத் தகுதிநிலை பின்னணி, புகுந்த வீட்டினரின் தலையீடுகள் கணவன்—மனைவி திருமண உறவை

பாதிக்கின்றன. அடுத்தவரை அடக்கி ஆள நினைப்பவர், அடிக்கடி உணர்ச்சி வசப்படுகின்றவர், தன்னம்பிக்கை இல்லாதவர், சுயநலம் மிக்கவர், திருப்தி இல்லாதவர், உணர்ச்சிகளை மதித்து நடக்காதவர், அன்பு வைக்காதவர், சரியாகப் புரிந்து கொள்ளாதவர், வீட்டில் மகிழ்ச்சி அடையாதவர், தனது சுகத்தை மட்டுமே பிரதானமாகக் கருதுபவர், சந்தேகக் கண்ணோடு பார்ப்பவர் ஆகிய ஆண்களின் திருமணம் தோல்வியைத் தழுவுகிறது.

குடும்பமே பெண்களுக்குப் பாதுகாப்பான அமைப்பு என ஏற்றுக் கொள்ளப்படுகிறது. ஆனால் பாலியல் வன்முறை குடும்பத்திலேயே ஆரம்பிக்கிறது. உறவுமுறைக்குள் ஆண் உறவுகள் பெண் உறவுகளைப் பாலியல் நோக்குடன் அணுகுவது அதிக அளவில் நடைபெறுகிறது. இது வார்த்தையாலும், பார்வையாலும், உடல் ரீதியாகவும் அரங்கேறுகின்றன. இதில் வேதனை என்னவென்றால் பாலியல் வன்முறைக்கு ஆளான பெண்ணே குற்றவுணர்வுக்கு ஆளாகிறாள். ஈவ்டீஸிங் கொடுமை எனும் 'பாலியல் இம்சை'யும் ஒரு 'பாலியல் வன்முறை'யேயாகும்.

### கைவிடப்பட்ட பெண்கள்

கணவன் மனைவியைப் புறக்கணிப்பதாலும், வீட்டை விட்டு வெளியேற்றுவதாலும் எண்ணற்ற துன்பங்களைச் சந்திக்கிறாள். ஊராரின் வம்புப்பேச்சுக்கும், வீண் பழிக்கும் ஆளாகி அவளுடைய பெயரும், மதிப்பும் கெடுகின்றன. பொருளாதாரப் பாதுகாப்பு இல்லாத பரிதாபமான நிலையில் குழந்தைகளும் அவளிடமே இருக்கும் போது, அவளுடைய நிலைமை இன்னும் மோசமாகிறது. கைவிடுதல் தொடர்பான பெரும்பாலான வழக்குகளில் கைவிட்ட கணவன், கைவிடப்பட்ட மனைவிக்கு வாழ்க்கைப்படி தர வேண்டும் என்ற உத்தரவு பிறப்பிக்கப்பட்டாலும், அது முழுமையாகவோ, ஒழுங்காகவோ செலுத்தப்படுவதில்லை. இதன் விளைவாக கைவிடப்பட்ட பெண்ணின் பொருளாதாரத் துன்பங்கள் தொடர்ந்து நீடிக்கின்றன.

### கைம்பெண்கள்

கைம்பெண் மறுமணம் சமூகத்தின் அங்கீகாரத்தை முழுமையாகப் பெறவில்லை. 'ஆணுக்காகவே பெண் படைப்பு' எனும் சமூக வலியுறுத்தல்களுக்கமைய, கணவன் இறந்ததும் பெண்ணின் வாழ்வை இருள் சூழ்ந்து அர்த்தமற்றதாக்கி விடுகிறது. 'விதவை' எனும் நிலை

பெண்ணின் ஆளுமையை, சுயத்தை, ஜீவித உரிமையை நிராகரித்து ஆணின்றிப் பெண்ணுக்கு வாழ்வில்லை என்னும் ஆணாதிக்கப் பிற்போக்கு சித்தாந்தங்களால் கட்டமைக்கப்பட்டிருக்கிறது. அவர்கள் பல்வேறு நிலைகளிலும் அடக்கப்பட்டு, கொடுமைகளுக்கும் இன்னல்களுக்கும் ஆளாகின்றனர்.

வன்முறையை எதிர்கொண்டு தடுக்க ஒரே வழி, வன்முறையை ஏற்காத நிலை ஆகும். வன்முறையை சகித்துக் கொள்ளாத மனப்பான்மையை வளர்த்து, அதை வெளிப்படுத்துவதன் மூலமாக வன்முறையை அறவே தவிர்க்கலாம்; தடுக்கலாம். "குடும்ப வன்முறைகளிலிருந்து பெண்களைப் பாதுகாக்கும் சட்டம்" மட்டுமே இதைப்போன்ற பிரச்சனைகளுக்கு இறுதித் தீர்வாக அமைய இயலாது என்ற போதிலும், அதிகரித்து வரும் குடும்ப வன்முறையைக் குறைக்க உதவும் என்பதில் ஐயமில்லை.

"பெண்களுக்கு எதிரான குடும்ப வன்முறைத் தடுப்பு சட்டத்தை" செயல்படுத்தத் தொடங்கி மூன்றாண்டுகள் ஆகி விட்ட போதும், அதன் செயல்பாடு மந்தமாக இருப்பதாக மத்திய அரசு ஒப்புக் கொண்டுள்ளது. பல மாநிலங்களிலும் பெண்களுக்கு எதிரான கொடுமைகள் தொடர்பான விழிப்புணர்வு ஏற்பட்டுள்ளது. எனினும், சில மாநிலங்களில் இந்த சட்டத்திற்கு முன்னுரிமை கொடுப்பதில்லை. இதனால், பெண்கள் தொடர்பான வரதட்சணைக் கொடுமை வழக்குகள் பல நிலுவையில் உள்ளன; பாதிக்கப்பட்டவர்கள் மருத்துவமனை மற்றும் கோர்ட்டுகளில் அக்கறையின்றி அலைக்கழிக்கப்படுகின்றனர். பெண்களுக்கு எதிரான குடும்ப வன்முறைத் தடுப்புச் சட்டத்தை விழிப்புடன் கண்காணிக்க வேண்டியது அவசியம் எனவும், மேலும், வழக்குகளை சீக்கிரமாக முடிக்க விரைவு கோர்ட் அமைக்கப்பட வேண்டும் எனவும், பெண்களுக்கு எதிரான குடும்ப வன்முறைத் தடுப்புச் சட்டத்தின் சிறப்பான செயல்பாட்டிற்கும், கண்காணிப்புக் கொள்கைகள் தொடர்பான வரைவு திட்டத்தையும் வகுக்க திட்டக்குழுவுடன் விவாதிக்கப்பட்டு வருவதாகவும் மத்திய அரசு அறிவித்துள்ளது.

மகளிர் காவல் நிலையங்கள், வழக்குகளைப் பதிவு செய்து நடவடிக்கையெடுக்கும் இடம் என்ற நிலையிலிருந்து மாறி குடும்பப் பிரச்சனைகளில் சிக்கி உதவி தேடி வரும் உள்ளங்களைச் சேர்த்துவைக்கும் சமரச மையங்களாக மேம்பட வேண்டும். மனித

நேயமுள்ள பெண் காவலர்கள் உருவாக அவர்களுக்குத் தொடர் பயிற்சிகளை வழங்க அரசு முன் வர வேண்டும்.

பெண்கள் முற்றிலும் மாறுபட்ட வாழ்க்கை சூழ்நிலையில் பணியாற்றுகின்றனர். பெண்களை, பொருளாதார ரீதியாக வலிமையாக்கும் நடைமுறைகள் அவசியம். ஒரு பெண் ஈட்டும் வருமானம் முழுவதும், அந்த குடும்பத்துக்காக செலவழிக்கப்படக் கூடியதாகயே உள்ளது. கணிசமான பெண்கள், பொருளாதார ரீதியாக பாதுகாப்பற்ற நிலையிலேயே உள்ளனர். சமூக வட்டத்தின் அரை வட்டம் பெண்கள். அவர்களுக்குச் சமமான வாய்ப்பும் அதிகாரமும் வழங்கப்படாத வரை சமமான முன்னேற்றம் என்பது கானல் நீராகவே இருக்கும்.

**References**

Ahuja, Ram, Crime Against Women. (Jaipur: Rawat Publications, 1987).

Ahuja, Ram, Social Problems in India. Second ed. (Jaipur:Rawat Publications, 1997).

Gelles, Richard J., The Violent Home: A Study of Physical Aggression Between Husbands and Wives. (Beverly Hills, California: Sage Publications, 1974).

# பெண் சிசுக்கொலை

நமது நாடு சுதந்திரம் பெற்று 63 ஆண்டுகளாகியும் பெண் சிசுக்கொலைக்கு முடிவுகட்ட இதுவரை விடிவுகாலம் ஏற்படவில்லை என்பது வேதனைக்குரிய விஷயமாகும். பெண் சிசுக்கொலையால் ஆண்–பெண் விகிதாச்சாரம் குறைந்து வருகிறது. நாட்டின் பல மாவட்டங்களிலும் இந்த விகிதாச்சாரம் 1000 ஆண்களுக்கு 900 பெண்கள் என்ற அளவில் குறைந்து விட்டது. ஓர் ஆண்டில் ஆண் குழந்தைகளின் எண்ணிக்கையைவிட 3 லட்சம் பெண் குழந்தைகள் அதிகமாக இறக்கின்றனர்.

ஆணாதிக்க சமூகத்தில் பெண்களுக்கெதிரான வன்முறையின் பல வடிவங்களில் மிகவும் கொடிய வடிவம் பெண் சிசுக்கொலை. கொள்ளி வைக்க, குடும்ப கௌரவத்தைக் காக்க, முதுமையடைந்த பெற்றோரைப் பாதுகாக்க, குடும்பப் பெயர் விளங்க ஆண்பிள்ளை அவசியம் என்ற சமுதாயச் சிந்தனையும் அவன்தான் உயர்வு, பெண் குழந்தை வீண் செலவு என்ற கருத்தாக்கமும், வரதட்சணை, சாதீய சடங்குமுறைகளும் செலவினங்களும் பெண் சிசுக்கொலைக்கான காரணங்களில் முக்கியமானவை. வரதட்சணை என்ற சீதன முறைமை தொடர்ந்து நிலவிவருவதோடு மட்டுமல்லாமல் இதுவரை இப்பழக்கம் இல்லாதவரிடத்தும் இப்போது பரவியுள்ளது. பெண் குழந்தைகளுக்குத் திருமண செலவுகள், வரதட்சணை போன்றவைகளுக்காக அஞ்சி, பெற்றோர்களே பெண் குழந்தைகளைப் பிறந்தவுடனோ அல்லது கருவிலோ அழித்து விடும் சமூக அவலம் தொடர்கதையாக நடந்து வருகிறது. இன்று பெண் சிசுக்கொலை பல பகுதிகளிலும் பல பிரிவு மக்களிடமும் காணப்படுகிறது.

பெண்கள் சுமையாகக் கருதப்படுவதால் பெண் சிசுக் கொலை வழக்கம் நீடித்து நிலவுகிறது. பெண் சிசுவைக் கவனிப்பதில் அக்கறை செலுத்தாமல் வேண்டுமென்றே அலட்சியம் காட்டுவதால் பெரும்பான்மையான சாவுகள் விளைகின்றன. வளர்ச்சி அடைந்த மருத்துவத் தொழில் நுட்பத்தால் ஆணா, பெண்ணா என்று கண்டுபிடிக்க உதவும் அமினோஸெண்டஸிஸ் என்ற சோதனை முறை மூலமாக பெண் குழந்தைகளைக் கண்டறிந்து கருவிலேயே அழித்து விடுவது சாத்தியமாகிவிட்டது. கரு ஆணா, பெண்ணா என்று அறியும் பரிசோதனைக்குத் தடை விதிக்கப்பட்டிருந்தாலும் பணத்தாசையால் சில மருத்துவர்கள் பெண் குழந்தை எனில் சிசுக்கரு கலைப்பு செய்து இந்த

அவலம் தொடர்ந்து நடைபெறக் காரணமாகின்றனர். கருவிலேயே பெண் குழந்தையை அழித்துவிட வசதிகள் இப்போது எல்லா நகரங்களிலும் ஏற்பட்டுவிட்டன.

பெண் சிசுக்கொலை மிகவும் கொடூரமானது. பெண் குழந்தைகளின் அடிப்படையான உரிமை வாழும் உரிமையையே சமூகம் மறுப்பதற்கான வெளிப்பாடு பெண் சிசுக்கொலை. பெண்கள் சமூகத்தில் தேவையற்ற பாரமானவர்கள் என்ற சமூகத்தின் மதிப்பீடுகள் பெண் சிசுக்களை அவர்களது பெற்றோர்களே கொல்லும் நிலைக்கு ஆளாக்குகின்றன. பெண் குழந்தைகளைப் பெற்று வளர்ப்பதை விட அதை அழித்துவிடுவதே தங்களுக்கும் அக்குழந்தைக்கும் நல்லது என்ற எண்ணம் பெண் சிசுக்கொலைக்குக் காரணமாக அமைகின்றது. பெண் சிசுக்கொலை இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் பெரும்பாலும் சமூகப் பொருளாதார நிலைகளில் அடிமட்டத்தில் உள்ள குடும்பங்களில் நிகழ்கின்றன. பொருளாதார வசதிபடைத்த குடும்பங்களில் சிலவற்றிலும் பெண் கருக்கள் தாயின் வயிற்றிலேயே அழிக்கப்படுகின்றன. இந்தியாவில் முன்னேறிய மாநிலங்களான பஞ்சாப், சண்டிகர், மகாராஷ்டிரம் ஆகியவற்றில் 6 வயதிற்கு உட்பட்ட பெண் குழந்தைகளின் விகிதம் மிகக் குறைந்திருப்பது இதை உறுதிப்படுத்துகிறது.

கொடூரக் கொலைகாரன் கூட, பச்சிளம் குழந்தையைக் கொல்லத் துணியமாட்டான். ஆனால் ஒரு தாய், தான் பெற்ற பெண்பிள்ளைகளையே கொலை செய்யத் துணியும் நம் சமுதாயத்தின் நிலைமை வருத்தப்பட வைக்கிறது. தனக்கு ஒரு குழந்தை வேண்டுமா, வேண்டாமா என்பதை சுயமாக முடிவு செய்ய முடியாத நிலையில்தான் இன்னும் பெண் இருக்கிறாள். குழந்தை பிறப்புகூட அவள் விருப்பத்தின் அடிப்படையில் எடுத்த முடிவாக இருப்பதில்லை.

கொலை, நினைத்துப் பார்க்கவே அச்சப்பட வைக்கும் குற்றம், வேதனை. ஆனால், கொலையைவிடப் பெண் குழந்தை வளர்ப்பு இச்சமூகத்தில் பயங்கரமானதாக ஆகியுள்ளது. 'பொட்டயப் பெத்துப் போட்டுட்டா' என்று சுற்றத்திடம் பேச்சு வாங்கி, அந்தக் கண்ணீருக்கு நடுவிலேயே அந்தக் குழந்தைகளை வளர்த்து, அவர்களுக்கு திருமணத்திற்கும் அதற்குப் பின்னும் சீர் செய்து செய்து ஓய்ந்து... இந்த அவஸ்தைகளுக்கெல்லாம் அஞ்சி, அறியாமையால் கொலை என்னும் கொடுமையான முடிவெடுக்கிறார்கள்.

'பெண் குழந்தை என்றாலே செலவுதான்' என்றும், 'ஆண் குழந்தைதான் விருட்சம்' என்றும் முன் சந்ததியினர் தூவிச் சென்றுள்ள விஷ வித்துகளை இன்னும் ஈரம் காயாமல் வளர்த்து வரும் நம் சமுதாய அவலத்தின் சான்றாக இந்தப் படுபாவக் கொலைகள் நிகழ்கின்றன. சமூகத்தில் பெண்கள் கடுமையான உழைப்பாளர்களாகவும், குடும்பத்தை வழி நடத்துபவர்களாகவும் இருந்தாலும் இரண்டாவது பிரசவத்திலும் பெண் குழந்தை பிறந்தால் அக்குழந்தையைக் மரணமடையச் செய்யும் கொடூரம் பல இடங்களில் நடந்து வருகிறது. பெண் சிசுக்கொலைக்குக் காரணமான குற்றவாளிகளைக் காட்டிக் கொடுக்காமல் இருக்க வேண்டிய மனநிலைக்கும் கட்டாயத்திற்கும், குடும்பத்தினரும், அக்கம் பக்கத்தினரும் ஒட்டு மொத்த கிராமத்தினரும் உள்ளாக்கப்பட்டுள்ளனர்.

எந்தக் குற்றமும் செய்யாத, ஒன்றுமறியாத பெண் சிசுக்கள் கொடூரமாகக் கொலை செய்யப்படுவது ஒட்டு மொத்தப் பெண் வர்க்கத்திற்கே இழைக்கப்படும் கேடு கெட்ட செயல். பெண் சிசுக்கொலை நம் நாட்டின் ஒரு சில பகுதிகளில் மட்டுமே நடைபெற்று வந்த நிலை மாறி இப்பொழுது அது பல பகுதிகளுக்கும் பரவியிருக்கிறது. தொடக்கத்தில் பெண் சிசுக்கொலை ஆதிக்க சாதியினரான பிற்படுத்தப்பட்ட/மிகவும் பிற்படுத்தப்பட்ட வகுப்பினர் மத்தியில் காணப்பட்டது. இப்பொழுது தாழ்த்தப்பட்ட சாதியினரிடையேயும் தலை தூக்கியுள்ளது. பொதுவாக ஏழைக் குடும்பங்களில் பெண் சிசுக்கொலை நடைபெறுவதாகவும், பெண்குழந்தைகளைப் பேணவும், திருமணம் செய்து கொடுக்கவும் மிகவும் கஷ்டமாக இருப்பதால் கொலையின் மூலம் ஒழித்துக் கட்டிவிடுகிறார்கள் என்றும் தெரிய வருகிறது. பெண் சிசுக்கள் விருப்பப்படாத நிலையில் பிறக்கும் போது பிறந்த உடனேயே கொல்லப்படுகின்றன. பெற்ற தாயோ, குழந்தையின் பாட்டியோ, இத்தொழிலில் தேர்ச்சி பெற்ற பெண்களோ இக்கொடூரக் கொலையை செய்கிறார்கள்.

## கொலை உத்திகள்

பெண் சிசுக்களைக் கொல்ல பல உத்திகள் பயன்படுத்தப்படுகின்றன. கள்ளிப்பால் அல்லது எருக்கம்பாலை குழந்தைக்குப் புகட்டுவது, விளக்கெண்ணையுடன் கள்ளிப்பாலை அல்லது எருக்கம்பாலை கலந்து புகட்டுவது, குழந்தையின் தொண்டைக் குழிக்குள் நெல்லை போடுவது, நெல்லுடன், தவிடு சேர்த்து தண்ணீரில் கலந்து வாய்க்குள் திணிப்பது, புகையிலைத் தண்ணீரை ஊட்டுவது, யூரியா அல்லது பாலிடால் கலந்த பாலைப் புகட்டுவது, அரளி விதைகளை அரைத்துப் பாலுடன் தருவது,

கொதிக்க கொதிக்க வெந்நீரை வாய்க்குள் ஊற்றுவது, அளவுக்கு அதிகமாக தூக்க மாத்திரைகளைத் திணிப்பது, மூக்குப் பொடியைத் திணித்து மூச்சுத்திணறல் ஏற்படுத்துவது, குழந்தைக்கு மூச்சு முட்ட தாய்ப்பால் கொடுப்பது, குழந்தைக்கு நாள் கணக்கில் தண்ணீர் கூட புகட்டாமல் நா வறண்டு செத்துப்போகச் செய்வது, பிறந்த குழந்தையின் தொப்புள் கொடியை அறுக்காமல் அப்படியே விட்டு விட்டு அதனால் ஏற்படும் அதிக இரத்தப்போக்கு மற்றும் நோய்த் தொற்று காரணமாக குழந்தையை மடியச் செய்வது, வாளித் தண்ணீரில் குழந்தையை முக்கிக் கொலை செய்வது, குழந்தையின் உடம்பை ஈரத்துணியால் இறுக மூடி மணிக்கணக்கில் வைப்பதன் மூலம் குழந்தையை மூச்சு திணறச் செய்து சாகடிப்பது போன்ற வழிமுறைகள் பின்பற்றப்படுகின்றன.

கொலைதானா என்று சந்தேகம் எழாத வகையில் குழந்தையைத் தீர்த்துக் கட்ட, பிறந்த குழந்தையைக் குளிர்ந்த நீரில் மணிக்கணக்கில் முக்கி முக்கி எடுத்து உடம்பு குளிரில் விறைத்துப் போகச் செய்வது. அப்படியும் குழந்தை சாகவில்லை என்றால் இக்குளிரால் ஏற்படும் நுரையீரல் காய்ச்சலுக்கு சிகிச்சைக்காக அளிக்க மருத்துவரிடம் எடுத்துச் சென்று ஆனால் அவர் பரிந்துரைக்கும் மருந்து மாத்திரைகளை தராமல் குழந்தையை சாகடிக்கும் கொடூரமும் நிகழ்த்தப்படுகிறது. குழந்தை நுரையீரல் காய்ச்சல் காரணமாக இறந்தது என்று மருத்துவச் சான்றிதழ் கிடைக்கும். இதனால் பெற்றோர்கள் மீது கொலைக் குற்றம் எழ வாய்பில்லாமல் போகிறது. குழந்தையை மின்விசிறிக்கு அடியில் அல்லது நெருக்கத்தில் வைத்து மின் விசிறியை முழு வேகத்தில் ஓட விட்டு குழந்தையை மூச்சுத் திணறி இறக்கச் செய்து 'இயற்கையான சாவு' என்று சொல்லி தப்பிக்கும் உத்தியும் பின்பற்றப்படுவதாக கள ஆய்வுகள் தெரிவித்துள்ளன.

### பெண் சிசுக்கொலைக்கான காரணங்கள்

பெண் குழந்தையை வளர்த்து ஆளாக்கி திருமணம் செய்து கொடுப்பது மிகுந்த பொருட்செலவை உண்டாக்குகிறது. பெண் குழந்தைகளுக்கு மொட்டை அடித்து காது குத்தல், சடங்கு சுற்றுதல், திருமணம், சீர் வரிசை என வரிசையாக சங்கிலித் தொடர் போல் செய்ய வேண்டிய சடங்குகளை சமாளிக்க அதிக நிதியாதாரம் தேவை. அதிகப் பெண்குழந்தைகள் உள்ள குடும்பத்தில், இதனால் பண நெருக்கடி ஏற்பட்டு குடும்பத்தை நடத்துவதே பெரும் சிரமமாக, துன்பமாக மாறுகிறது.

பெண்ணுக்குத் தலைப் பிரசவம் தாய்வீட்டில் தான் நடைபெற வேண்டும் என்பது மரபு. அதனால் பிள்ளைப் பேற்றையும் பெண்களின் பெற்றோரே ஏற்பாடு செய்து அதற்கான செலவுகளையும் ஏற்க வேண்டியதாகிறது. குழந்தை பிறந்த பிறகு குழந்தைக்கு ஆடைகள், நகைகள் என்று பெண்ணின் பெற்றோர் சீர் செய்ய வேண்டும். இவ்வாறாக பெண்ணைப் பெற்றெடுத்த பெற்றோர்களுக்கு செலவுக்கு மேல் செலவாக தொடர்ந்து ஏற்பட்டு இருக்கின்ற நிதியாதாரம் கரைந்து கடன் வாங்கும் நிலை ஏற்படுகிறது. பெண்கள் செலவினமாக இருப்பதால் ஒரு அளவுக்கு மேல் பெண் குழந்தைகள் பிறக்கும் போது பெற்றோர் 'செலவினத்தை'க் குறைக்கப் பெண் சிசுக்களைக் கொல்கிறார்கள். பெண் சிசுக்கொலையில் தலைச்சன் பெண் குழந்தைகள், பொதுவாகப் பலியாகாமல் இருப்பதும், இரண்டாவதாக அல்லது மூன்றாவதாகப் பிறக்கும் குழந்தைகள் கொலை செய்யப்படுவதும் குறிப்பிடத்தக்கது.

பெண் சிசுக்கொலை தண்டனைக்குரிய குற்றம். இந்திய தண்டனைச் சட்டத்தின் 315, 302 ஆகிய பிரிவுகளின் கீழ் இக்குற்றத்திற்குச் சிறைத் தண்டனை வழங்க வழி செய்யப்பட்டுள்ளது. இக்குற்றத்திற்காக குழந்தைகளின் தாய்மார்களே பெரிதும் தண்டனைக்கு ஆளாகிறார்கள். தாய்மார்கள் பெண் சிசுக்கொலை செய்தாலும், அவர்கள் அதை மனமொப்பி செய்வதில்லை. மேலும் அவர்கள் மட்டுமே அதற்கு முழுப்பொறுப்பல்ல. மைதிலி சிவராமன் சொல்லுவதைப் போல அவர்கள் பாவப்பட்டவர்கள்; பாவிகள் அல்ல. அவர்கள் தாங்களாக பாவம் செய்யவில்லை; தூண்டப்பட்டு பாவம் செய்கிறார்கள்.

பெற்றெடுத்த தாய் தனது பச்சிளம் சிசுவை வீதியிலே வீசி அனாதையாக்கி விட்டு செல்லும் கொடுமை சாதாரணமானது அன்று. ஆண்குழந்தைகளாக இருந்தால் அவன் வளர்ந்து ஆளாகும்போது குடும்ப வருமானத்திற்கு உதவிகரமாக இருப்பான்; ஆனால் பெண் குழந்தையாக இருந்தால் அவள் வளர்ந்து பூப்பெய்வது முதல் திருமணம் வரையில் தொடர்ந்து செலவு; திருமணம் முடிந்து கர்ப்பிணியானால் சீமந்தச் செலவு, குழந்தை நல்ல முறையில் பிறக்க வேண்டுமே என மருத்துவ மனையில் பிரசவத்திற்காக அனுமதித்து பெரும் தொகையைச் செலவு செய்ய வேண்டிய கட்டாயம், பிறந்த பெண் குழந்தைக்கு தலை முடி நீக்கி, காது குத்தி கம்மல் மாட்டச் செலவு எனத் தொடரும் செலவினங்கள் போன்ற எண்ணற்ற பிரச்சனைகளால் பெண் சிசுக்களைப் பிறந்தவுடன் கொன்று விடும் கொடிய நடைமுறை தொடருகிறது.

பெண் என்றாலே மட்டம் என்ற கருத்து நிலையூன்றி, இக்கருத்து பெண்கள் உட்பட எல்லோருக்கும் ஊட்டப்படுகிறது. இதனால் பெண்களைப் பற்றி ஆண்களிடம் உருவாகிற அதே கருத்துரு பெண்களிடமும் ஊறுகிறது. பெண்களைப் பெண்களே மட்டமாக நினைக்கிறார்கள், நடத்துகிறார்கள். ஆணாதிக்கத்தின் சாயலான இந்த மனப்பான்மை ஆணாதிக்க சமூகத்தில் வளரும் பெண்களிடம் தவிர்க்க இயலாமல் படிவதும், அந்தப் படிதலின் விளைவில் பெண் சிசுக்கொலையும் உள்ளடங்கியுள்ளதும் கவனிக்கத்தக்கது.

பெரும்பாலான சமூகங்களில் பெண் குழந்தைகளின் வாழ்க்கைக்கும், வளர்ச்சிக்கும் தேவையான சூழல்கள் அதே குடும்பத்தில் பிறந்த ஆண் குழந்தைகளை விடக் குறைவாகவே வாய்க்கின்றன. பெண் குழந்தைகளின் வளர்ச்சிக்குத் தேவையான உணவோ, நோய்த் தடுப்பிற்குத் தேவையான தடுப்பு ஊசிகளோ, நோயுற்ற காலத்தில் கிடைக்க வேண்டிய மருத்துவ வசதிகளோ அக்குடும்பத்திலுள்ள ஆண் குழந்தைகளுக்குக் கொடுக்கப்படும் அளவுக்கும் குறைவானதாகவே உள்ளன. உணவிலும், ஆரோக்கியத்திலும் கூட பெண் குழந்தைகள் தொடர்ந்து புறக்கணிக்கப்பட்டு வருகின்றனர். பெண் குழந்தைகளுக்கு மருத்துவ செலவு செய்வதிலும் பெற்றோர்கள் தயக்கம் காட்டுகின்றனர். பெண் குழந்தைச் சாவுகள் அதிகமாக உள்ள நாடுகளில் ஒன்றாக இந்தியா உள்ளது என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

"இந்தியாவின் குழந்தைகள் குறித்த தேசியக் கொள்கை" அனைத்து குழந்தைகளுக்கும் எல்லாவிதமான புறக்கணிப்புகள், கொடுமைகள், சுரண்டல்கள் ஆகியவற்றில் இருந்து பாதுகாப்பை அளிக்க அரசு கடமைப்பட்டுள்ளது என்று வலியுறுத்துகிறது. பெண் குழந்தைகள் பாதிக்கப்பட்டு வரும் நிலையினை மாற்ற முயற்சி மேற்கொள்ளாவிட்டால் அவர்களின் எதிர்கால வாழ்வு சூன்யமாகி தேசத்தின் எதிர்காலமே கேள்விக்குறியாக நிற்கும்.

### தடுப்பு நடவடிக்கைகள்

வறுமையும், அறியாமையும், ஒன்றுக்கு மேற்பட்ட பெண் குழந்தைகளை வளர்க்க முடியாத சூழ்நிலைகளும் இத்தகைய நிகழ்வுகள் அரங்கேற முக்கியக் காரணங்களாக இருப்பதால் பெண் சிசுக்கொலையை அறவே தடுத்து நிறுத்தக் கல்வியறிவும், சமுதாய விழிப்புணர்வும்,

வறுமையிலிருந்து மீட்க வேலைவாய்ப்புத் திட்டங்களை உருவாக்குவதும் அவசியம்.

பெண்களும் அடிப்படை உரிமை, கல்வி, சமத்துவம் பெற்று நாகரிகமாக, கண்ணியமாக வாழ முடியும் என்ற நம்பிக்கையை அடித்தட்டு மக்களிடம் விதைக்க வேண்டும். பெண் கல்வி குறித்த விழிப்புணர்வை ஏற்படுத்தவும், ஆணாதிக்கம், வரதட்சணை போன்ற சீர்கேடுகளை ஒடுக்கவும், பெண் சிசுக்கொலையை தடுத்து நிறுத்தவும் ஆக்கப்பூர்வமான நடவடிக்கைகள் உடனடியாக மேற்கொள்ளப்பட வேண்டும்.

அரசு சாரா நிறுவனங்களும், சமூக நலத்துறை, ஊட்டச் சத்துத்துறை, ஆரம்ப சுகாதார நிலையங்கள் போன்ற அரசுத்துறைகளும், மகளிர் சுய உதவிக்குழுக்களும் மக்களிடையே "பெண் கருக்கொலை எதிர்ப்பு பிரச்சாரத்தை" இயக்கமாக மேற்கொள்ள வேண்டும்.

கொலைக் கரங்களிலிருந்து பெண் சிசுக்களைப் பாதுகாக்க **1992** ஆம் ஆண்டு முதல் தமிழ்நாட்டில் "தொட்டில் குழந்தைத் திட்டம்" மாநில அரசால் செயல்படுத்தப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது. இத்தகைய கொடூரச்செயலைத் தடுத்து நிறுத்த தமிழ்நாடு அரசால் செயல்படுத்தப்பட்டு வருகின்ற "பெண் குழந்தையின் திருமண செலவுக்கான நிரந்தர வைப்புத் திட்டம்" குறிப்பிடத்தகுந்தது.

**References**

Barbara D.Miller, The Endangered Sex Neglect of Female Children in Rural North India. (Cornell University Press, 1981).

Muthulakshmi, R. Female Infanticide: Its Causes and Solutions. (1997).

Rayshmi Dube, Bhatnagar and Reena Dube. Female Infanticide in India: A Feminist Cultural History. (2005).

Venkatachalam, R. and Viji Srinivasan. Female Infanticide. (Haranand Publication,1993).

Venkataesh B. Athreya and Chunkath, Sheelarani. Female Infanticide in Tamil Nadu: Some Prime Facie Evidence.

# குழந்தைகளைக் கொடுமைக்குள்ளாக்குதல்

## குழந்தைகள் மீதான கொடுமை

குழந்தைகள் மீதான கொடுமை என்பதை "வேண்டுமென்றே குழந்தையைத் தாக்கி காயம் ஏற்படுத்துவது" என கார்டன் மற்றும் கிரே, (Garden and Gray, 1982), கெம்ப் (Kempe, 1978) போன்ற பலரும் வரையறுத்துள்ளனர். இந்த வரையறையை விரிவுபடுத்தி "உடல்ரீதியாக மட்டும் அல்லாது மனரீதியாகவும் பெற்றோர்கள், பாதுகாவலர்கள் மற்றும் வேலை வாங்குவோர் குழந்தையைக் காயப்படுத்துவது" என்று பாக்ஸ் (Fox) கூறுகிறார். இதன்படி திட்டுதல், தாக்குவது போன்ற பயமுறுத்தல், உடலை வருத்தித் தண்டிப்பது போன்றவையும் இந்த வரையறையில் அடங்குகின்றன.

குழந்தைகள் பொதுவாக உடலாலும், மனதாலும், பாலியல் துன்புறுத்தலாலும் கொடுமைப்படுத்தப்படுகிறார்கள். உடல் மீதான வன்முறைகளாக காயம், தீப்புண், எலும்பு முறிவு, அடியினால் ஏற்பட்ட தழும்புகள், உள் காயம் ஆகியவற்றை இர்வின் ஸ்லோவன் (Irving Sloan, 1983:2-3) குறிப்பிடுகிறார். உளவியல் ரீதியிலான பாதிப்பில் புறக்கணித்தல், கொடுமைப்படுத்துதல், அத்தியாவசமாகத் தேவைப்படும் உணவு, உடை, தங்குமிடம், பாதுகாப்பு மற்றும் கவனிப்பு வழங்காதிருத்தல், அன்பும் ஆதரவும் காட்டாமை போன்றவை அடங்குமென கிராட்கோவ்ஸ்கி (Kratcoski,1979) தெரிவித்துள்ளார். இன்னதென்று அறியாத இளந்தளிர்களை உடல் இச்சைக்காகப் பயன்படுத்துவதும், கட்டாயப்படுத்துவதும் மற்றும் துன்புறுத்துவதும் பாலியல் கொடுமைகளில் அடங்கும் என ஸ்லோவன் (Sloan, 1983) கூறியுள்ளார்.

இந்திய தண்டனைச் சட்டம் மற்றும் விசேஷ சட்டங்களில் கட்டாயக் கருக்கலைப்பு, சிசுக்கொலை, தற்கொலைக்குத் தூண்டுதல், குழந்தைகளைப் பரிதவிக்க விடுதல், குழந்தைகளைக் கடத்துதல், விபசாரத்தில் ஈடுபடுத்துதல், வன்புணர்வு, இயற்கைக்கு மாறாகப் புணர்தல், இளம் வயது திருமணம், குழந்தைகளை வேலையில் அமர்த்துதல் போன்ற பல குற்றங்கள் வரையறுக்கப்பட்டு குழந்தைகளைப் பாதுகாக்கும் பொருட்டு சேர்க்கப்பட்டுள்ளன.

## குழந்தைகள் கொடுமைப்படுத்துவதற்கான காரணங்கள்

குழந்தைகள் கொடுமைப்படுத்தப்படுவதன் காரணங்கள் பல்வேறு கோட்பாடுகளின் அடிப்படையில் விளக்கப்படுகின்றன. இவற்றில் உளவியல்–மனநலம் தொடர்பான விளக்கம் – கெம்ப் (Kempe, 1972); கில்லஸ் (Gelles, 1973); பார்க் மற்றும் கோல்மர் (Parke and Collmer, 1975); வுல்ப் (Wolfe, 1987), சமூக–பண்பாட்டு விளக்கம் – பண்டுரா (Bandura, 1973); ஸ்டேயின்மெட்ஸ் மற்றும் ஸ்டிராஸ் (Steinmetz and Straus, 1983); கில் (Gil, 1970); கர்பாரினோ (Garbarino, 1977); லாஸ்லெட் (Laslett, 1978); ஈவான் நை (Evan Nye, 1979); பர்கஸ் (Burgess, 1979) குறிப்பிடத்தக்கவை.

1. உடல் ரீதியிலான தாக்குதலுக்கான காரணங்களில் மன நோய் அறிகுறி/கூறுகள் உடையவர்கள், சமூக–மனநோய் அறிகுறிகள் கொண்ட சமூக ஊடாட்டங்கள், கணவன்–மனைவி இடையேயான சண்டை சச்சரவு, குழந்தை–பெற்றோர் உறவு, பெற்றோர்க்கு கீழ்ப்படியாமை, தவறான நடத்தை போன்றவை முக்கியமானவை.

2. உளவியல் ரீதியிலான கொடுமைக்கான காரணங்களில் வறுமை, குடும்பத்தினரிடையே சுமூகமான உறவு இல்லாமை, பெற்றோர்கள் தங்கள் குழந்தைப் பருவத்தில் மோசமாக நடத்தப்பட்ட விதம், பெற்றோரின் குடிப்பழக்கம் போன்றவை முக்கியமானவை.

3. பாலியல் ரீதியிலான கொடுமைக்கான காரணங்களில் குடும்ப அமைப்பு குலைவு, அனுசரித்துப் போவதில் பிரச்சனைகள், பாதிக்கப்படும் குழந்தையின் குணநலன்கள், சூழ்நிலைச் சந்தர்ப்பங்கள், குடும்பச் சூழ்நிலை போன்றவை முக்கியமானவை.

## குழந்தையைக் கொடுமைப்படுத்துவதால் ஏற்படும் விளைவுகள்

போல்டன் மற்றும் போல்டன் (Bolton and Bolton, 1987:93-113) எட்டு வகையான பாதிப்புகளைக் கீழ்க்கண்டவாறு வகைப்படுத்துகின்றனர்:

1. சுய மதீப்பீடு தாழ்ந்து போதல்

2. பிறரைச் சார்ந்தே இருக்கும் தன்மை

3. நம்பிக்கை இன்மை

4. மீண்டும் மீண்டும் கொடுமைக்கு உள்ளாக்கப்படுதல்

5. பிறருடன் பழகாமல் தனித்து இருத்தல்

6. மனப் போராட்டம்

7. பிறழ்வு நடத்தை

8. பிறருடனான சமூக மற்றும் தனிப்பட்ட உறவில் சிக்கல்கள்.

இந்தியாவில் குழந்தைகள் மீதான வன்முறையை, கள ஆய்வின் முடிவுகள் வாயிலாக விரிவாக விவரித்துள்ள கேவல்ரமணி (1990) சுய பட்சாதாபம், படிப்பில் கவனமின்மை, வெறுப்பு, கோபம், பழி வாங்கும் உணர்ச்சி அதிகரித்தல் போன்றவற்றைக் குறிப்பிடுகிறார்.

குழந்தையின் மீதான உடல் ரீதியிலான மற்றும் மன ரீதியிலான கொடுமைகளில் முக்கியமானது குழந்தையை உழைப்பில் ஈடுபடுத்துவது. இளம் வயதில், உடல் முழு வளர்ச்சி அடையாத நிலையில், வேலைக்கு அனுப்புவது மேலும் குழந்தையைக் கொடுமைக்கு உள்ளாக்குகிறது. உலகில் உள்ள மொத்த குழந்தைகளில் 20 சதவிகிதமாகவும், இந்திய மக்கள்தொகையில் 42 சதவிகிதமாகவும் 18 வயதுக்குட்பட்ட குழந்தைகள் உள்ளனர். பல்வேறு வழிகளில் குழந்தைகள் வதைக்கப்படுவதும், துன்புறுத்தப்படுவதும் அன்றாட நிகழ்ச்சியாகிவிட்டது. குழந்தைகள் முறைகேடாக நடத்தப்படுவது பற்றிய விழிப்புணர்வு மற்ற நாடுகளுடன் ஒப்பிடுகையில் இந்தியாவில் மிகக்குறைவு. குழந்தைகளை வேலையில் அமர்த்தக்கூடாது என்று சட்டம் இருப்பினும், குழந்தை உழைப்பு முறை இந்திய அரசியல் அமைப்புக்கு எதிரானதாக இருந்த போதும், அதனை முறைப்படுத்தவும் மற்றும் தடுக்கவும் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ள போதிலும் பரவலாகக் குழந்தைகள் பணியில் அமர்த்தப் பட்டிருக்கிறார்கள்.

இந்திய நாட்டின் தொழிலாளர் சட்டங்கள் 14வயதுக்குட்பட்ட உழைக்கும் குழந்தைகளைக் 'குழந்தைத் தொழிலாளர்' என பாவிக்கின்றன. 14வயதுக்குட்பட்ட குழந்தைகளை தொழிற்சாலைகளிலோ அல்லது சுரங்கங்களிலோ அல்லது உயிருக்கு தீங்கு நேரும் எந்தத்

தொழிலிலும் ஈடுபடுத்தக் கூடாது என்று அரசியல் சாசனத்தின் 24 வது பிரிவு கூறுகிறது. உழைப்புச் சுரண்டலுக்கு எதிரான வடிவங்களையும், செயல்களையும் இந்திய அரசியல் சாசனம் குற்றங்களாக அறிவித்துள்ளது.

குழந்தைகள், குழந்தைப்பருவத்தைப் பறி கொடுத்துவிட்டு தொழிலாளர்களாகும் கொடுமை மிகச் சாதாரணமானதன்று. நம் நாடு முழுவதும் லட்சக்கணக்கான குழந்தைகள் பல்வேறு தொழில்களில் ஈடுபடுத்தப்பட்டுள்ளனர். இவர்களில் பலர் கொத்தடிமைக் குழந்தைத் தொழிலாளர்களாக உள்ளனர். "ஒரு குறிப்பிட்ட முன்தொகைக் கடன் பெறப்பட்டதற்கு ஈடாக நாள் ஒன்றுக்கு எட்டு மணி நேரத்திற்கு மேல் வேலை வாங்கப்பட்டு, குறைந்தபட்ச ஊதியத்திற்கும் குறைவாக ஊதியம் வழங்கப்பட்டு, சுதந்திரமாகப் பணிபுரியும் உரிமையையும் இழந்தவர்கள்" என 1975ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட "கொத்தடிமைத் தொழிலாளர் ஒழிப்புச் சட்டம்" வரையறை செய்கிறது. பெற்றோர் வாங்கும் கடனுக்காக குழந்தைகள் கொத்தடிமைகளாக்கப்பட்டு, பட்டு நெசவுத் தொழில், பீடி சுற்றுதல், விசைத்தறி, தீப்பெட்டி, பட்டாசு, விவசாயம், கைத்தறி, தோல் பதனிடுதல், ஆயத்த ஆடை தயாரித்தல், பட்டறைகள் உள்ளிட்ட பல்வேறு தொழில்களிலும் வீட்டு வேலைகளிலும், பாலியல் தொழிலிலும் உழல்கின்றனர்.

ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் குழந்தைப் பருவம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்ததாகும். இக்காலகட்டத்தில் குழந்தைக்குக் கிடைக்கும் அனுபவங்களின் தாக்கம் அவர்களது வாழ்வு முழுவதும் தொடர்ந்து வரும். அதனால் அக்குழந்தைக்கு அன்பான, ஆதரவான, பாதுகாப்பான சூழலை ஏற்படுத்த வேண்டியது குடும்பங்களின் கடமையாகிறது. ஒவ்வொரு குழந்தையின் உடல், மன, அறிவு வளர்ச்சிக்கு இப்பருவத்தில் ஆதரவளிக்க வேண்டும். இவ்வாறான சூழலில் வளரும் குழந்தைகள் பின்பு தங்களது குடும்பத்தின் மேன்மைக்கும் சமூகத்தின் வளர்ச்சிக்கும் பங்களிக்க முடியும். ஆனால் அவ்வாறான சாதகமான சூழல் பெரும்பாலான குழந்தைகளுக்கு கிடைப்பதில்லை. குழந்தைகளின் வளர்ச்சிக்குக் குடும்பத்தில் யார் ஆதரவாக இருக்க வேண்டுமோ அவர்களே தங்களது பொருளாதாரத் தேவைகளுக்காகவும், சுயநலத்திற்காகவும் குழந்தையை உழைப்பில் ஈடுபடுத்தி அக்குழந்தைகளின் குழந்தைப் பருவத்தைக் கொடுமையாக்கிவிடுகின்றனர். பெண் குழந்தைகளைத் தவறாகப் பயன்படுத்துவதின் உச்ச கட்டம் அவர்களைப் பாலியல் தொழிலில் ஈடுபடுத்துவதாகும். பெண் குழந்தைகளைப் போகப்பொருளாகக் கருதி

பாலியல் வன்முறைக்கு உட்படுத்தும் நிகழ்வுகளும் போக்குகளும் அண்மைக் காலத்தில் அதிகரித்துள்ளன. பெண் குழந்தைகளை அவர்களின் குடும்பத்தினரே பாலியல் தொழிலில் ஈடுபடுத்துவதும் அதிகரித்துள்ளன.

பாதுகாப்பு என்பது குழந்தைகளின் அடிப்படை உரிமையாகும். நம் அரசியலமைப்புச்சாசன பிரிவு 21ன் படி 14 வயதிற்குட்பட்ட அனைத்துக் குழந்தைகளுக்கும் அரசு கட்டாய இலவசக் கல்வியை வழங்க வேண்டும். குழந்தைத்திருமணத் தடைச் சட்டத்தின் (1929) படி 18 வயதிற்குக் குறைவான பெண்ணைத் திருமணம் செய்தல் குற்றமாகும். பெண்கள், குழந்தைகள் விபச்சாரத்தில் ஈடுபடுத்தப்படுவதையும் விபச்சாரத்தொழிலுக்காகக் கடத்தப்படுதலையும் விபச்சாரக் கடத்தல் (தடுப்பு) சட்டம், 1956 தடை செய்கிறது. இளைஞர் நீதி (பராமரிப்பு மற்றும் பாதுகாப்பு) திருத்தப்பட்ட சட்டம், 2006 பிரிவு 23 முதல் 26 வரை குழந்தையை அடித்துத் துன்புறுத்தல், புறக்கணித்தல், குழந்தைத் தொழிலாளர் /கொத்தடிமையாக வைத்திருத்தல் செயல்களைக் குற்றமாகக் கருதுகின்றன. இந்திய குற்றவியல் சட்டம் பிரிவுகள் 312 முதல் 318 வரை பெண் கருவை அழிப்பது, குழந்தை உயிருடன் பிறக்கத் தடையாய் இருப்பது, குழந்தைப் பிறப்பை மறைத்து உடலை ரகசியமாகப் புதைப்பது செயல்களைக் குற்றமாகக் கருதுகின்றன. கருவின் நிலைப்பாட்டை கண்டறியும் நுணுக்க முறை (தவறாகப் பயன்படுத்துவதைக் கட்டுப்படுத்துதல் மற்றும் முறைப்படுத்துதல்) சட்டம், 1994 பெண் சிசுவை அழிக்கும் நோக்குடன் கருவில் உள்ள சிசு ஆணா, பெண்ணா எனக் கண்டறிதலைத் தடுக்கிறது.

வறுமைக்கோட்டில் வாழும் குடும்பங்களில் பெண் குழந்தைகள் அதிக வேலைப் பளுவுக்கும், பொறுப்புகளுக்கும் ஆளாகின்றனர். இக்குடும்பத்தில் பெண் குழந்தைகள் தாயின் பொறுப்புகளையும், வேலைகளையும் இளம்வயதிலேயே பகிர்ந்து கொள்கின்றனர். வீட்டின் உபயோகத்திற்கான தண்ணீர், விறகு சேகரித்துச் சுமந்து வருவது, வீட்டையும் பாத்திரங்களையும் சுத்தம் செய்வது, சமைப்பதில் உதவுவது, தங்கை தம்பிகளைக் கவனித்துக் கொள்வது போன்ற பொறுப்புகள் பெண் குழந்தைகளின் தோள்களிலேயே சுமத்தப்படுகின்றன. இந்தியாவில் ஆண் குழந்தைத் தொழிலாளர்களைவிட பெண் குழந்தைத் தொழிலாளர்களே அதிக அளவில் உள்ளனர். இவர்கள் ஈடுபடுத்தப்படும் பல தொழில்கள் அவர்கள் உடலுக்கும், ஆரோக்கியத்திற்கும் தீங்கு விளைவிப்பதாக உள்ளன. சிறு வயதிலேயே அவர்கள் உழைப்பு குடும்பத்தாரால்

சுரண்டப்படுகின்றது. அவர்களது மன, அறிவு வளர்ச்சிக்குத் தேவையான கல்வி, அரசால் இலவசமாகக் கொடுக்கப்பட்டாலும் அவர்களுக்கும் கிடைக்காமல் மறுக்கப்படுகிறது.

அறிவு வளர்ச்சிக்கு அடிப்படையான கல்வி, பெண் குழந்தைகளில் பலருக்கும் மறுக்கப்படுகிறது. பள்ளிகள் வெகுதொலைவில் போக்குவரத்து வசதியற்று இருத்தல், பள்ளியில் பெண் குழந்தைகளுக்கென கழிப்பிட வசதி மற்றும் ஒய்வு அறைகள் இல்லாதிருத்தல், வீட்டு வேலைப் பொறுப்புகளை பெண் குழந்தையின் மீது திணித்தல், பருவமடைந்த பின் பாதுகாப்புக் காரணம் காட்டி பள்ளி செல்வதை நிறுத்தி வைத்தல், பள்ளி செல்லும் வயதிலேயே திருமணம் முடித்தல், அடுத்த வீட்டிற்குப் போகப்போகிறவள் தானே எனக் கருதி கல்வியை மறுத்தல் போன்ற பல்வேறு காரணங்களால் முடக்கப்படுகிறார்கள். உயிருடன் பிறந்து, வளர்ந்து, வாழும் உரிமை பல பெண் குழந்தைகளுக்கு பல்வேறு காரணங்களால் மறுக்கப்படுகின்றன. போதிய உணவு, மருத்துவ வசதி, அன்பு, அரவணைப்பு, ஆதரவு முதலியவை மறுக்கப்பட்ட பெண் குழந்தைகள் தாழ்வுமனப்பான்மைக்கு ஆளாகின்றனர். தாங்கள் குடும்பத்திற்கும் சமூகத்திற்கும் வேண்டாதவர்கள் என்ற எண்ணம் அக்குழந்தைகளின் மனத்தில் ஆழப்பதிந்து துக்கங்களும், பிரச்சனைகளும் வந்தால் அவற்றை தைரியமாக எதிர்கொண்டு மாற்ற முயற்சிக்காமல் சுய பச்சாதாபத்தில் அமிழ்ந்து விடுகின்றனர். அவர்களது தாழ்வு மனப்பான்மை அழுகையாக மட்டுமே வெளிப்படுகிறது.

"குழந்தை உரிமைகளுக்கான ஐக்கிய நாட்டு சபையின் உடன்படிக்கை" சாதி, மதம், பால், மொழி, சொத்து, நிறம், பிறப்பு, ஊனம் போன்ற எவ்வித வேறுபாடுகளுமின்றி 18 வயதிற்குட்பட்ட அனைவரும் குழந்தைகள் ஆவர் என வரையறை செய்துள்ளது. குழந்தைகளுக்குக் கொடுக்கப்பட வேண்டிய போதுமான வாழ்க்கைத் தரம், உடல் நலப் பாதுகாப்பு, சமூகப் பாதுகாப்பு, கல்வி போன்றவற்றிற்கு அழுத்தம் கொடுத்துள்ளதோடு குழந்தை விற்பனை, பாலியல் வன்முறை, சுரண்டல், போதைப் பொருட்கள் போன்றவற்றிலிருந்து பாதுகாப்பு வழங்கவும் உறுதி செய்கிறது. ஒவ்வொரு குழந்தைக்கும் சம வாய்ப்பின் அடிப்படையில் ஆக்கப் பூர்வமான முன்னேற்றகரமான முறையில் கட்டாய, இலவச, தரமான கல்விக்கான உரிமை உண்டு (பிரிவு – 28, 29) எனவும், அனைத்துக் குழந்தைகளுக்கும் ஒய்வெடுக்கவும், இளைப்பாறவும், அதன் வயதிற்குத் தகுந்த விளையாட்டு மற்றும் பொழுதுபோக்கு செயல்பாடுகளில் ஈடுபடவும், பங்கெடுக்கவும் உரிமை உண்டு (பிரிவு–31) எனவும், பொருளாதார

ரீதியிலான சுரண்டல்கள், ஒடுக்கு முறைகளிலிருந்து பாதுகாக்கப்படவும், அபாயகரமான அல்லது குழந்தையின் கல்வியில் குறுக்கிடுவதான அல்லது குழந்தையின் தேக நலத்திற்குத் தீங்கு விளைவிப்பதான அல்லது குழந்தையின் உடல், மன, ஆன்ம, ஒழுக்க மற்றும் சமூக மேம்பாட்டிற்கு ஊறு விளைவிக்கக்கூடிய எந்த ஒரு வேலையைச் செய்வதிலிருந்து பாதுகாக்கப்படவும் குழந்தைகளுக்கு உரிமை உண்டு (பிரிவு–32) எனவும், எந்தவொரு குழந்தையும், உடல்ரீதியான மற்றும் மனரீதியான வன்முறை, இழிவுபடுத்தப்படல், புறக்கணிப்பு அல்லது அலட்சியமாக நடத்தப்படல் போன்றவற்றிலிருந்து பாதுகாக்கப்பட உரிமை உண்டு (பிரிவு–19) எனவும், எல்லா வகையான பாலியல் ரீதியான சுரண்டல்கள், கொடுமைகளிலிருந்து குழந்தைகள் பாதுகாக்கப்பட உரிமை உண்டு; விபச்சாரம் மற்றும் பாலியல் நடவடிக்கைகளில் குழந்தைகளைப் பயமுறுத்தியோ, பலவந்தப்படுத்தியோ, ஆசைகாட்டியோ ஈடுபடுத்துவதைத் தடுக்கும் அனைத்து வகையான நடவடிக்கைகளை அந்தந்த நாடுகள் மேற்கொள்ள வேண்டும் (பிரிவு–34) எனவும், பெண் குழந்தைகள் நலமுடன் பிறப்பதற்குரிய உரிமையும், பிறந்த குழந்தை உயிரோடு இருப்பதற்கான உரிமையும் பாதுகாக்கப்பட வேண்டும் எனவும், இவ்வுலகிலுள்ள அனைத்து வளங்களிலும் குழந்தைகளுக்கு முன்னுரிமை வழங்க வேண்டும். ஒவ்வொரு நாட்டின் சட்ட திட்டத்திலும் குழந்தைகளின் ஆரோக்கியமான வளர்ச்சிக்கும், முன்னேற்றத்திற்கும் தேவையானவைகளை அந்தந்த நாடுகள் உறுதி செய்திட வேண்டும்; எவ்வித பாரபட்சமும் காட்டாமல், இவ்வுலகின் அனைத்துக் குழந்தைகளுக்கும் அடிப்படையான உரிமைகள் அனைத்தையும் அனுபவிக்க வகை செய்ய வேண்டும்; இன்றைய குழந்தைகளின் உரிமைப் பாதுகாப்பு என்பது வருங்காலத் தலைமுறையின் உரிமைகளைப் பாதுகாக்கிறோம் என்பது பொருளாகும் (பிரிவு–80(6)) எனவும் ஐ.நா உடன்படிக்கை தெளிவுபடுத்தியுள்ளது.

1989 நவம்பர் மாதம் ஐ.நா.சபை அறிவித்த குழந்தை உரிமைகள் மீதான உடன்படிக்கையை 1992 டிசம்பர் மாதம் இந்திய அரசு கையொப்பமிட்டு ஏற்றுக்கொண்டு அதில் குறிப்பிடப்பட்டுள்ள உரிமைகளை நம் நாட்டு குழந்தைகளுக்கும் வழங்கப் பொறுப்பேற்றது. 54 ஷரத்துக்களை உள்ளடக்கிய இந்த ஐ.நா.உடன்படிக்கையில் குழந்தைகள் உரிமைகள், வாழும் உரிமை, பாதுகாப்பு உரிமை, வளர்ச்சி உரிமை, பங்கேற்பு உரிமை என நான்கு வகைகளாக்கப்பட்டுள்ளன. குழந்தைகள் ஆரோக்கியமாக உயிர் வாழவும், நல்ல உடல்–மன வளர்ச்சி பெற்று தனித்தன்மையுடன் வளரவும் அத்துடன் வன்முறைகள், புறக்கணித்தல், தீங்கிழைத்தல், சுரண்டல், பாரபட்சம், துன்புறுத்தல், சித்திரவதை, பாலியல் கொடுமைகள்,

கடத்தல், போதைப் பொருட்களுக்கு அடிமையாகுதல் ஆகியவற்றிலிருந்தும் அவர்களைப் பாதுகாக்க வேண்டும் எனவும் ஐ.நா.உடன்படிக்கை அறிவித்துள்ளது.

இந்தியாவில் "குழந்தைகள் பராமரிப்பு மற்றும் பாதுகாப்புச் சட்டம்" 2000வது ஆண்டில் கொண்டு வரப்பட்டது. இருப்பினும் குழந்தைகளுக்கு இழைக்கப்படும் அநீதிகள் தொடர்கின்றன. தெருவோரத்தில், தொழிற்சாலைகளில், வீடுகளில் உழைக்கும் பெண் குழந்தைகள் பலரும் பாலியல் ரீதியாக பலாத்காரத்துக்கு உள்ளாகின்றனர். தாங்கள் மோசமாக நடத்தப்படுவதையும், தங்களுக்குப் பல்வேறு தீங்குகள் இழைக்கப்படுவதையும், சீண்டுதல், பாலியல் உணர்வுகளைத் தூண்டும் வகையில் சில்மிஷம் செய்தல் போன்ற அவலங்களையும் கொடுஞ்செயல்களையும் எவ்வாறு எதிர்கொண்டு கையாள்வது என்பதறியாத குழந்தைகள் மனதளவில் பாதிக்கப்படுகின்றனர். குடும்பத்திற்கு உள்ளே நெருங்கிய உறவினர்களாலேயே சீரழிக்கப்பட்ட இளம் பெண்கள் குறித்துப் பெற்றோர்கள் குடும்ப மானம், மரியாதை, கௌரவம் முதலியவற்றால் வெளியே சொல்லாது மவுனம் காக்கின்றனர். பெண்ணின் மண வாழ்க்கைக்குக் குந்தகம் ஏற்படுமோ என்ற அச்சத்தால் விஷயத்தை மறைத்து விடுகின்றனர். குழந்தைகளைத் திட்டுவது, அடிப்பது, மற்றவர்களோடு ஒப்பிட்டுக் குறைசொல்வது, அவர்களுக்கு விருப்பமானவற்றை மறுப்பது, தனிமைப்படுத்துவது போன்ற அநீதிகள் சாதாரணமாக பல இல்லங்களில் நடக்கின்றன. குழந்தைகளைப் பிச்சை எடுக்க வைத்தல், பள்ளிக்கு அனுப்பாமல் தொழிலில் ஈடுபடச் செய்வது, வீட்டில் வேலைக்கு வைப்பது மட்டுமல்லாமல் அவர்களை அடித்து வேலை வாங்குவது போன்ற அவலங்கள் நிகழ்கின்றன. நகரில் வசிக்கும் பலர் வீட்டு வேலைக்கு ஏழைக்குழந்தைகளை வைக்கிறார்கள்.

இந்தியாவில் அனைத்துக் குழந்தைகளும் இலவச மற்றும் கட்டாயக் கல்வி பெறுவதை அடிப்படை உரிமையாக்கும் கல்வி உரிமைச்சட்டம், 2010 ஏப்ரல் 1 முதல் நடைமுறைக்கு வந்துள்ளது. இப்போது நாட்டில் 6 முதல் 14 வயது வரை உள்ள 22 கோடி குழந்தைகளில், 4.6 விழுக்காடு அதாவது 92 லட்சம் குழந்தைகள் பள்ளிகளுக்கு செல்லாத நிலையில் இச்சட்டத்தின்படி 6 வயது முதல் 14 வயது குழந்தைகள் அனைவரும் பயன் பெறுவர். நாட்டை வலிமையானதாக்குவதற்கும், வருங்கால சந்ததியினரைக் கல்வியறிவு பெற்றவர்களாக உருவாக்குவதற்கும் இந்த சட்டம் வழி செய்கிறது. இவர்களைக் கண்டறிந்து பள்ளிகளில் சேர்க்க ஊராட்சி அமைப்புகள் நடவடிக்கை எடுக்க வேண்டும். நமது அரசியலமைப்பு இந்திய மக்களின்

சமத்துவ உரிமையை உறுதி செய்கிறது; சமத்துவத்தை கல்வியிலிருந்து தான் தொடங்க வேண்டும். குடும்பச் சூழ்நிலை குழந்தைகள் பணிக்குச் செல்லக் காரணமாகிறது. குடும்பச் சூழ்நிலை சீராக வேண்டுமெனில் வறுமை அகல வேண்டும்; குடும்பங்களில் வளம் பெருக வேண்டும். அரசின் ஆக்கபூர்வமான திட்டங்களால் தான் இவையெல்லாம் ஈடேறும்.

## References

Bolton, F.G and Bolton, S.R., Working with Violent Families. (New York: Sage Publications, 1987).

Gelles and Cornell, Intimate Violence in Families. (Beverly Hills: Sage Publications, 1985).

Kewalramani, G.S., Child Abuse: A Sociological Study of Working and Non-Working Children. Jaipur: Rajasthan University, 1990).

Sloan, Irving, Child Abuse: Governing Law and Legislation. (New York: Oceana Publications, 1983).

Wolfe, D.A., Child Abuse. (Beverly Hills: Sage Publications, 1987).

# முதியவர்களைக் கொடுமைக்குள்ளாக்குதல்

முதுமை என்பது தனித்து நிகழ்கின்ற ஒரு நிகழ்வன்று; இது வாழ்க்கைச் சூழலில் ஓர் இயற்கையான கட்டம். எந்த வயதில் ஒருவர் முதுமை அடைகிறார் என்று துல்லியமாகக் கணிக்க இயலாவிட்டாலும் முதுமையை நெருங்குகிறவர்களுக்கு மூப்பைக் காட்டுகிற தலைமுடி நரைத்தல், முகத்தில் சுருக்கங்கள் விழுதல், தோல் வறட்சி அடைதல், தலையில் வழுக்கை விழுதல், உயரமும் எடையும் குறைதல், புலன் சக்தி குறைதல், உடல் வலிமையும் வீரியமும் குறைதல் முதலிய உயிரியல் மாற்றங்கள் ஏற்படுகின்றன. வயது ஆக ஆக, நோய்த் தடைக்காப்புறுதி மண்டலத்தின் செயல்பாடு வீழ்ச்சி அடைகிறது. இளமைக்கு அடையாளமான, ஊன்றுகோலான நோய்எதிர்ப்புச் சக்தியின் உற்பத்திஅளவு குறைகிறது. உடம்பின் வலிமை, வீரியம் தளர்கிறது. முதுமைநிலை வாழ்க்கைத்தரத்தோடு இயைந்திருக்கிறது. வாழ்க்கைத்தரம் உயரும்போது முதுமைக்கான உயிரியல் காரணியின் செயலாற்றல் தள்ளிப்போவதால் முதுமை காலந்தாழ்த்தி தலை தூக்குகிறது. முதுமையை நிர்ணயிப்பதில் வரம்புக்கோடாக 60 வயது அளவுகோலாக்கப்பட்டிருந்தாலும் வளர்ச்சியுற்ற நாடுகளில் 70–75 வயதினர் முதியவர்கள் என கருதப்படுகின்றனர்.

உலகம் முழுவதும் முதியவர்களின் எண்ணிக்கை வேகமாக உயர்ந்து வருகிறது. 1960–இல் உலக மக்கள் தொகையில் 7.8 சதவிகிதமாக இருந்த முதியோர் எண்ணிக்கை 1990–இல் 9.2 சதவிகிதமாகவும், 2002–இல் 12.6 சதவிகிதமாகவும் உயர்ந்துள்ளது. உலகப்போக்கிற்கு ஏற்ப இந்தியாவிலும் முதியோர் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டு வருகிறது. 1951–இல் இந்திய மொத்த மக்கள் தொகையில் முதியோர்களின் எண்ணிக்கை 5.66 சதவிகிதமாகவும், 1961–இல் 5.82 சதவிகிதமாகவும், 1971–இல் 5.97 சதவிகிதமாகவும், 1981–இல் 6.49 சதவிகிதமாகவும், 1991–இல் 6.76 சதவிகிதமாகவும், 2001–இல் 6.97 சதவிகிதமாகவும், 2009–இல் 8 சதவிகிதமாகவும் உயர்ந்துள்ளது. மொத்த மக்கள் தொகையின் வளர்ச்சியுடன் ஒப்பிடும்போது 60 வயதுக்கு மேற்பட்டவர்களின் எண்ணிக்கை இந்தியாவில் பிரமிக்கத்தக்க அளவு உயர்ந்துள்ளது. உலகளவில் 60 வயது தாண்டிய முதியோர்களின் எண்ணிக்கை 1950–இல் 200 மில்லியனாக இருந்தது 2000–இல் 550 மில்லியனாக உயர்ந்துள்ளது; 2025–ஆம் ஆண்டுவாக்கில் 1,200 மில்லியனாக உயரும் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. இந்தியாவில் 60 வயதுக்கு மேற்பட்டவர்களின் எண்ணிக்கை 1951–ல் 20 மில்லியனாகவும், 1991–ல் 57 மில்லியனாகவும்,

2001–ல் 80 மில்லியனாகவும் உயர்ந்துள்ளது; 2013–இல் இந்த எண்ணிக்கை 100 மில்லியனாகவும், 2030–இல் 198 மில்லியனாகவும், 2050–இல் 326 மில்லியனாகவும் உயரும் என மதிப்பிடப்பட்டுள்ளது.

இன்றைய மருத்துவ வசதி, விழிப்புணர்வு, சுகாதாரம், சத்தான உணவுகள் போன்றவை மனிதர்களின் வாழ்நாளை அதிகரித்து வருகிறது. முதியோரின் எண்ணிக்கையும் உலக அளவில் அதிகரித்து வருகிறது. முதியோர் எண்ணிக்கை அதிகரிப்பில் சீனாவுக்கு அடுத்தபடியாக இந்தியா இருக்கிறது. வளர்ந்த நாடுகளுடன் ஒப்பிடுகையில் இந்தியாவில் முதியோர்களின் சதவிகித எண்ணிக்கை குறைவு எனினும் முதியோர்களின் எண்ணிக்கை வளர்ச்சி விகிதம் அதிகரித்து வருகிறது. மற்ற நாடுகளைப் போலவே இந்தியாவிலும் முதியோர் இறப்புக்கான காரணிகள் கட்டுப்படுத்தப்பட்டிருப்பதன் விளைவாக ஆயுட்காலமும், எண்ணிக்கையும் அதிகரித்துள்ளது. இந்தியாவில் முதியோர்களின் இறப்பு விகிதத்தில் சரிவு ஏற்பட்டிருப்பதற்குச் சுகாதார, மருத்துவ, ஊட்டச்சத்து வசதிகள் முக்கிய காரணமாகும். ஆண்டுக்கு ஆண்டு இறப்பு விகிதம் குறைந்து கொண்டே வருவதால் முதியோர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது.

முதுமை கடந்த காலங்களில் ஒரு பிரச்சனையாக இல்லை; மாறாக, ஒரு சிறப்புத் தகுதியாக இருந்தது. அறிவு, அனுபவம் ஆகியவற்றின் உறைவிடமாக முதுமை கருதப்பட்டு அறிவுரையும், வழிகாட்டுதலும் தருபவர்களாக முதியவர்கள் போற்றப்பட்டனர். குடும்பத்தில் அவர்களுக்குப் போதிய கவனிப்பும் அக்கறையும் அளிக்கப்பட்டன. குடும்ப உறுப்பினர்கள் முதியவர்களைப் பேணுவதை கைம்மாறு எனவும் சமூக தார்மிகக் கடமை எனவும் கருதினர். தங்களைப் பெற்று வளர்த்துக் கல்வியும், பயிற்சியும் தந்து ஆளாக்கி தமது உழைப்பின் மூலமும், சிக்கனத்தின் மூலமும் சொத்துக்களையும், உடமைகளையும் உருவாக்கிப் பொருளாதாரப் பாதுகாப்பை ஏற்படுத்தித் தந்ததற்காகவும் குடும்ப உறுப்பினர்கள் அவர்களிடம் நன்றியுடன் நடந்து கொண்டனர். முதியவர்கள் குடும்பத்திற்கு ஒரு சுமையாக இல்லாமல் வாழ்வின் கடைசிக் காலம் வரை வீட்டிலும், வெளியிலும் வேலை செய்து குடும்பத்திற்குப் பொருளாதாரப் பங்களிப்பு செய்து பயனுள்ளவராக இருந்தனர். வயதான காலத்தில் வேலை எதுவும் செய்ய முடியாமல் நலிவுற்றுப் போனாலும் வீட்டைப் பார்த்துக் கொள்ளவும், குழந்தைகளைக் கவனித்துக் கொள்ளவும் செய்தனர். ஆனால் இன்று முதுமை ஒரு பிரச்சனையாக மாறியுள்ளது. அதனுடன் சம்பந்தப்பட்டதாக பொருளாதாரம், உளவியல், உடல் நலம், குடும்பம் மற்றும் சமூகப் பிரச்சனைகள் காணப்படுகின்றன.

## பொருளாதாரப் பிரச்சனைகள்

ஒருவர் முதுமை அடையும் போது மதிப்பிழந்து அவர் ஆற்றிவரும் பங்குபணி நிலைகளிலிருந்தும், ஈடுபட்டுள்ள நடவடிக்கைகளிலிருந்தும் ஒதுக்கப்படுகிறார். முதுமை தள்ளாமையையும், முடியாமையையும் குறிப்பதால், முதியவர்கள் தொடர்ந்து பணிபுரிய வலிமையும், ஆற்றலும் கொண்டிருந்தாலும் செய்துவரும் பணியிலிருந்து அவர்கள் விடுவிக்கப்படுகிறார்கள். வருமான இழப்பு ஏற்படுகிற இந்நிலையில் பொருளாதாரப் பாதுகாப்பின்மை உணர்வு அவர்களைப் பீடிக்கிறது. தமது ஒவ்வொரு தேவைக்கும் குடும்ப உறுப்பினர்களின் கையை எதிர்பார்த்து நிற்க வேண்டிய நிலைக்கு ஆளாகின்றனர். பொருளாதாரப் பற்றாக்குறை இருக்கும் குடும்பத்தில் ஒரு சுமையாகக் கருதப்பட்டு மோசமாக நடத்தப்படுகிறார்கள். நோய்வாய்ப்பட்டால் கவனிப்பாறின்றி, புறக்கணிக்கப்பட்டு, ஒதுக்கப்பட்டு, ஆதரவின்றிக் கைவிடப்படுகிறார்கள். எல்லாவற்றிற்கும் மேலாக யாருடைய ஆதரவில் வாழ்கிறார்களோ, அவர்களாலேயே வசவுக்கும், கொடுமைக்கும் உள்ளாக்கப்படுகிறார்கள்.

## உளவியல் பிரச்சனைகள்

வயதாகிவிட்ட காரணத்தால் பணியிலிருந்தும் செயலூக்க வாழ்விலிருந்தும் விடுவிக்கப்படும்போது, பரிச்சயமில்லாத புதியசூழ்நிலைக்கு அவர்கள் தள்ளப்படுகிறார்கள். அத்தகைய சூழலுக்கு அனுசரித்துப்போவது கடினமாக ஆகும்போது மன அழுத்தத்திற்கும், உளைச்சலுக்கும் ஆளாகிறார்கள்.

பாதுகாப்பின்மை உணர்வு: வருமானம் இல்லாத அல்லது குறைந்த வருமானமே உள்ளவர்களுக்கும், துணையேதுமின்றி தனிமையில் வாழ்கிற முதியவர்களுக்கும் பாதுகாப்பின்மை உணர்வு மேலோங்குகிறது. இதனால் அவர்கள் மற்றவர்களிடமிருந்து விலகியிருக்கவும் குழு வாழ்க்கையில் பங்கேற்கத் தயங்கவும் நேரிடுகிறது.

அனுசரித்துப்போக இயலாமை: மற்றவர்களுடன் அனுசரித்துப் போவது முதுமையில் பலருக்கும் சாத்தியமில்லாததாகிறது. முதியவர்களின் விழுமியங்கள் இளைய தலைமுறையினரின் விழுமியங்களுடன் ஒத்துப் போகாத நிலையில் பூசல் ஏற்படுகிறது. தலைமுறை இடைவெளியில் இயல்பாகவே ஏற்படும் இப்பூசல் முதியவர்களிடம் உணர்ச்சிப்பூர்வமான பாதிப்பை ஏற்படுத்துகிறது.

குடும்பம் தருகிற ஏமாற்றம்: தமது வாழ்நாளில் தாங்கள் சாதிக்க முடியாதவற்றை தங்கள் பிள்ளைகள் சாதிக்க வேண்டும் என்று முதியவர்கள் எதிர்பார்க்கிறார்கள். அவ்வாறு நிகழாத போது அவர்களுக்கு ஏமாற்றமும், வருத்தமும் ஏற்படுகிறது.

அதிகரிக்கும் வயது பற்றிய அச்சம்: வயதாவது என்பது இயற்கையான, தவிர்க்க முடியாத செயற்பாங்கு. இளமையில் ஒவ்வோராண்டாகத் தாண்டி வரும்போது ஏற்படாத கவலை 60 வயதைக் கடக்கும் போது ஏற்பட்டு மன அமைதியைப் பாதிக்கிறது. வயது ஆக ஆக உடல் நலம் கெட்டு, உடல்வலு குன்றி எதற்கும் தகுதியில்லாதவர்களாகப் போகக்கூடும் எனக் காரணமின்றி அஞ்சுகிறார்கள்.

சாவைக் கண்டு அச்சம்: சாவு பற்றிய அச்சமும் முதியோர்களைப் பீடித்து ஆட்டுகிறது. சாவின் கூப்பிடு தொலைவில் இருக்கிறோம் என்று தெரிந்தும், இயல்பாய் அதை ஏற்றுக் கொள்ள துணிவில்லாததால் அவர்களின் ஆளுமை நிலைகுலைகிறது.

தனிமையும், வாட்டமும்: ஒருவருக்குத் துணை ஏதும் இல்லாவிட்டால், அவரைத் தனிமை வாட்டும்; சோர்வு கவ்விக் கொள்ளும். முதியோரிடம் பாதுகாப்பின்மை உணர்வோடு தனிமையும் சேரும்போது அவர்களுடைய மனநிலையைப் பாதித்து உறுதியற்றவர்களாகச் செய்கிறது.

## உடல்நலப் பிரச்சனைகள்

வாழ்க்கையின் கடைசிக்கட்டமான முதுமையில் உடல் உறுப்புகள் பலவீனமடைந்து, அவற்றின் செயல்பாட்டில் தளர்ச்சி ஏற்படுவதன் விளைவாக முதியவர்களை நோய்கள் ஒன்று மாற்றி ஒன்றாகப் பீடிக்கின்றன. எல்லா வயதினரையும் தாக்கக்கூடிய நோய்கள் தவிர முதியவர்களை குறிவைத்துத் தாக்கும் மூப்பியல் நோய்களும் தாக்குகின்றன. மலச்சிக்கல், இரத்த அழுத்தம், மூட்டுவலி, எலும்பு மெலிவு, நீரிழிவு நோய், இருதய நோய்கள், நரம்பு மண்டலக் கோளாறுகள், மூச்சுமண்டலக் கோளாறுகள் முதலியன அத்தகைய மூப்பியல் நோய்கள் என மூப்பியல் மருத்துவ நிபுணர் வி.எஸ். நடராசன் கூறுகிறார். சுவை, முகர்வு, பார்வை, கேட்டல் முதலிய புலனுணர்வுத் திறன்கள் முதுமையில் குறையத் தொடங்குகின்றன. சுவையுணர்விலும், முகர்வு உணர்விலும் ஏற்படுகிற திறன்குறைவினால் உட்கொள்ளும் உணவின் அளவு

குறைகிறது; உணவு அளவு குறைவதனால் உடல்நலப் பிரச்சனைகள் ஏற்படுகின்றன.

## சமூகப் பிரச்சனைகள்

அதிகார உரிமை வீழ்ச்சி: மரபார்ந்த சமூகங்களில் முதியவர்கள் குடும்பத் தலைவராக உயர்ந்த நிலையில் இருப்பார்கள். குடும்ப விஷயங்களில் அவர்கள் எடுக்கிற தீர்மானங்களே இறுதி முடிவுகள். மற்றவர்கள் அவற்றை அப்படியே ஏற்றுக் கொள்வார்கள். ஆனால் முதுமை காரணமாக அவர்களுடைய பொருளாதார நிலையில் சரிவு ஏற்பட்டு பழைய அதிகார உரிமை மறுக்கப்பட்டவர்களாகவும், குடும்ப விஷயங்களைக் கையாளவும் உறுதியான முடிவுகள் எடுக்கவும் உடல் வலிமையோ, மன ஆற்றலோ இல்லாதவர்கள் என்று கருதப்படுவதாலும் அவர்கள் எதிலும் கலந்தாலோசிக்கப்படுவது இல்லை. குடும்பத்தில் முதியவர்கள் தாம் அனுபவித்து வந்த செல்வாக்கையும், அதிகார உரிமையையும் சிறிது சிறிதாக இழந்து கடைசியில் அவர்களுடைய பேச்சைக்கூட யாரும் காது கொடுத்துக் கேட்பதில்லை.

சுதந்திரம் இல்லாமை: முதியவர்களுக்குப் பணிப் பொறுப்புகள் இல்லாமல் போவதாலும், ஓய்வினால் அவர்களுக்கு ஏற்படுகிற அதிகார உரிமைச் சரிவினாலும், முதுமையினால் ஏற்படுகிற உடல் தளர்ச்சியினால் அவர்களால் தனித்து இயங்க முடியாமல் பிறரைச் சார்ந்து வாழ வேண்டியிருப்பதாலும் அவர்களுடைய நடவடிக்கைகள் குறைந்து வீட்டை வீட்டு வெளியில் செல்லக் கூடிய வாய்ப்புகள் சுருங்கிச் சுதந்திரம் மட்டுப்படுகிறது.

குடும்பத்தின் அலட்சியம்: முதியவர்களுக்கு மரியாதையும் கவனிப்பும் குறைந்து, புறக்கணிக்கப்பட்டு தனிமைப்படுத்தப்படுகிறார்கள். அவர்களுடைய அடிப்படையான தேவைகளும், அத்தியாவசியமான மருத்துவச் செலவுகளும் தண்டச் செலவு என்று கருதப்படுகிறது. கனிவு, தோழமை, பிரியம் இவற்றை எதிர்பார்க்கும் முதியவர்களைக் குடும்பத்தில் உள்ளவர்கள் தொந்தரவாக நினைக்கிறார்கள். அவர்களுடன் நெருங்கிப் பழகுவது கிடையாது. இவ்வாறான புறக்கணிப்பு அவர்களுடைய உணர்ச்சிகளைக் காயப்படுத்தி ஆளுமையை சிதைக்கிறது. உடல் ஊனமுற்று அல்லது கை, கால் செயலற்று இருக்கும் முதியவர்களிடமிருந்து குடும்பத்திற்குப் பொருளாதாரப் பங்களிப்பு இல்லாததாலும், அதற்கும் மேலாக அவர்களை வைத்து காப்பாற்றுவதற்கும், அவர்களின் உடல்

நலத்திற்கும் செலவு செய்ய வேண்டியிருப்பதாலும் குடும்பத்தினர் அவர்கள் மீது எரிச்சலடைகின்றனர்.

ஓய்வு நேரத்தைச் செலவிடுதலில் பிரச்சனை: வாழ்நாட்களின் பெரும் பகுதியை வெளியில் வேலைக்காகச் செலவழித்தவர்கள் இப்பொழுது முதுமை காரணமாக நாள் முழுவதும் வீட்டுக்குள்ளேயே முடங்கிக்கிடக்கும் நிலை ஏற்படுகிறது. என்ன செய்வது, எப்படிப் பொழுதைக் கழிப்பது என்று திண்டாடி, சிரமப்படுகின்றனர்.

## கூட்டுக் குடும்பச் சிதைவு

கூட்டுக் குடும்பமுறை சிதைந்து விட்டதால், தற்காலக் குழந்தைகளின் சிந்தனையோட்டமே மாறிப்போய் விட்டதாகத் தெரிவிக்கின்றன ஆய்வுகள். தங்கள் பெற்றோர்களை கண்ணுக்குள் வைத்துத் தாங்கும் பிள்ளைகள் இருக்கும் இதே உலகத்தில், அவர்களை வெளித்தள்ளி முதியோர் இல்லங்களுக்கு அனுப்பும் பிள்ளைகளும் இருக்கத்தான் செய்கிறார்கள். எப்போதும் முரண்பட்டு, பிடிவாதப் போக்குடனே நடந்து கொள்கிறார்கள் என்பது முதியவர்களைக் கைவிடுவோர் கூறும் பொதுவான குற்றச்சாட்டு. பொருளாதாரக் காரணங்களைக் கூறி தாய், தந்தையரைப் பிரித்து நீ ஆறு மாசம்; நான் ஆறு மாசம் என அலைக்கழிக்க விடுவோரும் உண்டு.

## இடப்பெயர்வு

குழந்தைகளின் படிப்புக்காக அல்லது வேலை மாற்றல் காரணமாக குடும்பத்தினர் நகர்ப்புறங்களுக்கு குடியேறும் நிலையில் நகர்ப்புறங்களில் நிலவும் வீட்டு வசதிப் பற்றாக்குறை, விலைவாசி உயர்வு முதலிய காரணங்களால் வயதானவர்களை ஊர்களிலேயே விட்டுவிட்டு பிறர் மட்டும் நகர்ப்புறங்களுக்குக் குடியேறுகிறார்கள். அத்துடன் 'பெரிசுகள்' தொல்லை இல்லாமல் தாங்கள் சுதந்திரமாக வாழ வேண்டும் என்ற நவீன கால மனப்பான்மையும் முதியவர்களை ஒதுக்க வைக்கிறது. வயதானவர்களிடமிருந்து குடும்பப் பராமரிப்புக்கு, தேவைக்கு எந்தவித பங்களிப்பும் வராத நிலையில், குடும்பத்திற்குச் சுமையாக இருக்கும் அவர்களைக் கழற்றி விடுவதே உகந்தது என்ற நோக்கிலும் முதியவர்களைக் கைகழுவுகின்றனர்.

# முதியோர் இல்லங்கள்

முதுமை... தோல் சுருங்கி, கண்கள் இடுங்கி, குரல் தளர்ந்து, கூன் சுமந்து என உடலும் மனமும் முதிர்ந்த நிலை அது. வயது முதிர்ந்த அந்திமக் காலத்தில் அலைக்கழிக்கும் உடல் நோய்கள்; வீட்டிலும் உறவுகளிடத்திலும் உதிர்ந்து போகும் முக்கியத்துவம்; தளர்ந்து போகும் உலகத்தின் மீதான பிடிப்பு; ஏற்படும் தனிமையும், மனச்சோர்வும் என முதியவர்களின் மன உணர்வுகளை இயல்பாகப் புரிந்துகொள்ளாமல் அரும்பாடுபட்டு வளர்த்த குழந்தைகள் வளர்ந்து ஆளானவுடன் பெற்றவர்களைப் பாரமெனக் கருதி, முதியோர் இல்லத்தில் தள்ளும் போக்கு ஆபத்தானது. உணவும், உறைவிடமும் கிடைத்துவிட்டாலும், உடல் நோவோடு போராடும் காலத்தில், கழிவிரக்கம் சூழ்ந்த தனிமையில் முதியோர் இல்லங்களில் ஒடுங்கும் மனிதர்களிடையே அன்பு துளிர்ப்பதில்லை. தோளிலும், மார்பிலும் தாலாட்டிய உறவுகளே பாராமுகம் காட்டுவதால் முதியவர்கள் வேதனைப்படுகின்றனர். அன்பாய் மடியில் தவழ்ந்து விளையாடிய குழந்தைகளே புறக்கணித்ததால், எஞ்சிய காலம் முழுவதும் ஆற்றாமையோடும் ஒருவிதத் தவிப்போடும் கழியும் தனிமையின் கொடுமையே அந்திமக் காலத்தை விரைவுபடுத்திவிடுகிறது.

"கருவறையில் இடம் தந்தேன்..!
உன் வீட்டில் நான் வசிக்க..
இல்லையா சிறு அறை!"

இது ஒரு கவிஞனின் ஹைக்கூ...! பெற்ற பிள்ளைகளால் அன்பாகப் பராமரிக்கப்படாமல், முதியோர் இல்லத்தில் தள்ளப்பட்ட அபலை மூதாட்டியின் ஆதங்கக் குரலாய் ஒலிக்கிறது இந்த புதுக் கவிதை...! பெற்றோரைப் பராமரிக்காமல் புறக்கணித்தால் 3 மாதம் சிறைத் தண்டனை என அரசு சட்டம் இயற்றியுள்ளது. ஆனால் தம்மைப் புறக்கணித்தாலும் தண்டிக்க விரும்பாத தாய், தந்தையரின் புத்திர பாசத்தால் தான் இதுவரை ஒரு சிலர் கூட இச்சட்டத்தின் கீழ் கைதாகாமல் தப்பித்து வருகிறார்கள். முற்பகல் செய்யின், பிற்பகல் விளையும் என்பது நியதி. பெற்றோர்களுக்கு இவர்கள் என்ன தண்டனையை அளித்தார்களோ பின்னாளில் அதே தண்டனையைத் தரத்தான் இவர்களது குழந்தைகள் வேகமாக வளர்ந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை மறந்து விடக்கூடாது.

மக்கள் தொகையில் முதியோர் ஒரு முக்கியமான, கணிசமான பிரிவாக இருப்பதனால் அவர்களுடைய நலன்களைப் பேணவும்,

தேவைகளை நிறைவேற்றவும், பிரச்சனைகளைத் தீர்க்கவும் அவசியம் ஏற்படுகிறது. பல நாடுகள் முதியவர்களைப் பேண சமூகச் செயல்திட்டங்களை வகுத்துள்ளன. இந்தியாவும் "முதியோருக்கான தேசிய செயல்திட்டத்தை" வகுத்துச் செயல்படுத்தி வருகிறது. முதியோர்களின் நலனைப் பேணுவது, அவர்கள் தங்களுடைய கடைசிக் காலத்தில் கௌரவமாகவும், அமைதியாகவும் வாழவும், பொருளாதாரப் பாதுகாப்பு கிடைக்கவும், ஆரோக்கியமான, நலமான வாழ்வு அமைந்திடவும், உறைவிடம் முதலிய தேவைகள் நிறைவேறவும், அவர்களை மற்றவர்கள் சுரண்டாமலும், கொடுமைப்படுத்தாமல் இருக்கவும், தம்முடைய திறமைகளை வெளிப்படுத்தவும், மேம்படுத்தவும் வாய்ப்பு வசதிகள் கிடைக்கவும், வாழ்க்கைத் தரம் உயரவும் தேவையான முயற்சிகளை மேற்கொள்வதும் இச்செயல் திட்டத்தின் குறிக்கோள்களில் அடங்கும்.

## அரசு மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள்

80 சதவிகித இந்தியர்கள் ஓய்வு காலத்திற்காகச் சேமித்து வைக்கும் அளவு பொருளாதார நிலையில் இல்லாததால், ஏழை முதியோர்களுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பு அளிக்கும் வகையில் வறுமைக்கோட்டிற்குக் கீழே வாழும் முதியோர்களுக்கு மாதாமாதம் ஓய்வூதியம் வழங்க வகை செய்ய வேண்டும். அரசுத்துறை மட்டுமின்றி, தனியார் துறையில் பணி புரிந்தவர்களுக்கும் ஓய்வூதியம் தர வேண்டும்.

ஓய்வூதியம், சேமிப்பு முதலியவற்றின் மூலம் முதியோர்களுக்கு கிடைக்கும் வருமானம் அவர்களது தேவைக்குப் போதுமானதாக இருக்காது என்பதால் அவர்களுடைய வருமானவரி தள்ளுபடி விகிதத்தை அதிகரிக்க வேண்டும். மருத்துவச் செலவுகளுக்கு வரியில் கழிவு தர வேண்டும்.

பிள்ளைகள் தங்களுடைய வயதான பெற்றோரை 'பொருளாதாரச் சுமை' என்று கருதுவதற்கு இடங்கொடுக்காத வகையில் வயதான பெற்றோர்களை வைத்துக் காப்பாற்றும் பிள்ளைகளுக்கு வரிச்சலுகை வழங்கப்பட வேண்டும்.

பணியிலிருந்து ஓய்வு பெற்றவர்கள் மீண்டும் வருமானம் தரக்கூடிய வேலைகளை நாடும்போது அவர்களுக்கு வேலை வாய்ப்பு அளிக்கும் நிறுவனங்களுக்கு ஊக்கம் தரும் வகையில் தகுந்த உதவி செய்யப்பட வேண்டும்.

முதியவர்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்க ஆலோசனை, வழி காட்டுதல், பயிற்சி முதலியன தருகிற நிறுவனங்களுக்கும் முதியவர்களுக்கு வருமானம் தரக்கூடிய நடவடிக்கைகளை அமைத்துக் கொடுத்து உதவிபுரிகிற தன்னார்வத் தொண்டு நிறுவனங்களுக்கும் ஊக்கம் அளிக்கப்பட வேண்டும்.

வசதியில்லாத முதியவர்கள் தங்கள் ஜீவனத்துக்காகத் தங்கள் பிள்ளைகளிடமிருந்து சட்ட ரீதியான ஆதரவைப் பெற நடைமுறைகள் எளிமைப்படுத்தப்பட வேண்டும்.

வயதான காலத்தில் நோய் நொடிகள் வருவதும், உடல் நலம் குன்றுவதும் இயற்கையே. வாழ்நாள் நீடிக்கவும், வழக்கம் போல் செயல்படவும் ஆரோக்கியப் பராமரிப்பு தேவைப்படுகிறது. வயது ஆக ஆக உடம்பின் மீது காட்டும் அக்கறையை முதியோர் விலக்கிக் கொள்வதால் நோய்கள் தொற்றிக் கொள்கின்றன. அவ்வப்போது பரிசோதனை செய்து தெரிந்துகொள்வதன் மூலமும், அவசியப்பட்டால் தேவையான மருத்துவ சிகிச்சையை மேற்கொள்வதன் மூலமும், உடற்பயிற்சி, உணவுக் கட்டுப்பாடு போன்றவை மூலமும் பிரச்சனைகள் இல்லாமல் நல்ல ஆரோக்கியமான உடல்நலத்துடன் வாழ உதவ வேண்டும்.

நீண்டநாள் நோய் வாய்ப்பட்டுக் குடும்பத்தினரால் நிராகரிக்கப்பட்ட முதியோர்களுக்கு மருத்துவ வசதிகள் அடங்கிய விடுதிகள் அரசின் உதவியுடன் அல்லது தொண்டு நிறுவனங்களின் மூலம் அமைத்துக் கொடுக்க வேண்டும்.

ஏழை எளிய முதியவர்களுக்கு இலவச மருத்துவச் சேவை அளிக்க முன்வரும் அறக்கட்டளைகள், அற நிலையங்கள், தன்னார்வத் தொண்டு நிறுவனங்கள் ஆகியவற்றிற்கு மானியம், வரிச்சலுகை, சலுகை விலையில் நிலம் முதலிய உதவிகள் வழங்க வேண்டும்.

அரசின் பொது மருத்துவமனைகளில் வயதான நோயாளிகள் மருத்துவச் சீட்டுக்காக, மருத்துவருக்காக, மருந்துக்காக நெடுநேரம் காத்திருக்க வேண்டியதையும் மருத்துவப் பரிசோதனைகளுக்காக பல இடங்களுக்கு அலைய வேண்டிய நிலைமையும் நீக்க வேண்டும். முதியோர்களுக்கென மூப்பியல் வார்டுகள் அமைக்க வேண்டும்.

முதியோர் நல சுகாதாரக் கல்வித் திட்டம் மேற்கொள்ளப்பட்டு அவர்களது ஜீரணிக்கும் சக்திக்கு ஏற்ற உணவு எது, அவர்கள் தவிர்க்க வேண்டிய உணவு எது, நோயற்ற வாழ்வு வாழ்வது எங்ஙனம் என்பது பற்றிய தகவல்களும் யோகா, தியானப்பயிற்சி, உடற்பயிற்சி, பொழுது போக்கு, விளையாட்டுக்கள் முதலியவற்றின் முக்கியத்துவமும் அக்கல்வியின் மூலம் வழங்க வேண்டும்.

ஆதரவற்ற முதியோர்களுக்காக இல்லங்கள் தொடங்கும் தொண்டு நிறுவனங்களுக்கு நிதியுதவியும், பராமரிப்பு மானியமும் வழங்க வேண்டும். முதியவர்கள் வைத்துள்ள சொத்து, பணம், சேமிப்பு போன்றவை அவர்களிடமிருந்து பலவிதங்களில் பறிக்கப்படுகிறது. தர மறுக்கிற முதியவர்கள் மீது வன்கொடுமை இழைக்கப்படுகிறது. வஞ்சிக்கப்பட்டும், வதைக்கப்பட்டும் பலவித இன்னல்களுக்கு ஆளாகிறார்கள்.

மனையக வன்கொடுமைகளிலிருந்து மீட்கவும், குடும்பங்களில் அவர்களுடைய உயிருக்கும், உடைமைக்கும் பாதுகாப்புக் கிடைக்கவும் 'இந்தியன் பீனல் கோடு' சட்டத்தில் தனியாக சட்டப்பிரிவுகள் ஏற்படுத்த வேண்டும்.

“பெற்றோர் மற்றும் மூத்த குடிமக்கள் பராமரித்தல் நலச் சட்டத்தின்படி” பெற்றவர்களைப் பிள்ளைகள் பராமரிக்கவில்லை என்றால் அவர்களின் மீது பெற்றோர்கள் வழக்கு தொடுக்கலாம். தனக்கு குழந்தைகள் இல்லாவிட்டாலும் தன்னுடைய சொத்துக்களை யார் அனுபவிக்கப் போகிறார்களோ அவர்கள் மீது புகார் தெரிவிக்கலாம். ஆனால் பொதுவாகச் சொத்து உள்ளிட்ட சிவில் வழக்குகளில் தீர்ப்பு வருவதற்கு ஆண்டுக் கணக்கில் ஆகும் என்பதால் இத்தகைய வழக்குகளை 90 நாட்களுக்குள் விரைந்து முடிக்க வகை செய்ய வேண்டும்.

முதியோர்களுக்கு அடையாள அட்டை வழங்குதல், எல்லா வகையான பயணங்களுக்கும் கட்டணச் சலுகை அளித்தல், பேருந்துகளில் சுலபமாக ஏறவும் இறங்கவும் வசதி செய்து கொடுத்தல் போன்ற பயனுள்ள நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ள வேண்டும்.

# பாலினச் சிறுபான்மையினருக்கு எதிரான பாகுபாடு

பாலினச் சிறுபான்மையினர் என்ற வகைப்பாட்டில் ஓரினச் சேர்க்கையாளர்கள், ஈரினச் சேர்க்கையாளர்கள், பாலின மாற்றுச் சிகிச்சை மேற்கொண்டோர், கலப்புப் பாலினத்தினர், மாற்று பாலினத்தவராக தம்மை அடையாளப்படுத்திக் கொள்வோர் போன்றோர் அடங்குவர்.

ஆண், பெண் என்ற இரு பாலினத்தை மட்டும் அங்கீகரித்துள்ள சமூக மற்றும் சட்ட நடைமுறைகளால் இவ்விரு பாலினத்திற்குள் அடங்காத, அடக்க இயலாத மற்றும் சேர விருப்பம் இல்லாத இத்தகைய பாலினச் சிறுபான்மையினர் பல்வேறு பிரச்சனைகளுக்கும், சிக்கல்களுக்கும், பாகுபாட்டிற்கும், வெறுப்பிற்கும், வன்முறைக் கொடுமைகளுக்கும் உள்ளாக்கப்படுகிறார்கள். எண்ணிக்கையில் குறைவாகக் காணப்படும் பாலின சிறுபான்மையினர் பெரும்பான்மை சமூகத்தின் கேலிக்கும் கிண்டலுக்கும், ஏச்சுக்கும் பேச்சுக்கும், ஏளனத்திற்கும் கண்டனத்திற்கும், நகைப்பிற்கும் பழிக்கும், வெறுப்பிற்கும் பகைக்கும் உள்ளாகிறார்கள். உதாசீனப்படுத்துதல், புறக்கணித்து ஒதுக்கி வைக்கப்படுதல், தனிமைப்படுத்தப்படுதல் ஆகியவற்றுடன் ஆபாசமாகவும் அருவருப்பாகவும் கருதப்பட்டு, இழிநிலையாளர்களாக நடத்தப்பட்டு, வன்முறைக்கு இலக்காகப்படுவர்களாக பாலினச் சிறுபான்மையினரின் வாழ்க்கை நகர்கிறது.

சமூகத்தின் மிகப் பெரும்பாலான மக்கள் ஆண், பெண் என்ற இரு மாறுபட்ட தெளிவான பாலினங்களில் அடையாளம் காணப்படுவதால் தங்களைப் போன்று உருவ அமைப்பிலும், நடை, உடை, பாவனைகளிலும், பாலின விருப்பத்தேர்வு மற்றும் பாலினச் சேர்க்கையில் இல்லாத இவர்களை மாறுபடுத்திப் பார்க்கும் கண்ணோட்டத்தின் காரணமாக அந்நியப்படுத்து கின்றனர்.

ஆண்–பெண் இடையேயான உறவும், சேர்க்கையும் மட்டுமே இயற்கையானது என ஏற்றுக் கொண்டிருக்கும் சமூகத்தின் பொதுப் புத்தி, பாலினச் சிறுபான்மையினரை இயற்கைக்கு மாறான உறவும், சேர்க்கையும் கொண்டிருப்பவர்களாகக் காண்பதால் அவர்களை வெறுக்கிறது. மனித குலத்தின் முக்கியக் கடமைப் பொறுப்பான சந்ததிப் பெருக்கத்தை மையமாகக் கொண்டுள்ள ஆண்–பெண் உடலுறவுக்கு இவர்களால் பங்கம் நேர்ந்து விடுமோ என அஞ்சி பாலினச் சிறுபான்மையினரைக்

கண்டனத்திற்கு உள்ளாக்கியும், தண்டித்தும் தமது மேலாதிக்கத்தைத் தொடர்ந்து பெரும்பான்மைச் சமூகம் நிலை நிறுத்துகிறது.

இயற்கைக்கு மாறான உடல் ரீதியிலான உறவு கொள்வோரைத் தண்டிக்கக் கடுமையான சட்டங்கள் நிறைவேற்றப்பட்டுள்ளன. இந்திய தண்டனைச் சட்டம் 1857 (பிரிவு 377), இந்திய ராணுவ சட்டம், இந்திய காவல் சட்டம் ஆகியன இங்கு நினைவு கூறத்தக்கவை. சமூகத்தின் மிகப்பெரும்பாலான மக்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறைப்படுத்தப்படுகின்ற – கருத்தரிப்பை மையமாகக் கொண்ட – ஆண்–பெண் உடலுறவைப் போற்றுவதற்கும், காப்பாற்றுவதற்கும் இத்தகைய சட்டங்கள் உதவுகின்றன. கருத்தரிப்பை மையப்படுத்தாத 'இயற்கைக்கு மாறான' உடலுறவைத் தடை செய்து தண்டனைக்குள்ளாக்கும் இச்சட்டங்கள் தனி மனிதனின் பாலினத்தெரிவு விருப்பத்தையும் செயல்பாடுகளையும் முடக்குகின்றன. தங்களது பாலின சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தவும், அடக்குமுறைக்கு உட்படுத்தவும், பாகுபடுத்தவும், பழிக்கவும் துணை செய்யும் இத்தகைய சட்டங்களை நீக்க வேண்டும் என்ற கோரிக்கை சமீப காலமாக வலுப்பெற்று வருவது கவனிக்கத்தக்கது.

ஒரு நாட்டின் குடிமகன்கள் என்பதற்கு ஆதாரமாகவும் அடையாளமாகவும் இருக்கும் குடிமை ஆவணங்களான வாக்குரிமை அட்டை, பொதுவிநியோகத் துறையின் உணவுப்பொருள் வழங்கல் பிரிவினர் வழங்கும் அடையாள அட்டை, கடவுச் சீட்டு போன்றவற்றில் ஆண்–பெண் இரு பாலினம் சாராத 'பாலினக்குறைபாடு உடையோர்' அடையாளப்படுத்தப்படுவது இல்லை. இதனால் குடியுரிமைக்குத் தகுதியற்ற நிலையில் பிறந்த மண்ணிலேயே அந்நியமாகிப் போகும் அவலம் திருநங்கைகளுக்கும், பாலினக்குறைபாடு உள்ளவர்களுக்கும் ஏற்படுகிறது.

மனித உரிமைகள் சாசனத்தின் அடிப்படை மாண்பான சுதந்திரம் தங்களுக்கு மறுக்கப்படுவதாக ஓரினச் சேர்க்கையாளர்களும், ஈரினச் சேர்க்கையாளர்களும் பேரணிகளும், ஆர்ப்பாட்டங்களும் நடத்தித் தங்களது கண்டனங்களை வெளிப்படுத்துகிறார்கள்.

பாலினச் சிறுபான்மையினர் தமது இருப்பையும் செயல்பாடுகளையும் வெளி உலகத்திற்குத் தெரியாமல் மறைத்து, அஞ்சி அஞ்சி வாழ நேரிடுகிறது. வெளிப்படையாகத் தம்மை அடையாளப்படுத்திக் கொள்ளவோ, அறிவித்துக் கொள்ளவோ இயலாத நிலையைச் சட்டங்களும்

சமூக வெறுப்பும் உருவாக்கியுள்ளன. தமது பணியாளர்கள் தகாத பாலின சேர்க்கை உள்ளவர்கள் என்று தெரிந்த மாத்திரத்திலேயே அவர்களை வேலையில் இருந்து நீக்க நிர்வாகங்கள் தயாராக உள்ளன. காவல்துறை, ராணுவம் உட்பட்ட முக்கியத் துறைகளில் இவர்களைச் சேர்த்து கொள்வதில்லை என இந்தியா உட்பட பெரும்பாலான நாடுகள் கொள்கையாகவே பின்பற்றி வருகின்றன. வேலை வாய்ப்புகள் மறுக்கப்படுவது ஒரு புறம், வேலையில் இருந்து நீக்கப்படுவது மறுபுறம் என்ற பாதகமான வாழ்க்கைச் சூழலால் இவர்கள் பாதிக்கப்படுகின்றனர்.

ஒரினச் சேர்க்கையாளர்கள் மற்றும் பாலினம் மாறியோர் திருமணம் செய்து கொள்ளச் சட்டம் அனுமதி மறுக்கிறது. குழந்தையைத் தத்தெடுத்து வளர்ப்பதற்கும் இவர்களுக்கு அனுமதி இல்லை. சட்டப்படி அங்கீகரிக்கப்படாத வாழ்க்கை உறவினால் குடும்பம் என்பது இவர்களுக்கு சாத்தியப்படுவதில்லை. குழந்தை பெற்றுக் கொள்ள இயலாத நிலையில், குழந்தையைத் தத்தெடுத்து வளர்ப்பதற்கான உரிமையும் மறுக்கப்பட்டவர்களாகவும் கணவன்–மனைவி என்ற சட்டப்பூர்வமான அங்கீகாரம் இல்லாத குடும்ப உறவுக்குள் முடங்க வேண்டிய பரிதாபமான நிலைக்கும் ஆளாக்கப்படுகிறார்கள்.

ஹார்மோன் சமநிலை உற்பத்திக் குறைபாடுகளாலும், க்ரோமோசோம் உயிரணுக்களின் விநோதமான வீபரீத சேர்க்கையாலும், தாம் பிறந்த பாலினத்திலேயே தொடர முடியாத நிலையில் மாற்றுப் பாலினத்தின் தன்மைகளைப் பெறும் திருநங்கையர் (அரவாணிகள்), அலிகள், இரு பாலின அடையாளம் கொண்டோர் போன்றோரின் வாழ்க்கை மேலும் அவலமாகிறது. சமூகத்திற்கும், சொந்த பந்தங்களுக்கும், அக்கம் பக்கத்தினருக்கும், மான அவமானத்திற்கும் பயந்து குடும்பத்தினர் இவர்களை வீட்டை விட்டு வெளியேற்றுவதால் தங்குவதற்கு வீடு வாசல் அற்று, பிழைப்பிற்கு வழியின்றி, உடலுக்கும் உயிருக்கும் பாதுகாப்பில்லாமல் அனாதையாக நடுத்தெருவில் நிர்க்கதியாக நிற்கும் இவர்களுக்கு ஆதரவுக் கரம் நீட்டும் ஒத்த குழுவுடன் தங்களை இணைத்துக் கொள்கிறார்கள். பிச்சை எடுத்தல் மற்றும் விபச்சாரம் மூலமாக தங்கள் வயிற்றுப் பிழைப்பை நடத்துகின்றனர். அடையாளம் இழந்த, சுயம் திரிந்த இழி நிலையில் தமது ஆளுமையை முற்றிலுமாக மாற்றிக் கொள்கின்றனர்.

பிறப்பில் ஆணாகப் பிறந்து காலப்போக்கில் பெண் தன்மை மிக்கவர்களாக மாறும் திருநங்கையரும், அலிகளும் முழுமையான பெண்களாக மாற முடிவதில்லை. பாலின மாற்று அறுவை சிகிச்சையின்

மூலம் பெண்ணாக மாற்றிக் கொள்ள விழையும் இவர்களது விருப்பத்திற்கு அத்தகைய அறுவை சிகிச்சையை மருத்துவர்கள் செய்யக் கூடாது என்ற இந்திய மருத்துவக் கழகத்தின் கட்டுப்பாடு தடையாக உள்ளது. பாலின மாற்று அறுவை சிகிச்சையை நிகழ்த்தும் மருத்துவர்கள் தமது மருத்துவத் தொழில் அங்கீகாரத்தை இழக்க நேரிடும் என்பதால் மறுத்துவிடும் நிலையில், உயிரிழப்பு நேரக்கூடிய அபாயத்தையும் பொருட்படுத்தாது மருத்துவரல்லாதவரிடம் ஆணுறுப்பை அகற்றச் செய்து திருநங்கையர்களாக மாறுகிறார்கள். ஆணாகவும் இல்லாமல், பெண்ணாகவும் இல்லாமல் இருக்கும் இவர்கள் மூன்றாம் பாலினமாக தம்மை அங்கீகரிக்க வேண்டும் என போராடுகின்றனர்.

ஆண், பெண் என்ற இரு பாலினத்தையும் சாராதவர்கள் என்ற காரணத்தினால் இவர்களுக்கு குடிமை அடையாள அட்டை மறுக்கப்படுகிறது. குடிமை அடையாள அட்டை இல்லாததால் வாக்குரிமை முதல் வங்கிக் கணக்கு துவக்குதல், ஓட்டுநர் உரிமம் பெறுதல், நியாய விலைக் கடைகளில் பொருட்கள் பெறுதல், கடவுச் சீட்டு பெறுதல் உட்பட பல்வேறு உரிமைகளையும், சலுகைகளையும் பெற முடியாதவர்களாக உள்ளனர்.

இந்தியாவிலேயே முதன் முதலாக தமிழ்நாட்டில் "திருநங்கையர் நல வாரியம்" அமைக்கப்பட்டு அடையாள அட்டை, சுய தொழில் செய்ய கடன் வசதி, இலவச வீட்டு மனை பட்டா உள்ளிட்ட நலத்திட்டங்களை 2008ஆம் ஆண்டு முதல் தமிழக அரசு நடைமுறைப்படுத்தி வருவது குறிப்பிடத்தக்கது.

## ஓரினச் சேர்க்கையாளர்கள்

இளம் வயதில், முறையான பாலியல் கல்வி பெறாத நிலையில், தங்கள் பாலினரிடம் கவர்ச்சி கொண்டு சந்தர்ப்ப சூழ்நிலையால் தன்னை இழந்து விடுவதும், இளம் வயதில் புரியாமல் ஏற்பட்டுவிட்ட தன்பாலினத் தொடர்பில் மீண்டும் மீண்டும் ஈடுபட்டு தனக்குத் தானே அழிவைத் தேடிக் கொள்கின்றனர். குடிப்பழக்கம், புகைபிடித்தல், போதைப் பொருட்களுக்கு அடிமையாதல், சுய மதிப்பிழத்தல், சமூக இழுக்குக்கு ஆளாதல், தனிமைபடுத்தப்படுதல், மன அழுத்தம் ஏற்படுதல், தற்கொலைச் சிந்தனைகள், சுய பச்சாதாபம், பாலியல் தொற்று நோய்களுக்கு ஆளாகுதல் போன்றவற்றால் அவர்களின் சீரழிவு விரைவுபடுகிறது.

ஓரினச் சேர்க்கையில் ஈடுபடுகின்றவர்கள் தாம் செய்வது கேவலமான, அருவருக்கத்தக்க, வெறுக்கத்தக்க, சமூகத்தால் நிராகரிக்கப்பட்ட செயல் என்ற நிலையைக் கடந்து இவை எல்லாம் தமக்கு சம்பந்தமில்லாதவைகளாகப் பாவித்து மறுதலிக்கும் மனப்பான்மைக்கு ஆளாகி எதிர்மறை வாழ்க்கைக் கோட்பாட்டுக்கு தங்களை உட்படுத்திக்கொள்கிறார்கள்.

இந்திய தண்டனைச் சட்டம் (1957) பிரிவு 377, "இயற்கைக்கு மாறான உடலுறவு" கொள்வோருக்கு அதிகபட்சமாக பத்தாண்டு சிறைத்தண்டனை வழங்க வகை செய்கிறது. இதை எதிர்த்துத் தொடரப்பட்ட வழக்கில் டெல்லி உயர்நீதிமன்றம் இச்சட்டப் பிரிவு செல்லாது என 2009இல் அளித்த தீர்ப்பு நாடு முழுவதிலும் விவாதங்களை தோற்றுவித்துள்ளது என்பது கவனிக்கத்தக்கது. சமீப காலமாக பல்வேறு நாடுகள் ஒரே பாலினத்தவருக்கிடையேயான திருமணத்தை அங்கீகரித்து வருவதும், ஓரினச் சேர்க்கையை சட்டத்திற்குப் புறம்பானது என்பதை ரத்து செய்து வருவதும் இந்தியாவில் பாலின சிறுபான்மையினர் உரிமைப் போராட்டத்திற்கு உத்வேகத்தை அளித்துள்ளது.

**References**


Devi, Shakuntala. World of Homosexuals. (New Delhi: Vikas Publication, 1977).

Foucault, Michel. The History of sexuality: An Introduction. Vol.I, (London: Allen Lane, 1979).

Joseph, Sherry, Social Work Practice and Men Who Have Sex With Men. (New Delhi: Sage Publications, 2005).

Joseph, Sherry.. 'Gay and Lesbian Movement in India', *Economic and Political Weekly*, 31 (33), 1996.

Kala, Arvind. Invisible Minority: The Unknown World of the Indian Homosexual. (New Delhi: Dynamic Books, 1992).

Nanda, Serena, Neither Man Nor Woman: The Hijras of India. (Belmont, CA: Wadsworth Publishing Company, 1990).

PUCL.2001. Human Rights Violations Against Sexuality Minorities in India – A PUCL-K Fact-Finding Report About Bangalore: Peoples Union for Civil Liberties.

Rege, Sharmila (ed.,) Sociology of Gender. (New Delhi: Sage Publications, 2003).

Vanita, Ruth and Kidwai, Saleem. Same-Sex Love in India: Readings from Literature and History. (New York: St.Martin's Press, 2000).

# தாழ்த்தப்பட்டோருக்கு எதிரான குடியுரிமை மீறல்கள்

இந்திய அரசியல் சாசனம் தாழ்த்தப்பட்ட மக்களை 'அட்டவணைச் சாதியினர்' என வகைப்படுத்தியுள்ளது. தற்போது பரவலாகப் பயன்படுத்தப்படும் 'தலித்' என்ற சொல் 'தல்' என்ற சமஸ்கிருத மொழியிலிருந்து பெறப்பட்டது. அதற்கு "நொறுக்கப்பட்ட, உடைக்கப்பட்ட, சிதறடிக்கப்பட்ட, சிதைக்கப்பட்ட" என்று பொருள். நொறுக்கப்பட்ட மக்களின் முன்னேற்றத்தைக் குறிக்கும் வகையில் 'தலித்' என்ற சொல்லை, ஜோதிராவ் புலே (1827–1890) முதலில் பயன்படுத்தினார். தனது குருவான புலே பயன்படுத்திய அச்சொல்லை அம்பேத்கர் ஒடுக்கப்பட்ட மக்களைக் குறிப்பதற்காகப் பயன்படுத்தத் தொடங்கினார். தொடக்கத்தில் மராட்டிய மாநிலத்தில் தாழ்த்தப்பட்ட மஹார் சமூகத்தை மட்டுமே இச்சொல் குறித்தாலும், பின்னால் இந்தியாவிலுள்ள அனைத்துத் தாழ்த்தப்பட்ட மக்களையும் குறிக்கப் பயன்படுத்தப்படும் சொல்லாக இருக்கிறது.

இன்று தாழ்த்தப்பட்ட மக்கள் இட ஒதுக்கீடுக் கொள்கையின் காரணமாக கல்வி வாய்ப்பு பெற்றிருப்பதும், தொழில் நுட்பத்திறன் பெற்றிருப்பதும், அரசாங்கப் பணிகளில் ஈடுபட்டிருப்பதும் தலித் சமுதாயத்தினரின் பொருளாதார, சமூகத் தகுதிகளை ஒப்பீட்டளவில் உயர்த்தியுள்ளன. படிப்பினைகள், அனுபவங்கள், அறிவாற்றல்கள் ஆகியவை காரணமாக பழைய பழக்கங்களை ஏற்று வாழும் மனோபாவம் இன்று வேகமாக மாறி வருகிறது. இறுக்கமான வாழ்க்கை இன்று ஓரளவுக்கு இளகத் தொடங்கியுள்ளது.

சாதி, அடிப்படையிலேயே மற்றொரு மனிதனின் மீது ஆதிக்கம் செலுத்தும் பண்பினைப் பெற்றுள்ளது. பிறப்பினால் உருவாகும் சாதித்தகுதியை மாற்றிக் கொள்ள வழி ஏதும் இல்லை. சாதிய ரீதியிலான இழிவு மனித மாண்பினையும், உயர் பண்புகளையும் புறந்தள்ளிவிடுகிறது. சாதி மேலாதிக்கம் சகோதர, சமத்துவ உணர்வுக்கு எதிரானது. அது வன்முறையை எப்போதும் தன்னிடத்தில் கொண்டுள்ளது. அனைத்து மக்களும் சமமானவர்கள் என்பதை ஏற்றுக் கொள்ள மறுக்கிறது. ஒடுக்கப்பட்ட மக்களின் உணர்வைக் காயப்படுத்தவும், இழிவு படுத்தவும் அது இடைவிடாது முயல்கிறது.

ஜனநாயகம், சமூக நீதி, சமதர்மம் போன்ற மதிப்பீடுகளை இந்திய அரசியல் சாசனமும், மனித உரிமைப் பாதுகாப்புச் சட்டங்களும் உயர்த்திப்

பிடித்தாலும், இந்தியாவில் பெரும்பாலான பகுதிகளில் சாதியப் படிநிலை முற்றிலுமாக உடைய மறுக்கிறது. அதிகாரத்திலும், ஆளுகையிலும் அனைத்துப் பிரிவினருக்கும் பங்கேற்பு, சம வாய்ப்பு, உரிய பிரதிநிதித்துவம் எனப் பிரகடனப்படுத்தப்பட்டாலும் நடைமுறையில் தலித்துகளுக்கு எதிரான உரிமை மறுப்பும், மறுதலிப்புகளும், சில வேலைகளில் கொடூரமான தாக்குதல்களும் தொடரவே செய்கின்றன.

சாதியக் கட்டமைப்பில் கீழான நிலையில் தள்ளப்பட்ட தலித்துகள் இன்றும் எதிர்கொள்ள நேருகின்ற தீண்டாமைக் கொடுமைகள் ஏராளம். சாதியப் பாகுபாடுகளால் புறக்கணிக்கப்பட்டு, இழிவுபடுத்தப்பட்டு இரண்டாந்தரக் குடிமக்களாகக் கருதப்படுகின்றனர். இழைக்கப்படும் தீண்டாமைக் கொடுமைகளின் தன்மையும், பரிமாணங்களும் இடத்திற்கு இடம், சூழலுக்குச் சூழல் மாறுபட்டாலும், அடிப்படையில் இவை அனைத்தும் ஆதிக்க சாதிய உணர்வின் வெளிப்பாடுகளாக அமைந்தவை. தலித்துகள் ஆதிக்க சாதியினரின் அச்சுறுத்தலுக்கு ஆளாவதும், அவமானப்படுவதும் வரலாற்றில் வழிநெடுக பதிவு செய்யப்பட்டுள்ளன. பல்முனைத் தாக்குதல்களுக்கு உள்ளாகி, வாழ்வுரிமை இழந்து, வாழ்வாதார உரிமைகள் மறுக்கப்பட்ட நிலையில் வாழ்கின்றனர்.

கோட்பாட்டிலும் நடைமுறையிலும் சிக்கலான சாதியக் கட்டமைப்பு ஒரு பன்மப் படிநிலையிலான சமத்துவமற்ற அமைப்பாகும். "தூய்மை, தீட்டு" என்ற இரு கருத்துக்களை மையப்படுத்தி மேல்நிலைப் படியில் இருக்கும் பிராமணர்கள் "மிகவும் சுத்தமானவர்களாகவும்", கடைநிலைப்படியில் வைக்கப் பட்டிருக்கும் தீண்டத்தகாதோர் "தீட்டுப்பட்டவர்களாகவும்" பார்க்கப் பட்டனர். நான்கு வர்ண வட்டத்திற்கு வெளியேயும், சாதிய வளையத்திற்கு வெளியேயும் 'தீட்டுப்பட்டவர்கள்' வைக்கப்பட்டனர். தீண்டாமையின் வேர் சாதிய அமைப்பில் உள்ளது. தீண்டாமை என்பது மறைமுகமான ஒரு அடிமைமுறை.

தலித்துகளுக்கு எதிரான அத்துமீறல்களும் அடக்குமுறைகளும் தொடர்ந்து வருவதை வரலாற்று நிகழ்வுகள் எடுத்துக்காட்டுகின்றன. அதை எதிர்த்து 1920 முதலே இந்தியாவெங்கும் "கல்வி, குடியுரிமைகள், பொதுக் கிணறுகளைப் பயன்படுத்துதல், கோயில்களில் நுழைவதற்கான அனுமதி, இன்ன பிறவற்றுக்கான போராட்டங்கள் நகர்ப்புறங்களில் நடந்தன" என்று கெய்ல் ஓம்வெட் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கது. 1955 முதல் பதிவு செய்யப்பட்டுள்ள உரிமை மீறல்கள் மற்றும் தீண்டாமைக் குற்றங்களின் எண்ணிக்கையை அலசினால் ஒவ்வொரு ஆண்டும் இக்குற்றங்களின்

எண்ணிக்கை அதிகரித்து வருவதைக் காணலாம். இந்த உரிமை மீறல் வழக்குகளில் கிணறு, குளம் போன்ற பொது நீர் நிலைகளைப் பயன்படுத்தியதற்காகவும், கோயில்கள், தேநீர்க் கடைகள், உணவு விடுதிகள் போன்றவற்றில் நுழைந்ததற்காகவும், பொதுப் பாதைகள், சாலைகள் போன்றவற்றைப் பயன்படுத்தியதற்காகவும் தலித்துகள் மீது தொடுக்கப்பட்ட தாக்குதல்கள் அல்லது வன்கொடுமைகளுக்காகப் பதியப்பட்ட வழக்குகள் ஆகும்.

இந்திய அரசியல் சாசனப் பிரிவு 21 இந்தியாவில் வசிக்கும் அனைத்து குடிமக்களுக்கும் வழங்கியுள்ள வாழ்வதற்கான உரிமையும், உயிர்ப் பாதுகாப்பும், தனி நபர் சுதந்திரமும் தலித்துகளுக்கு இன்னும் உறுதிப்படுத்தப்படாமல் உள்ளன. தங்கள் மீது திணிக்கப்பட்ட தீண்டாமைக் கொடுமைகளை எதிர்த்துக் குரல் கொடுக்கும்போதும், சமூக, அரசியல், பண்பாட்டுத் தளங்களில் தங்களுக்கான அடிப்படை உரிமைகளைக் கோரிப் போராட்டங்களைத் தொடங்கும்போதும், தலித்துகள் ஆதிக்க சாதியினரால் மிரட்டி அடக்கப்படுகின்றனர்.

வறுமையும் அறியாமையும் பிற சாதியினரை விட தலித்துகள் மத்தியில் அதிகமாக நிலவுகிறது. ஏழை தலித்துகள் தலைமுறை தலைமுறையாக நிலமற்று இருப்பதால் அவர்கள் தொழிலுக்கும், இருத்தலுக்கும் ஆதிக்க சாதியினரின் தயவை நாடியே இருக்க வேண்டியுள்ளது. நிலமில்லா கூலி வேளாண் தொழிலாளர்களாக பெரும்பாலான தலித்துகள் பிழைப்பை நடத்துகிறார்கள். காலங்காலமாக செய்து வந்த சாதிய வேலைகளான இழவுச் செய்தியை சொல்லி வரவும், இறந்த கால்நடைகளை அகற்றவும், சவக் குழிதோண்டவும், இறுதிச் சடங்கிற்கு மேளம் அடிக்கவும், ஊர் திருவிழாவிற்கு கூலி இல்லாமல் வேலை செய்யவும் நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள்.

பெண்கள் என்ற முறையிலும், தலித் என்ற முறையிலும் தலித் பெண்கள் கூடுதலான பாதிப்பிற்குள்ளாகிறார்கள். சாதிய மோதல்களின் போதும், சாதிய ஆதிக்கத்திற்கெதிராக தலித்துகள் குரல் கொடுக்கும் போதும் தலித் பெண்கள் தாக்குதல்களுக்கும், பாலியல் வன்முறைக்கும் உள்ளாகின்றனர். தலித் பெண்கள் மீதான பாலியல் வன்கொடுமை புரிவதன் மூலம் தலித் சமூகத்தை அடக்கி, ஒடுக்குவதாக ஆதிக்க சாதியினர் கருதுகின்றனர். எனவே தலித்துகளுக்கெதிரான பழிவாங்கும் நடவடிக்கையின் போதெல்லாம் மேல்சாதியினரின் இலக்காக தலித் பெண்களே இருக்கிறார்கள்.

தெருக்கூட்டுதல், மலம் அள்ளுதல், கழிவறைகளைச் சுத்தம் செய்தல் போன்ற சுகாதாரக் கேடான இழிவான வேலைகளையும் தலித் பெண்களே செய்கின்றனர். படிப்பறிவின்மையால் வேறு வேலையிலும் சேர முடியாமல் வறுமைச் சூழலுக்குள் சிக்கியும், பாலியல் கொடுமைக்கு உள்ளாகியும் தலித் பெண்கள் இழிநிலைக்குத் தள்ளப்படுகின்றனர். தன் குடும்பத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக நாளும் பொழுதும் போராட்டத்தில் தத்தளிக்கும் தலித் பெண்கள், தங்கள் ஆளுமைத் திறன்களை வளர்க்கவோ, கற்கவோ, வெளி விவகாரங்களைத் தெரிந்து கொள்ளவோ முடியாமல் தங்கள் கட்டுகளைக் கடந்து பொது வாழ்வில் பங்கேற்பது சாத்தியமில்லாமல் போகிறது.

சாதியமும் தீண்டாமையும் இன்றும் பல வடிவங்களில் நேரடியாகவும், முறைமுகமாகவும் வெளிப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட சமூகத்தினரை ஒதுக்கி வைத்து, தீட்டுப்பட்டவர்களாக, தீண்டத்தகாதவர்களாகப் பார்ப்பதும் உரிமைகளை மறுப்பதும், மறுதலிப்பதும், வாய்ப்புகளை வழங்க மறுப்பதும் இதன் வெளிப்பாடுகளாகும்.

## தாழ்த்தப்பட்டோர் உரிமைகள் மற்றும் பாதுகாப்புச் சட்டங்கள்

### தீண்டாமை ஒழிப்புச் சட்டங்கள்

தீண்டாமை சாதி சமுதாயத்தின் பொருளாதார, அரசியல் நிலைமைகளின் ஒரு கொடூரமான வெளிப்பாடு. தீண்டாமை என்பது சமூக, பொருளாதார, அரசியல் நிலைமைகளுடன் தொடர்புடைய கட்டமைப்புத் தொடர்பான குற்றம் என்ற அடிப்படையில் தீண்டாமை ஒழிப்புச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. ஆனால், தலித் மக்களிடமிருந்து நிலத்தைப் பறித்துக் கொள்பவர்கள் குற்றவாளிகள் என்று கூறும் இச்சட்டம் தலித் மக்களுக்கு நிலங்கள் இல்லாத நிலையைப் பற்றியும், இந்த நிலைமை நீடித்து வந்துள்ளதற்குக் காரணமான சமத்துவமற்ற, சமத்துவத்தை மறுக்கிற சாதிய பொருளாதார அமைப்பைப் பற்றியும் எதுவும் கூறவில்லை. பிரச்சனையை முழுமையாகப் புரிந்து கொள்ளாது, அதன் வெரித்தோற்றங்களை மட்டுமே கொண்டு தீர்வுகளைத் தேட முயலும் முயற்சிகள் தாம் தீண்டாமை ஒழிப்பு சட்டங்கள் என விமர்சிக்கப்பட்டாலும், காலங்காலமாக அடிமை வாழ்வை ஏற்றும் பல நேரங்களில் வேறு வழியில்லாததால் அத்தகைய இழிவான வாழ்வுக்கு இசைவு தந்தும் வந்துள்ள ஒரு சமுதாயத்தினருக்காக பல நல்ல பயன்களை அளித்துள்ளன.

காலனியாட்சிக் காலத்தில் உருவாக்கப்பட்ட தீண்டாமை ஒழிப்புச்சட்டங்கள் இருவகையானவை: 'தீண்டத்தகாதசாதியினர்' என இந்து சமயத்தால் கருதப்பட்டவர்களை கொத்தடிமையிலிருந்து விடுவிக்கப் பிறப்பிக்கப்பட்ட சட்டங்கள்; 'தீண்டத்தகாதவர்கள்' பொது இடங்களில் தடங்கலின்றி நுழையவும், புழங்கவும் அனுமதி வழங்கிய சட்டங்கள். 1850–இல் சாதிப் பாகுபாடுகளைக் களைந்திடுவதற்காக இயற்றப்பட்ட 'சாதி முட்டுப்பாடுகள் அகற்றுதல் சட்டம்' , 1930களில் மத்திய சட்டமன்றத்திலும் சென்னை மற்றும் பம்பாய் போன்ற மாகாண சபைகளிலும் தாக்கல் செய்யப்பட்ட 'தீண்டாமை எதிர்ப்பு மசோதாக்கள்', சுதந்திர இந்தியாவின் தீண்டாமை ஒழிப்புச் சட்டங்களுக்கு முன்னோடியாக விளங்கிய 'சென்னை சட்டம் (1938)' ஆகியவை குறிப்பிடத்தக்கது.

1938இல் சென்னை மாகாண அரசு "சென்னை குடிமையியல் முட்டுப்பாடுகள் அகற்றுதல் சட்டம்" ஒன்றை இயற்றியது. தாழ்த்தப்பட்டோரைத் தீண்டத்தகாதோராகப் பாகுபடுத்திப் பார்ப்பது குற்றம் என இச்சட்டம் அறிவித்தது. மேலும் பொதுச் சாலைகளில் தலித்துகள் நடமாடத் தடை, பொதுக் கிணறுகளைப் பயன்படுத்தத் தடை, பொது வாகனங்களில் பயணப்படத் தடை, உணவகங்கள், விடுதிகள், கடைகளில் நுழைய அனுமதி மறுப்பு, பொது இடங்களைப் பயன்படுத்துவதற்கான வழக்காற்று உரிமை மறுப்பு போன்றவற்றை குற்றங்களாக அறிவித்தது. 1943 முதல் 1950 வரையிலான ஏழு ஆண்டுகளில் இந்தியாவின் பல்வேறு மாகாணங்களில் சமூக மற்றும் மதம் சார்ந்த பாகுபாடுகளை ஒழிக்கும் நோக்கில் 21 சட்டங்கள் இயற்றப்பட்டன. இவை அனைத்துமே மாகாண அளவில் இயற்றப்பட்டவையே. சென்னை மாகாணம் தவிர, பம்பாய், பீகார், மத்திய மாகாணம், ஒரிசா, மைசூர், திருவிதாங்கூர், சௌராஷ்ரா, ஐதராபாத், கிழக்கு பஞ்சாப் போன்ற மாகாணங்களும் இது போன்ற சட்டங்களை இயற்றியுள்ளன. கோவில் நுழைவு தொடர்பாக ஆறு மாகாணச் சட்டங்கள் இதே கால கட்டத்தில் இயற்றப்பட்டன.

1950–ல் நிறைவேற்றப்பட்ட இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 17 ஆம் பிரிவு தீண்டாமையைக் குற்றமாக அறிவிக்கிறது. மேலும் 15 (2) பிரிவின்படி, பிறப்பின் அடிப்படையில் எந்தவொரு இந்தியக் குடிமகளு(னு)ம் கடைகள், உணவகங்கள், கிணறுகள், பொது குளியலிடங்கள், சாலைகள், பொதுவெளிகள் ஆகியவற்றில் புழங்குவதைத் தடை செய்யக் கூடாது என்றும் அறிவிக்கப்பட்டது. அரசியல் அமைப்புச் சட்டத்தில் வரையறுக்கப்பட்ட இவ்வித அடிப்படை உரிமைகளை உத்திரவாதம் செய்யும் வகையில் 'தீண்டாமை (குற்றங்கள்) சட்டம்' 1955 ஆம் ஆண்டு

இயற்றப்பட்டது. தீண்டாமை (குற்றங்கள்) சட்டத்தின் குறைகளை நீக்கி அவற்றைச் சரி செய்யும் வகையில் 'குடியுரிமைகள் பாதுகாப்புச் சட்டம்' 1975 ஆம் ஆண்டு இயற்றப்பட்டது. குற்றஞ்சுமத்தப்பட்டவர், தான் குற்றம் செய்யவில்லை என்பதைச் சான்றுகளுடன் நிரூபிக்க வேண்டும் என்ற விதியை இச்சட்டம் கொண்டிருந்தது. அதாவது குற்றவாளியே தான் குற்றவாளியல்ல என்பதை நிரூபணம் செய்ய வேண்டும். குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டத்தைப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் தலித்துகளுக்கு இலவச சட்ட உதவி வழங்கப்பட வேண்டும் என்றும், அவர்கள் சார்பில் வாதாடும் அரசாங்க வழக்கறிஞருக்கு உதவியாகச் சிறப்பு அதிகாரிகள் நியமிக்கப்பட வேண்டும் என்றும், சிறப்பு நீதிமன்றங்களும் குழுக்களும் கூட அமைக்கப்படலாம் என்றும் அச்சட்டத்தில் கூறப்பட்டது.

எனினும் ஒருவர் தீண்டாமையைக் கடைப்பிடிக்கிறார் என்பதை எந்தவித சந்தேகத்திற்கும் இடமின்றி நிரூபணம் செய்ய இயலாவிட்டால் குடியுரிமைப் பாதுகாப்பு சட்டத்தின் கீழ் அவரைத் தண்டிக்க இயலாது. எடுத்துக்காட்டாக, கிராமப்பொதுக் குளத்திலிருந்து 'தீண்டத்தகாத' சாதியினர் தண்ணீர் எடுப்பதை அக்கிராமத்தின் ஆதிக்க சாதியினர் தடுத்தால் அது இச்சட்டத்தின்படி குற்றம்; ஆனால், தீண்டத்தகாதவர் என்ற காரணத்தால் மட்டுமே இவ்வுரிமை அவர்களுக்கு மறுக்கப்பட்டது என்பது தெளிவாக்கப்படவேண்டும். தலித் மக்களை அச்சுறுத்தி அவர்களே குளத்தின் பக்கம் வராமல் செய்தால் அது தீண்டாமைக் குற்றம் ஆகிவிடாது. "நாங்கள் ஒன்றும் செய்யவில்லையே; அவர்களாகத்தான் வருவதில்லை...." என எளிதில் தப்பித்துக் கொள்ளலாம்.

குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டத்தை மாநில அரசுகளே இயக்கக் கடமைப்பட்டுள்ளன. மாநில அளவில் இச்சட்டத்தை செயல்படுத்தச் சிறப்பு நீதிமன்றங்கள் அமைக்கலாம் என்ற சட்டவிதி உள்ளபோதிலும் இத்தகைய நீதிமன்றங்கள் ஓரிரு மாநிலங்களில் மட்டுமே அமைக்கப்பட்டுள்ளன. இச்சட்டத்தின் கீழ் ஓரளவுக்கு வழக்குகள் பதிவாகிய போதிலும், மிகக் குறைவான அளவிலேயே தீர்ப்புகள் வழங்கப்பட்டுள்ளன.

சமத்துவம், சமூக நீதி மற்றும் பாகுபாடின்மையை வலியுறுத்தி, தீண்டாமையை அகற்றிடும் நோக்கில் உருவாக்கப்பட்ட சட்ட வழிவகைகள் இந்திய அரசியலமைப்பில் அடிப்படை உரிமைகள் பகுதியில் மைய இடம் பெறுகின்றன. அரசியல் சாசனத்தில் 14 முதல் 18 வரையிலான பிரிவுகள்

சட்டத்தின்முன் சமத்துவம், பாகுபாடின்மை, பொது வேலை வாய்ப்புகளில் சம வாய்ப்பு, தீண்டாமை ஒழிப்புப் போன்றவை குறித்து வரையறுக்கின்றன.

சாதி, சமயம், இனம், மொழி, பால், பிறப்பிடம் போன்ற எந்த வித காரணங்களுக்கும் எந்த ஒரு நபரையும் பாகுபடுத்தக்கூடாது என அரசியல் அமைப்புச் சாசனத்தின் 15வது பிரிவும், "எந்த வடிவத்திலும் தீண்டாமையைக் கடைப்பிடித்தாலும் அது சட்டப்படி குற்றமே" என 17வது பிரிவும் அறிவிக்கின்றன.

**குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டம், 1955" (பி.சி.ஆர். சட்டம்)**

இந்திய அரசியலமைப்புச் சட்டத்தின் 17வது பிரிவு தீண்டாமைக் கொடுமையை முற்றிலும் ஒழிப்பதாக அறிவித்ததோடு மட்டுமின்றி எந்த வடிவத்திலும் அது தொடரக் கூடாதெனவும் தடை செய்தது. தீண்டாமையின் விளைவாக நேரும் இடையூறுகள் சட்டப்படி தண்டனைக்குரிய குற்றங்களாகுமெனவும் குறிப்பிட்டு உள்ளது. அரசியலமைப்புச் சட்டத்தின் இந்த ஷரத்தை அடிப்படையாகக் கொண்டு இரண்டு முக்கியமான சட்டங்கள் "குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டம், 1955" (பி.சி.ஆர். சட்டம்), "தாழ்த்தப்பட்டோர் பழங்குடியினர் மீதான அட்டூழியங்கள் தடுப்பு சட்டம் – 1989" இயற்றப்பட்டன.

தலித்துகளுக்கு எதிராகக் கடுமையான குற்றங்கள் நிகழ்த்தப்படும்போது கொலை, கொள்ளை, கற்பழிப்பு, வீடுகளைக் கொளுத்துதல், பலத்த காயங்களை விளைவித்தல் போன்ற புகார்கள் இந்திய தண்டனைச் சட்டத்தின் ஷரத்துகளின்படியே பதியப்படுகின்றன.

பி.சி.ஆர். சட்டத்தின் 7(1) பிரிவு தலித்துகளைத் தீண்டாமை அடிப்படையில் சாதிப் பெயரைச் சொல்லி இழிவுபடுத்தல் என்பதையும், இதே பிரிவின் உப பிரிவுகளான 7(1) (சமூக, பொருளாதாரப் பகிஷ்கரிப்பு தொடர்பானது) மற்றும் 7(1) (தீண்டாமை எந்த வடிவத்தில் கையாளப்பட்டாலும் அதற்கு எதிரானது) ஆகியவற்றவையும் குற்றமாக்குகிறது.

இச்சட்டத்தின் பல பிரிவுகள் தீண்டாமைக் குற்றங்களுக்கான தண்டனைகளைப் பட்டியலிடுகிறது. தீண்டாமை காரணமாகவோ, சாதியப் பாகுபாட்டினாலோ பொது இடங்களில் ஒரு நபரை நுழையவிடாமல் தடுப்பது, அவருக்குப் பொருட்கள் விற்க, வழங்க மறுப்பது,

மருத்துவமனைகளிலோ, கல்வி நிலையங்களிலோ, உணவு விடுதிகளிலோ அவரை அனுமதிக்க மறுப்பது இச்சட்டப்படி குற்றங்களாகும். தீண்டாமை சமூக, சமயம் சார்ந்த கொடுமைகள் எதுவாயிருந்தாலும் இச்சட்டப்படி குற்றமாக அறிவிக்கப்பட்டது.

**குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டம், 1976**

"தீண்டாமைக் குற்றங்கள் சட்டம் (1955)" 1976–ஆம் ஆண்டு திருத்தம் பெற்று "குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டம்" என்று மாற்றப்பட்டது. திருத்தப்பட்ட இச்சட்டத்தின் சிறப்பு அம்சங்களாக கூட்டு அபராதம், கடமையைப் புறக்கணிக்கின்ற புலனாய்வு அதிகாரிகளின் மீது நடவடிக்கை, இச்சட்டத்தின் கீழ் வழக்குப் பதிவு செய்யப்பட்டு குற்றத் தீர்ப்புப் பெற்றவர் தேர்தலில் நிற்கத் தடை, இச்சட்ட அமலாக்கத்தில் மத்திய, மாநில அரசுகளுக்குள்ள கடமைகள் ஆகியவை இடம்பெற்றன. குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் பதிவு செய்யப்படும் அனைத்துக் குற்றங்களும் கைது செய்தலுக்குரியன; இச்சட்டத்தின் கீழ் பட்டியல்படுத்தப்பட்டுள்ள குற்றங்கள் சமரசம் செய்ய இயலாதவை. இச்சட்டத்தின் அமலாக்கம் குறித்து மாநில அரசுகள் மேற்கொண்ட நடவடிக்கைகளைத் தொகுத்து பாராளுமன்றத்தில் ஒவ்வொரு ஆண்டும் அறிக்கை தாக்கல் செய்ய வேண்டியது மத்திய அரசின் கடமையாகும்.

**தாழ்த்தப்பட்டோர்/பழங்குடியினர் (வன்கொடுமைகள் தடுப்பு) சட்டம், 1989**

தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினருக்கு எதிராக இழைக்கப்படும் வன்கொடுமைகளைத் தடுத்து நிறுத்த நடைமுறையில் இருக்கின்ற குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டமும், இந்திய தண்டனைத் தொகுப்புச் சட்டத்தில் இடம்பெறும் பிரிவுகளும், அதற்கான தண்டனைகளும் போதுமானவையாக இல்லை. எனவே தலித்துகள் மீது தொடுக்கப்படும் வன்கொடுமைகளைத் தடுத்து நிறுத்த, கடுமையான தண்டனைகள் தரத்தக்க ஒரு சிறப்புச் சட்டம் தேவை என்று கருதி 1989–ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் மத்திய அரசு "தாழ்த்தப்பட்டோர்/பழங்குடியினர் (வன்கொடுமைகள் தடுப்பு) சட்டத்தை" நாடாளுமன்றத்தில் அறிமுகப்படுத்தியது. இந்த சட்டம் பி.சி.ஆர் சட்டத்திற்குத் துணையான இன்னொரு சட்டமாக உருவாக்கப்பட்டது. இச்சட்டம் பழங்குடியின மக்களுக்கு எதிரான குற்றங்களையும் உள்ளடக்கியதாக அமைந்தது.

இச்சட்டத்திலும் "அட்டூழியம்" என்கிற வார்த்தை சரியானபடி விளக்கப்படவில்லையெனினும் அட்டூழியங்கள் என்பது அடையாளப்படுத்தப்பட்டு பல்வேறு செயல்களை இச்சட்டத்தின் பிரிவு–3 வரையறுத்துள்ளது. அடித்தட்டு மக்களுக்கான மிகச் சிறப்பான சட்டம் என்று வர்ணிக்கப்படும் இச்சட்டத்தில் வன்கொடுமை புரிவோருக்குக் கடுமையான தண்டனை, இவ்வழக்குகளை விசாரிக்க தனி நீதிமன்றம், வன்கொடுமைகளில் பாதிக்கப்பட்டோருக்கு மறுவாழ்வு வசதிகள், பாதிக்கப்பட்டோர் பாதுகாப்புக் கருதி அரசு எடுக்க வேண்டிய முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் எனப் பல்வேறு சிறப்பம்சங்கள் சேர்க்கப்பட்டன.

வன்கொடுமைகள் தடுப்புச் சட்டம் ஐந்து அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டு 23 பிரிவுகளை உள்ளடக்கியது. இச்சட்டம் அடிப்படை வரையறைகளைக் கொண்ட முதல் பகுதியும், வன்கொடுமைகளைப் பட்டியல்படுத்தி அதற்கான தண்டனைகளை வழங்கும் பிரிவுகளான 3 முதல் 9 வரையிலான இரண்டாவது பகுதியும், வன்கொடுமைகள் புரியக்கூடிய நபர்களை அப்பகுதிகளிலிருந்து வெளியேற்றுவதற்கான பிரிவுகளைக் குறிப்பிடும் மூன்றாவது பகுதியும், வன்கொடுமை வழக்குகளை விரைவாக விசாரிப்பதற்காக அமைக்கப்படும் சிறப்பு நீதிமன்றங்கள், அந்நீதிமன்றங்களில் நியமிக்கப்படும் அரசு சிறப்பு குற்றவியல் வழக்கறிஞர்கள் பற்றிய பிரிவுகளை உள்ளடக்கிய நான்காவது பகுதியும், இதர பிரிவுகள் அடங்கிய கடைசிப் பகுதியுமாக என ஐந்து பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளது.

இச்சட்டத்தின் மூன்றாவது பிரிவு 22 வகையான வன்கொடுமைகளைப் பட்டியல்படுத்துகிறது. பிரிவு–3(1)ல் இடம்பெறும் வன்கொடுமைக் குற்றங்களுக்கு ஆறு மாதங்கள் முதல் ஆறு ஆண்டுகள் வரைச் சிறைத் தண்டனையும் அபராதமும் விதிக்கப்படலாம். பிரிவு–3ல் பட்டியல்படுத்தப்படும் வன்கொடுமைகளுக்கு ஏழாண்டுகள் முதல் ஆயுள் தண்டனை, மரண தண்டனை வரையிலும் விதிக்கப்பட்டுள்ளன.

தனிப்பட்ட குற்றங்கள் அதாவது எஸ்சி/எஸ்டி வகுப்பைச் சார்ந்த ஒரு நபரை உட்கொள்ளக்கூடாத ஒரு பொருளை உண்ணவோ, குடிக்கவோ பலவந்தப்படுத்துதல்; அவரது வீட்டில் மலத்தையோ கழிவுகளையோ பலவந்தமாகக் கொட்டி அவரை அவமானப்படுத்துதல், அல்லது அவரை பலவந்தமாக நிர்வாணப்படுத்தி அதே நிலையில் ஊர்வலமாக நடத்திச் செல்லுதல், அல்லது மனித கௌரவத்திற்குக் குந்தகம்

விளைவிக்கும்படியான காரியங்களைச் செய்தல், அல்லது எஸ்.சி/எஸ்.டி. வகுப்பைச் சேர்ந்த ஒருவரை அவமானப்படுத்தும்படியான காரியங்களில் ஈடுபடுதல், எஸ்.சி/எஸ்.டி. வகுப்பாருக்குச் சொந்தமான நிலத்தை ஆக்கிரமிப்பது, அதைப் பலவந்தமாக சாகுபடி செய்வது, அவர்களை அவர்களது நிலங்களிலிருந்து வெளியேற்றிவிட்டு அதை அபகரித்தல், அல்லது அவர்களது உரிமையில் தலையிடுதல், பொது வழிகளைப் பயன்படுத்துவதைத் தடுத்தல், அவர்களுக்கு உரிமையான குளம், கிணறு, கால்வாய் போன்ற நீர் ஆதாரங்களைப் பாழ்படுத்துதல் மற்றும் எஸ்.சி/எஸ்.டி வகுப்பை சேர்ந்த ஒருவரை அவரது வீட்டிலிருந்தோ கிராமத்திலிருந்தோ, அல்லது வேறு உறைவிடங்களிலிருந்தோ வெளியேறும்படி செய்தல் ஆகியவற்றையும் பிரிவு 3 (1) தண்டனைக்குள்ளாக்குகிறது.

எஸ்.சி/எஸ்.டி பெண்களுக்கு எதிராக அவர்களது கௌரவத்திற்கு குந்தகம் ஏற்படும்படியான நடவடிக்கைகளில் ஈடுபடுதல் பிரிவு–3(1) அல்லது அந்த வகுப்பைச் சேர்ந்த பெண் ஒருவரின் விருப்பத்தை மேலாதிக்கம் செய்யும்படியாகத் தனது சமூக அந்தஸ்தைப் பயன்படுத்துதல், அந்த நிலையை உபயோகித்து அந்தப் பெண்ணைப் பாலியல் ரீதியாகச் சுரண்டுதல், அந்தப் பெண்ணுக்கு அது தவிர வேறுவழி இல்லாத நிலையை உண்டாக்குவதன் மூலம் அவரை ஒப்புக் கொள்ளவைத்தல்.

ஒருவரைக் கொத்தடிமையாக இருக்க நிர்ப்பந்திப்பது உட்பட பல்வேறு விதமான குற்றங்களை இழைத்தல். ஒருவரைப் பலவந்தப்படுத்தி தேர்தலில் வாக்களிக்கவோ, வாக்களிக்காமல் இருக்கவோ செய்தல். எஸ்.சி/எஸ்.டி வகுப்பை சேர்ந்த ஒருவர் மீது முறைகேடாக சிவில் மற்றும் கிரிமினல் வழக்குகளைத் தொடுத்தல். ஒரு அரசு ஊழியரிடம் தவறான தகவலைத் தருவதன் மூலம் அவர் ஒரு எஸ்.சி/எஸ்.டி நபருக்கு எதிராகச் செயல்படும்படி தூண்டுதல்.

இச்சட்டத்தின் கீழ் பதியப்பட்ட வழக்குகளைத் துரிதமாக விசாரித்து முடிவுக்குக் கொண்டு வரும்பொருட்டு மாநில அரசாங்கங்கள் விசேஷ நீதிமன்றங்களை ஒவ்வொரு மாவட்டத்திலும் அமைக்கவேண்டும். இந்த நோக்கத்துக்கென ஒரு செஷன்ஸ் நீதிமன்றத்தை விசேஷ நீதிமன்றமாக அமைக்கலாம். (பிரிவு–14).

இதுபோலவே மாநில அரசாங்கங்கள் இந்த வழக்குகளை விசாரிப்பதற்கென்று தனியே விசேஷமாக பப்ளிக் ப்ராஸிக்யூட்டர்களை நியமித்தாக வேண்டும். (பிரிவு–15).

தலித் மக்கள் மீது அட்டூழியங்கள் நடைபெறாமல் தடுக்கும் பொருட்டு மாவட்ட நீதிபதியோ, சப்–டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்டோ அல்லது டி.எஸ்.பி. அந்தஸ்துக்குக் குறையாத ஒரு போலீஸ் அதிகாரியோ, தங்களுக்கு தலித் மக்கள் மீது ஒரு பகுதியில் தாக்குதல் நடைபெறப்போவதாகத் தகவல் கிடைக்குமானால் அந்தப்பகுதி அவர்களது நிர்வாக எல்லைகளுக்கு உட்பட்டதாக இருக்குமானால் அப்பகுதியை அட்டூழிய அபாயம் நிரம்பிய பகுதி என அறிவிக்கலாம். அத்துடன் பொது அமைதியைப் பாதுகாக்கவும், தலித் அல்லாத மக்களது நடத்தைகளை ஒழுங்குபடுத்தவும் தேவையான நடவடிக்கைகளை மேற்கொள்ளலாம். (பிரிவு–17).

இந்த சட்டத்தின்கீழ் குற்றம்சாட்டப்பட்ட தலித் அல்லாத சாதியைச் சேர்ந்தவர்கள் முன்ஜாமீன் பெற முடியாது. (பிரிவு–18).

கடுமையான தண்டனை, வழக்குகளை விசாரிக்க தனி நீதிமன்றம் (அமர்வு நீதிமன்ற அதிகாரம் கொண்டவை), தனி அரசு குற்ற வழக்கறிஞர் நியமனம், கடமைகளைப் புறக்கணிக்கும் அதிகாரிகளுக்குத் தண்டனை, தொடர்ந்து வன்கொடுமை புரியும் நபர்களை அப்பகுதியில் இருந்து வெளியேற்ற வழிவகை, வன்கொடுமை புரியப் பயன்படுத்தப்பட்ட சொத்துக்களைப் பறிமுதல் செய்தல், வன்கொடுமை புரியும் பிரிவினர் மீது கூட்டு அபராதம் விதிக்க ஏற்பாடு, முன்ஜாமீன் பெற இயலா நிலை போன்ற சிறப்பம்சங்களை இச்சட்டம் கொண்டுள்ளது.

குடியுரிமைப் பாதுகாப்புச் சட்டத்தின் முக்கியப் பகுதிகளை உள்ளடக்கியுள்ள இச்சட்டம் மேலும் விரிவானதாகவும், கெடுபிடியானதாகவும் கருதப்படுகிறது. தலித் மக்கள் தமது அன்றாட வாழ்வில் சந்திக்கும் வன்முறைகள், அவமானங்கள் ஆகியன விரிவான வகையில் இச்சட்டத்தில் பட்டியலிடப்பட்டுள்ளன. தலித் பெண்கள் மீதான பாலியல் வன்முறைச் செயல்கள் இச்சட்டத்தில் குற்றங்களாக அடையாளப்படுத்தப்பட்டுள்ளன. தலித் மக்களுக்கு எதிராக பொய்சாட்சி கூறுபவர்கள் குற்றம் புரிந்தவராகவே கருதப்படுவர். அவர்கள் புனைந்த சாட்சியின் காரணமாக தலித் மக்கள் யாரேனும் தவறாக குற்றஞ்சாட்டப்பட்டு தண்டிக்கப்பட்டால் பொய் சாட்சியுரைத்தவருக்கு ஆறுமாதம் முதல் ஏழு வருடம் வரை சிறைத்தண்டனை வழங்கப்படும். பொய் சாட்சியின் காரணமாக தலித் மக்கள் யாரேனும் தூக்கில் இடப்பட்டால், அவ்வாறு சாட்சியுரைத்தவரும் மரண தண்டனைக்குரியவராவார். மேலும், தலித் மக்களின் பயன்பாட்டுக்கென அரசாங்கம் ஒதுக்கியுள்ள நிலத்தையோ, விளைநிலத்தையோ தவறான

வகையில் தமக்குச் சொந்தமாக்கிக் கொள்ள பிற சாதியினர் முற்பட்டாலும், தலித் மக்களின் நிலத்தை அவர்களிடமிருந்து பலவந்தமான முறையில் பறிக்க முயன்றாலும் குற்றங்களாகக் கருதப்படும்.

ஒரு சட்டம் எந்த அளவு சிறந்ததாயிருந்தாலும் கூட, அது எப்படி பிரயோகிக்கப்படுகிறது என்பதை வைத்தே அது பயனுள்ளதாக இருக்கிறதா என்பதை முடிவு கட்ட இயலும். தாழ்த்தப்பட்டோர்/பழங்குடியினர் (வன்கொடுமைகள் தடுப்பு) சட்டத்தைப் பொறுத்தவரை தலித் மக்களின் புகார்களின் மீது எந்த அளவுக்கு காவல்துறை நடவடிக்கை எடுக்கிறது என்பதை வைத்தே கூறமுடியும். இந்தச் சட்டம் இயற்றப்பட்டுப் பல ஆண்டுகள் ஆன பின்பும்கூட தாழ்த்தப்பட்டோருக்கு எதிராக இழைக்கப்படும் வன்கொடுமைகள் நிகழ்ந்த வண்ணம் உள்ளன. தலித்துகள் மீது இழைக்கப்படும் வன்கொடுமைகள் முழுமையாகவும், முறையாகவும் காவல் நிலையங்களில் பதிவு செய்யப்படுவதில்லை என்றும், பதிவு செய்யப்பட்ட வழக்குகளில்கூட பெரும்பாலான குற்றவாளிகள் தண்டனை பெறுவதில்லை என்றும் விமர்சிக்கப்படுகிறது. வன்கொடுமை புரிந்தோர் மீது வழக்குத் தாக்கல் செய்யப்படும்போது சாதியின் பெயரைக் குறிப்பிட்டு இழிவாகப் பேசியதாக மட்டுமே பல வழக்குகள் தாக்கலாகின்றன. பாதிக்கப்பட்டவர் வன்கொடுமைப் புகார் அளிக்கும் போது சம்பந்தப்பட்ட குற்றவாளியைப் பாதுகாக்கும் நோக்கத்துடன் பாதிக்கப்பட்டவர் மீதே குற்றவாளியிடமிருந்து ஒரு புகாரினைப் பெற்று இரண்டு வழக்குகளாகத் தாக்கல் செய்வதும், வன்கொடுமையாளரை கைது செய்தால் புகார்தாரரையும் கைது செய்ய வேண்டி வரும் என வழக்கினை நீர்த்துப் போக வைக்க முயல்வதும் பல சந்தர்ப்பங்களில் நடைபெறுகின்றன. (பிரிட்டோ, 2006).

தலித்துகள் மீதான தாக்குதல்கள் தொடர்பான குற்றங்களில் அதிக அளவில் வழக்குகள் தள்ளுபடியாவதற்குக் கீழ்க்கண்டவற்றை காரணங்களாக பிரிட்டோ (2006) குறிப்பிட்டுள்ளார்:

1. சாட்சிகளின் தாழ்ந்த பொருளாதார நிலை காரணமாக விசாரணை நிலையிலேயே பணம் கொடுத்து அவர்கள் விலைக்கு வாங்கப்படுதல்

2. நீதிமன்றங்களில் இத்தகைய வழக்குகள் மிக நீண்ட காலத்திற்குத் தேங்கிக் கிடத்தல்

3. இந்த வழக்குகளைக் கையாளும் அரசு வழக்கறிஞர்களுக்கு இந்தச் சட்டம் குறித்த போதுமான அனுபவமின்மை

4. இந்த வழக்குகளில் புலனாய்வு மேற்கொள்வதில் காவல்துறையினருக்குப் போதுமான ஆர்வம் இல்லாதது

5. சாட்சிகளைக் கண்டறிந்து நீதிமன்றத்திற்கு அழைத்து வந்து நிறுத்த புலனாய்வு அதிகாரிகள் தவறுதல்

6. சாட்சிகளுக்குக் காவல்துறையின் போதுமான பாதுகாப்பின்மை.

வன்கொடுமை தடுப்புச் சட்டத்தின் கீழ் வன்கொடுமை வழக்குகளைப் பதிவு செய்த பின் புலன் விசாரணை மேற்கொள்ளும் காவல்துறையும், பாதிக்கப்பட்டோருக்கு நிவாரணம் மற்றும் மறுவாழ்வு வசதிகள் வழங்க வேண்டிய மாவட்ட நிர்வாகமும் பல வேளைகளில் பாதிக்கப்பட்ட தலித்துகளைப் பரிகாசம் செய்வதும், மிரட்டுவதும், ஏளனம் செய்து எள்ளி நகைபாடுவதும், அவர்களது அறியாமையைப் பயன்படுத்தி அலைக்கழிப்பதும் மறுபுறம் வன்கொடுமை புரிவோருக்குச் சார்பாகவும், சாதகமாகவும் நடந்து கொள்வதும் காவல்துறையின் போக்குகளாக பல சம்பவங்களில் இருந்ததை ஆய்வுகள் சுட்டிக் காட்டுகின்றன. சட்டத்தில் உரிமைகளும், பாதுகாப்பும் வழங்கப்பட்டாலும் அவ்வுரிமைகளையும், நீதியையும் பெற வன்கொடுமைக்கு உள்ளானவர்கள் தொடர்ந்து நீண்ட போராட்டம் நடத்த வேண்டியதுள்ளது.

இந்த சட்டத்தில் வழங்கப்பட்டுள்ள பல்வேறு உரிமைகள் குறித்தும், தீண்டாமைக் கொடுமையை கடைப்பிடிப்பவர்களுக்கு விதிக்கப்பட்டுள்ள தண்டனைகள் குறித்தும் தலித் மக்களிடையே விழிப்புணர்வை உண்டாக்க வேண்டியது மிகவும் அவசியமாகும். என்ன மாதிரியான கொடுமைகள் தமக்கெதிரே ஏவப்படுகின்றன என்பது தெரிந்தால் தான் அவற்றை எதிர்த்துத் தலித்துக்கள் போராட முடியும்; இந்த சட்டத்தைச் சரியாகப் பயன்படுத்துங்கள் எனக் குரலெழுப்பவும் முடியும்.

ஆகவே, கடுமையான சட்டமொன்றைக் கொண்டு வந்து விட்டாலே எஸ்.சி/எஸ்.டி மக்கள் மீதான அட்டூழியங்களின் அளவு குறைந்து விடுமெனக் கருத முடியாது. சட்டத்தால் மட்டுமே சாதிய ஒழிப்பு சாத்தியமில்லை; மேலும் இச்சமூக இழிவை முற்றிலுமாக ஒழிப்பதற்குச் சில சட்டங்கள் மட்டுமே போதாது. இருப்பினும், நடைமுறைப்படுத்தப்பட்டு வரும்

சட்டங்களின் பலன்களைப் பாதிக்கப்பட்ட தலித்துகள் முழுமையாகப் பெறுவதும், வன்கொடுமை புரியும் குற்றவாளிகள் இச்சட்டத்தின் கீழ் தண்டனை அடைவதும் தீண்டாமை ஒழிப்புப் பயணத்தில் முக்கியப் படிக்கட்டுகளாக அமையும்.

மனித மலத்தைக் கையால் அள்ளுவதும், நகரங்களில் சாக்கடையைச் சுத்தம் செய்வதுமான சாதிய அடிப்படையில் அமைந்த இழிதொழிலை ஒழிக்கும் வகையில் சட்டத்தை 1993–ஆம் ஆண்டு மத்திய அரசு கொண்டு வந்தது. இதற்கு ஒரு தனி ஆணையமும் பின்னர் அமைக்கப்பட்டது. நாடு முழுவதிலும் கையால் மலம் அள்ளும் தொழிலாளர்களின் எண்ணிக்கையைக் கணக்கெடுத்து, இந்த இழிதொழிலிருந்து அவர்களை விடுவித்து, மறுவாழ்வுத் திட்டங்களை வழங்கிடும் வகையில் 1992–ஆம் ஆண்டில் மத்திய அரசு தேசியத் திட்டம் ஒன்றை அறிவித்தது குறிப்பிடத்தக்கது.

### பழங்குடியினர் மீதான வன்கொடுமை

பழங்குடி மக்கள் எதிர்கொள்ளும் பெரிய துயரமாக அவர்களின் வாழ்வாதாரத்தை நசுக்கும் பல்வேறு வகையான சுரண்டல்கள் உள்ளன. வனத்தின் குழந்தைகளான பழங்குடியினர் வனத்தினுள்ளும், வனத்தை ஒட்டிய பகுதிகளிலும் வனத்தை நம்பி வாழும் வாழ்க்கையைக் கொண்டவர்கள். இயற்கை வளங்களைச் சுரண்டும் பல்வேறு சுரண்டல்காரர்கள் இவர்களை வனங்களில் இருந்து அப்புறப்படுத்த முயல்கின்றனர். அரசியலமைப்பு சட்டத்தின் ஆறாவது மற்றும் ஐந்தாவது அட்டவணைகளின் சட்டப்பிரிகள் பழங்குடி மக்களின் நிலங்கள், வளங்களைப் பிறர் சுரண்டுவதற்குத் தடை செய்கின்றன. எனினும் பழங்குடியினர் நிலங்களையும், வாழ்வாதாரங்களையும் பாதுகாக்கும் சட்டங்களும், அரசின் அணுகுமுறைகளும் அவர்களுக்கு உதவுவதாக இல்லை. பழங்குடி மக்களைப் பல்வேறு வழிகளில் ஏமாற்றி, மிரட்டி சட்டவிரோதமாக அவர்களின் விளை நிலங்கள் அபகரிக்கப்படுகின்றன. அரசு வன தரிசு நிலங்களைப் பழங்குடி மக்களை மேம்படுத்தத் தருவதற்குப் பதிலாக தனியார் நிறுவனங்களுக்குத் தாரை வார்க்கும் போக்கு அதிகரித்து வருகிறது. இதனால் பழங்குடி மக்கள் அகதிகளாகவும், பண்ணை அடிமைகளாகவும் மாறி வருகின்றனர்.

ஓர் ஊரிலிருந்து அல்லது கிராமத்திலிருந்து ஒரு குடும்பத்தை அரசோ அல்லது தனிநபரோ தன்னிச்சையாக வெளியேற்ற முடியாததற்குக்

காரணம் அவர்களிடம் பட்டா இருக்கிறது என்பதுதான். ஆனால் காட்டில் வாழ்பவருக்கு எந்த ஆவணங்களும் கிடையாது. வன அதிகாரி, அரசியல்வாதி, அரசு என யார் வேண்டுமானாலும் எந்தத் திட்டத்தின் பெயராலும் அவர்களை வெளியேற்றுவதும் அவர்களது விளைச்சலை, சேகரித்த வனப்பொருளைப் பறித்துச் செல்வதும் நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இந்த அநீதியைத் தடுக்க வன உரிமைச் சட்டம் முனைகிறது.

இந்த சட்டத்தின்படி, 2005 டிசம்பர் 23–ம் தேதிக்கு முன்பாக காட்டில் வாழ்ந்து வருகிற பழங்குடியினருக்கும், மற்றும் மூன்று தலைமுறைகளாக (ஒரு தலைமுறை என்பது 25 ஆண்டுகள்) காட்டைச் சார்ந்து வாழ்ந்து வருகிற காடுவாழ் மக்களும் பலவிதமான உரிமைகளைப் பெறுகிறார்கள். இவர்கள் தங்கள் பயன்பாட்டில் வைத்திருக்கும் நிலங்களுக்கு (4 எக்டேருக்கு மிகாமல்) பட்டா பெறலாம்; மரங்கள் தவிர்த்து மூங்கில், தேன், நெல்லிக்காய், புளி போன்ற காட்டுவிளை பொருள்களை வெளியே கொண்டு சென்று விற்கலாம்; உயிரினக் காப்பு வனம் அல்லது பாதுகாக்கப்பட்ட வனப்பகுதியிலும்கூட அவர்கள் குடியிருப்பதை யாரும் தடுக்க முடியாது; இவர்களை யாரும் எந்தத் திட்டத்தைக் காரணம் காட்டியும் வெளியேற்ற முடியாது என இத்தனை உரிமைகளையும் இந்தச் சட்டம் வழங்குகிறது. இதனால்தான், இந்தச் சட்டத்தை அந்த மக்களிடம் முறைப்படி கொண்டுபோய் சேர்க்கவில்லை போலும் என்பதையும் உணர முடிகிறது.

இந்தப் பழங்குடியினர் மற்றும் காடுவாழ் மக்களின் மனுக்கள் முதலில் கிராமப் பஞ்சாயத்தால் ஆய்வு செய்யப்பட்டு மாவட்டக் குழுவுக்கு அனுப்பி, அவர்களும் ஆய்வு செய்து பட்டா வழங்க வேண்டும் என்பது விதிமுறை, இருப்பினும், இத்தனை உரிமையையும் அவர்களுக்குக் கொடுத்துவிட்டால் தங்கள் ஆளுமைக்குள் அவர்கள் இருக்க மாட்டார்கள், இவர்களை வைத்து தாங்கள் பெற்றுவரும் லாபம் இல்லாமல் ஆகிவிடும் என்பதால் கிராமத் 'தலைகளும்' அரசு அலுவலர்களும் தங்களுக்குப் பினாமியாகச் செயல்படக்கூடிய நபர்களிடம் மட்டுமே மனுக்கள் வாங்கி, பரிசீலிக்கும் நிலைமை இருக்கிறது.

இன்னொரு காரணம் தொழில்துறை. காட்டுக்குள்தான் கனிம வளங்கள் அதிகம் இருக்கின்றன. கனிமங்களின் மீதுதான் பழங்குடியினர் வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள். உரிமைகளை அளித்துவிட்டால் அவர்களை வெளியேற்றுவது கடினம் என்ற எண்ணம்தான் இத்தகைய

மெத்தனப் போக்குக்கு காரணம். உதாரணமாக, பழங்குடியினர் அதிகமாக வசிக்கும் ஒரிசா மாநிலத்தில் இச்சட்டம் அமலுக்கு வந்தபிறகு 47 திட்டங்களுக்கு வனத்துறையின் அனுமதி அளிக்கப்பட்டுள்ளது. மற்ற மாநிலங்களிலும் இது தான் நிலைமை. இது ஓர் அத்துமீறல்; ஒருவர் தனது உரிமையை அறிந்து கொள்ளும் முன்பாகவே அவர்களது பொருளை எடுத்துக்கொள்ளும் திருட்டுக்கு நிகரான செயல்.

காட்டை நம்பி வாழ்பவருக்கு காடுதான் வீடு, கோயில், தெய்வம் எல்லாமும். காடுவாழ் மக்கள் எந்தவகையிலும் நகர்வாழ் மக்களுக்கு ஒரு போட்டியே அல்ல. இருந்தும் தொழில் வளம், நகர்வாழ் மக்கள் நலன் என்ற பெயரில் அரசும், அரசியல்வாதிகளும் அம்மக்களுக்கு நெருக்கடி தரும்போது, அவர்களது வாழ்வாதாரத்தில் கை வைக்கும்போது, அவர்கள் எளிதில் தீவிரவாதிகளாக மாறுகிறார்கள். அல்லது தீவிரவாதிகளுக்குத் துணையாக அமைந்துவிடுகிறார்கள். அசாம், நாகலாந்து, சத்தீஸ்கர், ஜார்க்கண்ட் போன்ற மலை மாநிலங்களில் நக்ஸலைட்டுகள் பெருக இதுவும் ஒரு முக்கியக் காரணம்.

தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினரின் மேம்பாட்டிற்காகவும், பாதுகாப்பிற்காகவும் நடப்பில் உள்ள பல்வேறு சட்டங்களின் அமலாக்கம் குறித்து விவாதிக்கவும், பயனுள்ள பரிந்துரைகளை மத்திய அரசுக்கு வழங்கவும் 1950ஆம் ஆண்டு நவம்பர் 18ஆம் தேதி "தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினருக்கான ஆணையாளர்" என்ற பதவியில் சிறப்பு அதிகாரி ஒருவர் நியமிக்கப்பட்டார். அதிகரித்துவரும் தீண்டாமைக் குற்றங்களைக் கணக்கில் கொண்டு 1978-ஆம் ஆண்டு இந்தச் சிறப்பு அதிகாரிக்குப் பதிலாக பல நபர் கொண்ட ஓர் அமைப்பாக "தேசிய தாழ்த்தப்பட்டோர்/பழங்குடியினர் ஆணையம்" 1990இல் அமைக்கப்பட்டது. மத்திய அரசும், மாநில அரசுகளும் தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினர் தொடர்பான கொள்கை முடிவுகளை எடுக்கும்போது இந்த ஆணையத்தைக் கலந்தாலோசிக்க வேண்டியது அரசியல் சாசனக் கடமையாகும். தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினரின் சமூகப் பொருளாதார மேம்பாடு குறித்த திட்டமிடல் கூட்டங்களில் இவ்வாணையம் பங்கேற்று, பரிந்துரைகளை முன்வைப்பதும் மேம்பாட்டு நடவடிக்கைகளைத் திறனாய்வு செய்வதும் சட்டப்பூர்வக் கடமையாகிறது.

### மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள்

தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினரின் சமூக, பொருளாதார நிலையை மேம்படுத்த வேண்டிய கடமையும் பொறுப்பும் அரசுக்கு உண்டு. அவர்களின் கல்வி மற்றும் பொருளாதார நலனில் அரசு சிறப்புக் கவனம் செலுத்தி சமூக அநீதிகளிலிருந்தும், அனைத்து வகையான சுரண்டல்களிலிருந்தும் காப்பாற்ற அரசு முனைப்புடன் நடவடிக்கைகளை எடுக்க வேண்டும்.

சட்டத்தின் பயனை பழங்குடியின மற்றும் காடுவாழ் மக்களுக்குக் கொண்டு சேர்ப்பதில் அரசு தன்முனைப்புடன், கூடுதல் அக்கறையுடன் செயல்பட வேண்டும். காடுவாழ் மக்களுக்கு வன உரிமைச் சட்டத்தின் கீழ் நில உரிமை பட்டாக்களை வழங்கும் நடவடிக்கையை அந்தந்த மாநில அரசுகள் செயல்படுத்த வேண்டும். "பழங்குடியினர் மற்றும் காடுவாழ் வம்சாளியினர் (வன உரிமை அங்கீகரித்தல்) சட்டம் – 2006" குறித்து பழங்குடியின காடுவாழ் மக்களுக்கு சரியான விழிப்புணர்வு அளிக்கப்பட வேண்டும். சட்டம் தரும் சலுகைகூட சமுதாயம் தர மறுத்தால் நஷ்டம் சமூகத்துக்குத்தான். வன உரிமைச் சட்டத்தின் பயன்கள் காடுவாழ் மக்களுக்கு முழுமையாகக் கிடைத்தால்தான் காடு வாழும். அதுதான் நாட்டுக்கும் நல்லது.

### References

பிரிட்டோ, எம்.ஏ. வன்கொடுமைகளும், சட்ட அமலாக்கமும். (மதுரை அம்பேத்கர் பண்பாடு மையம், 2007).

பாலமுருகன், ச. மனிதமும் உரிமையும். (சென்னை: பாரதி புத்தகாலயம், 2005).

ரவிக்குமார், (தொகுப்பாசிரியர்), தலித்:கலை–இலக்கியம்–அரசியல், (நெய்வேலி: தலித் கலைவிழாக் குழு, )

# மதவாதம்

மதவாதமும் அதைத் தொடர்ந்து உருவாகும் வன்முறைகளும் நாட்டுமக்களிடையே கலவரம், சந்தேகம் மற்றும் பாதுகாப்பற்ற நிலையை உண்டாக்குகிறது. பெரும்பான்மை சமயத்தினர் குறித்த அச்சத்தையும் பாரபட்சத்தையும் சிறுபான்மை சமயத்தினரிடையே உருவாக்குகிறது. குறிப்பாக கடந்த முப்பது ஆண்டுகளாக காஷ்மீர், பஞ்சாப், உத்திரபிரதேசம், பீகார், குஜராத், அசாம், ஆந்திரபிரதேசம் மற்றும் டெல்லி ஆகிய இடங்களில் அவ்வப்போது நிகழ்ந்து வரும் சம்பவங்களும், அழிவுகளும் மதவெறியின் கோரத்தாண்டவத்தை வெளிப்படுத்துவதாக உள்ளன. நாட்டின் அமைதி மற்றும் ஒருமைப்பாட்டைப் பாதுகாக்க, மதவாத பிரச்சனைகளைத் தடுக்க வேண்டியதின் அவசியத்தை இது காட்டுகிறது. இந்தியாவிலுள்ள முஸ்லீம், சீக்கியர், கிறிஸ்தவர் உள்ளிட்ட சிறுபான்மை சமயத்தினர் பாதுகாக்கப்படவும் நீதி, சமத்துவம் மற்றும் சுதந்திரம் கிடைக்கவும் இந்திய அரசியலமைப்புச் சட்டம் வழிவகை செய்கிறது.

**வரையறை**

ஒரு குறிப்பிட்ட மதத்தை அல்லது இனத்தைச் சார்ந்தவராக இருப்பது மட்டுமே மதவாதம் ஆகாது. ஒரு குறிப்பிட்ட மதத்தை அல்லது இனத்தைச் சார்ந்தவர்கள் பிற மதத்தை அல்லது இனத்தை சார்ந்தவர்கள் மீது கொள்ளும் பகையுணர்வே மதவாதம் எனக் குறிப்பிடப்படுகிறது. இப்பகையுணர்வை ஊட்டி, வளர்த்து, பயன்படுத்துபவர்கள் ''மதவாதிகள்'' எனப்படுகின்றனர். அத்தகையோருக்கு மதமும், கடவுளும் தங்களது அரசியல் ஆதாயத்திற்காகவும் பயன்படும் கருவிகள் மட்டுமே. அரசியல், சமயம், பொருளாதாரம் எனப் பலவகைகளிலும் மதவாதம் பயன்படுத்தப்படுகிறது.

'மதவாதம்' என்பதை வரையறுப்பது மிகுந்த சிக்கலானது. ஒருவர் ஒரு குறிப்பிட்ட மதத்தை சார்ந்தவராக இருப்பதில் பெருமை கொள்கிறார் என்பதற்காகவோ, அம்மதத்தைச் சார்ந்தவராக, தனிப்பட்ட நம்பிக்கை மற்றும் விசுவாசத்தின் அடிப்படையில் விரும்பி வாழ்வதில் பெருமை கொள்கிறார் என்பதற்காகவோ இவரை மதவெறியாளர் என வகைப்படுத்த இயலாது.

சமூகம் பல சமயக் குழுக்களை உள்ளடக்கியுள்ளது. ஒவ்வொரு சமயக் குழுவின் விருப்பங்களும் வேறுபட்டவை. இத்தகைய வேறுபட்ட

விருப்பங்கள் ஒருவர் ஒருவரை எதிர்க்கக் காரணமாக அமைகிறது. பகை உணர்வால் ஒரு சமயக்குழு மற்றொரு குழுவை எதிரியாகப் பாவிப்பது மதவெறி எனப்படுகிறது. இந்தப் பகை உணர்வு உள்நோக்கத்துடன் பிறரை துன்புறுத்தவும், தீங்கு விளைவிக்கவும், அவர்களுடைய வீடு, கடைகளை சூறையாடுவது, தீயிட்டுக் கொளுத்துவது, பெண்களை இழிவுபடுத்துவது, கொலை செய்வது போன்ற செயல்களை செய்யத் தூண்டுகிறது. சமயத்தின் மூலம் அரசியலில் அதிகாரம் பெறுபவர்களும், சமயத்தை ஒரு வியாபாரப் பொருளாக்கி சம்பாதிப்பவர்களும் இந்து, இஸ்லாமிய, சீக்கிய, கிறிஸ்தவர் என ஒட்டுமொத்த அனைவரையும் துன்பத்தில் ஆழ்த்துகின்றனர். மதவாதம் அரசியலைச் சமயத்தோடு தொடர்புபடுத்திச் செயல்படுகிறது. மதவாதிகள் தாம் ஆடம்பரமாக வாழ்வதற்காகவும், அரசியல் நோக்கத்தை அடைவதற்காகவும் கடவுள் மற்றும் சமயத்தைக் கருவியாகப் பயன்படுத்தி ஒட்டுண்ணிகளாக வாழ்கின்றனர். அரசியலில் தங்கள் பதவிகளைத் தக்கவைத்துக் கொள்வதற்கும், வாக்குகளைச் சேமிக்கும் வங்கியாகவும் இதன் மூலம் தாங்கள் செய்யும் தவறுகளை மறைத்து மக்களின் கவனத்தை திசை திருப்பி தமது விரோதத்தைத் தீர்த்துக்கொள்ளக்கூடிய வாய்ப்பாகவும் மதவாதத்தை சுயநலமிகள் பயன்படுத்துகின்றனர்.

ஆயிரக்கணக்கான கோயில்கள், மசூதிகள், குருத்துவாராக்கள் உள்ளிட்ட புனித வழிபாட்டுத்தலங்கள் பராமரிப்பின்றியும், சரிசெய்யப்படாமலும் இருக்கும்போது ஒரு குறிப்பிட்ட வழிபாட்டுத்தலத்திற்காக மதவாதிகள் போராடுவது உள்நோக்கம் கொண்டதாகப் பார்க்கப்படுகிறது. இந்துக்களின் சமய உணர்வுகளைப் பல்வேறு செயல்கள் மூலம் இஸ்லாமியர் அலட்சியப்படுத்துகின்றனர் என்று கூறும் இந்துக்கள், தாங்கள் பெரும் எண்ணிக்கையில் உள்ளதால் சிறுபான்மைச் சமயத்தினரை சமமாகப் பாவிக்க வேண்டியதில்லை என்ற எண்ணம் கொண்டு இஸ்லாமியரின் இறை நம்பிக்கை மற்றும் உணர்வுகளை இழிவுபடுத்தும் அதே தவறைச் செய்கின்றனர்.

**மதவாதத்தின் அடிப்படை**

டி.கே.ஓமன் (1989) மத/வகுப்புவாதத்தின் ஆறு பரிமாணங்களை விளக்கியுள்ளார். அவை:

**1. ஒன்றிணையும் பாங்கு**

சிறிய சமயக் குழுக்கள் பெரிய சமயக் குழுக்களோடு இணைதல். எடுத்துக்காட்டாக ஜெயின், சீக்கிய, புத்த மதப் பிரிவினர் இந்து சமயத்தவராகப் பாவிக்கப்பட்டு இவர்கள் அனைவரும் "இந்து திருமணசட்டத்தின்" கீழ் கொண்டுவரப்பட்டது குறிப்பிடத்தக்கது.

**2. சமுதாய நலன்**

ஒரு குறிப்பிட்ட சமுதாயத்தின் நலனை நோக்கமாகக் கொண்டிருப்பது. தாங்கள் சார்ந்த சமுதாய மக்களின் வாழ்க்கைத் தரம், கல்வி, உடல்நலம் ஆகியவற்றின் மேம்பாட்டிற்காக சமயம் பயன்படுத்தப்படுவது.

**3. ஒதுங்கியிருத்தல்**

சிறிய சமயக்குழுகள்/ பிரிவுகள் தங்களை அரசியலில் ஈடுபடுத்திக்கொள்ளாமல் போவது. உதாரணமாக 'பாகாய்' சமூகம், தங்கள் உறுப்பினர்கள் அரசியலில் ஈடுபடாவண்ணம் தடுக்கிறது.

**4. எதிர்த்தாக்குதல் நடத்துதல்**

பழிவாங்கும் நடவடிக்கையாக பிற சமயத்தினரை அடித்தல், துன்புறுத்தல் மற்றும் அவர்களுக்கு கேடுவிளைவிக்கும் செயல்களை செய்வது.

**5. தனித்தன்மையை நிறுவுதல்**

ஒரு குறிப்பிட்ட சமய அல்லது இனக்குழு தங்களின் கலாச்சார தனித்தன்மையை நிலைநிறுத்துவதற்காகத் தனி மாநிலம் கேட்டுப் போராட வளர்த்தெடுக்கும் வகுப்புப்பற்று. உதாரணமாக, இந்தியாவின் வடகிழக்கு மாநிலங்களில் வாழும் மீசோ மற்றும் நாகா இனமக்கள், அசாமில் வாழும் போடோ இனமக்கள், மேற்கு வங்காள கூர்க்கா இனமக்கள் தங்களுக்கென தனிமாநிலம் கேட்டுப் போராடுவது.

### 6. பிரிவினைவாதம்

ஒரு சமயக்குழு தனது தனி அரசியல் அடையாளத்திற்காக தனிமாநிலம் கோரி வாதிடுதல். சீக்கிய தீவிரவாதக்குழு காலிஸ்தானை அடையவும், இஸ்லாமிய தீவிரவாதக் குழு காஷ்மீரை தங்களுக்கான தனிநாடாக்கவும் மதவாதச் செயல்களில் ஈடுபடுவதை உதாரணமாகக் கொள்ளலாம்.

## மத/வகுப்புவாத வன்முறையின் தன்மைகள்

மத/வகுப்பு வாதம் பிரச்சனைகளை உருவாக்கி வன்முறை, கிளர்ச்சி, ஆர்ப்பாட்டம், தீவிரவாதம் மற்றும் கலகத்தை உருவாக்குகிறது. மத/வகுப்புவாத வன்முறையின் தன்மைகளாக மக்களைப் பெருந்திரளாகத் திரட்டும் பாங்கு, வன்முறையின் அளவு, சேர்ந்திணையும் திறன், தாக்குதலின் இலக்கு, தலைமைத்துவம், வெறுப்பூட்டுகின்ற சூழல், எதிர்ப்பைப் பதிவு செய்யும் வழிகள் மற்றும் குறிப்பிட்ட சமயக் குழுவுக்கு எதிராகத் திட்டமிடுவது ஆகியவற்றை வி. வி. சிங் (1990) குறிப்பிடுகிறார். ஆயுதம் தாங்கிய மத/வகுப்புக் குழுக்கள் வெளிப்படையாகக் கலகம் செய்வது சாத்தியமற்ற நிலையில் திட்டமிட்ட வன்முறையில் ஈடுபடுகின்றன. பயிற்றுவிக்கப்பட்ட இக்குழுக்கள் வன்முறைக் கலவரத்தில் பெருமளவு பங்கெடுத்துத் தமது வெறுப்புணர்வை வெளிப்படுத்துகின்றன. வன்முறையால் ஒரு குழு மற்றொரு குழுவைச் சந்தேகத்தோடு, காழ்ப்புணர்ச்சியுடன், தவறாகப் பார்க்கிறது. மதவாத வன்முறை, வெறுப்பு, பகை மற்றும் பழிவாங்கும் மனப்பான்மையை அடிப்படையாக கொண்டது. தன்னுடைய வழிமுறை மட்டுமே சிறந்தது; அதன் மூலம் மட்டுமே உயர்ந்த நிலையை அடைய முடியும் என்று பிரகடனப்படுத்தும் மதத்தினால் மற்றவற்றைச் சகித்துக் கொள்ள முடிவதில்லை. அதுவே வெறுப்பாகவும், பகையாகவும் மாறுகிறது. மதம் என்றாலே வன்முறை என்கிற அளவுக்கு நிலைமை மோசமாகி வருகிறது. அவரவர் மதத்தினர் நடத்தும் பயங்கரவாதத்தை அந்தந்த மதத்தினர் ஆதரிக்கின்றனர். தனது மதத்துக்காகப் போராடுகிறார்கள் என அதனை நியாயப்படுத்துகின்றனர். உணர்வுப்பூர்வ வன்முறையான "பயங்கரவாதம்" மிகவும் ஆபத்தானது. உண்மையில் பயங்கரவாதிகளுக்கு மதம், கடவுள் எதுவும் கிடையாது; அதனால் அவர்களை இந்து, முஸ்லிம் என வகைப்படுத்த முடியாது.

கடவுளுக்கு அஞ்சும் ஓர் இந்து ஒரு அப்பாவி முஸ்லிமைக் கொல்ல மாட்டான். அப்படியே கடவுளுக்கு அஞ்சி நடக்கும் ஒரு முஸ்லிம் ஒரு

அப்பாவி இந்துவைக் கொல்ல மாட்டான். மாறாக அப்படிக் கொல்பவன் மத பயங்கரவாதி; அவனுக்கு மதமும் கிடையாது, கொள்கையும் கிடையாது.

வகுப்புவாத வன்முறை என்பது ஒரு சமூகக் குழுவின் கூட்டு வன்முறையாகவும், உடனிணைந்து பங்குபெறுகின்ற நிகழ்வாகவும், தமது ஒருங்கிணைந்த நோக்கத்தை அடையச் சமமான வாய்ப்புகள் வழங்கப்படாமல் பாரபட்சமாக நடத்தப்படுவதாக ஏமாற்றம் அடையும் போதும் நிகழ்த்தப்படுகிறது. வன்முறை மட்டுமே வெற்றி தேடித் தரும் உத்தி எனக்கருதி வாய்ப்பு கிடைக்கும் போது வன்முறையைப் பயன்படுத்தி தங்களது சக்தியையும், கொள்கையையும் நிலைநாட்ட முயற்சிக்கும் இத்தகைய பொறுப்பற்ற செயல் 'தீவிரவாத பிறழ்வு நடத்தை' என விமர்சிக்கப்படுகிறது. இருப்பினும், ஒட்டு மொத்த குழுவும் அமைதியான முறையை விடுத்து இத்தகைய வன்முறையில் இறங்குவதில்லை.

### மதவாதக் கலவரத்தின் இயல்புகள்

1. பெருமளவு அரசியல் ரீதியாகத் தூண்டப்படுகிறது.

2. அரசியல் தவிர பொருளாதாரக் காரணங்களும் மோதல்கள் உருவாகக் காரணமாகிறது.

3. இந்தியாவின் தெற்கு மற்றும் கிழக்குப் பகுதிகளை விட வடக்கு மற்றும் மேற்கு பகுதிகளில், வகுப்புவாத கலவரங்கள் அதிகம் நிகழ்கின்றன.

4. நகரங்களில் வகுப்புக் கலவரம் நடந்த அதே இடத்தில் மீண்டும் நடக்க வாய்ப்புகள் அதிகம் உண்டு.

5. சமய விழாக்களின்போது பெருமளவு வகுப்புக் கலவரங்கள் நிகழ்கின்றன.

6. ஆயுதங்களை வகுப்புக் கலவரத்தில் பயன்படுத்துவது அதிகரித்து வருகிறது.

## மத/வகுப்புவாத வன்முறைக்கான காரணங்கள்

மதவாத/வகுப்பு வன்முறையைப் பல கோணங்களிலிருந்து ஆராய்ந்து காரணங்களையும் அதை எதிர்க்கும் வழி முறைகளையும் அறிஞர்கள் கூறியுள்ளனர்.

ஒரு சமூகத்தின் பொருளாதார, சமூக மற்றும் அரசியல் சூழ்நிலைகள் சில நேரங்களில் சில பிரச்சனைகளையும் மோசமான தருணங்களையும் ஏற்படுத்துகிறது. அதன் பிடியிலிருந்து விடுபட முயன்று முடியாமல் போகும் போது அதற்கான உண்மைக் காரணங்களைப் புரிந்து கொள்ள இயலாமல் பிற குழுக்களைக் காரணமாகக் கருதுகின்றனர். ஏழ்மை, வேலையில்லாமை மற்றும் பாதுகாப்பற்ற நிலை அதிகரித்து விரக்தி, பற்றாக்குறையாக உள்ள வேலைகளுக்கு அசாதாரண போட்டி, பொறாமை மனப்பான்மை போன்றவை உருவாகி ஏற்றத்தாழ்வு, மன அழுத்தம் மற்றும் அச்ச உணர்வு ஆகியவை ஏற்படுகின்றன. பெரும்பான்மை–சிறுபான்மை சமய குழுக்களிடையே தொடர்ந்து உருவாகும் சந்தேகம் மற்றும் பகை, சமூகப் பொருளாதார ஏற்றத்தாழ்வுகள் வகுப்புப்பற்று உருவாகக் காரணமாகிறது. சமூகப்பற்றற்ற ஏழ்மையின் பிடியில் உள்ளவர்களின் சினம், விரக்தி வகுப்புப்பற்றுடன் இணைந்து வகுப்புக் கலவரமாக உருவெடுக்கிறது.

வகுப்புவாத வன்முறைக்கும், வகுப்புவாத அரசியலுக்கும் சமயம் ஒரு கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது. அரசியல் அடித்தளத்தை சமய வேறுபாடுகளின் அடிப்படையிலும், சமய அடையாளங்களை இலக்காகப் பயன்படுத்துவதன் மூலமாகவும் மக்களை இயக்கும் கருவியாக சமயம் பயன்படுத்தப்படுகிறது. மக்களின் தேவைகள், எதிர்பார்ப்புகள் மற்றும் முரண்பாடுகளை மறைக்கும் முகமூடியாக சமயத்தை வகுப்புப்பற்று பயன்படுத்துகிறது.

வகுப்புக் கலவரத்தில் சமூகக் குழுக்களின் ஒருங்கிணைந்த வன்முறையின் காரண காரியங்களில் சினமூட்டப்படுவது, எதிர்வினை, மன அழுத்தம், அமைதி குலைவு, சமய/இனக் குழு மீது கொண்ட பற்று, குழு மதிப்பீடுகள் மீதான உள்ளார்ந்த ஈடுபாடு, உணர்வு நெறி பிறழ்வு, தன்னியல்பு நடத்தைமுறை, ஆளுமைக் கட்டமைப்பு, சமூகப் பதற்றம் மற்றும் சமூக–உளவியல்–பண்பாடு போன்றவை உள்ளடங்கும்.

குழுக்களின் திறமைகள் குறைந்தும் எதிர்பார்ப்புகள் அதிகமாக இருக்கும் போதும், எதிர்பார்ப்புகள் ஒரே நிலையில் இருந்து திறமைகள்

குறையும் போதும், ஒவ்வொரு குழுவும் வெவ்வேறு ஆக்கதிறன் கொண்டிருப்பதாலும் ஒவ்வொரு குழுவும் வெவ்வேறு விதத்தில் வன்முறையிலோ அல்லது ஒருங்கிணைந்த வகுப்புவாத வன்முறையிலோ ஈடுபடுகிறது.

செயல்முறை சார்ந்த கற்றலை அடிப்படையாகக் கொண்டுள்ள உள்ளுணர்வின் ஒத்துணர்வு, இணைதல், தனது என்ற மனப்பான்மை, அக்கறை மற்றும் நெருக்கமான தொடர்பு ஆகிய பண்புகளை ஒரு குறிப்பிட்ட சமயம், கொள்கை, அரசியல் பிரச்சனையின் போது மக்கள் பகிர்ந்து கொள்கின்றனர். அதனால் குறிப்பிட்ட பிரச்சனையின் போது மக்கள் வெவ்வேறு பிரிவுகளாக்கப்பட்டு முரண்படும் நிலையில் குழுக்களிடையே வகுப்புவாதப் பதற்றம், பகைமை, காழ்ப்புணர்ச்சி ஆகியவை ஏற்படுகின்றன.

தனிமையில் இருக்கும்போது பலவீனமாகவும், பாதுகாப்பற்ற நிலையிலும் உணரும் ஒரு நபர் அவருடைய பாதுகாப்பிற்காகத் தன் குழுவோடு சேருகிறார். ஒவ்வொரு நபருக்கும் இந்தக் குழு நிரந்தரமான வகையில் கொள்கை, சமயம், மொழி, இனம், பகுதி மற்றும் பாலின அங்கீகாரம் வழங்குகிறது. பொதுவாக ஒரு பிரிவின் கீழுள்ள பெருமளவு மக்கள் நெருக்கத்தோடு வாழ்வதும், குறிப்பிட்ட ஒரு பிரிவு மற்ற பிரிவுகளை விட ஆற்றல் கொண்டதாக மாறி, குழு ஒழுங்குமுறைகளையும் வாழ்க்கை முறையையும் நிர்ணயம் செய்கிறது. சமயம்/இனம் ஆகியவற்றை அடிப்படையாக கொண்ட இத்தகைய வாழ்க்கை ஒழுங்குமுறைகளால் இரண்டு பிரிவினருக்கிடையே மோதல்கள் ஏற்படுகின்றன. இவை காலம், இடம், சூழ்நிலை, சமூகக் கட்டமைப்பு, விழிப்புணர்வு, பொருளாதார விருப்பம் மற்றும் தலைமைத்துவம் காரணங்களை அடிப்படையாகக் கொண்டது.

மத/வகுப்பு/இனவாத வன்முறைக் கலவரம் ஏற்படுவதற்கான அடிப்படை அமைப்புகளாகக் கீழ்க்கண்டவைகளை வி. வி. சிங் குறிப்பிடுகிறார்:

1. மக்கள் தொகை அளவு

2. மக்கள் தொகைப் பெருக்கம்

3. பொதுவான விருப்பம் மற்றும் பகைமை

4. மக்கள் தொகையின் ஆற்றல், எண்ணிக்கையைப் பொறுத்த பொருளாதார ஏற்றம், ஆயுதங்கள் வைத்திருப்பது குழப்பநிலை மற்றும் செயலின் ஆற்றல்

5. அரசாங்கப் பொதுப் பணி நிர்வாகம் மற்றும் காவலர்களின் திறமையற்ற நிலை.

வகுப்புவாதத்திற்கான பல முக்கியத்துவம் வாய்ந்த முதன்மைக் காரணங்களில் சமூகம், சமயம், அரசியல், பொருளாதாரம், சட்டம், உளவியல், நிர்வாகம், வரலாறு உள்ளிட்டவை அடங்கும்.

1. சமூகக் காரணிகள்: சமூக மரபுகள், இனம் மற்றும் இடம் / பிரிவு ஆகியவை.

2. சமய காரணிகள்: சமய மதிப்பீடுகள் மற்றும் சமய ஒழுங்குகளில் சரிவு, சமயக் கொள்கையில் பிடிவாதமான அணுகுமுறைகள், சமயத்தை அரசியல் லாபத்திற்காகப் பயன்படுத்துதல், சமய வகுப்புவாதக் கொள்கை போன்றவை.

3. அரசியல் காரணிகள்: சமயம் சார்ந்த அரசியல், சமய மேலாதிக்க அரசியல்சார்பு நிறுவனங்கள், சமயத்தை மையமாகக் கொண்ட தேர்தல் உத்தி, சமயச் செயல்பாடுகளில் அரசியல் தலையீடு, அரசியல் லாபத்திற்காக சமய வகுப்புவாதத்தை உருவாக்கி வளர்த்தல்.

4. பொருளாதாரக் காரணிகள்: பொருளாதாரத் தரத்தில் தாழ்ந்த சிறுபான்மை சமயங்கள், சமயங்களுக்கு இடையேயான ஏற்றத்தாழ்வுள்ள பொருளாதார வளர்ச்சி, போட்டிச் சந்தை, விரிவடையாத வணிக செயல்பாடுகள், இடப்பெயர்வு.

5. சட்டம் சார்ந்த காரணிகள்: அனைத்து மக்களுக்கும் பொதுவான சிவில் சட்டத்திற்கான ஆதரவு மற்றும் எதிர்ப்பு நிலை, சிறுபான்மையினருக்கான சிறப்புச் சட்ட ஷரத்துக்கள் மற்றும் சலுகைகளை எதிர்க்கும் மனப்பாங்கு.

6. உளவியல் காரணிகள்: பெரும்பான்மை—சிறுபான்மை சமயங்களின் பரஸ்பர தப்பெண்ணம், பரஸ்பர நடைமுறை ஈடுபாடு இல்லாதநிலை, வதந்தி, அச்ச உணர்ச்சி, எதிரெதிர் முகாம் உணர்வு.

7. மேலாண்மைக் காரணிகள்: அரசாங்கத்தின் பல்வேறு அமைப்புகளுக்கிடையே ஒருங்கிணையாத நிலை, உளவு அமைப்பின் திறமையற்ற பணி, ஒரு சார்பு எண்ணம் கொண்ட காவலர்கள் மற்றும் காவலர்களின் செயலற்றநிலை.

8. வரலாற்று காரணிகள்: அயல்நாட்டவரின் படையெடுப்பு, சமய வழிபாட்டுத் தலங்களைச் சேதப்படுத்துதல், காலனி ஆட்சியாளர்களின் பிரித்தாளும் கொள்கை, பிரிவினைவாதம், வகுப்புப்பற்று, நிலப்பிரச்சனை.

9. அயல்நாட்டு காரணிகள்: வெளிநாட்டவரின் ஆயுதங்கள் பயிற்சி மற்றும் பண உதவி, இந்தியாவைத் துண்டாட வகுப்புப்பற்றுள்ள நிறுவனங்களை ஆதரித்தல்.

சமய அடிப்படைவாதத்திற்கு உதவும் பல்வேறு காரணங்களை, மிகஎளிதாகத் தெரிபவை, முதன்மை ஒருங்கிணைப்பு, சிறியஅளவில் சினமூட்டுபவை மற்றும் வெளிப்படையாக செயல்படாமை என நான்கு வகைகளில் சிரில்பர்ட் (1944) உள்ளடக்குகிறார்.

வகுப்புவாத வன்முறை, சமய அடிப்படைவாதிகளால் தூண்டப்பட்டு குறிப்பிட்ட பிரிவினருக்கு எதிராக சுயநல அரசியல் செயல்பாட்டாளர்களால் ஆதரிக்கப்படுகிறது. வன்முறை எளிதாகப் பரவவும், குற்றவாளிகள் தப்பிச்செல்லவும் நகர அமைப்பு உதவுகிறது. வெளிநாடுகளிலிருந்து இந்தியாவிற்கு வரும் பணவரவில் இந்தியாவில் இருந்து வேலைக்காக சென்று சம்பாதித்து அனுப்பும் கணிசமான அளவு இஸ்லாமியர், சீக்கியர் உள்ளிட்ட சிறுபான்மையினர் அடங்குவர். இவர்களில் பலர் வழிபாட்டுத்தலங்கள், பள்ளிகள், மற்றும் சமூக சேவை நிறுவனங்களை நிறுவ நிதி உதவி செய்கின்றனர். இந்தப் பணம் தவறான வழிகளில் சென்று சமய அடிப்படைவாதிகளுக்கும், தீவிரவாதிகளுக்கும் பயன்படுகின்றன. தொலைத்தொடர்பு சாதனங்கள் பதற்ற நிலையை உருவாக்கப் பயன்படுத்தப்படுகின்றன. செய்திதாள்களில் சில நேரங்களில் வெளிவரும் செவிவழிச் செய்திகள், வதந்தி, தவறான விளக்கம் போன்றவை வகுப்புவாத உணர்வுகளுக்கு தீ வைக்கிறது. அதிகாரத்தைத்

தக்கவைத்துக் கொள்ள இத்தகைய சூழ்நிலைகளை அரசியல்வாதிகள் தங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்கிறார்கள். மக்கள் மனதில் அவநம்பிக்கை, பயம் மற்றும் சந்தேகத்தை விதைத்து, பரவவிட்டு பிரச்சாரம் செய்வதன் மூலம் வகுப்புவாத உணர்வை வீரியமாக்குகின்றனர்.

## இந்தியாவில் வகுப்புவாதம்

### இந்து–முஸ்லீம் வகுப்புவாதம்

சமயச் சார்பற்ற ஜனநாயகக் குடியரசான இந்தியாவில் இந்துக்கள், இஸ்லாமியர், கிறிஸ்தவர், சீக்கியர், புத்த மதத்தவர், சமண சமயத்தவர் உள்ளனர். இச்சமயங்கள் பல பிரிவுகளைக் கொண்டதாக உள்ளன. இந்தியாவில் இரண்டாவது பெரிய சிறுபான்மைச் சமூகமாக உள்ள இஸ்லாமியர் நாட்டின் பல்வேறு பகுதிகளில் வாழ்கின்றனர். இந்துக்களைப் போலவே இஸ்லாமியரும் மொழி, கலாச்சாரம் மற்றும் சமூகப் பொருளாதார நிலைகளில் பல வகையைச் சார்ந்தவர்களாக உள்ளனர். இந்து–இஸ்லாமியர்–சீக்கியர் இடையே நட்பிணக்கமற்ற நிலை பல ஆண்டுகளாக இருந்து வருகிறது. இந்து–கிறிஸ்தவர் மோதல் சமீப கால நிகழ்வாகும்.

இந்து–முஸ்லீம்களிடையேயான பகை உணர்வை வளர்த்ததில் பல்வேறு காரணங்கள் பங்குவகித்தன. இந்தியாவின் மீதான இஸ்லாமியரின் படையெடுப்பு 16ஆம் நூற்றாண்டில் தொடங்கினாலும் கஜினி முகமது மற்றும் கோரி முகமது போன்ற இஸ்லாமிய வெற்றியாளர்கள் சமய அதிகாரத்தை நிறுவுவதைவிட செல்வத்தைக் கைப்பற்றுவதில் மட்டுமே ஆர்வம் கொண்டிருந்தனர். பின்னர் மொகலாயர்கள் தங்கள் ஆட்சிக்கும் இஸ்லாம் சமயத்திற்கும் அடித்தளமிட்டனர். மதமாற்றம், கோவில்கள் இடிப்பு, மசூதிகள் கட்டுவது போன்ற செயல்கள், இந்தியாவில் தங்கள் அதிகாரத்தை நிறுவிய ஆங்கிலேயர்கள் தங்களது மேலாதிக்கத்தைக் காக்கவும், ஆட்சியைத் தக்க வைக்கவும் பின்பற்றிய பிரித்தாளும் மனப்பான்மை, சுதந்திரப் போராட்டத்தின்போது இந்து–இஸ்லாமியர் உறவு நட்பிணக்கமற்ற முறையில் தொடர்ந்ததை அடுத்து உருவான 'அதிகார அரசியல்', பாகிஸ்தானைப் பிரித்ததால் ஏற்பட்ட கசப்புணர்வும் நம்பிக்கையின்மையும், இந்து–முஸ்லீம்களிடையே நிலவிய வகுப்புபற்று இஸ்லாமியர் தேசப்பற்றற்றவர்கள் என்ற பிரச்சாரம், இஸ்லாமிய–இந்து வலதுசாரி வாதம், இந்து–இஸ்லாமிய அரசியல் கட்சிகளின் பிடிவாத குணம், இந்துக்களையும் இஸ்லாமியர்களையும் ஒன்றுபடுத்தி பிரச்சனைகளைத் தீர்த்து வைக்கும் முயற்சியில் ஏற்பட்ட

தோல்வி போன்ற பிற காரணங்களும் இந்து—முஸ்லீம் சமூகத்தினரிடையே வகுப்புவாதப் பூசல்கள் எழக் காரணமாகி மதஅடிப்படைவாதத்தை வளர்த்தெடுத்தன. இந்து—முஸ்லீம் வகுப்புவாதத்திற்கு அரசியல், பொருளாதாரக் காரணங்களும் சமூக, பண்பாட்டுப் பழக்கவழக்கங்களும் துணைபுரிந்தன.

1947—ல் இந்தியா—பாகிஸ்தான் பிரிவினையால் பல்லாயிரம் இந்து, முஸ்லீம் மற்றும் சீக்கியர் இறந்தனர்; பல லட்சம் மக்கள் அகதிகளாயினர். வகுப்புப்பற்று மேலும் வளர, பிரிவினை காரணமானது. இத்தகைய வகுப்புப்பற்று இந்திய சமூக, அரசியலை மாற்றியமைத்ததுடன் வளர்ச்சிக்குத் தடையாகவும், நாட்டை உருக்குலைக்கவும் செய்தது. **1992—டிசம்பர் 6—ம்** தேதி அயோத்தியில் பாபர் மசூதி இடிக்கப்பட்டபோது வகுப்புவாத வன்முறை பல்வேறு மாநிலங்களிலும் வெடித்து ஆயிரத்திற்கும் அதிகமானோர் இறந்தனர். ராம்ஜென்மபூமி—பாபர் மசூதி பிரச்சனை இந்து—முஸ்லீம் வகுப்பு நல்லுறவை மிகவும் பாதித்து வருகிறது.

இந்திய அரசு தங்களது பிரச்சனைகளை சரியாகப் புரிந்துகொள்ளாமல் தொடர்ந்து புறக்கணிப்பதாகவும், 'பெரும்பான்மை' என்ற வலிமையைப் பயன்படுத்தி சிறுபான்மையினரான தங்களை அடக்கி ஒடுக்க விரும்பும் இந்துத்துவ சக்திகளால் தங்களின் எதிர்காலம் கேள்விக்குறியாக இருப்பதாகவும், மற்ற சிறுபான்மைச் சமூகத்தினரைப்போல் மனக்குறையை வெளிப்படுத்தும்போது தாங்கள் மூர்க்கத்தனமானமாகப் பார்க்கப்படுவதாகவும், இந்தியாவைத் துண்டாட வெளிநாட்டவரின் தூண்டுதலால் செயல்படும் வன்முறையாளர்களாக சித்தரிக்கப் படுவதாகவும் இஸ்லாமியர் ஆதங்கப்படுகின்றனர். மாறாக, இஸ்லாமியருக்கு அரசு தாராளமாக சலுகைகள் தந்து நடந்து கொள்வதாக வலதுசாரி இந்து அமைப்புகள் குற்றம் சுமத்துகின்றன. தங்களுக்கு அநீதி இழைக்கப்பட்டு விட்டதாகக் கருதும் இந்து—இஸ்லாமிய அடிப்படைச்சமயவாதிகள் தீவிரவாதச் செயல்களில் செயல்களில் ஈடுபட்டு வருவது கவலையடையச் செய்கிறது. இந்து—இஸ்லாமியரின் சில தரப்பினர் வன்முறைகளில் ஈடுபடுவதற்குப் பதிலடியாக இந்து—இஸ்லாமிய அமைப்புகளில் உள்ள சிலர், ரயிலில் குண்டுவெடிப்பு எனப் பல்வேறு சம்பவங்களில் ஈடுபட்டிருப்பது அதிர்ச்சிதரத்தக்கதாக உள்ளது.

சச்சார் கமிட்டி, ரங்கநாத் மிஸ்ரா கமிஷன் ஆகியவை முஸ்லிம்களின் வாழ்நிலை பற்றி ஆராய்ந்து அவர்களுக்குக் கல்வி, வேலைவாய்ப்பில் இடஒதுக்கீடு வழங்க பரிந்துரை செய்துள்ளன. இந்தியாவின் மொத்த

மக்கள் தொகையில் 14 சதவிகிதமாக உள்ள முஸ்லிம்களுக்கு 10 சதவிகித இடஒதுக்கீடு வழங்க வேண்டும் என்று ரங்கநாத் மிஸ்ரா கமிஷன் பரிந்துரை செய்துள்ளது. மத்திய அரசு இந்தப் பரிந்துரை மீது முடிவெடுக்க முடியாமல் காலம்தாழ்த்தி வரும் நிலையில் மத அடிப்படையில் இடஒதுக்கீடு வழங்குவது சரியா தவறா என்ற விவாதம் மீண்டும் முக்கிய இடத்தைப் பிடித்துள்ளது. முஸ்லிம்களுக்கும் இதர சிறுபான்மை இனத்தவர்களுக்கும் இட ஒதுக்கீடு வழங்க பரிந்துரைத்துள்ள ரங்கநாத் மிஸ்ரா கமிஷன் அறிக்கை பெரும்பான்மையினர் நலனுக்கு எதிரானது எனப் பிரச்சாரம் செய்யப்படுகிறது. முஸ்லிம்களை தேசிய நீரோட்டத்தில் கொண்டுவர சலுகைகள் தரப்பட வேண்டியது அவசியம் எனவும், ஆனால் அதேசமயத்தில் மதரீதியான இடஒதுக்கீட்டைப் பயன்படுத்தி மதமாற்றம் செய்யும் போக்கு உருவாக அனுமதிக்கக் கூடாது எனவும் கருத்துக்கள் வெளியிடப்பட்டு வருகின்றன.

**இந்து—சீக்கியர் வகுப்புவாதம்**

இந்தியாவின் மக்கள் தொகையில் ஏறத்தாழ 2 சதவீதமாக உள்ள சீக்கியர்கள் நாட்டின் பல்வேறு பகுதிகளில் பரவலாகக் காணப்பட்டாலும் அதிக அளவில் பஞ்சாப் மாநிலத்தில் வாழ்கின்றனர். இந்து மதக்கோட்பாடுகளை எதிர்த்து உருவான மறுமலர்ச்சி இயக்கமான சீக்கியம், 10வது குருவின் மறைவிற்குப் பின்னர் குருவை ஏற்றுக்கொண்ட வழக்கத்தை மாற்றி புனிதநூலான 'கிராந்சாஹிப்'பை ஏற்றுக் கொள்ளும் வழக்கத்தை உண்டாக்கியது. சீக்கிய குருமார்களின் கட்டுப்பாட்டில் இருந்த சில குருத்துவாராக்களில் குருமார்கள் தங்கள் பதவியைத் தவறாக பயன்படுத்திச் சொத்து சேர்த்ததை சுட்டிக்காட்டி அவர்களுக்கு எதிராக ஒரு இயக்கத்தைத் தொடங்கியவர்கள் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் ஆளுமையின்கீழ் குருத்துவாராக்கள் கொண்டுவரப்பட வேண்டும் என்று வற்புறுத்தியதன் விளைவாக கடின போராட்டத்திற்குப் பின் "சிரோன்மணி குருத்துவாரா பிரபந்தக் கமிட்டி" உருவானது. இந்தக் கமிட்டியின் தலைவர் சீக்கிய மதத்திலும், சீக்கியர்களின் அரசியலிலும் முக்கியப் பங்கு வகிப்பவராக இருந்து வருகிறார்.

சீக்கிய மதகோட்பாடுகள், வழிபாடுகள் மற்றும் பழக்கவழக்கங்களில் எளிமை, கண்டிப்பு மற்றும் தூய்மையை, வழிபாடுகளிலும், சமயச் சடங்குகளிலும் கடைபிடிக்க ஒரு பிரிவைச் சேர்ந்த அடிப்படைசீக்கியர்கள் வலியுறுத்தி வருகிறார்கள். மற்றொரு பிரிவைச் சேர்ந்த சீக்கியர்கள் தமது மக்களுக்கு "காலிஸ்தான்" என்ற தனி மாநிலம் வேண்டும் எனக்

கிளர்ச்சியில் ஈடுபட்டனர். அமிர்தசரஸ் பொற்கோவிலிலிருந்த சீக்கிய காலிஸ்தான் தீவிரவாதிகளை அப்புறப்படுத்தி கோவிலைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் கொண்டுவந்த இந்திய ராணுவ நடவடிக்கையை எதிர்த்து வன்முறைகளில் ஈடுபட்டனர். இப் போராட்டம் பல உயிர்களைப் பறித்தது. 1984–அக்டோபரில் பிரதமர் இந்திரா காந்தி சீக்கிய காவலரால் கொல்லப்பட்டபோது டெல்லி மற்றும் வட மாநிலங்களில் சீக்கியர்களுக்கு எதிராக வெடித்த கலவரத்தில் நூற்றுக்கணக்கான சீக்கியர்கள் கொல்லப்பட்டனர்; சொத்துக்கள் சூறையாடப்பட்டு கொளுத்தப்பட்டன. பதிலுக்கு பல இந்துக்கள் கொல்லப்பட்டனர். சீக்கியருக்கும், இந்துக்களுக்கும் இடையேயான உறவு விரிசலடைந்தது.

## தேவையான நடவடிக்கைகள்

மத வேற்றுமை, இன வேற்றுமை, மொழி வேற்றுமை, சாதி வேற்றுமை என வேற்றுமைகளால் நிறைந்துள்ள நம் நாட்டில் வேற்றுமைகளைச் சரியாகப் புரிந்து கொள்ளாதது மோதல்களுக்குக் காரணமாக அமைகிறது. வகுப்புப்பற்றை ஒரு கருவியாகப் பயன்படுத்தி தமது நோக்கத்தை நிறைவேற்றிக்கொள்ள மதவெறியர்கள் தயங்குவதில்லை. அரசியலுடன் சமயம் கலக்கப்படும் போக்கால் நாடு வகுப்புவாதப் பதற்றத்திற்கு உள்ளாகிறது. சிறு சிறு பிரச்சனைகள், உப்புச் சப்பில்லாத விவகாரங்கள் பெரிதாக்கப்பட்டு இரு வகுப்பினர்களுக்கு இடையே கலவரமாக வெடிக்கத் தூண்டுதலாக்கப்படுகிறது. இதனால் உயிர்ப்பலி, காயம், பொருள்சேதம் ஆகியவற் டு சிறுபான்மை மக்களிடையே பாதுகாப்பற்ற நிலையை உருவாக்குகிறது. வெவ்வேறு சமயத்தை சார்ந்த இந்துக்கள், இஸ்லாமியர், கிறிஸ்தவர், சீக்கியர், புத்த மதத்தவர், சமணர்கள் அரசியல் மற்றும் பொருளாதார அதிகாரங்களைப் பகிர்ந்து கொள்வது போல, தங்களுக்குள் சமய மற்றும் பண்பாட்டு பழக்கவழக்கங்களையும் பகிர்ந்து கொள்ள முன் வரவேண்டும்.

மதக் கலவரத்திற்கு மூல காரணம் எது, எங்கு தவறு உள்ளது என்பது கண்டறிந்து தடுக்கப்பட வேண்டும். இரு வகுப்பினரிடையே மோதல் உருவாகக் காரணமாக உள்ள சக்திகளை மக்கள் அடையாளம் கண்டு ஒதுக்கி வைக்க வேண்டும். இருதரப்பிலும் உள்ள மக்கள் சமூக விரோதச் சக்திகளின் தூண்டுதலுக்கு இரையாகி விடாமல் தடுக்கத் தேவையான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

மதத்தின் பெயரால் வன்முறையை ஆதரித்தால் அதற்கு ஒரு முடிவே இருக்காது; தீயை தீயால் அணைக்க முடியாது. எந்த வடிவத்தில் தீவிரவாதம் தலையெடுத்தாலும் அதை எதிர்கொள்ளத் தீவிரவாதம் பயன்படாது. வெறுப்புப் போக்கைக் கடைப்பிடிக்கும் அனைத்து தரப்பினரும் தங்கள் நிலையை மறுபரிசீலனை செய்ய வற்புறுத்த வேண்டும்.

மத வன்முறையையும் வகுப்புக் கலவரத்தையும் தடுத்துக் கட்டுப்படுத்தவும், பாதிக்கப்பட்டவர்களுக்கு நிவாரணம் வழங்கவும் வடிவமைக்கப்பட்ட "மத வன்முறை (தடுப்பு, கட்டுப்பாடு மற்றும் பாதிக்கப்பட்டவர்களுக்கு மறுவாழ்வு) 2005" சட்ட மசோதா நிறைவேற்றப்பட விரைந்து நடவடிக்கை எடுக்க வேண்டும்.

பின்தங்கிய சிறுபான்மையினருக்கு நம்பிக்கை ஏற்படுத்தி அவர்கள் முன்னேற உந்துகோலாக இருக்கும் இடஒதுக்கீட்டுடன் அதிகாரத்தைப் பெற்றுத்தரும் முயற்சி அரசியலாக்கப்படாமல், ஒதுக்கீடு தொடர்பாக விரைந்து முடிவு செய்ய வேண்டும். சிறுபான்மையினருக்கு அதிகாரத்தில் பங்களிக்கப்பட வேண்டியதின் அவசியத்தை உணர்ந்து தேவையான நடவடிக்கைகள் எடுக்க வேண்டும்.

சிறுபான்மையினரின் முன்னேற்றத்திற்காக அறிவிக்கப்பட்டுள்ள "15 அம்சத் திட்டத்தை" விரைந்து அமல்படுத்த வேண்டும்.

"தேசிய சிறுபான்மை ஆணையம்" தண்டனை பரிந்துரைக்கும் அதிகாரங்கள் கொண்டுள்ளதாகவும், அரசியலமைப்புச் சட்ட அந்தஸ்து வழங்கப்பட்டதாகவும் ஆக்கப்பட வேண்டும்.

வகுப்புப்பற்று, பகுதிமனப்பான்மை, மண்டலப்பற்று ஆகிய பிரச்சனைகளைக் கையாள்வதற்காக அமைக்கப்பட்டுள்ள "தேசிய ஒருமைப்பாட்டுக்குழு" திறம்படச் செயல்பட முயற்சிகள் மேற்கொள்ளப்பட வேண்டும்.

## References

Ahuja, Ram. Social Problems in India. 2nd ed. (Jaipur: Rawat Publications, 1997).

Chandra, Bipin. Communalism in Modern India. (Delhi:Vikas Publications, 1984).

Oommen, T.K. The Hindustan Times, August 8, 1989.

Singh, V.V. Communal Riots. (Jaipur: University of Rajasthan,1990).

# பயங்கரவாதம்

பயங்கரவாதம், தீவிரவாதம், பிரிவினைவாதம், உள்நாட்டு போர், புரட்சி, மறைந்திருந்து தாக்குதல், அச்சுறுத்தல் போன்ற பல்வேறு வார்த்தைகள் அனைத்திற்கும் பொதுவானதாக இருப்பது "வன்முறை." வன்முறையைப் பயன்படுத்தி ஒட்டுமொத்த சமூகத்தையோ, சமுதாயத்தையோ அல்லது ஒரு பிரிவினரையோ பயமுறுத்துவதன் மூலமாக தங்களது நோக்கத்தை நிறைவேற்ற எத்தனிப்பது பயங்கரவாதம். இது "கட்டமைக்கப்பட்ட ஒரு அமைப்பின் மிரட்டல்" எனவும், "அரசாங்கத்திற்கு எதிரானவர்களால், அரசாங்கத்திற்கு எதிராக மேற்கொள்ளப்படுவது" எனவும் கருதப்படுகிறது.

பயங்கரவாதம் வன்முறையை அடிப்படையாகக் கொண்டது. மரணத்தையோ, பேரழிவையோ, பயத்தையோ உருவாக்குவதற்காக திட்டமிட்டு, அமைப்பு ரீதியாக செயல்படுத்தப்படுவது. வன்முறை சார்ந்த நடவடிக்கைகள் மூலம் சமூகத்தில் பயத்தை உருவாக்கி அதன் மூலமாக அரசியல் ஆதாயம் பெறுவது, எனவும், "அமைப்புசார் குழுவால் வன்முறையை ஆயுதமாகவும், வழிமுறையாகவும் கொண்டு தங்களது நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காகத் திட்டமிட்டு நடத்தும் செயல்" எனவும், "ஒரு குழுவின் நோக்கம் நிறைவேறத் தடையாக இருக்கும் அதிகாரம்/பொறுப்பை செயல்படுத்தும் அல்லது ஆதரவாக இருக்கும் தனி நபர்களுக்கு எதிரான வன்முறையான நடவடிக்கைகள்" எனவும் பயங்கரவாதம் வரையறுக்கப்படுகிறது. 253

'பயங்கரவாதி' என்பவன் "விரும்பத்தகாத சமூக அமைப்பையோ அல்லது அரசமைப்பையோ அகற்றுவதான தங்களது 'புரட்சிகரமான' நோக்கத்திற்கு இடையூறாக இருப்பவர்கள் மீது தமது அமைப்பு வழங்கும் தண்டனையை வன்முறையால் நிறைவேற்றுபவன்." பயங்கரவாதி வெறுமனே பயமுறுத்துபவன்/ மிரட்டுபவன் அல்லன்; மரணத்தையோ பேரழிவையோ ஏற்படுத்தும் செயல்புரிபவன். மாட்டிக்கொள்ளும்போது தான் நிரபராதி என வாதாடாமல், தனது கொள்கைகளுக்காகச் செய்ததை ஒப்புக் கொள்பவன். அரசாங்கத்தை அகற்றுவதையோ அல்லது சமூக ஒழுங்கைக் குலைப்பதையோ நோக்கமாகக் கொண்டுள்ள பயங்கரவாதம் "அரசாங்கத்திற்கு எதிரானவர்களால்" மேற்கொள்ளப்படுகிறது. பயங்கரவாதம் தனி நபர்களுக்கு இடையேயான சண்டை அல்ல; சமூகக் குழுக்களுக்கும், அரசியல்/அரசு அதிகாரத்திற்கும் இடையேயான போராட்டம்" என வர்ணிக்கப்படுகிறது.

மக்களாட்சியில் பயங்கரவாதம் என்பது பெரும்பாலான மக்களின் முடிவுகள், விருப்பங்கள், கருத்துக்களுக்கு எதிராகக் குறைந்த எண்ணிக்கையிலான மக்கள்திரள் தமது நோக்கங்களை நிறைவேற்ற அச்சுறுத்தல், கட்டாயப்படுத்துதல், தண்டித்தல் ஆகியவற்றைக் கருவியாகப் பயன்படுத்துவதைக் குறிக்கிறது. இது வன்முறை வழிமுறைகளை மேற்கொண்டு, திட்டமிட்டுச் செயல்படுவது என்பது குறிப்பிடத்தக்கது.

இந்தியாவில் பயங்கரவாதம் கடந்த 40 ஆண்டுகளாக தீவிரமடைந்துள்ளது. பெருமளவு இளைஞர்களை, குறிப்பாக வேலையின்மையால் பாதிக்கப்பட்ட, வழிமாற்றம் செய்யப்பட்ட, சித்தாந்தங்களால் ஈர்க்கப்பட்டவர்களைக் கொண்டதாக பயங்கரவாதக்குழுக்கள் உருவாகியுள்ளன. சுயநலமான அரசியல் தலைமையும், ஊழல் மலிந்த அரசு நிர்வாகமும் ஆயிரக்கணக்கான இளைஞர்களிடம் வெறுப்பையும், விரோதத்தையும் ஏற்படுத்தி அவர்களை வன்முறையாளர்களாக உருவாக்கியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

பயங்கரவாதத்தின் தன்மையாக சாக்ஸனா (Saxena, 1985: 14-35) கீழ்க்கண்டவற்றைக் கருதுகிறார்:

- வன்முறை வழிமுறை
- குறிப்பிட்ட நோக்கம் கொண்டது
- திட்டமிட்டு நிகழ்த்துவது
- அரசு அமைப்பை, அதிகாரத்தை நிலைகுலையச் செய்து அதன் ஆற்றலைக் குறைப்பது
- வெகுமக்களின் ஆதரவற்றது
- பயங்கரவாதச் செயல் புரிபவன், அந்த நாட்டின் குடிமகனாகவோ அல்லது அந்த நாட்டை சாராதவனாகவோ இருக்கலாம்.

பயங்கரவாதத்தின் வரையறைகளில் இருந்து அதன் குணாம்சங்களாகக் கீழ்க்கண்டவற்றைக் குறிப்பிடலாம்.

- ❖ அச்சுறுத்தும் நோக்கம் – எவரைத் தாக்குதலுக்கு உள்ளாக்க வேண்டுமோ அவரிடம் பயத்தை உருவாக்குதல்.

- ❖ முக்கியமாக அல்லது உடனடியாக பாதிக்கப்படுவோர்.

- ❖ முக்கிய இலக்குகள் – பொதுமக்கள், குழுக்கள் அல்லது தனிமனிதர்கள்.

- ❖ முக்கிய இலக்கை ஒழிப்பது, சொத்துக்களுக்கு நாசம் விளைவிப்பது மற்றும் அழிப்பது.

- ❖ அரசியல் சார்ந்த காரணம் கொண்டது.

## பயங்கரவாதத்தின் வழிமுறைகள்

- வெடிபொருட்களைப் பயன்படுத்தி பொதுமக்கள் கூடும் இடங்களான வணிகக் கட்டிடங்கள், கடைப்பகுதிகள், தொடர்வண்டி, பேருந்துகள் மற்றும் அதன் நிலையங்களை வெடிக்கச் செய்தல்.
- ஆள்கடத்தல்.
- முக்கியமான பிரமுகர்களைக் கொல்லுதல்.

## பயங்கரவாதத்தின் தன்மைகள்

கொடூரமான வழிமுறைகளைப் பயன்படுத்தி, தெரிவு செய்யப்பட்ட இலக்குகளில் திட்டமிட்டு தாக்குதல் நடத்தி மனித உயிர்களையும், சொத்துக்களையும் நாசம் செய்யும் நடவடிக்கை. பாதிக்கப்பட்டுள்ளதாக கருதுபவர்கள் தங்களுக்கு வேண்டியவற்றை அடைவதற்காக, சாதிப்பதற்காக இச்செயல்களில் ஈடுபடுகிறார்கள். இது

- ○ நாட்டிற்கும் சமுதாயத்திற்கும் எதிரானது

- ○ அரசியல் ஆதாயம் கொண்டது

- ○ குற்ற நடவடிக்கை; சட்டத்திற்குப் புறம்பானது

- வன்முறையால் பாதிக்கப்படுபவர்கள் பிரச்சனையுடன் நேரடியாகத் தொடர்பு இருப்பவர்களாகவோ அல்லது இல்லாதவர்களாகவோ இருக்கலாம்.

- தங்களது நோக்கம் நிறைவேறக் கட்டாயப்படுத்துவதற்கும், பணியவைப்பதற்கும் தாக்குதலுக்கு உள்ளாக்கப்படுபவரிடம் மட்டுமல்லாது பொது மக்களிடமும் பயத்தையும், பீதியையும் உருவாக்குவது.

- பொதுமக்களிடையே அரசின் இயலாமையையும், கையாலாகத தனத்தையும் உணரச் செய்வது.

- எதிர்த்தாக்குதலை வரவழைப்பது.

## பயங்கரவாதத்தின் முக்கிய நோக்கங்கள்

யாரைத் தங்களுக்கு எதிரிகளாகத் தடைகளாக நினைக்கிறார்களோ, யார் தங்களை அடக்கி ஒடுக்குவதாகக் கருதுகிறார்களோ அவர்களை அகற்றி ஒழிப்பது; நிர்மூலமாக்குவது. பயங்கரவாதிகளின் நோக்கம், குழுவுக்கு குழு மாறுபட்டாலும், பயங்கரவாதத்தின் முக்கிய நோக்கங்கள், அனைத்துப் பயங்கரவாத குழுக்களுக்கும் ஒரே மாதிரியாகவே இருக்கின்றன. அவையாவன:

- பயங்கரவாதிகள் தங்கள் கோரிக்கைகளை நிறைவேறச் செய்வதற்காக அரசு மற்றும் சமுதாயத்தின் எதிர்வினை நடவடிக்கைகளை எதிர்பார்ப்பர். கடுமையான எதிர்வினை நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ளும் போது அவற்றை அடக்குமுறைகள் என விமர்சித்து அதன் மூலம் மக்களின் அனுதாபத்தைத் தங்களுக்குச் சாதகமாக்க விழைவர். பயங்கரவாதிகளின் அச்சுறுத்தல் காரணமாக முக்கியமான அரசியல், அரசு பிரமுகர்களுக்குக் கூடுதலாகப் பாதுகாப்பு அளிக்க வேண்டிய நிர்பந்தத்தில் காவல்துறை தனது பெரும்பாலான பலத்தை அதற்காகவே செலவழிக்க நேரிடுவதால், பொதுமக்களுக்கான பாதுகாப்புப் போதுமானதாக இல்லாமல் ஆகி தங்களின் பாதுகாப்பற்ற நிலை குறித்த பயமும், அரசின் இயலாமை குறித்த கவலையும் அவர்களிடம் மேலும் அச்சத்தைத் தோற்றுவிக்கும். இதைத்தான் பயங்கரவாதிகள் எதிர்பார்க்கிறார்கள்.

- ➢ வெகுமக்களின் பரந்துபட்ட ஆதரவைத் திரட்டுவதுடன், தங்கள் பால் அனுதாபம் கொண்டவர்களை மேலும் ஈர்த்து போர்க்குண முள்ளவர்களாக மாற்றுவது.

- ➢ தங்களது பலத்தைக் காட்டும் அதே சமயம் சட்டம் ஒழுங்கைக் காக்க முடியாத அரசின் கையாலாகாத நிலையை வெளிச்சத்திற்கு கொண்டு வந்து அரசு நிர்வாகத்தின் மீது வெறுப்பை ஏற்படுத்துவது.

- ➢ தங்களது எதிரிகளையும் உளவு பார்ப்பவர்களையும் அழிப்பதன் மூலம் தமது இயக்கத்திற்கு ஆபத்து நேராமல் காப்பதும், இயக்கத்தினர் தலைமைக்குக் கட்டுப்பட்டுச் செயலாற்றுவதை நிலைநிறுத்துவதும்.

- ➢ தங்களது பயங்கரவாத செயல்களுக்கானக் காரணங்களையும், தங்கள் பலத்தையும், பராக்கிரமத்தையும் பன்மடங்கு அதிகமாக விளம்பரப்படுத்துவது.

பயங்கரவாதத்தின் ஒட்டுமொத்த நோக்கங்களாகக் கீழ்க்கண்டவற்றை பல்ஜித் சிங் (1977:8) குறிப்பிடுகிறார்:

- ❖ பொதுமக்களின் ஆதரவைப் பெற முயற்சித்தல்.
- ❖ ராணுவம் மற்றும் காவல் படைக்கு இடையூறு விளைவிப்பது, அழிப்பது மற்றும் அரசாங்கத்தின் உளவியல் பலத்தை இழக்கச் செய்வது.
- ❖ உள்நாட்டு அமைதியைக் குலைப்பது, நாட்டு வளர்ச்சியைத் தடுப்பது.

ஜெய் மல்லின் (1971:9) அரசியல் பயங்கரவாதம் ஐந்து அடிப்படையான குறுகிய கால நோக்கங்களைக் கொண்டது என்கிறார். அவை:

- இயக்க உறுப்பினர்களின் மனஉறுதியை வளர்ப்பது

- இயக்கத்தைப் பற்றி விளம்பரப்படுத்துவது

- பொதுமக்களிடம் மனமாற்றத்தை ஏற்படுத்தி அரசுக்கு எதிராகத் திருப்பி, தனிமைப்படுத்துவது

- எதிர்க்கும் சக்திகளை ஒழிப்பது

- அரசுக்கு எரிச்சலூட்டி, கோபப்படுத்துவதன் மூலம் எதிர்வினை யாற்றச் செய்வது.

அரசியல் பயங்கரவாதத்தின் முக்கிய இலக்கு ஆட்சி அதிகார அமைப்பாகும். அந்த அமைப்பின் பிரதிநிதிகளாகவும், சார்பாளராகவும் இருப்பவர்கள் எதிரிகளாகப் பாவிக்கப்படுகிறார்கள். அதனால் ஆட்சி அதிகார அமைப்பு மட்டுமல்லாது அதனுடன் தொடர்புடையவர்களும் அழித்து, ஒழிக்கப்பட வேண்டியவர்களாக பயங்கரவாதிகளின் இலக்குக்கு ஆளாகிறார்கள்.

பயங்கரவாதத்திற்கும், பயங்கரவாதச் செயல்களுக்கும், பயங்கரவாதி களுக்கும் மக்கள் அளிக்கும் ஆதரவு, குழுவுக்கு குழு வேறுபட்டதாக உள்ளது. ஒரு பயங்கரவாதக்குழுவுக்கான மக்களின் ஆதரவு அதன் சித்தாந்தம், நோக்கங்கள், இலக்கை அடையும் வழிமுறைகள் ஆகியவை சார்ந்தது. ஒரு குறிப்பிட்ட குழுவின் சித்தாந்தத்தையும், நோக்கங்களையும் ஏற்றுக் கொள்ளும் பெரும்பான்மையோர் கூட அதன் வன்முறை சார்ந்த வழிமுறைகளை ஏற்பதில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஒரு இயக்கத்தின் இலக்கை ஏற்றுக்கொள்வோர் கூட அந்த இயக்கத்தை ஆதரிப்பதில்லை; அல்லது ஓரளவுக்கு மேல் ஆதரவு காட்டுவதில்லை. எனவே ஆதரவாக இருப்போர் எண்ணிக்கையும், ஆதரவின் தன்மையும் குழுவுக்கு குழு மாறுபட்டிருக்கிறது. பொதுவாகப் பயங்கரவாதச்செயல்களுக்கும், பயங்கரவாதிகளுக்கும் வெகுமக்கள் அளிக்கும் ஆதரவு என்பது பயங்கரவாதச் சித்தாந்தத்தை அல்லது காரணத்தை ஆதரித்தல், வழிமுறைகளை ஏற்றுக் கொள்ளுதல், பணம், பொருள் அளித்தல், வன்முறையற்ற ஊர்வலங்களில் பங்கேற்றல், ஆயுதங்கள், வெடிபொருட்கள் வழங்குதல், மறைந்து கொள்ளத் தங்குமிடம் அளித்துப் பாதுகாத்தல், வாய்மொழி அல்லது எழுத்துவடிவில் ஆதரவு தெரிவிப்பது, இயக்கத்தின் நடவடிக்கைகளில் தீவிரமாக ஈடுபடுவது என்பது போன்ற காரணிகள் மூலம் அறியலாம்.

பயங்கரவாதத்தின் வெற்றிக்குப் பெருமளவு துணை செய்வது அதன் ஆதரவுத் தளம். அத்தளம் அரசியல் மற்றும் சமூக ஆதரவையும், பணம், ஆயுதங்கள் மற்றும் பயிற்சியையும் உள்ளடக்கியது. பயங்கரவாதிகள் நிதியைப் பல்வேறு வழிகளில் – அன்பளிப்புகள், வரிவசூல், வங்கிக் கொள்ளைகள், கடத்தல், போதைப் பொருள் விற்பனை, ஆட்களைக் கடத்தி விடுவிக்கப் பெறும் பிணையத் தொகை – திரட்டுகிறார்கள். காவல்நிலையங்களைத் தாக்கி ஆயுதங்களைக் கொள்ளையடிப்பது,

அயல்நாடுகளில் இருந்து ஆயுதக் கொள்முதல் செய்வது, கல்குவாரிகளில் இருந்து வெடிமருந்துகளை மிரட்டிப் பெறுவது ஆகியவை மூலமாக ஆயுதங்களையும் வெடிமருந்துகளையும் குவிக்கிறார்கள்.

நியாயமான சமூக, பொருளாதார, அரசியல் காரணங்களுக்காக எல்லாவிதமான வழிமுறைகளிலும் முயற்சித்த பின்னரும் நிறைவேறாத நோக்கங்களுக்காக வேறு வழியில்லாத நிலையில் அரசுக்கு எதிராகப் போராடுவதாகப் பயங்கரவாதம் நியாயப்படுத்தப்படுகிறது. நியாயமான வழிமுறைகளைப் புறந்தள்ளிவிட்டு வன்முறைப்பாதையைப் *பின்பற்றுகிறார்கள் என* மக்கள் கருதும்போது பயங்கரவாதிகள் அந்நியப்பட்டுப் போகிறார்கள். பயங்கரவாதம் பொதுமக்களின் குறைவான ஆதரவு கொண்டதாகவும், கொடூரமான வன்முறையைக் கொண்டதாகவும் உள்ளது. குறைவான எண்ணிக்கையாளர்களைக் கொண்டிருந்தாலும் ஊடுருவல் மற்றும் மறைந்திருந்து தாக்கும் போர்முறை, வன்முறையில் ஒரு குறிப்பிட்ட நாட்டை மட்டுமல்லாது எல்லை தாண்டியதாக, சர்வதேசத்தன்மை கொண்டதாக, சர்வதேச நாடுகளையும் பயங்கரவாதம் அச்சத்திற்குள்ளாக்கியுள்ளது. வளர்ந்த நாடுகளிலும், வளரும் நாடுகளிலும் ஒரு முக்கியப் பிரச்சனையாக உருவெடுத்துள்ளது. மூளைச்சலவையும், கண்மூடித்தனமான ஆதரவும், உயிரைச் துச்சமெனக்கருதி மாய்த்துக் கொள்ளும் விருப்பமும், தியாக மனப்பான்மையும், உள்நாட்டிலும் வெளிநாடுகளிலும் திரட்டப்படும் ஆயுதம், பணம், பொருட்கள் போன்றவை பயங்கரவாதத்தை ஊக்குவிக்கின்றன.

சர்வதேசத் தூதரகங்கள், அடுக்குமாடி வணிகக் கட்டிடங்கள், வழிபாட்டு இடங்கள், கடைத்தெருக்கள், தொடர்வண்டி மற்றும் விமான நிலையங்கள், தொடர்வண்டிகள் மற்றும் விமானங்கள் ஆகியன பயங்கரவாதிகளின் முக்கிய இலக்காகியுள்ளன. உலகளாவிய மாநாடுகள், ஒலிம்பிக் போட்டி உள்ளிட்டவையும் இதிலிருந்து தப்பவில்லை. உயரமான நியூயார்க் நகர உலகவர்த்தக மையக் கட்டிடங்கள் இரண்டும் கடத்தப்பட்ட விமானங்களால் மோதப்பட்டு இடிந்து, சரிந்து, தரைமட்டமான 9/11 நிகழ்வு என்றென்றும் நினைவைவிட்டு அகலாததாகிவிட்டது.

ஒரு நாட்டில் இயங்கும் பயங்கரவாதக்குழுக்களுக்கு ஆதரவாக வேறு நாட்டில் இருந்து தனிநபர்களோ, குழுக்களோ, அரசோ, உதவும் எல்லை தாண்டிய பயங்கரவாதப்போக்கு சமீபகாலத்தில் அதிகரித்து வியாபித்துள்ளது. அதேபோல் ஒரு குறிப்பிட்ட சித்தாந்தத்தை முன்வைத்து பன்னாட்டு அளவில் பயங்கரவாத அமைப்புகள் ஏற்படுத்தப்பட்டு, தீவிரமாக

இயங்கிவருவதும் சமீபகாலத்தில் அதிகரித்துள்ளது. வன்முறையான, பயங்கரவாத நாடு என சில நாடுகளே கூட முத்திரை குத்தப்பட்டு, ஒதுக்கப்பட்டு கண்டனத்துக்குள்ளாக்கப்பட்டுள்ளன.

பயங்கரவாதம் தழைத்தோங்கிட, தகவல் தொழில்நுட்ப வளர்ச்சியும் துணைசெய்கிறது. அதிநவீன தகவல்தொடர்புச் சாதனங்களும், பெரும் பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய நவீனஆயுதங்களும், ஆர்.டி.எக்ஸ் போன்ற வெடிபொருட்களும், குறிப்பிட்ட நேரத்தில் தொலைதூரத்திலிருந்தே இயக்கி வெடிக்கச்செய்யும் வசதிகளும், குறிப்பிட்ட இலக்கைத்தாக்கும் ஏவுகணைகளும் பயங்கரவாதிகளுக்குத் தாராளமாகக் கிடைக்கின்றன. நவீன தகவல் தொலைத்தொடர்பும், போக்குவரத்துவசதிகளும் சர்வதேச அளவிலான ஒத்த கருத்துடைய பயங்கரவாதக்குழுக்களிடையே இணைப்பையும், இணைப்பு வலையையும் ஏற்படுத்தி நிதி, பயிற்சி, ஆயுதங்கள், அமைப்பு ரீதியான உதவிப் பரிவர்த்தனைகளையும், கூட்டுத் தாக்குதல்களையும் நடத்த உதவுகின்றன.

அரசியல் பயங்கரவாதம், பிரிவினைவாதம் ஆகியவற்றைத் தொடர்ந்து மத தீவிரவாதம் உலகம் முழுவதும் இன்று வேரூன்றித் தழைத்து வருகிறது. சர்வதேச பயங்கரவாதத்திற்குத் தேவையான பொதுவான அடையாளம்/காரணத்தைப் பெற மதம் கருவியாக்கப்படுகிறது. மனிதர்களிடையே அன்பையும், நல்லிணக்கத்தையும் போதிக்கும் மதம் இன்று வெறுப்பையும், வன்முறையையும் பிரயோகிக்கப் பயன்படுத்தப்படுகிறது. பயங்கரவாத வெறியாட்டத்திற்கு மதம் களமாகவும், தளமாகவும் ஆக்கப்பட்டுள்ளது.

## பயங்கரவாதத்தின் காரணங்களை விளக்கும் கோட்பாடுகள்

பயங்கரவாதத்திற்கான காரணங்களை "ஒப்பீட்டு ஏமாற்றக் கோட்பாட்டின்" அடிப்படையில் கர் (1977:47) விளக்குகிறார். மக்களின் எதிர்பார்ப்புகளுக்கும் அவை நிறைவேற அவர்களுக்கு வழங்கப்படும் வாய்ப்புகளுக்கும் இடையேயான இடைவெளியின் விளைவே அரசியல் வன்முறை என இக்கோட்பாடு கருதுகிறது. மக்களின் எதிர்பார்ப்புகளை நிறைவேற்றவும், அவர்களின் ஆக்கத்திறனைப் பயன்படுத்த வாய்ப்புகள் அளிக்கப்படாததும் வாய்ப்புகள் அதிகரிக்காத நிலையில் எதிர்பார்ப்புகள் மட்டும் அதிகரித்துச் செல்வதும், எதிர்பார்ப்புகள் அதிகரித்துச் செல்லும் நிலையில் அதற்கான வாய்ப்புகள் குறைவதும் ஆகிய இம்மூன்று தன்மைகளைக் காரணங்களாக இக்கோட்பாடு குறிப்பிடுகிறது.

பயங்கரவாதம் கீழ்க்காணும் நான்கு கோணங்களில் ஆராயப்படுகிறது:

1. பயங்கரவாதத்தின் தோற்றம், வளர்ச்சி, பல்வேறு கட்டங்களில் ஏற்பட்ட முக்கிய மாற்றங்கள் ஆகியவற்றை உள்ளடக்கிய 'வரலாற்றுப் பார்வை'.

2.தேசிய மற்றும் சர்வதேச அளவில் கட்டமைக்கப்பட்ட அரசியல் குழுக்களால் நிகழ்த்தப்படும் அரசியல் வன்முறை எனப் பயங்கரவாதத்தைக் காணும் 'அரசியல் பார்வை'.

3. சர்வதேச பயங்கரவாதத்தை எதிர்கொள்ள உலக நாடுகளுக்கிடையே கூட்டுமுயற்சியை ஏற்படுத்த இயற்றப்பட்டுள்ள நாடுஅளவிலான மற்றும் சர்வதேச அளவிலான சட்டங்களை மையப்படுத்தும் 'சட்டப்பார்வை'.

4. பயங்கரவாதத்தில் பங்கேற்கும் வகையினர் – பயங்கரவாதிகள், அவர்களின் இலக்குகள், அதனால் பாதிக்கப்படுவோர், பயங்கரவாதிகளின் நோக்கம், அவர்கள் ஒன்றிணைந்த சூழ்நிலைகள், அவர்களிடமிருக்கும் நிதி ஆதாரங்கள், பயங்கரவாதத்தைக் கட்டவிழ்த்து விடும் வழிமுறைகள் (கொல்வது, கடத்துவது, குண்டுவீசி அழிப்பது, கொள்ளையடிப்பது, கடத்துவது போன்றவை), பயங்கரவாத நிகழ்ச்சிகளின் விளைவுகள் (மரணம், காயம், சொத்துக்களைச் சேதப்படுத்தி அழிப்பது போன்றவை) ஆகியவற்றை ஆராயும் 'சமூகவியல் பார்வை'. பயங்கரவாதம் சமூக, அரசியல் அமைப்புக்களை எங்ஙனம் நிலைகுலையச் செய்கிறது, சமூக மாற்றத்தின் போக்கை மாற்றியமைக்கும் முறையாக எவ்வாறு செயல்படுகிறது, வெறுப்படைந்துள்ள புறக்கணிக்கப்பட்ட சிறுபான்மை மக்களுக்கும் அதிகாரத்தில் இருக்கும் மேல்தட்டு அரசியல் சக்திகளுக்கும், வாய்ப்புக்கள் மறுக்கப்பட்டதாக உணரும் குழுவுக்கும் அதிகாரத்தை குவித்து ஏகபோகமாகத் திகழும் குழுவுக்கும் இடையேயான சமூக உறவுகளை எவ்வாறு பாதிக்கிறது போன்றவற்றையும் சமூகவியல் பார்வை ஆய்வுக்குட்படுத்துகிறது.

பயங்கரவாதத்தை முற்றிலுமாக ஒழித்துக்கட்ட அரசியல் வாதிகளாலும், அரசாங்கத்தாலும் மட்டுமே முடியாது; பொதுமக்களிடையே பயங்கரவாதம் பற்றிய விழிப்புணர்வை வளர்த்து, வன்முறைக்கு எதிரான மனப்பான்மையை உருவாக்குவது அவசியம்.

பயங்கரவாதத்திற்கு எதிரான இந்திய அரசின் நடவடிக்கைகள் போதுமான அளவு கடுமையானதாக இல்லை என்றும், ஒரே போக்கான அணுகுமுறையை பின்பற்றாமல் அரசியல் சூழ்நிலைகளுக்கேற்றவாறு மாற்றுவதாகவும், அதனால் பயங்கரவாதத்தைக் கட்டுப்படுத்தத் தவறுவதாகவும் கடந்தகால நிகழ்வுகளைச் சுட்டிக்காட்டி விமர்சனங்கள் முன்வைக்கப்படுகின்றன.

பயங்கரவாதிகளின் எத்தகைய மிரட்டலுக்கும் அஞ்சாமல் அடிபணியாமல் எதிர்தாக்குதல் நடத்துவது, எவ்விதப் பேச்சுவார்த்தையிலும் ஈடுபடாமல் அவர்களின் கோரிக்கைகளை பரிசீலிக்க மறுப்பது, பயங்கரவாதிகள் மற்றும் அவர்களது ஆதரவாளர்களின் மீது எதிர்த்தாக்குதல் தொடர்வது, ஆள்கடத்தலுக்கும் பிணையத்திற்கும் அடிபணியாமல் "பயங்கரவாதத்தை பயங்கரவாதத்தாலேயே முறியடிப்பது" ஆகியவற்றைக் கொள்கைகளாகவும், அணுகுமுறைகளாகவும் மேற்கொண்டுள்ள இஸ்ரேல் போன்று இந்தியாவும் இரும்புக்கரம் கொண்டு நசுக்க வேண்டும் என்ற கோரிக்கை வலுப்பெற்று வருகிறது. பயங்கரவாதிகளின் முகாம்களிலும் மறைவிடங்களிலும் தாக்குதல் நிகழ்த்துவது, கடுமையான பாதுகாப்பு வளையங்கள் ஏற்படுத்துவது, பயங்கரவாத எதிர்த்தாக்குதல் தொடுப்பது ஆகிய நடவடிக்கைகள் இந்திய அரசாங்கத்தால் மேற்கொள்ளப்பட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

எனினும், பிரிவினைவாத வன்முறைப் போராட்டங்களுக்கு அரசியல் தீர்வாக தனி மாநிலங்களை உருவாக்குவதும் (நாகாலாந்து, மிஜோரம், மணிப்பூர் உள்ளிட்ட வடகிழக்கு மாநிலங்கள்), சமரச ஒப்பந்தங்கள் நிறைவேற்றுவதும் (ராஜீவ்–லோங்கோவால் பஞ்சாப் ஒப்பந்தம் உள்ளிட்டவை), அரசியல் கூட்டணிகள் அமைப்பதும் (ஜம்மு–காஷ்மீர் மாநிலம்), நக்ஸல்பாரிகள் வன்முறையைச் சட்டம் ஒழுங்கு பிரச்சனையாகப் பாவித்து சமூக பொருளாதார வளர்ச்சித் திட்டங்களை, நடவடிக்கைகளை மேற்கொள்வதும், தீவிரவாதிகள் மிரட்டலுக்கு அடிபணிந்து பிணையமாக கைதிகளை விடுவிப்பதும் (கந்தகார், காஷ்மீர் நிகழ்வுகள்), எல்லை தாண்டிய மற்றும் சர்வதேச ஒத்துழைப்புடன் செயல்படும் மத பயங்கரவாதத்தை சர்வதேச அரங்குகளில் முறையிடுவது போன்ற ஜனநாயக அணுகுமுறைகளையும் இந்தியா பின்பற்றிவருகிறது.

பயங்கரவாதத்திற்கு எதிரான அரசின் நடவடிக்கைகளை அத்துமீறல்கள் எனவும், மனித உரிமைக்கு எதிரானவை என்றும் எதிர்க்கட்சிகள் குற்றம் சுமத்தி பொதுமக்களிடையே வெறுப்பை உண்டாக்க

முயற்சிப்பது அரசின் மிதமான அணுகுமுறைக்கு மேலும் ஒரு காரணமாக அமைகிறது. கடுமையான மிசா, தடா, பொடா போன்ற பயங்கரவாத எதிர்ப்புச் சட்டங்கள் திரும்பப் பெற நேர்ந்ததும், கடுமை குறைந்ததாக ஆக்கப்பட்டதும் நினைவுறத்தக்கவை.

பயங்கரவாதம் மக்களின் மனஉறுதியைத் தகர்த்துச் செயலிழக்கச் செய்கிறது; சமூகங்களிடையே பிளவை உருவாக்கி பிரிவினையைத் தூண்டுகிறது. சட்ட, ஒழுங்கு பிரச்சனையையும் மோதல்கள், கொலைகள், ஆள் கடத்தல்கள் போன்றவற்றையும் ஏற்படுத்துகின்றன. பிராந்தியம், சமயம், மொழி, இனம், பண்பாடு ஆகியவற்றின் அடிப்படையிலான பயங்கரவாதத்தைத் தடுப்பதற்கு விரக்தியும், வெறுப்பும் அடைந்துள்ள இளைஞர்கள் மற்றும் பொதுமக்களின் வாழ்க்கை மேம்படுத்தப்பட வேண்டும். சிறுபான்மையினர் பாதுகாக்கப்படுவதுடன், சம உரிமைகள் கொண்டவர்களாக வாழ வழிவகைகள் மேற்கொள்ளுதல் அவசியம். 263

மிகக் கடுமையான, உறுதியான விதத்தில் பயங்கரவாதிகள் தண்டிக்கப்படவேண்டும்; பயங்கரவாதம் தடுக்கப்பட வேண்டும். வன்முறை மட்டுமே ஒரு பிரச்சனையின் முழுத்தீர்வாக ஆகாது என்பதை உலக நிகழ்வுகளின் சரித்திரச் சான்றுகள் மெய்ப்பித்துள்ளன.

இன்று இந்தியாவை நான்கு விதமான பயங்கரவாதக் குழுக்கள் நிலைகுலையச் செய்துவருகின்றன:

- ❖ மேற்கு வங்காளம், பீகார், ஒரிஸா, ஜார்கண்ட், சதிஸ்கர், மகாராஷ்டிரம், ஆந்திரா மாநிலங்களில் நிலை கொண்டுள்ள மாவோயிஸ்ட்–நக்ஸலைட் பயங்கரவாதக் குழுக்கள்

- ❖ காஷ்மீர் மாநிலத்தைத் தனிநாடாக்கக் கோரிச் செயல்படும் காஷ்மீர் பிரிவினைவாதப் பயங்கரவாதக் குழுக்கள்

- ❖ அஸ்ஸாம், நாகாலாந்து உள்ளிட்ட வட கிழக்கு மாநிலங்களின் இனபயங்கரவாதக் குழுக்கள் – உல்பா தீவிரவாதிகள், மணிப்பூர் போர்க்குழுக்கள், நாகா தீவிரவாதிகள்

- ❖ இந்து, இஸ்ஸாமிய, சீக்கிய மதஅடிப்படை பயங்கரவாதக் குழுக்கள்.

## மொழிப்பற்று மற்றும் பிராந்திய பயங்கரவாத இயக்கங்கள்

இந்திய விடுதலைப் போராட்ட காலத்தில் முதன்மையான அரசியல் கட்சியாக விளங்கிய இந்திய தேசிய காங்கிரஸ் மொழிவாரி மாநிலங்கள் உருவாக்குவதைக் கொள்கையளவில் ஏற்றுக் கொண்டிருந்தது. ஆனால் சுதந்திரத்திற்குப் பின் அத்தகைய முறையில் மாநிலங்கள் பிரிக்கப்படுவதற்கான அறிகுறிகள் தென்படாமையால் நாட்டின் பல பகுதிகளில் போராட்டங்கள் வெடித்தன. தெலுங்கு மாநிலமாக ஆந்திரப் பிரதேசம் உருவாக வேண்டுமென்று பொட்டி ஸ்ரீராமுலு உண்ணாவிரதமிருந்து மரணமடைந்தார். இச்சம்பவம் மொழிவாரி மாநிலங்கள் அமைப்பதைத் துரிதப்படுத்தியது. ஆந்திர மாநிலத்தைத் தொடர்ந்து மற்ற பகுதிகளிலிருந்தும் இது போன்ற வலுவான கோரிக்கைகள் எழுந்ததால் மேலும் பல மாநிலங்கள் மொழி அடிப்படையில் பிரித்தமைக்கப்பட்டன.

மொழிப்பற்று மற்றும் பிராந்திய விருப்பங்களையொட்டிய தனி மாநிலங்கள் கோரி பயங்கரவாத இயக்கங்கள் பல்வேறு பகுதிகளில் - குறிப்பாக நாகாலாந்து (1950களில்), மிஜோரம் (1960களில்), மணிப்பூர் (1970களில்), திரிபுரா (1980களில்), கோர்காலாந்து (1980களில்), காலிஸ்தான் (1980களில்), காஷ்மீர் (1948 முதல்) – உருவானது. பஞ்சாபின் ஒரு பகுதி பிரிக்கப்பட்டு இந்தி பேசும் மக்களைக் கொண்டதாக ஹரியானா **01.11.1966**–ல் உருவானது. பிறகு மீண்டும் **25.1.1971** அன்று பஞ்சாபிலிருந்து இமாசலப் பிரதேசம் தனி மாநிலமாக மலையகப்பகுதிகளைக் கொண்டதாக .அமைக்கப்பட்டது. வடகிழக்குப் பகுதிகளில் ஆதிவாசிகளின் இனமான உணர்வுகள் கிளர்ச்சிகளாக உருவெடுத்தன. பிரிவினைவாதக் கோரிக்கைகள் எழுப்பப்பட்டன. இத்தகைய இயக்கங்கள் நாகாலாந்திலும், மிஜோரமிலும், மணிப்பூரிலும் வன்முறையை அடிப்படையாகக் கொண்டு நெடுங்காலம் இயங்கின. அப்பகுதி மக்களின் கோரிக்கைகளுக்கிணங்க அஸ்ஸாம் மாநிலம் எட்டு மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டது.

பீகாரிலிருந்து ஜார்கண்ட், சதீஸ்கர், உத்திரப்பிரதேசத்திலிருந்து உத்ராஞ்சல் தனி மாநிலங்களாக அமைக்கப்பட்டன. காலப்போக்கில் மேலும் சில மாநிலங்களில் பிரிவினைவாதம் தலைதூக்கியது. ஆந்திரத்தில் தெலங்கானா, மகாராஷ்டிரத்தில் விதர்பா, மேற்கு வங்காளத்தில் கோர்காலாண்ட் என்று தனிமாநிலக் கோரிக்கைகள் எழுந்தன. மேற்கு வங்காளத்தில் டார்ஜிலிங்கிலும் அதன் சுற்றுவட்டாரத்திலும் உள்ள கூர்க்கா பழங்குடி மக்கள் கூர்க்காலாந்து என்ற தனி மாநிலத்தை மேற்கு

வங்காளத்திலிருந்து பிரித்து அளிக்க வலியுறுத்தி வருகின்றனர். அசாமில் உள்ள போடோ பழங்குடி மக்கள் போடோலாந்து என்ற தனிமாநிலம் உருவாக்கப்பட வேண்டுமென்று வன்முறையைக் கையாண்டு கிளர்ச்சி செய்துவருகிறார்கள். காஷ்மீர் மாநிலம் தீவிரவாதிகளின் தனிமாநிலக் கோரிக்கை காரணமாகப் பற்றி எரிந்து கொண்டிருக்கிறது.

**நக்ஸலைட் பயங்கரவாதம்**

நிலத்தை அடிப்படையாகக் கொண்டு மேற்கு வங்காளத்தில் உள்ள நக்சல்பாரி கிராமத்தில் விவசாயிகளின் இயக்கமாக உருவாக்கப்பட்டு 1969 மே மாதத்தில் சிபிஐ (எம்.எல்) என்ற பெயரில் ஆரம்பிக்கப்பட்ட நக்ஸலைட் இயக்கம் 'விடுதலை பெற்ற மண்டலங்களை' உருவாக்குவதும், அரசு அதிகாரத்தைக் கைப்பற்றுவதையும் நோக்கமாகக் கொண்டதாக அறிவித்தது. தொடங்கப்பட்ட ஐந்தாண்டு காலத்திற்குள் நக்சலைட் இயக்கம் பலவாறாகப் பிளவுபட்டு, சிறு சிறு குழுக்களாகப் பிரிந்தது. நக்சலைட் இயக்கம் பிளவுபடுவதும், பிளவுற்றவர்கள் மீண்டும் பிளவுபடுவதும் என அதன் பிறகு முப்பதாண்டுகளுக்கு நீடித்தது. இத்தகைய நிலையில் ஆந்திராவில் கொண்டப்பள்ளி சீதாராமையா என்பவரின் வழிகாட்டுதலில் மக்கள் போர்க்குழு தொடங்கப்பட்டது. சாரு மஜூம்தாரை தங்கள் வழிகாட்டியாக ஏற்றுக் கொண்ட இக்குழுவைத் தொடர்ந்து கனய்சட்டர்ஜி, அமுல்யா சென், சந்திரசேகரதாஸ் ஆகியோர் தலைமையில் மாவோயிஸ்ட் கம்யூனிஸ்ட் சென்டர் என்ற அமைப்பு உருவாக்கப்பட்டது. நிகழ்கால நிர்ப்பந்தங்களால் சிபிஐ (எம்.எல்) மக்கள் போர்க்குழு, மாவோயிஸ்ட் கம்யூனிஸ்ட் சென்டர் ஆகிய இரு நக்சலைட் குழுக்கள் ஒன்றாக சேர்ந்து 2004 செப்டம்பர் 21 அன்று சி.பி.ஐ (மாவோயிஸ்ட்) என்ற ஒரு புதிய அமைப்பை உருவாக்கினர். ஆந்திரா, ஒரிசா, சதீஸ்கர், பீகார், ஜார்கண்ட், மேற்கு வங்காளம் ஆகிய மாநிலங்களின் சில பகுதிகளில் பழங்குடியினர் மத்தியில் தளங்களை உருவாக்கி ரகசியமாக இயங்குகிறார்கள். பயங்கரவாதமும், வன்முறையும் இவர்களின் தத்துவமாகவும், செயல்வடிவமாகவும் உள்ளன.

சீனாவில் மாசேதுங் தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சி பின்தங்கிய அந்நாட்டில் மக்களைத் திரட்டி ஜனநாயகப் புரட்சியை நடத்தி சோசலிசத்தைக் கட்டும் பணியைத் தொடங்கி வெற்றி பெற்றது. "துப்பாக்கியிலிருந்து அதிகாரம் பிறக்கிறது" என்ற சீன தலைவர் மாசேதுங் சிந்தனையால் கவரப்பட்டு, அவரின் வழிமுறைகளை அடியொற்றியதாக நக்ஸலைட்கள் மற்றும் மாவோயிஸ்ட்களின் ஆயுதமேந்திய நடவடிக்கைகள்

இந்தியாவில் அமைந்தன. இந்தியா இன்னும் முழு விடுதலை பெறவேண்டியுள்ளது என்றும், நவீன காலனியாதிக்கத்தில் உள்ள அரைக்காலனி அரசைப் பெற்றுள்ளோம் என்றும் மாவோயிஸ்ட்டுகள் கருதுகிறார்கள். இந்திய ஜனநாயகப் புரட்சி முழுமையாகப் பூர்த்தியடையவில்லை எனவும், பாராளுமன்ற அமைப்பு என்பது மாயை எனவும் இவர்கள் வாதிடுகின்றனர். நீடித்த ஆயுதமேந்திய விவசாயிகள் போராட்டம் நடத்துவதன் மூலம் முழுப் புரட்சியை நோக்கிச் செல்வதாக அறிவித்தனர். கொரில்லா யுத்தம், விடுவிக்கப்பட்ட மண்டலங்களை உருவாக்குவது, தலைமை நகரங்களைக் கைப்பற்றுவது ஆகிய தங்களது புரட்சிகர கடமைகளைச் செய்வதன் மூலம் அரசு அதிகாரத்தைக் கைப்பற்ற முயற்சித்து வருகின்றனர்.

கொரில்லா யுத்திகளுக்கும், இராணுவ தந்திராபோயங்களுக்கும் மாவோயிஸ்ட்டுகள் மிகுந்த கவனம் செலுத்துகின்றனர். மலை மற்றும் கிராமப்புறப் பகுதிகள் கொரில்லாத் தாக்குதல்களுக்குக் கச்சிதமாகப் பொருந்திப் போவதால் அவற்றைத் தேர்ந்தெடுத்து, இயற்கை சூழலால் தனிமைப்பட்டுள்ள இப்பகுதிகளைத் தமது பயங்கரவாத நடவடிக்கைகளுக்குப் பயன்படுத்துகிறார்கள். தொலைதூரக் கிராமங்களில் சிவப்புத்தளங்கள் உருவாக்கப்பட்டு நடைபெறும் ஆயுதமேந்திய போராட்டமே புதிய ஜனநாயகத்திற்கான முழுமையான போராட்டம் என நம்புகிறார்கள். கிராமங்களை ஆதரவுத் தளங்களாகக் கட்டமைத்து, அதனை விடுதலை பெற்ற மண்டலங்களாக உருவாக்கி பின்னர் நகரங்களைச் சுற்றி வளைப்பது என்பது அவர்களின் அணுகுமுறையாக உள்ளது. வெகுஜனங்களுக்கு எதிரானவர்களை அழித்தொழிக்கும் கொள்கையை நக்ஸலைட்டுகள் இயக்கம் தொடங்கப்பட்ட காலம் முதல் ஏற்றுக் கொண்டுள்ளது. மக்கள் போர்க்குழு, மாவோயிஸ்ட் கம்யூனிஸ்ட் சென்டர், இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி (மாவோயிஸ்ட்) ஆகியவற்றை உள்ளடக்கிய குழுக்களின் வன்முறை நடவடிக்கைகளால் – உயிரோடு எரித்துக் கொல்வது, நாட்டு வெடிமருந்துகள் வைத்து, வெடித்து சிதறச் செய்வது, நவீன ஆயுதங்களைப் பயன்படுத்துவது போன்ற கொடூரமான முறைகளில் – ஆயிரத்திற்கும் மேற்பட்டோர் கொல்லப்பட்டுள்ளனர் (அனில் பிஸ்வாஸ், 2006 : 25).

தற்போது நக்ஸலைட்டுகளால் சட்டம் ஒழுங்கு பிரச்சனை அதிகரித்து, வன்முறையால் பல மாநிலங்கள் பாதிக்கப்பட்டுள்ளன. நக்ஸலைட்டுகளின் வன்முறையை அரசு உறுதியுடன் எதிர்கொள்ளும் அதே சமயம் நக்ஸலைட்கள் மற்றும் பழங்குடியினரின் பிரச்சனைகளின் அடிப்படை

உண்மைகளைப் புரிந்து கொண்டு அதற்கேற்ற வகையில் மத்திய, மாநில அரசுகள் நடவடிக்கை எடுக்க வேண்டும். பழங்குடியின மக்களுக்கான நலத்திட்டங்களை செயல்படுத்தி அவற்றின் முழுப் பலனும் அவர்களுக்குச் சென்றடையும் வகையில் மத்திய, மாநில அரசுகள் கவனம் செலுத்த வேண்டும். பழங்குடியின மக்களின் பிரச்சனைகளைக் களையும் விதத்திலும், அவர்களின் வாழ்க்கைத்தரம் மேம்படும் வகையிலும், நிலம் வழங்க வகை செய்யவும் 2006ம் ஆண்டு கொண்டுவரப்பட்ட புதிய சட்டம் நடைமுறைப்படுத்தப்பட்டு வருகிறது.

நாளுக்கு நாள் அதிகரித்துவரும் மாவோயிஸ்டுகள்—நக்ஸல்களின் இடதுசாரி தீவிரவாத வன்செயல் தாக்குதலால் பல மாநிலங்களும் பாதிப்படைந்து வருகின்றன. நக்சலைட்களுக்கு எதிரான பாதுகாப்பு நடவடிக்கைகளை மட்டும் அதிகரிப்பதன் மூலம் நிலைமையைக் கட்டுக்குள் கொண்டு வர இயலாது என்பதை அரசு உணர்ந்து நக்ஸல்களின் ஆதிக்கத்தைக் கட்டுப்படுத்த மத்திய அரசு புதிய உத்தியை வகுத்துள்ளது. சமூக, பொருளாதாரச் சூழலைத் திருத்தி மேம்படுத்தவும் அதே வேளையில் நக்ஸல்களின் நடமாட்டம், செல்வாக்கு உள்ள பகுதிகளிலிருந்து அவர்களை அப்புறப்படுத்தவும் மத்திய அரசு நடவடிக்கை மேற்கொண்டு வருகிறது. ஆந்திரப்பிரதேசம்—மகாராஷ்டிரம்—சதீஸ்கர் மாநிலங்கள் சந்திக்கும் பகுதி, ஒரிசா—ஜார்க்கண்ட்—சதீஸ்கர் மாநிலங்கள் சந்திக்கும் பகுதி, மேற்குவங்கம்—ஜார்க்கண்ட்—ஒரிசா மாநிலங்கள் சந்திக்கும் பகுதிகளில் நக்ஸல் எதிர்ப்பு நடவடிக்கைகள் தீவிரப்படுத்தப்படும் எனவும், துணைநிலை ராணுவப் படைகளைச் சேர்ந்த 40 ஆயிரம் பேர் வரை அந்தந்த மாநிலக் காவல் படையினருடன் இணைந்து காடுகளில் தளம் அமைத்துச் செயல்படும் நக்ஸல்களை முறியடிக்கவும் அதே வேளையில், நக்ஸல்களின் பிடியிலிருந்து மீட்கப்படும் பகுதிகளில் ரூ.7,300 கோடி அளவுக்கு வளர்ச்சித் திட்டங்கள் அமல்படுத்தவும் அரசு திட்டமிட்டுள்ளது. மாவோயிஸ்டுகள்—நக்ஸல்களின் வன்செயல்கள் நாட்டின் 40,000 சதுர கிலோ மீட்டர் பரப்பளவில், 20 மாநிலங்களில், 223 மாவட்டங்களில், 2,000க்கும் மேற்பட்ட காவல்நிலைய எல்லைகளில் விரிவடைந்து பரவியிருக்கிறது எனவும், இதை முற்றாகப் போக்க 12 மாதங்களிலிருந்து 30 மாதங்கள் வரை ஆகலாம் எனவும் உள்துறை அதிகாரிகள் மதிப்பிட்டுள்ளனர்.

பல மாநிலங்களிலும் மாவோயிஸ்ட்—நக்சலைட்டுகள் தொடர் தாக்குதலில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறார்கள். சதீஸ்கர், பிகார், ஜார்க்கண்ட், ஒரிசா ஆகிய மாநிலங்களில் நக்ஸல்களின் வன்செயல்களால்

அதிகம் பேர் உயிரிழந்துள்ளனர். கடந்த 3 ஆண்டுகளில் மட்டும் 5,800-க்கும் மேற்பட்ட சம்பவங்களில் 2,600-க்கும் மேற்பட்டவர்களை நக்ஸல்கள் கொன்றுள்ளனர். இந்த ஆண்டில் மட்டும் 600 பேரை நக்சலைட்டுகள் கொன்றுள்ளனர். சிறு துப்பாக்கிகள் முதல் ஏ.கே.47 துப்பாக்கிகள் வரை வைத்துள்ள நக்சலைட்டுகளின் எண்ணிக்கை 15 ஆயிரம் என மதிப்பிடப்படுகிறது.

நக்சலைட் பிரச்சினைகள் வளர்வதற்கு இந்தியாவின் பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் முக்கியக் காரணமாக அமைந்துள்ளன. அரசு மற்றும் அதன் வளர்ச்சித் திட்டங்களால் குறைந்த அளவில் பயன் அடைந்தவர்கள் மலைவாழ் மக்கள். இம்மக்களின் நிலங்கள் மற்றும் வாழ்வாதாரங்கள் தொடர்ந்து அழிக்கப்பட்டு வருகின்றன. சமுதாயத்தில் ஒதுக்கப்பட்ட மலைவாழ் இன மக்களும், ஏழைகளும் தங்களுடைய கோபங்களை வெளிப்படுத்தத் தீவிரவாதக்குழுக்களுக்கு ஆதரவாகச் செயல்படுகிறார்கள். இவர்களின் அடிப்படைத் தேவைகள் பூர்த்தி செய்யப்படும் பொழுது தீவிரவாதச் செயல்களில் ஈடுபட மாட்டார்கள், ஈடுபடுபவர்களுக்கு உதவ மாட்டார்கள் என்பதை உணர்ந்த அரசு, நக்சலைட்டுகளால் பாதிப்புக்குள்ளான பகுதிகளில் உள்கட்டமைப்பு வசதிகளை மேம்படுத்துவதற்கான பல திட்டங்களுக்கு பெருமளவில் நிதி ஒதுக்கீடு செய்யத் திட்டமிட்டு வருகிறது. மலைவாழ் மக்களைக் கண்மூடித்தனமாக கொள்ளையடிக்கும் போக்கைக் கட்டுப்படுத்தி அம்மக்களின் வாழ்விடங்களுக்கு உத்தரவாதம் அளித்து அவர்களை தேசிய நீரோட்டத்தில் இணைக்க மத்திய, மாநில அரசுகள் தொடர் நடவடிக்கை மேற்கொள்வதன் மூலம் நக்சலைட் அபாயத்தை ஒழிக்க முடியும்.

வனப்பகுதியில் காலூன்றி விட்ட மாவோயிஸ்ட்-நக்சலைட்டுகள் மிகத்துணிச்சலுடன் ராணுவத்துடன் மோதுகின்றனர். பாதுகாப்புப் படையினர் மீது தாக்குதல், ரயில் தண்டவாளம் குண்டு வைத்துத் தகர்ப்பு, போலீஸ் அதிகாரி தலை துண்டிப்பு போன்ற வன்முறைச் செயல்கள் மூலம் மத்திய அரசுக்கும், மாநில அரசுகளுக்கும் பெரும் சவாலாக விளங்குகின்றனர். இவர்களின் வன்முறையால் பொதுச் சொத்துகளுக்குப் பாதிப்பு ஏற்படுவதோடு, அப்பாவி மக்களின் உயிர்களும் பறிபோகும் பரிதாப சம்பவங்களும் அரங்கேறுகின்றன. இவர்களுக்கு எதிராக நடவடிக்கைகளை அரசு மேற்கொள்ளும்போது மனிதஉரிமைகள் மீறப்படுவதாக சர்ச்சைகளும் எழுகின்றன. நக்சலைட்டுகள் செல்வாக்குப் பெற்றுள்ள பகுதிகளில் தாக்குதலை நடத்தினால் அதனால் பாதிக்கப்படும்

ஆதிவாசிகள், நக்சலைட்டுகள் பக்கமே தொடர்ந்து ஆதரவாக இருப்பார்கள் என்ற காரணமும் அரசை நிர்பந்திப்பதாக உள்ளது. சட்டத்தின் ஆட்சி நடந்தால்தான் ஜனநாயகம் நிலைக்கும்; வளர்ச்சி நடவடிக்கைகளையும் மேற்கொள்ள முடியும். மாறாக, அரசமைப்புச் சட்டத்தை ஏற்காமல் ஆயுதம் ஏந்தி ஆட்சியைத் தூக்கி எறிவோம் என்று நக்சலைட்டுகள் தாக்குதல் தொடுக்கும் நிலையில் அவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்த அரசு மறுத்து வருகிறது. நக்சலைட்டுகளுடன் பேச்சுவார்த்தை நடத்த முதலில் அவர்கள் தங்கள் ஆயுதங்களைப் போட்டுவிட்டு, வன்முறை வழியைக் கைவிட வேண்டும் என்று அரசு வலியுறுத்துகிறது.

ஒரிசா, சட்டீஸ்கர், ஆந்திரா போன்ற மாநிலங்களில் ஏற்கனவே மாவோயிஸ்ட் அமைப்புக்குத் தடை விதிக்கப்பட்டுள்ளது. சமீபகாலமாக மாவோயிஸ்ட்களின் தாக்குதல் அதிகரித்ததால் மேற்கு வங்க மாநிலத்தில் மாவோயிஸ்ட் அமைப்புக்கு மத்திய அரசு "சட்ட விரோத நடவடிக்கைகள் தடுப்பு சட்டத்தின்" கீழ் தடை விதித்துள்ளது. எனினும் மேற்கு வங்கத்தில் மாவோயிஸ்ட்களைக் கட்டுப்படுத்த ராணுவத்தை அனுப்ப வேண்டும் என வலியுறுத்தப்பட்டதை மத்திய அரசு நிராகரித்து விட்டது. உள்நாட்டு பாதுகாப்புக்கு ராணுவத்தை ஈடுபடுத்துவது என்பது கடைசித் தீர்வாகத் தான் இருக்க வேண்டும்; சட்டம், ஒழுங்கு பிரச்சனையை சம்பந்தப்பட்ட மாநில அரசுகள் தான் கையாள வேண்டும் என்ற தனது நிலைப்பாட்டை உறுதிப்படுத்தியுள்ளது.

வன்முறையைக் கைவிடும் முன்னர், மாவோயிஸ்ட்களுடன் பேச்சு நடத்துவது இல்லை எனத் திட்டவட்டமாக மத்திய அரசு தெரிவித்துள்ளது. "நிபந்தனையுடன் கூடிய பேச்சுவார்த்தையை மத்திய அரசு ஏற்றுக்கொள்ளாது. பேச்சுவார்த்தைக்கு மாவோயிஸ்ட்கள் விதிக்கும் எந்த முன் நிபந்தனையையும் ஏற்க மாட்டோம். வன்முறையைக் கைவிட்டு, பேச்சுவார்த்தையில் பங்கேற்கிறோம் என்ற ஒரே கோரிக்கையுடன் மத்திய அரசை நேரடியாக அவர்கள் அணுகலாம்" என மத்திய அரசு தெரிவித்துள்ளது. நக்சலைட்டுகளால் பாதிக்கப்பட்ட மாநிலங்களில் வளர்ச்சிப் பணிகளை மேற்கொள்வதற்காக 7,300கோடி ரூபாய் மதிப்பிலான திட்டங்களை மத்திய அரசு செயல்படுத்தவுள்ளது.

உள்நாட்டுப் பாதுகாப்பில் மிகப் பெரிய அச்சுறுத்தலாக இருப்பவர்கள் நக்ஸலைட்டுகள் எனப்படும் இடதுசாரி தீவிரவாதிகள். நக்சலைட்டுகளால் ஏராளமான அப்பாவி மக்களும் போலீசாரும் கொல்லப்பட்டுள்ளனர்.

அதோடு இத்தகைய தீவிரவாதத்தால் சமூகப் பொருளாதார முன்னேற்றமும் பாதிக்கப்பட்டுள்ளது. "நக்சல்களின் வளர்ச்சி பற்றி ஆராய நான்கு ஆண்டுகளுக்கு முன் மத்தியத் திட்டக் குழு சார்பாக அமைக்கப்பட்ட 16பேர் கொண்ட நிபுணர் குழு, "நக்சல் பிரச்சனை என்பது வளர்ச்சி தொடர்பானது. அடிப்படை வசதி இல்லாத பின் தங்கிய பகுதிகளில் வாழும் மக்களின் மீது அரசின் கவனம் செல்லாததே இதற்கு காரணம். அதனால்தான் அங்கு நக்சல்கள் செயல்படுகிறார்கள். அவர்களைக் குறிப்பிடத்தக்க அரசியல் சக்தியாக ஏற்றுக் கொண்டு அவர்களுடன் மத்திய அரசு பேச்சுவார்த்தை மேற்கொள்ள வேண்டும்" எனப் பரிந்துரைத்தது.

நக்சலைட்டுகளால் பாதிக்கப்பட்டுள்ள மாநிலங்கள் தற்போது ஒருங்கிணைக்கப்பட்டுள்ளன. ஒரு மாநிலத்தில் தாக்குதல் நடத்திவிட்டு அருகில் உள்ள வேறொரு மாநிலத்திற்குத் தப்பிச் செல்வது இனி நக்சலைட்டுகளுக்கு எளிதாக இருக்காது. தங்கள் மீதான அரசின் பிடி இறுகுவதற்கான இவ்வித வாய்ப்பு உருவாகி வருவதால் நக்ஸலைட்டுகள் தொடர் வன்முறையில் ஈடுபட்டு வருகிறார்கள். காடுகள் மற்றும் மலைகளை ஒட்டிய கிராமப்புற பகுதிகள் நக்சலைட்டுகளின் இருப்பிடமாக இருப்பதால் அவர்களை ஒடுக்குவதற்கான நடவடிக்கையின் போது அப்பாவிப் பொது மக்கள் பாதிக்கப்பட்டுவிடாமல் பார்த்துக் கொள்ள வேண்டிய தேவையும் உள்ளது. அம்மக்களிடமிருந்து நக்சல்களைப் பிரித்தெடுப்பது என்பது சவாலான விஷயம் என்பதில் சந்தேகம் இல்லை. நக்ஸலைட்டுகளின் பலமே இதில்தான் இருக்கிறது.

வன்முறைக்கான காரணங்களில் நியாயம் இருந்தாலும் வன்முறை நியாயமாகிவிடாது. அரசின் மீதான நக்சலைட்டுகளின் குற்றச்சாட்டில் உண்மை இருந்தாலும் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசிற்குச் சவால் விடுபவர்களாக நக்சலைட்டுகள் இருப்பதை ஒருபோதும் ஏற்க முடியாது என நடுநிலையாளர்கள் கருதுகின்றனர்.

### பிரிவினைவாத பயங்கரவாதம்

பிரிவினைவாத பயங்கரவாதக் குழுக்களுக்கு இந்தியாவைச் சுற்றியுள்ள அண்டை நாடுகளான இலங்கை, வங்கதேசம், பாகிஸ்தான், நேபாளம், சீனா, ஆப்கானிஸ்தான் வழியாக ஆயுத, பொருளாதார உதவிகள் கிடைத்துக் கொண்டிருக்கின்றன என்றும், இந்திய விரோத எண்ணங்களை வளர்த்து 'எதிரிக்கு எதிரி நண்பன்' என்ற அடிப்படையில் வெளிநாடுகள் சதியில் ஈடுபட்டுவருகின்றன என்றும் நம் நாட்டு உளவு அமைப்புகள்

தொடர்ந்து எச்சரிக்கை விடுத்து வருகின்றன. அண்டை நாடுகள் வழியாக இந்திய எல்லைக்குள் ஊடுருவி நுழைய தீவிரவாதிகள் தொடர்ந்து முயற்சித்து வருகின்றனர். இந்திய ராணுவத்தினர் மீது துப்பாக்கி சூடு உள்ளிட்ட தொடர் நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர். இவர்களுக்கு அந்நிய நாடுகள் பல ஆண்டுகளாகவே ராணுவஉதவி அளித்து வருவதாக இந்திய அரசு குற்றம் சாட்டிவருகிறது.

அனைத்துப் பிரிவுகள் காஷ்மீர் ஹுரியத் மாநாடு கட்சி, ஜனநாயக சுதந்திர கட்சி, டெஹ்ரீக்–இ–ஹுரியத், இஸ்லாமியக் குழுக்களான ஜமாத்–இ–இஸ்லாமி ஆகியவை காஷ்மீரைத் தன்னாட்சி கொண்ட தனிமாநிலமாக உருவாக்கக் கோரி போராடி வருகின்றன. காஷ்மீர் மாநிலத்திலிருந்து இந்திய ராணுவத்தை முழுவதுமாக திரும்பப்பெற வேண்டும்; பாகிஸ்தானையும் இந்தியாவையும் பிரிக்கும் எல்லைக்கோட்டின் கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டு சுதந்திரமாக மக்கள் சென்று வருவதற்கும், பொருட்கள் எடுத்துச் செல்வதற்கும், கொண்டு வருவதற்கும் திறந்து விடப்பட வேண்டும் என்பது உள்ளிட்டவை அவர்களின் பிற முக்கியக் கோரிக்கைகளாகும். ஜம்மு–காஷ்மீர் பிரச்சனை தொடர்பான எத்தகைய பேச்சுவார்த்தையிலும் பாகிஸ்தானையும் சேர்த்துக் கொள்ளாத வரை இந்திய அரசுடன் பேச்சுவார்த்தையில் ஈடுபடுவதில்லை என இக்கட்சிகள் ஜம்மு–காஷ்மீர் மாநிலத்தில் ஜனநாயகத் தேர்தல்களை தொடர்ந்து புறக்கணித்து வருகின்றன. இஸ்லாமிய மாநாட்டுக் கூட்டமைப்பு உள்ளிட்ட வெளிநாட்டு அமைப்புகள் இதற்கு உதவி செய்து ஆதரவு அளித்து வருவது குறிப்பிடத்தக்கது. மத்திய, மாநில அரசுகள் அரசியல் காரணங்களுக்காக பயங்கரவாதிகளுடன் அனுசரித்துப்போகும் நிலை காரணமாகத் தீர்க்க இயலாத பிரச்சனையாக காஷ்மீரும் அது தொடர்பான பயங்கரவாதமும் திகழ்கின்றன.

இந்தியாவுக்கு எதிராக பாகிஸ்தான் மண்ணில் இருந்துகொண்டு செயல்படும் பயங்கரவாதிகளின் கட்டமைப்புகளைத் தகர்க்கவும், இந்திய விரோத சக்திகளுக்கு எந்தவித ஆதரவும் இல்லாமல் தடுத்து நிறுத்தவும், மும்பை, புனே குண்டுவெடிப்புச் சம்பவங்கள் உள்பட இந்தியாவில் நடைபெற்ற வெவ்வேறு நாச வேலைகளில் தொடர்புள்ள பயங்கரவாதிகளை பிடித்துத் தரவும் சமீபத்தில் இந்தியா வேண்டுகோளை தெரிவித்துள்ளது. இருதரப்பு உறவுகள் மேம்பட நம்பிக்கை ஊட்டும் விதமாக இத்தகைய நடவடிக்கைகளை முதலில் எடுக்க வேண்டும் எனவும், காஷ்மீர் தொடர்பாக மூன்றாவது நாடுகளின் நிர்பந்தமோ தலையீடோ இல்லாமல் பரஸ்பரம் அமைதியான முறையில் பேச்சு நடத்துவதன் மூலம்தான் தீர்வு காண

முடியும் எனவும் இந்தியா வலியுறுத்துகிறது. பேச்சுவார்த்தைகள் நடைபெற பாகிஸ்தானில் இந்திய எதிர்ப்பு குழுக்களோ அமைப்புகளோ செயல்பட தடுக்கப்பட வேண்டும் எனவும், போர் நிறுத்த ஒப்பந்தத்தை பாகிஸ்தான் ராணுவம் மீறுவதையும் உறுதியாகத் தடுத்து நிறுத்த வேண்டும் எனவும் இந்தியா வலியுறுத்துகிறது.

காஷ்மீரில் எல்லைக் கட்டுப்பாட்டுக் கோட்டுப் பகுதியில் தீவிரவாதிகளின் ஊடுருவல் முயற்சிகள் அதிகரித்துள்ளன. தீவிரவாதிகளின் சதிச்செயல்களை விரைந்து முறியடித்து மக்களின் பாதுகாப்பை உறுதி செய்ய மத்திய அரசால் தேசிய இளைஞர் படைத்திட்டம் உருவாக்கப்பட்டு. அதில் 25 முதல் 35 வயதுக்குள் உள்ள ஆண்களும், பெண்களும் சேர்க்கப்படுவார்கள். இதில் முதல்கட்டமாக 20 ஆயிரம் பேரைச் சேர்த்து அவர்களைச் சமூகப் பணிகளில் ஈடுபடுத்த முடிவெடுக்கப்பட்டுள்ளது. மத்திய காவல் படை, நாடாளுமன்ற பாதுகாப்புப் படை, தேசிய பாதுகாப்புப்படை போன்றவற்றையும் விரிவுபடுத்த நடவடிக்கை எடுக்கப்படும் எனவும் அரசு தெரியப்படுத்தியுள்ளது.

அசாம் மாநிலத்தில் மக்களின் கடும் உழைப்பால் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டு அசாம் மாநிலம் பலரையும் வாழவைத்தது. பங்களாதேஷிலிருந்து இந்தியாவுக்குச் சட்ட விரோதமாக வந்து குடியேறிய முஸ்லீம்கள், வங்காளிகள், மார்வாரிகள் போன்றவர்கள் குடியேறி மாநிலத்தை ஆக்கிரமித்ததால் அசாம் மாநிலத்தவரிடையே இன வெறுப்புணர்வு நிலவுகிறது. உல்பா (ULFA) எனும் அடிப்படைவாத இயக்கத்தை உருவாக்கி வெளி மாநிலத்தவரை அசாமில் இருந்து வெளியேற்ற போராட்டத்தில் ஈடுபட்டனர். உல்பா (ULFA) தீவிரவாதிகள் அரசு அதிகாரிகள் மற்றும் மாநிலத்தின் வெவ்வேறு பகுதிகளில் உள்ள தேயிலைத் தோட்ட நிர்வாகிகளைக் கடத்தி வன்முறையில் ஈடுபட்டுள்ளனர். மாநிலத்தில் பெருவாரியாக உள்ள போடோஸ் என்ற பழங்குடியினர் தமக்கு தனி மாநிலம் கேட்டுப் போராடுகின்றனர். தன்னாட்சி உரிமை கிடைக்காததால் பல்வேறு வன்முறைச் செயல்களில் ஈடுபட்டுவருகின்றனர்.

அஸ்ஸாம் மாநிலத்தில் இயங்கி வரும் உல்பா (ULFA) பயங்கரவாத அமைப்பினர் ரயில்வே தண்டவாளங்களைச் சேதப்படுத்துதல், ரயில் கவிழ்ப்புகள், தேசிய நெடுஞ்சாலையில் பாலங்களைத் தகர்த்து போக்குவரத்தை முடக்குதல், எண்ணெய் சுத்திகரிப்பு நிலையங்களையும்,

எரிபொருள் எடுத்துச் செல்லும் குழாய்களையும் தகர்த்தல் போன்ற சதிச் செயல்களை நிறைவேற்றி தமது இருப்பை வெளிப்படுத்தி வருகின்றனர்.

வடகிழக்கு மாநிலங்களான அசாம், மணிப்பூர், திரிபுரா மற்றும் நாகாலாந்து பிரிவினைவாத பயங்கரவாத இயக்கத்தினர் நவீன ஆயுதங்களைப் பயன்படுத்துகின்றனர். இவர்கள் அதிக அளவில் சீனாவில் தயாரிக்கப்பட்ட ஆயுதங்களைப் பயன்படுத்துவது தெரியவந்துள்ளது. இந்த ஆயுதங்கள் அனைத்தும் மியான்மரில் இருந்து தரை வழியாகவும், கடல் வழியாகவும் மணிப்பூர் மற்றும் மிசோரம் மாநிலத்தின் பல பகுதிகளை வந்தடைந்து பின்னர் அங்கிருந்து பயங்கரவாதிகளின் கைகளில் போய்ச் சேருகிறது. கடந்த 3 ஆண்டுகளாக இந்தக் கடத்தல் நடவடிக்கை அதிகரித்துள்ளது என இந்திய புலனாய்வுத்துறையின் அறிக்கை சுட்டிக்காட்டியுள்ளது. எல்லைப் பகுதிகளில் கண்காணிப்பை மேலும் தீவிரப்படுத்துவதன் மூலமே பயங்கரவாதிகளின் கைகளுக்கு ஆயுதங்கள் செல்வதைத் தடுக்க முடியும்.




**References**

அனில் பிஸ்வாஸ், நக்சலிசம் புரட்சித் தத்துவமா? (சென்னை:பாரதி புத்தகாலயம், 2006).

Alexander,Y.and Finger, S.M., Terrorism: Interdisciplinary Perspectives, (New York: John Jay Press, 1977).

Athal, Anil A.,"Terror Tactics" in *Gentleman*, April 1991,pp.56-60.

Gurr, Ted Robert. Why Men Rebel. (Princeton University Press, 1970).

Mallin Jay, Terror and Urban Guerillas. (Coral Gables: University of Miami Press, 1971).

Saxena, N.S., Terrorism: History and Facets in the World and in India. (New Delhi: Abhinav Publications, 1985).

Singh, Naunihal. The World of Terrorism. (New Delhi: South Asian Publishers,1989).